# தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்

வித்தியாரத்தினம்

டாக்டர் P. S. சுப்பிரமணியசாஸ்திரி

எழுதிய

குறிப்புரையுடன்





திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்துத் தலைவர்களாகிய

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாதத்தம்பிரான்

அவர்கள் பொருளுதவியைக் கொண்டு



P. S. ஸ்வாமிநாதனால் பதிப்பிக்கப்பெற்றது.

1937.

ஈச்வர ஆண்டு. ] [விலை ரூ. 2—8—0.

# TOLKAPPIYAM-ELUTTATIKARAM.

With an elaborate commentary

BY

VIDYARATNA

P. S. SUBRAHMANYA SASTRI M. A., Ph. D.,

Principal, Raja's College of Sanskrit & Tamil Studies, Tiruvadi,
and Formerly
Professor of Oriental Studies, Bishop Heber College, Trichinopoly
and
Asst. Editor, Tamil Lexicon, University of Madras.



PUBLISHED UNDER THE KIND PATRONAGE OF

**SRI-LA-SRI KASIVASI SWAMINATHA THAMBIRAN Avl.,**

HEAD OF KASI MUTT, TIRUPPANANDAL.



BY

## P. S. SWAMINATHAN.

PRINTED AT
MURUGAVILAS JANANUKOOLA PRESS,
TRICHINOPOLY

**Price.]** 1937.

# உரிமையுரை.

தமிழன்னையைப் பலவகையாகப் போற்றுபவர்களும் உலகி லுள்ள அரும்பெருங்கருத்துக்களை யெல்லாந் தமிழ்மொழியால் வெளி யிட வேண்டுமென்ற பேரவாக் கொண்டவர்களும் இவ்வுரையைப் பதிப்பித்தவர்களும் துறவறத்திற் சிறந்து

விளங்கிவருபவர்களுமான

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்களாகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி **சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள்** அவர்களுக்கு இக் குறிப்புரை உரித்தாகுக.

---

# KING GEORGE V MEMORIAL TAMIL PRIZE.

THIS Prize is founded by His Holiness Srilasri Kasivasi SWAMINATHA THAMBIRAN SWAMIGAL AVERGAL of Thirupanandal, to keep ever fresh and green the sweet memory of our beloved Sovereign and Emperor George V for his benevolence, large heartedness and love for India. The Prize is intended for the encouragement for the pursuit and study of Tamil and it shall be styled as "King George V Memorial Tamil Prize".

The endowment at present consists of Rs.

35,000 (Rupees Thirty-five Thousand) invested in Government Securities, 3½ per cent Non-terminable Promissory Notes. Out of the annual interest accruing a sum of Rs. 1,000 (One Thousand) shall be paid in cash as Prize annually, to the candidate who stands first in the first class in Tamil in the Oriental Title examination, Vidvan (Final Examina- tion), taking Tamil alone as the subject, under Regulation 7-D of the Regulation in chapter LXI of the University Calendar, Volume I, Part II, 1936-37, or the corresponding Regulations of any subsequent issue of the University Calendar. The unexpended interest of the Endowment Fund shall be added, to the corpus of the Fund annually and allowed to accumulate until the Capital of the Endowment amounts to Rs. 100,000/- (Rupees One Lakh). Thereafter, the entire interest accruing from the Capital Fund shall be paid as Prize amount to the Winner each year.

The terms and conditions of the award of the Prize will be as follows:—

1. The Prize is open to all (Male or

Female) candidates irrespective of caste or creed.

2. The Prize shall be awarded to the candidate, who among the candidates qualifying during the year for the Vidvan Tamil alone, in the Oriental Titles Examination, secures a I class in the Final Examination and has stood first among them, provided that he has passed the Examination at the first appearance.

viii

If, in any year, two or more candidates are eligible for the Prize, the Prize shall be awarded to that candidate who has obtained the highest number of marks in the whole examination taking into consideration the marks obtained in the Preliminary Examination for this title. If there is a tie even then, the Syndicate shall decide the award, taking into consideration the qualification of the candidates in English and the age of the candidate, preference being given to the candidate who has the highest qualification in English and is in young in age.

3. The prize shall be awarded to the Winner at a meeting of the Senate. If, in any year, the Prize Winner is unable to attend personally to receive the Prize, Syndicate shall make arrangements to send the amount to him. In case of demise of the Prize Winner before the actual award, the amount shall be payable to his or her heirs according to Law.

4. The Prize amount shall be paid in cash or by cheque. The award amount shall on no account be divided or reduced. If, in any year or series of years, the Prize is not awarded, the Prize amount of the year or years shall be added to the Prize amount of the year when the Prize is awarded and the full amount shall be paid to the prize-winner of that year. Only the extra amount available over the Prize amount of every year shall be added to the corpus of the fund.

5. The award of the Prize with the name and address of the recipient each year shall be communicated to his Holiness Kasivasi Swaminatha Thambiran Avergal of Tirupanandal or to His Successors- in-interest for information.

6. The endowment shall not be diverted to any purpose other than the one intended by the Donor. If, at any future time, the Oriental Title Vidvan (Final) Examination under regulation 7-D Tamil alone of the University is replaced or the rules or regulations for the Examination are modified, it shall be competent for the Syndicate to make such arrangements for the award of the Prize to a candidate who, in their opinion, satisfies the intention of the Donor, i. e. to stimulate and advance the study of Tamil.



7. It shall be competent for the Syndicate to invest in any Securities or otherwise amounts available for investment from the interest available over the Prize amount and if the Capital amount of the endowment, in case the Government Securities in which the amount is now invested are tendered for payment by Government.

(By order)

KASI MUTT, TIRUPANANDAL,
20-11-1937

SUBBARAYA PILLAI
*Supervisor.*

N. B.—I. *The above Endowment has been accepted by the University of Madras and published in the University Calender 1937-38 Volume II pages 129 and 130. The award of 1937 was conferred on M. R. Ry. Vidvan M. A. Durairangaswami Avergal, Tamil Pandit, Hindu Theological High School, Sowcarpet, Madras at a Special Meeting of the Senate held on the 29th of October 1937.*

II. *The payment of the above endowment in one lump sum especially in these days of financial depression was made possible mostly by*

*the willingness with which*

*The Manufacturer 's Life Insurace Company, Toronto,*

*America accomodated to us in time on liberal terms*

*with a substantial loan on our Life Insurance Policy*

*No. 4,46,416.*

---

# ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் ஞாபகார்த்தத் தமிழ்ப்பரிசு.

நம்முடைய அன்பார்ந்த அரசரும், சக்கரவர்த்தியுமான ஐந்தாம் ஜார்ஜ் மன்னரவர்களுடைய உதாரகுணத்தை யும், தயாளசிந்தையையும்,

இந்தியாவின்பாலிருந்த அன்

பையும் கருதி அவர்களுடைய இனிய ஞாபகம்

என்றும் குன்று

திருந்துவரும் பொருட்டு இந்தப் பரிசு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத்தம்பிரான் ஸ்வாமிகளவர்களால் ஏற்படுத்தப்

பெற்றது. இந்தப் பரிசின் நோக்கம்

தமிழ்மொழிப்பயிற்சிக்கும்

ஆராய்ச்சிக்கும் ஆதரவு அளிப்பதே யாகும்.

"ஐந்தாம் ஜார்ஜு மன்

னர் ஞாபகார்த்தத் தமிழ்ப்பரிசு" என இது வழங்கப்

பெறும்.

இந்தப் பரிசுக்குரிய மூலதனமாக இப்பொழுது

உள்ள தொகை

முப்பத்தையாயிர ரூபாய் (ரூ. 35,000) ;

இத்தொகை நூற்றுக்கு

வருஷத்துக்கு 3½ வட்டியுள்ள

காலவரையறையில்லாத சர்க்கார் கடன்

பத்திரமாக உள்ளது. இதிலிருந்து

வருஷந்தோறும் கிடைக்கும்

வட்டியிலிருந்து ரூபாய் ஆயிரம் (ரூ. 1,000)

வருஷந்தோறும்

ரொக்கப்பரிசாக அளிக்கப்பெறும். 1936—37

ஆம் வருஷத்துச்
சென்னை சர்வகலாசாலைக்காலண்டர் தொகுதி 1,
பகுதி 2-ல் கண்ட
**7-D** விதிப்படி யமைந்த தனித்தமிழ் வித்துவான்
பட்டத்துக்குரிய
முடிவுப்பரீக்ஷையில் முதல் வகுப்பில் முதல்வராகத்
தேர்ச்சிபெறு
வோர் இப்பரிசைப் பெறும் தகுதியுடையோராவர்.
மூலதனத்தின்
வட்டியில் இவ்வாறு செலவானதுபோக
வருஷந்தோறும் எஞ்சும்
தொகை மூலதனம் லக்ஷம் ரூபாய் (ரூ. 1,00,000) ஆகும் வரையில் அதனோடு சேர்க்கப்படும். அதன்பின் மூலதனத்திற்குக் கிடைக்
கும் வட்டி முழுதும் வருஷந்தோறும்
பரிசுத்தொகையாக உரிய .
வருக்கு அளிக்கப்படும்.

பரிசளிப்பதற்குரிய விதிகளும்
நிபந்தனைகளும் வருமாறு :—

1. இப்பரிசு ஆண்பாலார் பெண்பாலாராகிய யாவருக்கும் சாதி மதவேறுபாடு கருதாமல் அளித்தற்குரியது.

2. ஓரியண்டல் பட்டப்பரீக்ஷைகளுள் தனித்தமிழ் வித்துவான் பரீக்ஷையில் தேர்ச்சி பெறுவோர்களுள் முடிவுப்பரீக்ஷையில் முதல் வகுப்பில் முதல்வராக வருபவர் முதல் முறையிலேயே தேறினவரா யின் அவருக்கு இப்பரிசு அளிக்கப்பெறும்.

xi

ஏகத வருஷத்திலாயினும், இருவரேனும் இருவருக்கு மேற்பட்டவரேனும் பரிசுக்குரிய தகுதியைப் பெற்றால், பிரிலிமி னரிப்பரீக்ஷையிற் பெற்ற அம்சங்களையும் (Marks) சேர்த்துப் பார்த்து, மொத்தத்தில் அதிக அம்சம் பெற்றவருக்கு இப்பரிசு அளிக்கப்படும். அவ்வாறு செய்வதிலும் சிக்கல் நேருமாயின், தேர்ச்சி பெற்றவர்களுடைய ஆங்கிலப்பயிற்சியையும் வயதையும் ஆராய்ந்து அவர்களுள் அதிக ஆங்கிலப்பயிற்சியுடையவருக்கும், குறைந்த வயதுடையவருக்கும் பரிசைக் கொடுக்க ஸிண்டிகேட் சபையார் தீர்மானிப்பார்கள்.

3. ஸெனெட்சபைக் கூட்டமொன்றில் இந்தப் பரிசு உரிய
வருக்கு வழங்கப் பெறும்; எந்த வருஷத்திலேனும் பரிசுக்குரியவர்
நேரில் வந்து பரிசைப் பெற்றுக்கொள்ளமுடியாமற்போனால் ஸிண்டி
கேட் சபையார் பரிசுத்தொகையை அவருக்கு அனுப்புவதற்குரிய
ஏற்பாட்டை ச் செய்வார்கள். பரிசு வழங்குவதற்கு முன் அப்பரி
சுக்குரியவர் இறக்கும்படி நேர்ந்தால் அத்தொகை சட்டப்படி அவ
ருடைய வார்சாக இருப்பவரிடம் சேர்ப்பிக்கப்படும்.

4. இப்பரிசுத்தொகை பணமாகவேனும் செக்காகவேனும்
அளிக்கப்பெறும். இந்தப் பரிசுத்தொகை எந்தக் காரணத்தைக்
கொண்டாவது பகுக்கவோ குறைக்கவோ படாது. எந்த ஒரு வரு
ஷத்திலேனும் அல்லது தொடர்ந்து பல வருஷங்களிலேனும் பரிசு
கொடுக்கப்படாமல் இருந்தால் அங்ஙனம் கொடுக்கப்படாமல் இருந்த

பரிசுத்தொகை முழுவதும் சேர்த்து எந்த வருஷத்தில் பரிசு வழங்
கப்படுகிறதோ அந்த வருஷத்தின் பரிசுக்குரியவருக்கே அளிக்கப்
பெறும். பரிசுத்தொகைக்கு மேலே கிடைக்கும் தொகைதான் மூலதனத்தோடு சேர்க்கப்படும்.

5. வருஷந்தோறும் பரிசளிப்பு விவரம், பரிசு பெறுபவரின்
பெயர், விலாசம் ஆகியவற்றோடு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
சாமிநாதத் தம்பிரான் ஸ்வாமிகளவர்களுக்கேனும், அவர்களுடைய
வார்சுகளுக்கேனும் தெரிவிக்கப்படவேண்டும்.

6. பரிசு ஏற்படுத்தியவர்களுடைய நோக்கத்துக்கு வேறுபட்ட
எந்தக் காரியத்துக்கும் இந்த நிதியை உபயோகிக்கக் கூடாது. இனி
எப்பொழுதேனும் சர்வகலாசாலையாரின் 7-D விதிப்படியமைந்த
தனித்தமிழ் வித்துவான் பட்டப்பரீக்ஷைக்குப் பிரதியாக ஏதே

னும் ஏற்பட்டாலும், ஷை பரீக்ஷைக்குரிய விதிகள் மாறுபட்டாலும், பரிசை ஏற்படுத்தியவர்களுடைய நோக்கமாகிய தமிழ்க்கல்விய பி விருத்திக்கு ஏற்றதென்று கருதும் வகையில் ஸிண்டிகேட் சபையார் இந்தப்பரிசை உரியவருக்கு அளிக்க ஏற்பாடு செய்யும் உரிமையைப் பெறுவார்கள்.

7. பரிசு கொடுத்ததுபோக எஞ்சும் வட்டித்தொகையையும், மூலதனத்தைக் கவர்ன்மெண்டார் எப்பொழுதேனும் திருப்பிக் கொடுக்க நேர்ந்தால் அத்தொகையையும் எந்தவிதமான பத்திரங்களிலேனும் வேறு வகையிலேனும் வைத்துப் பாதுகாக்கும் உரிமை ஸிண்டிகேட் சபையாருக்கு உண்டு.

காசிமடம்,
திருப்பனந்தாள்,
20—11—1937.

உ த்தரவுப்படி

**சுப்பராய பிள்ளை,**
சூபர்வைசர்.

குறிப்பு:—1. மேலேகண்ட மூலதனம் (எண்டௌமெண்டு)
சென்னை
சர்வகலாசாலையாருடைய அங்கீகாரம்
பெற்று 1937–1938ம் வருஷத்திய யுனிவர்ஸிட்டி காலண்டர் பகுதி 2ல் 129, 130-வது பக்கங்களில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. 1937ம் வருஷத்திய பரிசு சென்னை ஹிண்டு தியலாஜிகல் ஹைஸ்கூல்
தமிழ்ப் பண்டிதர் மகா-௱-௱-ஸ்ரீ
வித்துவான்
M. A. துரையரங்கசாமி அவர்களுக்கு செனட் ஸ்பெஷல் மீட்டிங்கில் 1937ம் வருஷம் அக்டோபர் மாதம் 29உ அளிக்கப்பட்டது.

2. பொருள்முட்டுப்பாடுள்ள இந்தக்காலத்தில் மேலே

கண்ட தர்மத்துக்குரிய மூலதனத்தை ஒரே தொகையாகச் செலுத்தச் சாத்தியமானதற்குப் பெரும்பாலும் காரணமாக இருந்தது, அமெரிக்காவில் டொரண்டோ நகரிலுள்ள "தி மானு பாக்சரர்ஸ் லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியார்"

நாம் எடுத்துக்கொண்டுள்ள 4,46,416 ஆம் எண்ணுள்ள பாலிஸியின்மேல் சௌகரியமான நிபந்தனைகளோடு ஒரு பெருந்தொகையைக் குறிப்பிட்ட காலத்தில் கடனாகத் தர இயைந்த அன்புடைமையே யாகும்.

# முகவுரை.

தொல்காப்பியம் என்பது ஜமதக்கினியின் புதல்வரான திரண தூமாக்கினி யென்னும் மஹரிஷியால் இயற்றப்பட்டதென்றும், அவர் அகத்தியனார்மாணாக்கர் பன்னிருவருட் சிறந்தாரென்றும், அகத்தியனார்மனைவியாரை வையைநீர் ஈர்த்துக் கொண்டு போக ஆசிரியரது சட்டளையை

மீறி, வெகிர்ங்கோலான் அவரைக் கரைக்குச் செலுத்தியதற்காக அகத்தியனார் அவரைச் சபித்தாரென்றும் தொல்காப்பியத்தைக் கேளாமலிருத்தல் வேண்டுமென அகங் கோட்டாசிரியரை அகத்தியனார் ஆணையிட்டனரென்றும், சிறப்புப் பாயிரத்துட் கூறப்பட்ட நான்மறை என்பது தைத்திரியம், பௌடிகம், தலவகாரம், சாமவேதம் என்பனவற்றையே குறித்தலின் வேதவியாஸர்காலத்திற்கு முன்னரே தொல்காப்பியனார் இருந்தனர் என்றுஞ் சிறப்புப்பாயிரவுரையிற் கூறினர் நச்சினார்க்கினியர்.

அகத்தியனார் சிவபிரான் முருகன் முரஞ்சியூர்முடிநாகராயர் முதலியோர் தலைச்சங்கத்தின்கண் இருந்தாரென்றும், அகத்தியனாரும், தொல்காப்பியனாரும் கடைச்சங்கத்தின்கண் இருந்தாரென்றும், இறையனார் அகப்பொருள் முதற்சூத்திர வுரையிற் கூறப் பட்டுள்ளன.

தைத்திரியம், பௌடிகம், தலவகாரம், சாமவேதம் என்ற பிரிவு கி.

பி. ஆறு எழுநூற்றாண்டுகட்குப் பிற்பட்ட சாஸனங்களிலுங்

காணப்படுதலானும்,* பௌடிகம் என்பது ருக்வேதத்தைக் குறிக்கும் வாஹ்ருச்ய என்ற வடமொழியின் தற்பவமாகலானும், அச்சொல் நாலாயிரப்பிரபந்தம் † முதலிய நூல்களில் வழங்கப்படுகின்றதானும், தலவகாரம் என்பது ஸாமவேதத்தின் ஒரு சாகையாதலானும், பாயிரத்துள் உள்ள நான்மறை என்பது அவற்றைக் குறிக்குமென்றும், அக்காரணம் பற்றி வேதவியாஸர்காலத்துக்கு முற்பட்டவர் தொல்காப்பியனார் என்றுங் கூறுதல் பொருந்தமின்று.

முரஞ்சியூர் முடிநாகராயர் தொல்காப்பியனார்க்கு முன்னர் இருந்தார் எனக் கூறுதற்கு ஒரு தடை உளது. தொல்காப்பியனார்,

* T. A. S. II. I. 3.

† சந்தோகா! பௌழியா! .. (பெரிய திருமொழி. 7, 2,)



வியங்கோள் தன்மை முன்னிலையில் [1] வாராதெனக்

கூறுகின்றனர்.

அவ்வாறிருக்க நீ நிலீஇயர் என்றது காணப்படுகின்றது. படர்க்கையில் முடிநாகராயர் செய்யுளிற் மாத்திரம் வழங்கப்பட்ட வியங்கோள், பிற்காலத்தே முன்னிலையிலும் தன்மையிலும் வழங்கப்படுதல் இயற்கையாகலின் முடிநாகராயர் தொல்காப்பியனார்க்கு முற்பட்டவரென எவ்வாறு கூறமுடியும்?[2]

ஆசிரியர் தொல்காப்பியனாரைப் பற்றி இந்நூலிலிருந்து அறியப் படுவன ஈண்டுக் கூறப்படும்.

எல்லீர்நும்மையும் எல்லார்தம்மையும் போன்ற வழக்குக்கள் இந்நூலுட் கூறப்படினும், அவை தற்போதுள்ள இலக்கியங்களில்

எங்குங் காணப்படவில்லை. வியங்கோள் படர்க்கையில் மாத்திரம் வரும் எனக் கூறப்படினும், புறநானூறு போன்ற நூல்களுள் சில விடங்களில் முன்னிலையினும், வேறு சில நூல்களில் தன்மையினும் வழங்கப்படுகின்றன. மூன்றும் வேற்றுமையுருபாக ஆன் தொல்காப்பியத்தில் வழங்கப்பட, ஆல்[3] என்ற வழக்கும், கள் அஃறிணைப்பன்மைவிகுதியாகத் தொல்காப்பியத்திற் கூறப்பட மற்றையவர்கள் (குறள் 263) போன்றவிடத்து உயர்திணைப் பன்மையாக வழங்கும் வழக்கும், செய்யும் என்ற வாய்பாட்டுவினை பல்லோர் படர்க்கையில்[4] வாராதெனத் தொல்காப்பியத்திற் கூறப்பட, அவ்வழக்குத் திருக்குறளிற்[5] காணப்படுகின்றன. ஆகவின் புறநானூறு, குறள் முதலிய நூற்களுக்கெல்லாம் இந்நூல் முற்பட்டதெனக் கொள்ளல் தகும்.

ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும் (சொல். எச். 66) செய்யுண் மருங்கினும் (எச். 67), செய்யுண் மருங்கின் (செய். 243) நாடகவழக்கினு முலகியல்வழக்கினும் ... கலியே பரிபட்டா யிருபாங்கினும் (பொருள். 53) முதலிய சூத்திரப்பகுதிகளால் தொல்காப்பியனார் காலத்திற்கு முன்னர்ப் பல இலக்கிய நூல்களிருந்தன

[1] சொல். வினை. 29 [2] தமிழ்மொழிநூல் பக். 101—2; [3] உள்ளத்தால் (குறள் 282) களவினால் (குறள் 283) செல்வச் செவிலியா லுண்டு (குறள் 757); [4] சொல் வினை. 30 [5] ஒஒதல் வேண்டும் ... யா அதுமென்னுமவர் (குறள் 653)

என்பது பெறப்படும். உயிர், மேய், குற்றெழுத்து, நெட்டெழுத்து முத லிய குறிகள் முன்னோரிட்ட குறிகளென்பதையும், வேற்றுமையுரு புகள் ஐ, ஒடு, கு, இன் அது, கண், என்ற ஆறாக முன்னோர் கொண்டன ரென்பதையும், சொற்கள் உயர்திணை, அஃறிணை என இருவகையாக அவர் கொண்டனர் என்பதையும் வேற்றுமைகள் ஏழென அவர் கொண்டனர் என்பதையும், அகத்திணையை எழாகக் கொண்டனர் என்பதையும், நால்வகைநிலத்திற்கும் நால்வகைத்தெய்வங்களைக் கொண்டனர் என்பதையும் என்ப, என்மனார், சொல்லவும்படும் போன்ற சொற்களால் ஆசிரியர் குறிக்கின்றமையான், அவருக்கு முன்னர் எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம் பொருளிலக்கணம் எழுதியிருந்தவர் பலரென்பது வெளிப்படை. அம்முன்னோரைப் புலவர், ஆசிரியர், அறிந்திசினோர், உணருமோர் முதலிய சொற்களாற் குறிக்கின்றனர்.

"மாயோன் மேய... — வேந்தன் மேய .. வருணன் மேய"[1] "மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே"[2] உயர்ந்தோர்க் குரிய வோத்தினை"[3] "உயர்ந்தோர் பொருள்வயி னொழுக்கத்தான,"[4] "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் ஐவகை மரபின் அரசர் பக்கமும்"[5] "மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுள்"[6] "மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம் கீழோர்க் காகிய காலமு முண்டே"[7] "பூப்பின் புறப்பாடீராறு நாளும் — நீத்தகன் றுரையாரென்மனார் புலவர்"[8] "தோழி தாயே பார்ப்பான் பாங்கன்"[9] "பால்கெழு கிளவி நால்வர்க்கு முரித்தே[10] "பரத்தை வாயில் நால்வர்க்கு முரித்தே[11] "இமையோர் தேஎத்தும்"[12] "நகையே ... — அப்பா லெட்டே மெய்ப்பா டென்ப"[13] "சூத்திரந்தானே..."[14] "மறை மொழி தானே மந்திர மென்ப"[15] "மந்திரப் பொருள் வயின்..."[16] "ஆயுங் காலை யந்தணர்க் குரிய"[17] அந்தணாளர்க் குரியவும் அரசர்க்கு"[18] "அந்தணாளர்க் கரசு வரைவின்றே"[19] "வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை"[20] "ஞாபகங் கூறல்"[21] என்ற

[1] அகத். 5. [2] அகத். 29 [3] அகத். 31 [4] அகத் 33 [5] புறத். 20 [6] களவு. 1 [7] கற்பி 3 [8] கற்பி 46 [9] கற்பி 52 [10] பொரு. 5 [11] பொரு. 30. [12] பொரு. 54. [13] மெய். 3 [14] செய். 167 [15] செய். 178 [16] சொல். எச். 53 [17] தொல். மர. 70 [18] மர. 72 [19] மர. 82 [20] மர. 72 [21] மர. 110.



ஆசிரியர்வழக்குக்களால் அவர்காலத்துக்கு முன்னரே

ஆரியர்களும் திராவிடர்களும் ஒருங்கே வாழ்ந்தனரென்பதும், அவர்களுள் நால் வகைப்பட்ட பிரிவு இருந்ததென்பதும், அவர்தாம் பார்ப்பார், அரசர், வைசியர், வேளாளர் என்பதும், அவர்கள் வேதங்களிற்

கூறப்பட்ட கடவுள்களாகிய மாயோன் இந்திரன் வருணன் மூவரையும் மூவகைப்பட்ட நிலங்களுக்குங் கடவுளாகக் கொண்டனரென்பதும், வேளாளருட் களவாகிய * "மணத்திற் றவறு நிகழ்ந்துழி ஏனை * களவு என்ற சொற்சுப் பெற்றோரின் உடன் பாடின்றி தலைவன் தலைவியருக்கு மனமொத்து நிகழும் மணம் எனப் பொருள் கூறலாம். களவின்கண் புணர்ச்சி வேறாதிருப்பினுங் கூடும். அதன் பின்னர் பெற்றோர்க் குத் தெரிவித்து அக்களவினை எல்லோரும் ஒத்துக்கொள்ளச் செய்யுங் சடங்கிற்குக் கற்பு என்பது பெயராகும். அதுவும் கல்ப: என்ற சொல்லும் இயைபு பட்டதாகலாம். கல்ப: என்பது சடங்கு என்ற

பொருளில் வழங்கப்பட்டதை சூத்ரகல்ப ஸூத்ர உவநீய (உத்தர ராமசரிதம்) என்ற வழக்கும் காணம் என்பதும் அப்பொருளில் வழங்கப்

பட்டதை ஸூ^ஹ்^ளகாணழ (யாஜ்ஞவஸ்க்ய^வ^ஸ்ருதி: I 150)
என்ற வழக்கும்

வாத்ஸ்யாயனருக்கில் கூறும் வைதிகதர்மஹாகஸ்கஉ என்ற பொருளும் காட்டும். ஆகலின் கற்பெனப் படுவது கரணமென்ப என்ற ஆசிரியர் தொல்காப்பியனாரின் சூத்திரத்தில் கற்பு கரணம் என்பன அப்பொருளிலே வழங்கப்பட்டன எனக் கூறல் தகும். இக்களவு பெண்மக்கட்கு பூப்பு நிகழ்ந்தபின்னர் மணஞ் செய்விக்குங் கூட்டமெல்லாவற்றினு முண்டு என்பது காமசூத்திரம் முதலிய நூல்களான் விளங்கும். திருட்டுத் தனமாய்ச் செய்யும் மணமென்பது அதற்குப் பொருளின்மை யறிக

cf:- வ்ராத்யெஉண கந்யாவிவிக்தேபஉநவஸ்ய் சுறாஹெயாத்ரி காவிர்யஹிதாஹ்யா உவமூஹ்ய உவஸவெஉக...ஓமதீ கஞ்அ ஸகறூாஅரெசுஃ. வ்ரதிவஹாழ சுஹிவெ தாவகாஸவதிஉநீஂநாய கஃ ஹ்ரா த்ரியாமாநாக் சுழிா.நாயஇ கூஸாநு சூவஷீயஉயஸா்ஹூருதி ஹூஊாஅ த்ரிஃ வரி கு ஜெக் । தஹொ ஊதசி விதசிஅ வ காஸ்யெக் । சுமிவஸாகஷிகாஹி விவாஹாநநிவதஉஜ உதீ சூஅயஉ வஊயஃ । ஒஷெஷ்பி கவாஷெஜநாஂ ஸஜெதைஃ ஷ்ஜஜெ வ காஸ்யெக் । தஊாஸுவாஅ யஸா கடீவூஸூ் சுவஂ வரிஹாஜொ ஓணஹயா அ

தஹூாவணவ வ்ருநாஂ ஓஒ்யூஹ்யுா யொஜயெதசீ । சுநஞாஂஅ வீருத்யூவம்ருஷெண ரசௌண தஊாஸுவாநுவீணயெதி। மாஸு வெஉண விவாஹென வா ஜெஷெத ॥ (சுாஉவஸூ. 5 அயூா).

யோர் மூவருடைய காரணத்தைக் கொண்டனரென்பதும், அந்நால் வகைப்பட்டவருந் தமிழராகக் கொள்ளப்பட்டாரென்பதும் அறிதல் கூடும். இந்நூலுள் அந்தணர் மறை போன்ற இடங்களிலெல்லாம் அந்தணர் என்பது பிராமணரையே குறிக்கும். பார்ப்பான், பார்ப்பார் என்ற சொற்களையும் ஆசிரியர் வழங்குகின்றமையான் " பார்ப்பார் மறை " என இங்கேனும், " அந்தணன் பாங்கன் " என அங்கேனும் வழங்காது ஏன் இரண்டு சொற்களையும் வழங்கினரெனின், பிறப்பான் மாத்திரம் பிராமணுயுள்ளோனைப் பார்ப்பான் என்ற சொல்லானும், தொழிலானும் பிராமணுயுள்ளோனை அந்தணன் என்ற சொல் லானுங் குறித்தற்கு என்னலாம். இக்கருத்தைக்கொண்டே "ஆனியற் பார்ப்பன மாக்களும்" (புறநா 4) என்றவிடத்து ஆனியல் என்ற அடைமொழி கொடுத்தனர் அச்செய்யுளாசிரியர்.

பிறப்பியலினுள்ள சூத்திரங்கட்கும் தைத்திரீயசுக்லயஜுர்

வேதியப்ராதிசாக்கிய சூத்திரங்களுக்கும் ஒற்றுமை யிருத்தலானும் இறுதிச்சூத்திரம் ருக்வேதபந்திரத்தைக் குறித்தலானும் மொழி முதற்கண்ணும் மொழியிறுதிக்கண்ணும் வரும் எழுத்துக்களைப் பற்றி ஈண்டுக் கூறும் முறைக்கும் ப்ராதிசாக்கியங்களிற் கூறும் முறைக்கு மொற்றுமையிருத்தலானும், சொல்லதிகாரத்து உரியியலின் முறைக்கும் யாஸ்கநிருக்தத்து முறைக்கும் ஒற்றுமை யிருத்தலானும், பொருளதிகாரத்தில் மெய்ப்பாட்டியலிலுள்ள பல செய்திகளுக்கும் நாட்டியசாஸ்திரத்திலுள்ள செய்திகளுக்கும் * ஒற்றுமையிருத்தலானும் "பூப்பின் புறப்பா டீரா று நாளும்..." என்றதற்கும் "ஈதௌ உவெயாக" என்ற தர்மசூத்திரத்து வாக்கியத்திற்கும் ஒற்றுமை யிருத்தலானும், ஆசிரியர் தொல்காப்பியனார்க்கு வேதங்கள், ப்ராதிசாக்கியங்கள், தர்மசாஸ்திரங்கள், யாஸ்க

* நகையே...... .....அப்பா லெட்டே மெய்ப்பா டென்ப
ஶ்ரூம்ஶாரஹாஸ்ய கருணா......அஷ்டௌநாட்யே ரஸா:
ஸ்ம்ருதா: (நா 6-15)
எள்ள லிளமை பேதைமை மடனென்று
உள்ளப் பட்ட நகைநான் கென்ப
ஹாஸோ நாம
ஸம்பந்த ப்ரூரவ
ஸம்வர்த்தி ஹிவிகாரவெ ஜாயதே । (நா 7-8)
பரசேஷ்டாநுகரணா
ஸமுத்பாத்ய

கிருக்தம், நாட்டிய சாஸ்திரமோ அதன் மூந்நூலோ ஆகிய வடமொழி நூல்களிற் பயிற்சியுண்டு என அறியக்கிடக்கின்றது. *

அன்றியும் இந்நூலிலிருந்து அவர்காலத்தில் க, ச, ட, த, ப; இவற்றிற்கு ம, ஜ, ட, த, ப, என்ற ஒலிகள் இல்லை யென்பதும் குற்றியலிகரம், குற்றியலுகாம், ஆய்தம் இவற்றிற்கு அறுவகைப் பட்ட ஒலிகள் இருந்தனவென்பதும், ட, ண, இவை இப்போது ஒலிப்பது போல் ஒலிக்கப்படவில்லை யென்பதும், அளபெடையை மூன்று மாத்திரை கொண்ட எழுத்தாக அவர் கருதவில்லை யென்பதும், தமிழ் ஐகார ஔகாரங்களுக்கும் வடமொழி ஐ, ஔ ஆகிய எழுத்துக்கட்கும் வேறுபாடு உண்டென்பதும், உரிச்சொல்லைக் குறைச்சொற்கிளவி என்றதனால் அவரது கொள்கையில் அது பெயர்வினை இவற்றின் பகுதி என்பதும் அறியப்படும். †

ஆசிரியர் தொல்காப்பியனார் இயற்றிய இவ்வெழுத்ததிகாரத்திற்குத் தற்போது காணப்படும் உரைகள் இரண்டாம். அவை இளம்பூரணம், நச்சினார்க்கினியம் என்பன. இளம்பூரணம் சுமார் கி. பி. 12ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டிருத்தல் கூடும். அஃது இளம்பூரணர் என்பவரால் இயற்றப்பட்டது. அவரையே உரையாசிரியர் என வழங்குவர் பலர். ஆயினும் உரையாசிரியர் என்பவர் ஒருவராயில்லாது பலர் உரையாசிரியர் எனக் கூறப்பட்டனரோ வென்ற ஐயந் தமக்குண்டு எனப் பல ஆண்டுகளுக்கு முன்னர் டாக்டர் தாக்ஷிணாத்ய கலாநிதி ஐயரவர்கள் கூறக் கேட்டேன். நச்சினார்க்கினியம் நச்சினார்க்கினியரால் இயற்றப்பட்டது. அவர் சேனாவரையர்க்கு இளைஞராய்ச் சுமார் கி. பி. 14ஆவது நூற்றாண்டிலிருந்திருத்தல் கூடும்.

சேனாவரையர் எழுத்ததிகாரத்திற்கு உரை

எழுதவில்லை எனக் கூறினர் சிவஞானமுனிவர். அவரைப் பின்பற்றியே பலருங்

*இவற்றைப்பற்றித் தமிழ்மொழிநூல், History of Grammatical Theories in Tamil, சொல்லதிகாரக் குறிப்பு, செந்தமிழிற் பதிப்பிக்கப் பட்ட புறநானூற்றுக்குறிப்பு இவற்றிற் பார்க்கவும்.

† அந்நூல்கள் தற்போதுள்ள ஆராய்ச்சியாளர்களால் கி. பி. 3, 4, நூற்றாண்டுகளுக்கு முன்னருள்ளன எனக் கூறப்படுகின்றமையான், தொல்காப்பியம் கி. பி. இரண்டாவது நூற்றாண்டினதாகும்.



கூறுவர். ஆயினும் "எல்லாத் தொகையு மொருசொன் னடைய" (சொல் 420) என்ற சூத்திரவுரையில் சேனாவரையர் தன் கொள்கைக் கியைய எழுத்ததிகாரத்துள்ள

பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப
வேற்றுமை யுருபு நிலைபெறு வழியுந்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்

(எழுத். 133)

என்ற சூத்திரத்தைச் சான்றாகக் கூறுகின்றனர். அச்சூத்திரப் பொருளில் அவர் இளம்பூரணர்பொருளோடு மாறுபட்டனர்.

ஆங்குக் கூறும் முறையை நோக்கின் அவர் எழுத்ததிகாரத்திற்கும் உரை எழுதியிருத்தல் கூடுமென ஐயம் உண்டாயிற்று. பின்னர் தமிழகாதி எடிட்டர் திருவாளர் S. வையாபுரிப்பிள்ளையவர்கள் B.A., B.L., எழுத்ததிகாரச்சேனாவரையருரை என்று தலைப்பில் எழுதப்பட்ட ஓரேட்டினைத் திருநெல்வேலியிற் கண்டதாகவும், அது தவறாயிருத்தல் கூடும் என நினைத்து அதனை உள்ளே பார்க்கவில்லையென்றுங் கூறினர். அவ்வாறு ஓருரை இருப்பின் அதனைக் கண்டு வெளியிடல் தமிழர்களின் கடமையாகும்.

இரண்டு உரைகள் இருக்க இக்குறிப்புரை எற்றுக்கு என எண்ணம் வரல்தகும். அவ்வுரைகாரர்கள் நூலாசிரியர் எக்காலத்துக்குமுள்ள மொழிக்கு இலக்கணங் கூறுகின்றாரென நினைத்து, சூத்திரக்காரருக்குப் பின்னர் வந்த வழக்குக்களையும் அச்சூத்திரங்களில் சிலவற்றை மிகையெனக் கொண்டு அவற்றாற் கொள்ளுகின்றனர். சிற்சில விடங்களில் நூலாசிரியர்கருத்துக்கு மாறுபாடாகப்†

* தொல், சொல்லதிகாரக்குறிப்பு பக். 197-8

† புணர்ச்சி வேற்றுமைப்புணர்ச்சி

அல்வழிப்புணர்ச்சி என இரு
வகைப்படுமென்று எழுத். 113 ஆவது சூத்திரத்திற்
கூறி உயிர்மயங்கியல்
முதலியவற்றில் அவ்விரண்டு புணர்ச்சிவிதிகளையும்
விரிவாய் ஆசிரியர்
கூறியிருப்பினும், ஆங்கு யானை
+ கோணர்ந்தான் போன்ற வேற்றுமைப்
பொருட்புணர்ச்சியைக் கூறுகின்றாரென நினைத்து
யானையை + கோணர்ந்
தான் போன்ற விடங்களிலுள்ள
புணர்ச்சியை உருபியலின் இறுதிச்சூத்தி



பொருள் கூறுகின்றனர். சில விடங்களில் மொழிநூல்வல்லோர் கொள்கைக்கும் அவரது கொள்கைக்கும் மாறுபாடுகள் உள. இக்குறிப் புரையில் முன்பின் சூத்திரங்களுக்கு இயைபு கூறுதலும், முன்ன

ருள்ள சூத்திரங்களிலிருந்து எவை அதிகரிக்கின்றன என்பதைக் காட்டுதலும், சூத்திரத்திற்குச் சூத்திரப்போக்கை யொட்டியும் மொழிநூல்வல்லோரின் கொள்கைக்கு மாறுபாடின்றியும் பொருள் கூறுதலும், முடிந்தவரை மிகையாற் பொருள் கொள்ளாது ஆசிரியர் வழக்காலும், உலகநியாயங்களாலும் பொருள் கொள்ளுதலும், உதாரணங்கள் முடிந்தவரை இந்நூலிலிருந்தும், சங்கச்செய்யுளி லிருந்துங் காட்டுதலும், உரைகாரர்களின் கொள்கைகளை யாய்தலும், வடமொழிநூலோடு ஒற்றுமைகாட்டுதலும் ஆகிய பலவற்றைக் காணலாம். இவ்வுரை எழுதியதற்குக் காரணம் எளிதில் எல்லோரும் தொல்காப்பியத்தைப் படிக்கவேண்டுமென்பதும், மாணாக்கர்களின் அறிவை வளர்க்கவேண்டுமென்பதும், நூலாசிரியர் அழகாக முற்கூறியதைப் பிற்கூறாது சாஸ்திரீயமுறையிற் சூத்திரங்கள் இயற்றியதைக் காட்டவேண்டுமென்பதும், அவரது அறிவுமுதிர்ச்சியைப் பிறர்க்கு உணர்த்தவேண்டுமென்பதும் போன்றனவாம். இங்குக் கூறப்பட்டனவெல்லாம் குற்றமில்கூற்றென

எண்ணமில்லை. அவற்
றைக் காரணத்துடன் காட்டுவோர்க்கு என் நன்றியைக் காட்டுவேன்.

பின் வருஞ் சூத்திரங்களின் உரை நோக்கற்பாலன :—5, 10, 13, 14, 17, 22, 31, 32, 36, 41, 46, 47, 50, 53, 56, 74, 83, 88, 91, 94, 101, 102, 105, 109, 117, 125, 133, 135, 139, 141, 156, 161, 165, 169, 178, 192, 203, 211, 214, 215, 221, 223, 225, 234, 238, 254, 268, 272, 273, 281, 294, 301, 304, 308, 309, 321, 326, 330, 338, 342, 344, 347, 348, 350, 354, 357, 361, 373, 376, 382, 384, 390, 400, 410, 412, 415, 419, 434, 439, 445, 447, 450, 451, 456, 462, 463, 469, 477, 482.

ரத்துள்ள நேருங்காலை என்ற சொல்லாற் கொண்டனர் என்பது ஒன்று; பலவற்றிறுதி என்ற சொற்கு ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு வகையாகப் பொருள் கொண்டனர் என்பது மற்றொன்று; யகரம் (எழுத். 212) என்ற தன் பொருளைப் போன்று, லகரம் (எழுத் 215) என்றதற்குப் பொருள் கொள்ளாமை மற்றொன்று; ஆன் (எழுத். 234) என்ற விடத்து ஆன்முன் என்றதை நிலைமொழியாகக் கொண்டது மற்றொன்று. இவைபோல்வன பிறவுங் காணலாம்.

## XXI

சிற்சில விடங்களில் சூத்திரங்களின்
பின்னர் என்றவாறு
என்றதை வருவித்தல் வேண்டும். முன்னர்
என்ற சொல்லை
ஆசிரியர் இடமுன்னர் என்ற பொருளில்

வழங்கினர். காலத்தால் அது பின்னாகலின், இவ்வுரையில் அதற்குப் பின்னர் என்ற பொருள் கூறப்பட்டது. ஈற்றுக்குற்றியலுகரத்தைக் குறிக்கப் ப்புள்ளியெழுத்து அச்சில் இல்லாமையால் அவை ஈண்டு வழங்கப் படவில்லை.

இவ்வுரை எழுத எனக்கு உதவியோர் பலர். அவர்கள் பிஷப் ஹீபர் காலேஜில் கால்ட்வெல் இலக்கணம் படிப்பிக்க இடங்கொடுத்த அக்காலேஜ் ப்ரின்ஸ்பல் Rev. Allan F. Gardiner அவர்களும், சென்னைத் தமிழ்லெக்ஸிகன் ஆபீஸுக்கு வரவழைத்த மகா-ா-ா-ஸ்ரீ மஹாமஹோபாத்தியாய வித்யாவாசஸ்பதி தர்சனகலாநிதி குலபதி S. குப்புஸ்வாமி சாஸ்திரிகள் அவர்களும், தமிழ் லெக்ஸிகன் ஆபீஸ் கமிட்டி தலைவர் மகா-ா-ா-ஸ்ரீ Rao Bahadur K. V, கிருஷ்ண ஸ்வாமி அய்யர் அவர்களும், ஆங்கு என் தமிழறிவை வளர்த்த என் நண்பர்கள் மகா-ா-ா-ஸ்ரீ உ-வே M. இராகவையங்கார் அவர்களும் மகா-ா-ா-ஸ்ரீ உ-வே. V.M.

கோபாலகிருஷ்ணமாசாரியார் அவர்களும், மகா-ள-ள-ஸ்ரீ வித்வான் E. K. நடேச சர்மாவும் காலஞ்சென்ற மகா-ள-ள-ஸ்ரீ வித்வான் P. S. வேதாசலமய்யரும், திருவையாற்று ராஜா காலேஜுக்கு வரவழைத்தவரும் அக்காலத்தில் தஞ்சை ஜில்லா போர்டு ப்ரஸிடெண்டுமான மகா-ள-ள-ஸ்ரீ குன்னம் S. சுப்பிரமணிய அய்யர் அவர்களும் ஆவர். அவர்கள்பால் என் அன்பார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

இவ்வுரையை எழுதியவுடன் அதனைப் பதிப்பிக்க முழுப் பணமுஞ்செலவிட உவகையுடன் ஏற்றுக்கொண்ட ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத தம்பிரான் ஸ்வாமிகள் அவர்களுக்கு என் நன்றியை எவ்வாறு செலுத்துவேன் ? அவர்கள் ஏற்றுக்கொண்டது மகா-ள-ள-ஸ்ரீ பாஷாகவிசேகர மஹாவித்வான் R. இராகவையங்கார் அவர்கள், தொல்காப்பியச்சொல்லதிகாரக்குறிப்புப்பாயிரத்திற் கூறிய " சாஸ்திரியார் இவ்வாராய்ச்சியை இம்மட்டோடுவிடாது ஆசிரியர்

தொல்காப்பியனாருடைய எழுத்ததிகாரம் பொருளதிகாரம் என்பவற்



றிற்கும் இவ்வாறு குறிப்புரை செய்து வெளியிடுமாறு இத்தமிழுலகம் தூண்டுவதாகுக" என்ற வாக்கை உண்மையாக்கியது என்பதை நினைத்து மகிழ்கின்றேன்.

அச்சிடுவதற்குமுன் இவ்வுரையை எழுத்தெழுத்தாகப்படித்து குற்றங்களைக் களைந்த என் நண்பர் மகா-ா-ா-ஸ்ரீ உ-வே V. M. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் அவர்களுக்கும், அச்சிடும்போதும் முன்னரும் உதவிபுரிந்த ராஜா காலேஜ் தமிழாசிரியர்கள் மகா-ா-ா-ஸ்ரீ R. வெங்கடாசலம் பிள்ளை, வித்வான் T. G. சோம சுந்தர தேசிகர், வித்வான் T. G. சுந்தரராகவாசாரியார் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக. ஈண்டு எனக்கு உதவிய என் மாணவர்களான சி. வித்வான் பிச்சையா, சி. வித்வான் V. R. பஞ்சாபகேச சர்மா, சி. M. சிவப்பிரகாசம், சி. P. ஸேது ராவ், சி. S. முத்து குமரன் இவர்கள் தமிழ்ப்புலமை வாய்ந்து சிறந்து விளங்குமாறு கடவுள் ப்ரணதார்த்திஹரர் அருள்புரிவாராக.

திருவையாறு,
3—12—37.

P. S. சுப்பிரமணிய சாஸ்திரி.

# பொருளடக்கம்

பக்கம்.

## இவ்வுரையில் ஆளப்பட்ட நூல்களும் அவற்றின் குறிகளும்

### தமிழ் நூல்கள்

1. தொல்காப்பியம் எழுத்ததிகாரம்

   i. இளம்பூரணருரை
      கன்னியப்பமுதலியார் பதிப்பு
      சிதம்பரம்பிள்ளைப்பதிப்பு

   ii. நச்சினார்க்கினியருரை
      மகாலிங்கையர் பதிப்பு
      தாமோதரம்பிள்ளை பதிப்பு
      சைவசித்தாந்தக்கழகப் பதிப்பு
      பொன்னையா பதிப்பு

2. தொல்காப்பியம் சொல்லதிகாரம்

   i. இளம்பூரணருரை
   ii. சேனாவரையருரை
   iii. நச்சினார்க்கினியருரை
   iv. தெய்வச்சிலையாருரை
   v. சொல்லதிகாரக்குறிப்பு

3. தொல்காப்பியம் பொருளதிகாரம்

   i. அகத்திணையியல்
   ii. புறத்திணையியல்
   iii. களவியல்

iv. கற்பியல்
v. பொருளியல்
vi. மெய்ப்பாட்டியல்
vii. செய்யுளியல்
viii. மரபியல்

புறநானூறு
அகநானூறு
திருமுருகாற்றுப்படை
பொருநராற்றுப்படை
பெரும்பாணாற்றுப்படை
நெடுநல்வாடை
மலைபடுகடாம்
பரிபாடல்
கலித்தொகை
திருக்குறள்
வீரசோழியம்

தொல்காப்பியமுதற் சூத்திரவிருத்தி
திருக்கோவையார்
பிரயோகவிவேகம்
தமிழ்மொழி நூல்
தொ. சூ. வி

பி. வி.

செந்தமிழ்—புறநானூற்றுக்குறிப்பு
செந்தமிழ் தொகுதி XXV

## வடமொழி நூல்கள்.

ருக்வேத ஸம்ஹிதை ௫.
தைத்திரீய ஸம்ஹிதை தைத்.
நிருக்தம்
பாணினி சிக்ஷை
பகவத்கீதை
ருக்வேதப்ராதிசாக்கியம்
சுக்லய ஜுர்வேதப்ராதி சாக்கியம்
அதர்வவேதப்ராதிசாக்கியம்
மஹாபாஷ்யம்
௫. ப்ரா.
யஜு. ப்ரா.
அ. ப்ரா.
உ. ஹா.

காமஸூத்திரம்
மனுஸ்மிருதி
யாஜ்ஞவல்க்யஸ்மிருதி
நாட்டியசாஸ்திரம்
வாமநகாவ்யாலங்காரம்
உத்தரராமசரிதம்
வாசஸ்பத்தியம்

## PHILOLOGICAL WORKS.

Caldwell—Comparative Grammar of Dravidian Languages.

Burnell—On Aindra School of Grammarians

P. S. Subrahmanya Sastri—Histroy of Grammatical Theories in Tamil.

South Indian Inscriptions.

Bishop Heber College Magazine 1925.

Mac Donell's Vedic G...

## பிழையுந் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. |
|---|---|---|
| 8 | 23 | எழுத்தோன்ன |
| 14 | 24 | வல்லெழுத்து |
| 37 | 29 | இருப் |
| 38 | 27 | இடையில |
| 47 | 30 | உ ஊ ம |
| 48 | 20 | —ஞய்தத்தை |
| 63 | 6 | என்னும் |
| 64 | 15 | றிடனிலை...உணாத்துதல் |
| 68 | 8 | ஞாறுதியில் |
| 69 | 8 | ஐயென |
| 73 | 25 | செய்யனீட்ட... |
| 78 | 17 | னவ்வலவ்... |
| 79 | 10 | சகரத்தின |
| 87 | 3 | போக்கிற்...ப் |
| 91 | 1 | நண்ணிய |

| | | |
|---|---|---|
| 101 | 25 | தோன்றவில்லை |
| 103 | 5 | வந்தமையின் |
| ... | 32 | இச்சூத்திரத்திற்கு |
| ... | 33 | வென |
| 104 | 25 | டெழுத்துக்களுக்கு |
| 106 | 6 | திருக்கோவையார் |
| 108 | 19 | —னிடத்து |
| 125 | 2-3 | பெயராகி...கருது தற்குந் |
| 126 | 4 | வரும் |
| 130 | 23 | கூறு... |
| 162 | 19 | கின்ற |
| 166 | 18 | உயிருமு... |
| 187 | 9 | அன் |
| 202 | 26 | —ரெச்சங்களு... |
| 208 | 20 | பொருந்த... |
| 214 | 16 | உருபிற்குச் |
| 224 | 26 | —யடுத்து |
| 263 | 1 | —னும |
| 356 | 7 | பெருத— |

றுடனிலை...உணர்த்துதல்

விறுதியில்

ஐயேள

செய்யுளீட்ட...

நவ்வலங்...

சகரத்தின்

போக்கிற்துப்

நண்ணிய

தோன்றவில்லை

வந்தமையி

இச்சூத்திரத்திற்கு

வெளித்
தெழுத்துக்களுக்கு
திருக்கோவையார்
—விடத்து
பெயராகிய...கருதுதற்குக்
வருமே
கூற
உணரநின்ற
உயிரு...
இன்
—ரெச்சங்களு...

| | | |
|---|---|---|
| 91 | 11 | நண்ணிய |
| 100 | 18 | தற்போது பால் |
| 108 | 20 | மேய்யே |
| 122 | 1 | ஒல்ஞொழி |
| 142 | 28 | அக்குறியலுகா |
| 158 | 9 | உயரிறு |
| 208 | 19 | பொருததமின்று |
| 265 | 28 | மெலலெழுத்து |
| 278 | 20 | என்விடத்து |
| 293 | 3 | தாகூஉ |
| 296 | 1 | பான்னென்கிளவி |
| 302 | 14 | நிலையிலும் |
| 304 | 11 | ஆகஉன் |
| 305 | 1 | வருஉங் |
| 305 | 17 | டாமுப் பெயரு |

திருத்தம்.

ஆன்மூன்...ஆன்

யாகு

குற்றியலுகரங்

கொண்ட நங்கை

கன்னிய

தற்போதுபோல்

மெய்யே

ஒல்வழி

அக்குற்றியலுகர
உயிரிறு
பொருத்தமின்று
மெல்லெழுத்து
என்றவிடத்து
தொகூஉ
பொன்னென்கிளவி
னிலையலும்
ஆகலின்
வரூஉங்

டாழுப்வெயர்க்கு

# சிறப்புப்பாயிரம்.



வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச்
செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்
நிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்
தறங்கரை நாவி னான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற் கரிறபத் தெரிந்து
மயங்கா மரபி னெழுத்துமுறை காட்டி

மல்குநீர் வரைப்பி னைந்திர நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.

பொ - ள். வடக்கின்கண் வேங்கடத்தையும் தெற்கின்கண் குமரி
யையுமுடைய அவ்விடமாகிய தமிழ் வழங்கும் நல்லுலகத்தினுடைய
உலகவழக்கு, செய்யுள்வழக்கு இவற்றை ஆராய்ந்த பெரியகாரணத்
தான் எழுத்து, சொல், பொருள் இவற்றைப்பற்றி, செந்தமிழின்
இயல்போடு பொருந்துமாறு அந்நிலத்துள்ள மூன்று நூல்களைப்
படித்து, முறைப்பட ஆராய்ந்து, இலக்கணஞ் செய்தான். அக்குற்ற
மற்ற நூலினை மாற்றார்நிலங்களைக்கொள்வதும் அவற்றைப் பிறர்க்கு
அளிப்பதுமாகிய மாட்சிமையுடைய பாண்டியனது அவையின்கண்
அறமே கூறுகின்ற நாவினால் நாலு வேதங்களையும் முற்ற அறிந்த . அதங்கோட்டாசானுக்குக்

குற்றமறத் தெரிவித்து மயக்கமில்லா



போடுகூடிய இலக்கணத்தை முறையாகப் படித்துக்காட்டி, கடல்சூழ் நிலத்தின்கண் ஐந்திரவியாகரணம் நன்கு உணர்ந்த தொல்காப்பியன் எனத்தனது பெயரைத்தோற்றுவித்து, பல புகழினை ஈண்டு நிறுத் திய தவமுடையோன்.

ஆயிடை என்பதற்கு அவற்றை எல்லையாகவுடைய என இளம்பூரணரும், அவ்விரண்டெல்லைக்குள்ளிருந்த என நச்சினார்க்கினியரும், அவ்விடமாகிய எனச் சிவஞானமுனிவரும் பொருள் கூறினர். "ஆயிடையென்புழித் தனித்து நின்று பொருளுணர்த்தலாற்றாத அகரச்சுட்டினை ஆகுபெயரென்றும், அவற்றுக்குள்ளென உருபு விரித்துமிடர்ப்படுப" என்று சிவஞானமுனிவர் ஏனையோரை மறுத்தனர்.

நல்லுலகம் என்றதற்கு நன்மக்கள் என இளம்பூரணரும் நல் லாசிரியன் என

நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர். முன்னருள்ள பொருளே பொருந்தும்.

ஆயிருமுதல் என்பதை அவை, இரண்டு, முதல் என்பனவற் றின் தொகையாகக் கொண்டனர் இளம்பூரணரும் நச்சினார்க்கினிய ரும். இருமுதல் என்பதைப் பண்புத்தொகையாகவும், அதன் பின் ஆய்ந்த இருமுதல் என்பதை வினைத்தொகயாகவுங் கொண்டனர் சிவ ஞானமுனிவர். முனிவர்கூற்றே பொருந்தும். " நச்சினார்க்கினி யார் முதலென்பதனைப் பெயரடியிற் பிறந்த முதனிலைவினைப்பெய ராகக் கொண்டு முதலுதலினால் என வுரைப்பர். இருமுதலென்னுந் தொகைச்சொல் அங்ஙனம் பக்கிசைத்தல் பொருந்தாமையறிக" என்றனர் சிவஞானமுனிவர். முதல் என்பதை அவ்வாறு நச்சினார்க் கினியர் கொண்டதாகத் தோன்றவில்லை. அஃது ஆராய்தற்குரியது. முதல் என்பதற்குக் காரணம் என இளம்பூரணருஞ் சிவஞானமுனி

வரும் அடி என நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர். முன்னருள் ளதே சிறக்கும்.

சிவணிய என்பதற்குப் பொருந்தின என இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும், பொருந்தியுணரும்பொருட்டு எனச் சிவஞானமுனிவரும் பொருள் கூறினர். பொருந்துமாறு எனப் பொருள் கூறின் சாலும.

xxix

நிலத்தோடு என்பதற்கு நிலத்து வழக்கோடு என இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும், நிலத்து மொழியோடு எனச் சிவஞான முனிவரும் பொருள் கொண்டனர். அதனை நிலத்தின்கண் என்ற பொருளில் வந்த வேற்றுமைமயக்கமெனக் கொள்ளின் பொருந்துமெனத் தோன்றுகின்றது.

முறைப்பட எண்ணி என்பதற்கு முறைப்பட ஆராய்ந்து என இளம்பூரணரும், "இத்துணை வரையறுத்து உணர்த்துவலென்று அந்நூல்களிற் கிடந்தவாறன்றி அதிகாரமுறையான் முறைப்படச் செய்தலை எண்ணி" என நச்சினார்கினியரும், "பிற்காலத்தாருணரு முறைப்படக் கருதி" எனச் சிவஞானமுனிவரும் பொருள் கொண்டனர். இளம்பூரணர்கொள்கை

சிறக்கும்.

புலம் என்றதற்கு இலக்கணம் என இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் பொருள் கொண்டனர். சிவஞானமுனிவர் நூல் எனப் பொருள் கூறினர். முனிவர்கூற்றே சிறந்ததாகும்.

பனுவல் என்பதை ஏழாம்வேற்றுமையாக இளம்பூரணர் நச்சினார்க்கினியர் இருவரும், இரண்டாம்வேற்றுமையாகச் சிவஞானமுனிவருங் கொண்டனர்.

எழுத்து என்றதற்கு எழுத்திலக்கணத்தை என உரைகாரர்களிருவரும், இயற்றமிழை எனச் சிவஞானமுனிவரும் பொருள் கூறினர். இலக்கணநூலை எனப் பொருள்கொள்ளின் சாலும்.

ஈண்டு குறிக்கப்பட்ட பாண்டியன், மாகீர்த்தி என்பார்.

" அகத்திய நிறைந்ததொல்காப்பியனென்னாது ஐந்திர நிறைந்த

தொல்காப்பியனென்றதென்னையெனின், அகத்திய நிறைந்தமை எல்லாரானுந் தெளியப்பட்டமையின் வடமொழியினும் வல்லனாயினானென்பது விளக்கிய அங்ஙனங் கூறினாரென்பது " எனக் கூறினர்

சிவஞானமுனிவர். ஐந்திரம் என்பது வடமொழியில் ஒன்பது வியாகரணங்களுள் முதன்மையானது என்ற வழக்கு உளது. ஆனல் தற்போது அந்நூல் கிடைக்கவில்லை. ஆயினும் இந்திரன் பிருஹஸ்பதி

யிடத்தில் ஆயிரம் தேவவருஷம் ஒவ்வொரு சொல்லின் இலக்கண

XXX

மும் படித்தானென்றும், அப்படிப்பு முடியவில்லை என்றும் ஆசார்ய பதஞ்சலியார் மஹாபாஷ்யத்திற் கூறுவர். ஐந்திரம் என்பது காதந்த்ரவியாகரணத்தையும், ப்ராதிசாக்கியங்களையும் குறிக்கு மென்பர் டாக்டர் பர்னல். * ப்ராதிசாக்கியங்களையும் நிருக்தத்தையும் தாம் அறிந்தாராகப் பலவிடங்களிற் காட்டியுள்ளார் ஆசிரியர் என்பது முகவுரையிற் காட்டப்பட்டது.

* On the Aindra School of Sanskrit Grammarians by Dr. A. C. Burnell.

தற்போதுள்ள தமிழ்மொழியிலக்கணங்களுள் தொல்காப்பியமே முதன்மையானது. அதனை யியற்றிய ஆசிரியர் தொல்காப்பியனார் எனப்படுவர். அத்தொல்காப்பியத்துள் மூன்று அதிகாரங்கள் உள ; அவை எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்பனவாம்.

அவற்றின்கண் பொருளதிகாரத்துள் ஒன்பது இயல்கள் உள. அவை முறையே அகத்திணையியல், புறத்திணையியல், களவியல்
கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் என்பனவாம். அவ்வதிகாரத்தில், இன்பம் நுகர்தற்குத் துணையாகிய அகப்பொருளை அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் இவற்றிலும், பொருள் தேடுவதற்கும், அறன் நிகழ்த்தற்குந் துணையாகிய புறப்பொருளைப் புறத்திணையியலிலும், நூல்களைப் படிக்கும்போதும் நாடகங்களைப் பார்க்கும்போதும் மெய் மறந்து நுகரப்படும் மெய்ப்பாட்டினை*
மெய்ப்பாட்டியலிலும், உவமாலங்காரத்தை

உவமவியலிலும், செய்யுளியற்ற இன்றியமையா அகவற்பா முதலியவற்றைச் செய்யுளியலிலும், பண்டைய வழக்கு முதலியவற்றை மரபியலிலும், கூறினர் ஆசிரியர்.

* மெய்ப்பாடு என்பதும் வடமொழியலங்காரநூல்களிற் கூறப்பட்ட ஸ்தாயீ பாவ: (ஸ்தாயீபாவம்) என்பதும் ஒருபொருட்கிளவி யாகும்; சிலவிடத்து அது ரஸ: (சுவை) என்பதையுங்

குறிக்கலாகும். 2

இன்பம் முதலியவற்றின் நுகர்ச்சியைக் கூற மொழி வேண்டும். அம்மொழியைப்பற்றிச் சொல்லதிகாரத்தில் உணர்த்தினர். சொல்லதிகாரத்துள்ளும் ஒன்பது இயல்கள் உள. அவை முறையே கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமைமயங்கியல், விளிமரபு பெயரியல், வினையியல், இடையியல், உரியியல், எச்சவியல் என் .

• பணவாட.

முதல் நான்கு இயல்களில் வாக்கியத்தைப்பற்றியும்,

பெயரியல் வினை யியல் இவற்றுள் வாக்கியத்தின் பகுதிகளாகிய பெயர் வினை இவற் றைப்பற்றியும், இடையியல் உரியியல் இவற்றுள் பெயர் வினை இவற் றிற்கு விகுதி பகுதிகளாகிய இடைச்சொல் உரிச்சொல் இவற்றைப் பற்றியும், எச்சவியலில் எஞ்சியவற்றைப்பற்றியுங் கூறினர் ஆசிரியர்.

அச்சொற்கள் எழுத்துக்களா லாக்கப்பட்டமையானும், இரண்டு சொற்களேயேனும் பகுதி விகுதிகளேயேனுங் கூட்டி யொலிக்கும் போது சில ஒலிகளின் மாறுபாடு நிகழ்கின்றமையானும், அவ்விரண் டைப்பற்றி எழுத்ததிகாரத்திற் கூறினர்.

எழுத்ததிகாரத்துள்ளும் ஒன்பது * இயல்கள் உள ; அவை நூன்மரபு, மொழிமரபு, பிறப் பியல், புணரியல், தொகைமரபு, உருபியல், உயிர்மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியலுகரப்புணரியல் என்பனவாம். அவற்றுள் முதன் மூன்றியல்களிலும் எழுத்துக்களின் வகை, குறி, பிறப்பு முத லியவற்றையும், எஞ்சிய ஆறியல்களிலும் புணர்ச்சியைப்பற்றியுங் கூறி னர்.

ஒருவன் இன்பத்தை முதலில் நுகர்ந்து, அதன்பின்னர் அதனை மொழிகளாற் பிறர்க்கு உணர்த்துகின்றான். அம்மொழிகளே இலக்

கணவாசிரியர்கள் எழுத்துக்களா லாக்கப்பட்டனவாகக் கூறுகின்றனர். ஆயினும், ஆசிரியர்கள் பிறர்க்குப் படிப்பிக்கும்போது முதலில் எழுத்துக்களையும், அதன்பின்னர்ச் சொற்களையும், அதன் பின்னரே உலகத்து நுகரப்படும் பொருள்களையுங் கூறுகின்றமையின் ஆசிரி யர் தொல்காப்பியனாரும் முதலில் எழுத்ததிகாரத்தையும், அதன் பின் சொல்லதிகாரத்தையும், இறுதியிற் பொருளதிகாரத்தையு மமைத்தனர்.

* ஒரு அதிகாரத்தை ஒன்பது பகுதிகளாகப் பிரித்தல் பண்டையோர் வழக்கெனத் தோன்றுகின்றது. அம்மரபுபற்றியே வடமொழி அஷ்டாத்யாயீ முதற் பாதத்துள்ள செய்திகளை ஒன்பது ஆஹ்நிகங்களில் ஆசார்ய பதஞ்சலியார் விளக்கினர் போலும்.

## ௧ நூன்மரபு.

---

இவ்வியலுள், இந்நூலின்கண் வழங்கப்படும் எழுத்து, குற் றெழுத்து, நெட்டெழுத்து, உயிர், மெய், வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து என்ற

குறி முதலியவற்றை ஆசிரியர் விதிக்கின்றார். அச்குறிகளெல்லாம் தாம் இயற்றியவை யல்ல, முன்னோரியற்றியவை என்பதை "எழுந்தெனப்படுப", "குற்றெழுத் தென்ப", "நெட் டெழுத் தென்ப", "உயிரென மொழிப", "மெய்யென மொழிப", "வல்லெழுத் தென்ப", மெல்லெழுத் தென்ப", "இடையெழுத் தென்ப" என்றவிடத்துள்ள சொற்களாற் குறிக்கின்றனர். எனப்படுப, என்ப, மொழிப என்ற அதனால், மரபுபற்றிய குறியீடுகளை ஈண்டு ஆள்கின்றாரென்பது வெளிப்படையாகும். ஆகலின் நூற்கு இன்றியமையா மரபு பற்றிய குறிகளை விதிக்கும் இவ்வியலுக்கு "நூன்மரபு" எனப் பெயரிட்டது மிகப் பொருந்தும்.'*

**1.** எழுத்தேனப் படுப
அகரமுத னகரவிறுவாய் முப்பஃ
தேன்ப

சார்ந்துவரன் மரபின் மூன்றலங்

கடையே.

பொ-ள் :—சார்ந்துவரும் தன்மையைக் கொண்ட மூன்றல்லாத விடத்து அகரத்தை முதலாகவும் னகரத்தை இறுதியாகவுமுடைய முப்பதும் எழுத்தென்று கூறப்படும் என்பர் (புலவர்).

ஆசிரியனுல் முதன்முதலில் அகரம் முதல் னகரம் இறுதியாக உள்ளவை ஓதப்படுகின்றமையின், அவை படிப்போனுக்கு முன்னர்த் தெரியுமாகலான், அம்முப்பதனையுங் குறித்து எழுத்து என்ற குறியை விதித்தனர் ஆசிரியர் இச்சூத்திரத்துள். அக்குறி பலநாளாய் முன்னரே ஆளப்பட்டது என்றதை யுணர்த்த 'எனப்படுப', 'என்ப", என்ற சொற்களை யாண்டனர்.

ஈண்டு " எழுத்து " என்றது பிற்காலத்தாரான்† வழங் கப்படும் முதலெழுத்தைக்

குறிக்கும்; அது மூன்றுவது அடியான்

* சிவஞானமுனிவர்கூற்றும் இஃதே யாகும்.
† நேமி. எழுத். 1.

4

உய்த்துணரப்படும். அகரமுதல், னகரவிறுவாய் என்பன அன்
மொழித்தொகையாய் மூப்பது என்பதைத் தழுவும். அவ்
விரண்டனையும்
இருபெயரொட்டாகுபெயர் என்பர் இளம்பூரணர்.
"இறுவாய்" என்பது இறுதி என்ற பொருளைக் கொண்ட பெயர்.
"அலங்கடைக்கண்" என்றது கண்ணுருபு தொக்கு "அலங்கடை"*
என்றாயிற்று. ஆகலின் அஃது ஏழாம்வேற்றுமையுருபு தொக்க
சொல் ; " கடை " என்றது இடப்பொருளையுணர்த்தும் பெயரே
யன்றி உருபன்று ; உருபாயின் " அல் " என்ற

பகுதியைப் பெய
ராய்க் கருதுதல் வேண்டும்; அஃது
அன்மைப்பொருளைக் காட்டும்
வினைப்பகுதியாயிருக்கின்றமையான் பெயராகாது.
" அலங்கடைக்
கண் " என்றவிடத்து உள்ள
ஏழாம்வேற்றுமையுருபு

ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா விறுதி யான

(சொல். 105.)
என்ற சூத்திரத்தான் தொக்கதென்க.

இச்சூத்திரத்துள் எழுத்து என்பது
வரிவடிவெழுத்தினையுங்
குறிக்கின்றதெனச் சிலர் கருதுகின்றனர்.
ஒலியெழுத்தினையே
குறிக்கின்றது என்பது பின்வருங்
காரணங்களான் விளங்கும் :—
மூன்றாஞ்சூத்திரத்துள்ள " அவற்றுள் " என்றது
முதற்சூத்திரத்

திற் கூறப்பட்ட எழுத்தினைக் குறிக்கின்றது; அங்கு "ஓரள பிசைக்குங் குற்றெழுத்தென்ப" என்றதனால் ஒலியெழுத்தே குறிக்கப்படும். இவ்வாறே நான்காஞ்சூத்திரத்துள்ள "ஈரளபிசைக் கும்" என்றதும், ஐந்தாஞ்சூத்திரத்துள்ள "மூவளபிசைத்தல்" என்றதும் ஒலியெழுத்தினையே குறிக்கும். அன்றியும் பத்தொன் பதாவது சூத்திரத்தில் "வல்லெழுத் தென்ப கசடதபற" என்றார் ஆசிரியர். "க" என்ற குறிக்கு க, ஹ, ம என்ற ஒலி இருந்திருப்பின் அதனை வல்லெழுத்தென்று கூறார். அவ்வாறே ச, ட, த, ப இவற் றிற்கும் கொள்ளல்வேண்டும். வரிவடிவத்தைக் குறிக்கவேண்டின் உருபு, இயற்கை முதலிய சொற்களை அவர் வழங்குகின்றனர். ஆக லின் நூன்மரபு 14, 15, 16, 17 முதலிய சில சூத்திரங்களைத் தவிர்த்து எஞ்சியவற்றில் ஒலியெழுத்தைப்பற்றியே கூறினர் என்க.

* இதனை வினையெச்சக்குறிப்பென்பர் சிலர்.

† வடிவெழுத்தைக் குறிப்பின் பின்வரும் "ஈரளபிசைக்கும்" முதலியன பொருந்தாவாகும், "ஓரளபிசைக்கும்"



ஒலிவடிவான எழுத்து முட்டுது என்று இச்சூத்திரத்திற் கூறப்பட்டனவயான்

டண்லட த்தமிழ்ல் ம, ஜ, ஶ, ஷ, ஸ என்ற ஒலி .களில் இல வென்பது வெளிட்ட லட. ஆகலின், தமிழ்மொழியில் ஒரே வ்டிவெழுத்திற்கு வெவ்வேறிடங்களில் வெவ்வேறுலி யுள என்ற டாக்டர் சால்ட்வெல்கூ ற்று* பண்டைத்தமிழிற் சொவ்வாது.

இச்சூத்திரத்தில் அசரம்முதல் னசரம் இறுதியாக முப்பதும் எழுத்து என்று கூறப்பட்டமையானும், எட்டு, ஒன்பதாவது சூத் திரங்களில் பன்னிரண்டு எழுத்துச்சள்

உயிரென்றும் பதினெட்டு எழுத்துச்சள் மெய்யென்றுங் கூறப்பட்டமையானும், ஆய்தத்தை ஔகாரத்திற்குப் பின்னரும் சசரத்திற்கு முன்னரும் படிக்கும் வழக்கம் தொல்காப்பியனார்காலத்தில் இல்லை எனத் தோன்றுகின்றது. ஆயினும் வீரசோழியவாசிரியர்காலத்துக்கு முன்னர் அவ் வழக்கம் வந்திருத்தல் வேண்டுமென்பது

அறிந்தவெழுத்தம்முன் பன்னிரண்டாவிக ளானகம்முன்

பிறந்தபதினெட்டு மெய்நடுவாய்தம்

பெயர்த்திடையா

முறிந்தனயம்முத லாறு ஙஞண நமனவென்று

செறிந்தன மெல்லினஞ் செப்பாதவல்லினந்

தேமொழியே.

என்ற வீரசோழியச்செய்யுளால் விளங்கும்.

(சந்திப். 1)

அதன்பின்னர் நேமிநாதமுடையார்

ஆய்தத்தை முதலெழுத்தாகக் கருதி

ஆவி யகரமுத லாறிரண்டா மாய்தமிடை

மேவுங் ககரமுதன் மெய்களா—மூவாறுங்

கண்ணு முறைமையாற் காட்டியமுப் பத்தோன்று

நண்ணுமுதல் வைப்பாது நந்த

(நேமி. எழுத். 1.)

என்ற வெண்பாவில் முதலெழுத்து முப்பத்தொன்று என்றனர். ஆயினும் பின்னருள்ளோர் அதனைச் சார்பெழுத்தாகவே கொண் டனர்.

இச்சூத்திரம் "எழுத்துக்களது பெயரு

முறையுந் தொகையு முணர்த்துதல்
நுதலிற்று" என்றனர் இளம்பூரணரும் நச்சினார்க்கினி
யரும். எழுத்துக்களது பெயர், முறை, தொகை
இவையெல்லாம்

* *Convertibility of Surds and Sonants mentioned in the Comparative Grammar of Dravi-dian Languages by Dr. Caldwell.*

6

நெடுங்கணக்காற்

புலப்படுதலின், ஈண்டுக்கூறல் வேண்டா; நெடுங்கணக்
காற் கற்கப்பட்ட அகரத்தை முதலாகவும் னகரத்தை
ஈறாகவுமுள்ள

வற்றிற்கு எழுத்து என்ற குறியே இடவேண்டும். இக்கருத்தைக்
கொண்டே சிவஞானமுனிவரும் அவ்விருவரையும் பின்வருமாறு
மறுத்தனர். " அஃதாசிரியர் கருத்தாயின், அ
ஆ இ ஈ யென முழுதுமெடுத்தோதி முறைக்கு
ஏதுவுங் கூறுவர். அவ்வாறு கூறாது
அகர முதனகரவிறுவாயென அநுவதித்தே
யொழிந்தமையானும்,

எழுத்தென்ப தொருபொருள் அதற்கு அ ஆ முதலியன பெயரென்

றல் பொருந்தாமையானும் முறையுந் தொகையுஞ் செய்கை முதலிய

வற்றிற்குக் கருவியன்மையின் அவற்றை விதித்தலாற் பயனின்மை

யானும் அவருரை போலியுரையென்க". அன்றியும் தொல்காப்பியம்

முழுமையிலும் ஆசிரியர் ஒவ்வொரு சூத்திரத்திலும் ஒன்றனைக்

குறித்து ஒன்றோ பலவோ விதிக்கின்றனரே யன்றி, பலவற்றைக் குறித்து பல விதித்தாரல்லர். அவ்வாறு விதிப்பின் வாக்கியபேதம்

என்ற குற்றத்திற்கு இடனாகும். ஆகலின் அகரத்தை முதலாகவும்

னகரத்தை ஈறாகவுமுடையவற்றிற்கு எழுத்து என்ற குறியிட்டார்

எனக் கூறலே பொருந்தும்.

"முப்பதென்ப" என்றவிடத்து

இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்.

(தொல். சொல். 33.)

என்ற சூத்திரப்படி முப்பதுமென்ப என முற்றும்மை வரவேண்டாவோவெனின், வேண்டும்; அது விகாரத்தாற் றொக்கது என்பர் சிவஞானமுனிவர்.

அகரமுதல் னகரவிறுவாயுள்ள முப்பதும் உத்தேசியமாயிருக்க, எழுத்து என்றது விதேயமாயிருக்க, உத்தேசியத்தை முற்கூறாது விதேயத்தை முற்கூறியது தவறாகாதோ வென ஐயுற்று, "எழுத்து என்பது மங்கலமொழியாகலின் முதற்கண்" அதனைக் கூறினர் என்பர்சிவஞானமுனிவர்*

* வடநூலுள்ளும் பாணினியாசிரியர் 𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌰𑌾𑌦𑍈𑌚𑍍 என்ற முதற் சூத்திரத்துள் விதேயமாகிய 𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌃 என்றதை ஏன் முற்கூறினர் எனப் பதஞ்சலிமுனிவர் ஐயுற்று மங்கலத்திற்காகவே அவ்வாறு கூறினர் என்பர் 𑌮𑌾𑌙𑍍𑌗𑌲𑌿𑌕 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑍋 𑌮𑌹𑌤𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍌𑌘𑌸𑍍𑌯 𑌮𑌙𑍍𑌗𑌲𑌾𑌰𑍍𑌥𑌂 𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌶𑌬𑍍𑌦𑌮𑌾𑌦𑌿𑌤𑌃 𑌪𑍍𑌰𑌯𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 — 𑌮𑌹𑌾𑌭𑌾𑌷𑍍𑌯 1 i 3

“ உலகத்தி லெழுதப்பட்டவை யெல்லா மெழுத்தா மன்றே; அதனை யீண்டாளுதற்பொருட்டு முதனூலாசிரியனால் வரையறுத் துக்கொள்ளப்பட்டதென நியமவிதியாகக் கொள்ளினு மமையும்” என்று கூறினர் சிவஞானமுனிவர். “எழுத்து” என்றது இச் சூத்திரத்தில் ஒலிவடிவத்தைக் குறிக்கின்றது என முன்னர்க் கூறப் பட்டமையானும், குறியிடுதற்கு முன், குறிகள் அறியப்படாமையின் குறியீடுசூத்திரங்கள் நியமவிதியாகக் கொள்ளப்படாமையானும் அவ்வாறு கூறுதல் பொருந்தா தென்க.

அகரத்தை முதலிற் கூறியதற்குக் காரணம் “அகரம் தானு மியங்கித் தனி மெய்களையு மியக்குதற் சிறப்பான்” என்றனர் உரை யாசிரியர். “எழுத்துக்கட்கெல்லாம் அகரம் முதலாதற்குக் காரணம் ‘மெய்யி னியக்க மகரமொடு சிவணும்’ (தொல். எழுத்து. 46) என் பதனுற் கூறுப” என்றார் நச்சினார்க்கினியர். அவர்கள் கூற்று மாறு படுதற்குக் காரணம் “மெய்யி னியக்க மகரமொடு சிவணும்” என்ற சூத்திரத்தின் பொருளை மாறுபட்டு அவ்விருவருங் கூறுதலேயாகும். ஆசிரியர் தொல்காப்பியனார் தாமே அகரத்தை முன் வைக்காமை யானும், நெடுங்கணக்கினுள் முன்னரே வழங்கப்பட்டமையானும், அவர்கள்கூற்றுப் பொருந்துமா வென ஆராய்க.

அவ்வாறே “னகரம் வீடுபேற்றிற்குரிய வாண்பாலை யுணர்த்து தற்சிறப்பால் பின்னர் வைக்கப்பட்டது” என்றனர் இருவரும். இக்காரணமும் ஈண்டுப் பொருந்துமாவென ஆராய்தற்பாலது.

“ எனப்படுப என்ற சிறப்பான் அளபெடையும் உயிர்மெய்யும் வரிவடிவும் சிறப்பில்லா எழுத்தாகக் கொள்ளப்பட்டன” என்பர்

உரையாசிரியர். அவ்வாறே கூறுவர் நச்சினார்க்கினியரும். அளபெடை ஓரெழுத்தன்று என்பது "மூவள பிசைத்த லோரெழுத் தின்றே" (தொல். எழுத். 5) என்ற சூத்திரக்குறிப்பிற் கூறப்படுமாகலானும், உயிர்மெய் ஓரெழுத்தாகாமையானும், வரிவடிவத்தை எழுத்தாக ஆசிரியர் வழங்காமையானும், அவ்விருவர் கூற்றும் பொருந்தா தென்க.

8

"சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே" எனக் கூறி னமையின், அவை யாவை என்ற வினா எழ,

**2.** அவைதாம்
குற்றியலிகரங் குற்றியலுகர மாய்த மென்ற
முப்பாற் புள்ளியு மெழுத்தோ ரன்ன.

**பொ–ள்:**—முற்சூத்திரத்துட் கூறப்பட்ட எழுத்தோடு ஒரு தன்மைப்பட்டுச் சார்ந்துவருகின்றனவாய அவை குற்றியலிகர மும், குற்றியலுகரமும், ஆய்தமுமாகிய முக்கூற்றதாகிய புள்ளியெழுத் துக்களாம்.

"தாம்" என்பது கட்டுரைச்சுவைபட நின்றது.

இச்சூத்திரத்தில் "அவைதாம்" என்றது உத்தேசியம். "குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற் புள்ளி" என்றது விதேயம். "எழுத்தோரன்ன" என்றது வினையாலணையும் பெயராய் "அவைதாம்" என்றதற்கு அடைமொழி. "எழுத்தோரன்ன" என்றதின் பயன்

சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்துவெளிப் படுத்த வேனை மூன்றுந்
தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி
ஒத்த காட்சியிற் றம்மியல் பியலும்.

(தொல். எழுத். 104.)

என்ற சூத்திரத்தால் விளங்கும். அஃதாவது அம்மூன்றும் சார்ந்து வருமெழுத்துக்களோடு ஒருதன்மைப்பட்டு அவை பிறந்த இடங்களிற் பிறக்குமென்பதே. ஆகலின் 'எழுத்தோரன்ன' என்றதற்கு "எழுத்தோரன்ன என வேண்டாகூறியவதனான் முன் எனப் படுப என்ற சிறப்பு அம்மூன்றற்கும்

கொள்ளக்கிடந்தமையின், அது விலக்குதல் பெறுதுமென்பது” என உரையாசிரியரும், “முன்னின்ற சூத்திரத்தாற் சார்ந்து வரன் மரபின் மூன்றுமே சிறந்தன,
ஏனைய முப்பதும் அவ்வாறு சிறந்தில வெனவும் பொருடந்து நிற்றலின் அதனை விலக்கிச் சிறந்த முப்பது எழுத்தோடு இவையும் ஒப்ப வழங்குமென்றற்கு எழுத்தோரன்ன என்றார்” என நச்சினார்க்கினியரும் கூறும் பயன் சிறக்கா.

௭

எஃகு, கஃசு, முஃடீது, இஃது, அஃபோதம், கஃறீது என்றவிடங்களில் ஆய்தத்தின் ஒலி மாறுபட்டிருத்தல் வேண்டுமென்றது முள் + தீது என்றது முஃடீது என்றேனும் முட்டீது என்றேனும், கல் + தீது என்றது கஃறீது என்றேனும் கற்றீது * என்றேனும் மாறலாம் என்று கூறப்படுதலால் விளங்கும். கூற்றக் கொஃறேர் (பத்துப் பாட்டு 236) என்றவிடத்தோசையானும் விளங்கும். அன்றியும் வடமொழியில் ககரத்திற்கு முன்னுள்ள விஸர்க்கத்தின் ஒலிக்கும்† பகரத்திற்கு முன்னுள்ள விஸர்ச்சத்தின் ஒலிக்கும் ‡ மாறுபாடு இன்றுங் காணலாம். முன்னருள்ளதை ஜிஹ்வாமூலீயம் என்றும், பின்னருள்ளதை உபத்மானீயம் என்றுங் கூறுவர்.

ஆட் னும், நன்னூலார்காலத்துக்கு முன்னரே, சகர திற்கு முன்னருள்ள ஒலியே ஏனைய விடங்களிலும் வழங்கப்பட்ட தென்பது "ஆய்தக்கிடந்தலை..." (நன். 87) என்ற நன்னூற்சூத்தி ரத்தால் விளங்கும். ஆகவே பண்டைச்சாலத்தில் ஆய்தமென்றது ஓரிடத்திற் பிறவாது ஆறிடங்களிற் பிறந்த தேன்பதும், அக்காரணம் பற்றி அறுவகைப்பட்டதேன்பதும் வெளிப்படை. அவ்வாறே குற்றியலிகரமும் குற்றியலுகரமும் அவற்றின் பற்றுக்கோடு பிறந்த இடங்களிற் பிறந்து பலவகைப்பட்டன என்பதும் வெளிட்டடை. ஆகலினன்றே அவற்றை ஆசிரியர் தனிச்சூத்திரத்தி லுணர்த்தினர். முற்கூறிய காரணத்தானே குற்றியலிகரமும் முற்றிகரமும் ஓரினமல்ல வென்றதும், குற்றியலுகரமும் முற்றுகரமும் ஓரினமல்ல வென்றதும் விளங்கும். உரையாசிரியர்க்கு முன்பே அவை ஓரினமென்றும், மாத்

* உச்சாரணத்தில் முஃடீது, முட்டீது என்பனவற்றிற்கு மாறுபாடு சிறிதே இருத்தல்வேண்டும். அப்போது ஆய்தத்திற்கும் டகரவொற்றிற் கும் பெரும்பான்மையும் ஒற்றுமையிருத்தல்வேண்டும். அவ்வாறே கஃறீது கற்றீது என்ற விடத்தில் ஆய்தத்திற்கும் றகரவொற்றிற்கும் பெரும் பான்மை ஒற்றுமையிருத்தல்வேண்டும். ஆகலின் ஆய்தத்தின் ஒலி அதன் பின்னருள்ள வல்லெழுத்தின் ஒலியைப் பெரும்பாலும் ஒத்திருக்கும்.

தகரம் வருவழி யாய்த நிலையலும்
புகரின் றென்மனார் புலமை யோரே. (தொல். எழுத். 369)
ஆய்த நிலையலும் வரைநிலை யின்றே
தகரம் வருஉங் காலை யான. (தொல். எழுத். 399)
கஃஃறொ தி
கஃஃஷு தி

திரையில் பாத்திரம் வேறுபட்டனவென்றும், திரிபுணர்ச்சி பிறந்ததென்றது 'சந்தனக்கோல் குறுகினவிடத்துப் பிரப்பங்கோலாகாதது போல, இசா உசரங்கள் குறுகினவிடத்தும் அவை பெயராகற்பாலன' என்ற தொடரால் விளங்கும். இரண்டற்கும் பிறப்பிடம் ஒன்றென நன்னூலார் பயங்கின ரென்பது

'சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய' நன். 87.

என்ற சூத்திரத்தான் விளங்கும்.

ஆசிரியர் "ஓரள பாகு மிடனுமா ருண்டே" (தொல். எழுத். 57) என்ற சூத்திரத்தில் ஐகாரம் சிலவிடங்களில் ஒரு மாத்திரை பெறு மென்று கூறினும், அதனைச் சார்பெழுத்தாகக் கொள்ளாமைக்

குக் காரணம், அஃது ஐகாரம் பிறக்கு மிடத்தே பிறக்கு மென்றதே. நன்னூலார் கூறிய சார்பெழுத்துக்களுள், குற்றிய லிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்றவற்றைத் தவிர்த்து ஏனைய சார்பெழுத்தாகா என்று சிவஞானமுனிவர் கூறிய மறுப்பை நோக்குக.

## ஆய்தம் என்ற சொல் வடமொழி

ஆஸ்ரிதம் (ஆச்ரிதம்)

என்ற சொல்லின் தற்பவமாயிருத்தல் கூடுமென்றும், அதன் உருவம் மூன்றுபுள்ளியுடைமை பிற்காலத்து வழக்கென்றும், நச்சினார்க்கினி யர் காலத்தில் நடுவு வாங்கி ∴ இவ்வாறு எழுதும் வழக்கு இருந்ததென் றும் வித்வான் மு. இராகவையங்காரவர்கள் எழுதுவர்*.

இச்சூத்திரத்துள் "ஆய்தமென்ற" என்றதை மாத்திரம் முப்பாற் புள்ளி என்றதற்கு அடையாகக் கொள்ளுகின்றனர் உரையாசிரியர் என்றது "குற்றியலிகரமுங் குற்றியலுகரமுமென்னு மெண்ணும்மை விகாரத்தாற் றொக்கன" என்ற தொடராலும், அவ்வாறே நச்சினார்க் கினியரும் கொள்ளுகின்றார் என்றது " முற்கூறிய இரண்டும் உம்மை தொக்கு நின்றன" "ஆய்தமென்ற ஓசைதான் அடுப்புக்கூட்டு போல மூன்று புள்ளி வடிவிற்றென்பது

உணர்த்தற்கு ஆய்தமென்ற முப்பாற்புள்ளியுமென்றார்"
என்ற தொடர்களாலும் அறியக்கிடக் கின்றது.
குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தமேன்ற என்ற
தொடர் முழுமையையும்
முப்பாற்புள்ளியும் என்றதற்கு அடையாகக் கொண்

* செந்தமிழ் தொகுதி XXV பக். 159—162.



டனர் சிவஞானமுனிவர் என்றது "அம்மூன்றும் புள்ளிபெறுதல் பற்றிப் பொதுப்பெயராக முப்பாற்புள்ளியும்" என்ற தொடரால்
விளங்கும்.

பா—ம்.

இளம். க.பதி. சந்தனக்கோல்...அவை பெயராகற்பாலன';
இளம். சி. பதி. சந்தனக்கோல்...உயிர்
ஆகற்பாலன ;
உயிர் என்ற குறி
இன்னுமிடப்படாமையானும், இகரம் உகரம்

போல் குற்றியலிகரம் குற்றியலுகரம் எனப் பெயரிட்டமையானும், "பெயர்" என்ற பாடமே சிறக்கும். பின்னருள்ள பாடம் 'உயிரது குறுக்கமு முயிரேயாம்' என்ற நச்சினார்க்கினியருரையைப் பின்பற்றி எழுதப்பட்டதுபோலும்.

முதற்சூத்திரத்தில் அகரமுதல் னகரவிறுவாயுள்ள முப்பதற்கும் "எழுத்து" எனப் பொதுக்குறி யிட்டனர் ஆசிரியர். அவற்றிற்குத் தனியே சிறப்புக்குறி யிடத் தொடங்கினர் பின்னருள்ள சூத்திரங்களில்;

3. அவற்றுள்

அ இ உ
எ ஒ வென்னு மப்பா லைந்தும்
ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப.

போ - ள். அம்முப்பதனுள் அ, இ, உ, எ, ஒ என்ற ஐந்தும் ஒரு மாத்திரை யொலிக்குங் குற்றெழுத்து எனக்

கூறுவர் (புலவர்).

ஈண்டு 'அ, இ, உ, எ, ஒ' என்பன உத்தேசியம். 'குற்
றெழுத்து' என்பது விதேயம். அவ்வாறாயின் 'ஓரள பிசைக்கும்''
என்ற தொடர் எற்றுக்கு எனின், அது குற்றெ ழுத்து என்ற குறி
முன்னோரால் ஓரள பிசைக்கும் எழுத்துக்களுக்கே இடப்பட்ட
தெனக் குறித்தற்கு என்னலாம்.

அகரம் முதல் னகரம் இறுதியாயுள்ளனவற்றிற்கு எழுத்து என்ற பொதுக்குறியிட்ட பின்னர் இச்சூத்திரத்தைக் கூறுது,

'ஔகார விறுவாய்ப்
பன்னீ ரெழுத்து முயிரெண மொழிப'

12

என்ற சூத்திரத்தையே கூறவேண்டாவோ வெனின் ; அற்றன்று
குற்றுயிர், நெட்டுயிர் என்ற குறிகளை முறையே 'அ,

இ, உ, எ, ஒ’
என்றவற்றிற்கும் ‘ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ’ என்றவற்றிற்கும் இடாது, குற்றெழுத்து, நெட்டெழுத்து என்ற குறி யிட்டமையின்.
அளவு என்றதும் மாத்திரை * என்றதும்
ஒருபொருட்கிளவி.

இளம்பூரணத்தில் இசைக்கும் என்றது
முற்றுவினையாய்க் கொள்
ளப்பட்டது. நச்சினார்க்கினியத்தில் பெயரெச்சமாகக்
கொள்ளப்பட்டு,
குற்றெழுத்து என்றதைத் தழுவுவதாகக்
கூறப்பட்டுள்ளது. இவற்
றுள் நச்சினார்க்கினியர்கொள்கையே சிறக்கும்.
நச்சினார்க்கினியத்தில்
“ மெய்அரை மாத்திரை பெற்றதேனுங்
குற்றெழுத்து எனப் பெயர் பெறாதாயிற்று, ஒரு
மாத்திரை பெற்ற
மெய் தமக்கு இனமாக இன்மையின் ”
என்றுளது. குறுமை
நெடுமை இரண்டும் அங்காமுபற்றியுள்ள ஒலிகளாகிய உயிர்களுக்கே சிறப்பாக நிகழுமாதலான், அவர் கூற்று ஆராய்தற் குரியது.
குற்றெழு தென்ற குறிபிட்ட பின்னர்

நெட்டெழுத்தென்ற குறி
யிடத் தொடங்கினர் ஆசிரியர்.

**4.** ஆ ஈ ஊ ஏ ஐ
ஓ ஔ வென்னு மப்பா லேழும்
ஈரள பிசைக்கு நெட்டெழுத் தென்ப.

பொ - ள் :—(அம்முப்பதனுள்) ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற ஏழெழுத்துக்களும் இரண்டு மாத்திரை ஒலிக்கும் நெட்டெழுத் தென்று கூறுவர் (புலவர்).

ஈண்டு 'அவற்றுள்' என்றது அதிகரித்தது,

இளம்பூரணத்தில் "ஐகார ஔகாரங்கள் தமக்கு இனமில்லை யெனினும், மாத்திரையொப்புமையான் அவை நெட்டெழுத்தெனப் பட்டன" என்று கூறப்பட்டுளது. நெட்டெழுத்து என்றதற்கு இலக்கணம் இரண்டு மாத்திரை ஒலிக்கு மெழுத்து என்றே முன்னோர்

* மாத்திரை என்பது மாத்ரா என்பதின் தற்பவம். மாத்ரா என்பது அளத்தற்பொருள் கொண்ட "மா" என்ற தாதுவினின்றும் பிறந்தது.

கொண்டனவே யன்றி, குற்றெழுத்தையுடையன என்று கூறாமையின், அவ்வாறு கூறுதல் சாலாது. “ஐகார ஔகாரங்கள் தமக்கு இன மில்லை” என்றதற்குப் பொருள் “ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்பன எவ்வாறு தமக்கு இனமான அ, இ, உ, எ, ஒ என்ற குற்றெழுத்துக்களைக் கொண்டனவோ, அவ்வாறு ஐ, ஔ இவற்றிற்கு இனக்குற்றெழுத்து இல்லை” என்பதேயாம். மொழியின்கண் அவை ஓரள பிசைக்கு மிடனுமுண்டு என ஆசிரியர் பின்னர்க்
* கூறினும், அவற்றை அப் போது குற்றெழுத்தாகக்கொள்ள உடன்பட்டில ரெனத் தோன்றுகின்றது.

பா—ம். இளம். க. பதி. ‘ஐகார ஔகாரங்கள் தமக்கினமில்லை’ இளம். சி. பதி. ‘ஐகார ஔகாரங்களுக்கு இனமில்லை’

அகரம் முதல் னகரம் இறுதியாயுள்ளவற்றுள் சில ஓரள பிசைக்கும், சில ஈரள பிசைக்குமென்று

கூறிய பின்னர், அவற்றுள் மூவளபிசைக்கும் எழுத்து முளவோ வென ஐயந் தோன்ற, அவ் வையத்தைப்போக்கத் தொடங்கினர். அவ்வைய மெவ்வாறு தோன்று

மெனின், வடமொழியில் மூவளபிசைக்கும் ப்லுதாட்சரங்கள் இருத்தலால், அதனை யுணர்ந்தோர்க்குத் தோன்றலா மன்றே. தமிழ் மொழியிலக்கணங் கூறத் தொடங்கிய ஆசிரியர் வடமொழியிலக் கணத்தை நினைப்பரோ வெனின், அவற்றையும் நினைத்திருந்தன ரென்பது,

> எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
> சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்
> பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்
> தகத்தெழு வளியிசை யரிறப நாடி
> யளவிற் கோட லந்தணர் மறைத்தே.

(தொல். எழுத். 102)

என்ற சூத்திரத்தான் விளங்கும்.

**5.** மூவள பிசைத்த லோரெழுத் தின்றே.

பொ - ள் :—மூன்று மாத்திரை ஒலித்தல் ஓரெழுத்திற்கு இல்லை.

* தொல்-எழுத். 57.



ஈண்டு நச்சினார்க்கினியர் எழுத்து என்றதை
எழுவாயாகக் கொண்டனர்.

தமிழ்மொழியில் மூன்று மாத்திரை

ஒலிக்கும் எழுத்தின்மை*

யால், ஆஅ, ஈஇ, ஊஉ என்ற குறிகளால் குறிக்கப்படும் ஒலியெழுத்து ஓரெழுத்தெனக் கொள்ளுதல் தகாது. அவ்வாறுதலால் 'மூன்றளவு'

(வீரசோழி. 5) என்று வீரசோழியவாசிரியர்

கூறுதல் பொருந்தாது.

அவர் ஆஅ, ஈஇ, ஊஉ இவற்றை

அளபெடையென்றும், அவற்றாற்

குறிக்கப்படும் ஒலியெழுத்து

வடமொழிப் லுதத்தை யொக்குமென்

றும் கருதினர்போலும். அவர்கூற்றையே

கொண்டனர் நேமி

நாதவாசிரியரும், நன்னூலாரும், இலக்கணவிளக்கவாசிரியரும், பிர யோகவிவேகநூலாரும். ஆசிரியர் தொல்காப்பியனார் ஆஅ, ஈஇ,

ஊஉ என்றவிடத்தில் அ, இ, உ இவற்றையே

அளபெடை என்ற
குறியாற் கொண்டனரென்பதும், அவற்றைத் தனியொலியெழுத்
தாகக் கொண்டனர் என்பதும்,

நீட்டம் வேண்டி னவ்வள புடைய
கூட்டி யெழூஉத லென்மனார் புலவர்

(தொல். எழுத். 6)

குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே (தொல். எழுத். 41)

எ எனவருமுயிர் மெய்யீ றகாது.

எகர வோகரம் பெயர்க்கீ றகா
முன்னிலை மொழிய வென்மனார் புலவர்
தேற்றமுஞ் சிறப்பு மல்வழி யான
தேற்ற வெகரமுஞ் சிறப்பி னொவ்வும்
மேற்கூ றியற்கை வல்லெழுத்து மிகுமே.

ஏயெ னிறுதிக் கெகரம் வருமே.

வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே
ஒகரம் வருத லாவயி னான.

(தொல். எழுத். 71)

(தொல். எழுத். 273)

(தொல். எழுத். 274)

(தொல். எழுத். 278)

(தொல். எழுத். 293)

குறியதன் முன்னரு மோரெழுத்து மொழிக்கும்
அறியத் தோன்று மகரக் கிளவி.

(தொல். எழுத். 227)

அளபெடை மிகூஉ மிகர விறுபெயர்
இயற்கைய வாதுஞ் செயற்கைய வென்ப.

(தொல். சொல். 125)

அளபெடை யசைநிலை யாகலு முரித்தே. (தொல். பொருள். 329)



என்ற சூத்திரங்களான் விளங்கும். 'டணியார்தேஎம்' (பத்துப்பாட்டு 220, 230) என்றவிடத்து தே, எம் என்றன இரண்டு அசைகளாக ஆகின்றமை நோக்கற்பாலது.

இளம்பூரணத்தில் "விகாரமாகிய இரண்டு கூடியதற்கு உண்டு" என்றுளது. அங்கு இரண்டு என்றதனல் இரண்டு வரிவடிவத்தைக் கொண்டனர்போலும்.

அவ்வாறாயின் விளியின்கண்ணும் இசைநிறைத்தற்கண்ணும் அசைநிறைத்தற்கண்ணும் மாத்திரை மிகவேண்டுமே யெனின்,

**6.** நீட்டம் வேண்டி னவ்வள புடைய

கூட்டி யெழூஉத லென்மனார் புலவர்.

பொ - ள் :— இரண்டு மாத்திரைக்கு மேல் நீட்டம் வேண்டின் வேண்டிய வளவுடையனவற்றைக் கூட்டி நெட்டெழுத்தின் பின்னர் ஒலித்தல் வேண்டுமென்று கூறுவர் புலவர்.

ஈண்டு 'ஈரளபு' 'நெட்டெழுத்து' என்பன

அதிகரித்தன.

"உடைய" என்பது வினையாலணையும்பெயர். "அவ்வளபுடைய" என்றாரேனும் அவ்வளபுடைய இனச்சுற்றெழுத்துக்களையே கொள்ளல் வேண்டுமென்பது

குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும்

நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே

(தொல். எழுத். 41)

என்ற சூத்திரத்தான் விளங்கும். ஆகலின் 'நீட்டம் வேண்டின்' என்ற இச்சூத்திரத்தையும் 'குன்றிசை மொழிவயின்' என்ற சூத்திரத்தையும் ஒன்றாகக் கூட்டிச் செய்கை செய்தல் வேண்டும். *

தமிழிலக்கியங்களில் அளபெடையை அசைநிலையாகச் சிலவிடங்களிற் கொண்டமையாலும், நெட்டெழுத்தை இரண்டெழுத்தாகக் கொண்டு இரண்டு அசைகளாகக் கொள்ளாமையானும், அவ் வாறு கூறினர். †

* இதனை வடமொழியில் ஏகவாக்யதா

(ஏகவாக்யதை) என்பர்.

† வடமொழியில் ஆசிரியர் பாணினியின் வியாகரணத்தில் சேய்மை விளியின்கண் அகரம் முதலியன மூன்று மாத்திரை பெறும் என்றிருக்க தமிழ்மொழியில் மாத்திரம் அவ்வாறின்மை குற்றமாகாதோ வெனின், நன்று சொன்னாய்; வடமொழியிலும மூன்று மாத்திரை பெற்ற எழுத்தின் பின்னர் ஓர் அகரம் ஒலித்தல் வேண்டுமென்று மனுஸ்மிருதியில் கூறப்பட்டுளது. அகாரஶ்சாஸ்ய நாம்நோந்தே வாச்ய: பூர்வாக்ஷர: ப்லுத: (1. 125) பின்னர் தனிமையாக ஓர் அகரம் ஒலித்தல்வேண்டுமெனின், அதன் முன்னருள்ள உயிர் ப்லுதமா யிராது நெட்டெழுத்தாயிருப்பினும், அது விளி யென்றதை அவ்வகரம் குறித்தல்கூடும். எங்கும் அகரம் இருத்தல்வேண்டுமென்று கூறாது, பின்னர் அவ்வினக்குற்றெழுத்து இருத்தல்வேண்டுமென்று கூறுதல் சாலுமெனக் கருதி, இவ் வாறு ஆசிரியர் கூறினரோ வெனத் தோற்றுகின்றது.

16

ஆகலின் "நீண்ட மாத்திரையையுடைய வளபெடை எழுத்துப் பெறவேண்டின்" என்ற உரையாசிரியர் சொற்றொடரும், மாத்திரை மிகுமாறு என்னாது "மாத்திரை நீளுமாறு கூறுகின்றது" என்ற நச்சினார்க்கினியர்சொற்றொடரும், "அளபெடை யசைநிலை யாகலு முரித்தே" என்னுஞ்

செய்யுளியற்சூத்திரத்தான் எழுத்தாந்தன்மையு மெய்திற்று என்ற நச்சினார்க்கினியர் சொற்றொடரும் பொருந் துமா வென ஆராய்க.

" அன்றியும் கோட்டுநூறும்

மஞ்சளுங் கூடியவழிப் பிறந்த
செவ்வண்ணம் போல நெடிலுங் குறிலுங்
கூடிய கூட்டத்துப் பிறந்த
பின்னர்ப் பிளவுபடா வோசையை
அளபெடையென்று ஆசிரியர்
வேண்டினார்" என நச்சினார்க்கினியர் கூறினர்.
அவ்வாறாயின் அள
பெடை யசைநிலை யாகலு முரித்து
என்பது எவ்வாறு பொருந்தும்?

பா—ம் :—நச் ம.பதி., நச். சை. பதி.,

இவைதாம்...சொல்லா

தல் எய்தின'.

நச். தா. பதி. 'இவைதாம்...சொல்லாதல் எய்திற்று'.

முன்பாடமே சிறக்கும்.

நச். ம. பதி. 'கோட்டு நூறு மஞ்சளுங் கூடிய கூட்டத்து...
அப்பிளவுபடா வோசையை'.

நச். தா. சை. பதி. 'கோட்டு நூறு மஞ்சளுங்கூடியவழி...பிளவு
படா வோசையை'.

முன்பாடமே சிறக்கும்.

ஓரளபு, ஈரளபு, மூவளபு என்றவிடத்தில் அளபு என்ற
சொல்லும் மாத்திரை என்ற சொல்லும் ஒருபொருட்கிளவி என்று
சொல்லப்பட்டது. அம்மாத்திரைக்கு இலக்கணம் யாது எனின்,

7. கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை

நுண்ணிதி னுணர்ந்தோர் கண்ட வாறே.

பொ-ள். நுண்மையாய்ப் புலவரறிந்த

வழியின்கண் மாத்திரை

என்றது கண்ணிமைக்கும்பொழுதும் விரல்

நொடிக்கும்பொழுது

மாகிய அவையாம்.

17

ஈண்டுக் கண்ணிமை, நொடி இச்சொற்கள் ஆகுபெயரால் கண்

ணிமைக்கும்பொழுது, நொடிக்கும்பொழுது என்ற பொருள் கொண்

டன. 'ஆறு' என்றதை ஏழாம்வேற்றுமையுருபு தொக்க சொல்

லாகக் கொள்ளின் பொருந்தும். முற்சூத்திரங்களிற் கூறப்பட்ட 'அளபு' என்றது உத்தேசியம். அதனை 'மாத்திரை' என்ற சொல்

லாற் கூறினர்; 'கண்ணிமை நொடி' என்றது விதேயம்.

"இமை யென்றது இமைத்தற்றொழிலை, நொடி யென்றது

நொடியிற் பிறந்த ஓசையை" என்று உரையாசிரியர்

கூறினர். ஈண்
டுத் தொழின்மேலும் ஓசைமேலும் முறையே
நின்றன என நச்சி
னார்க்கினியர் கூறினர். இருவரும் "
மாத்திரை" என்றதற்கு
"மாத்திரைக்கு அளவு" எனப் பொருளுங்
கூறினர். மாத்திரை
யின் இலக்கணம் இச்சூத்திரம் கூறுகின்றமையான்,
மாத்திரை என்ற
சொல்லை ஆகுபெயராகக் கொள்ளாது, கண்ணிமை,
நொடி இவற்றைக்
கண்ணிமைக்குங்காலம், நொடிக்குங்காலம் என்ற
பொருளில் ஆகு
பெயராகக் கொள்வது நேரிதாகும்.

நச்சினார்க்கினியர் தாமோதரம்பிள்ளை
சுன்னாகம் பொன்னையா
இவர்களது பதிப்பில் "இக்கண்ணிமை இரட்டித்து
வருதல் நெடிற்
கும், அது மூன்றும் நான்மாய் வருதல்
அளபெடைக்குங்
கொள்க ... ஏனையவற்றிற்கும் கூறியவாறேகொள்க

" என்ற சொற்
றொடர் உளது. இது மகாலிங்கய்யர் பதிப்பிலும் சைவசித்தாந்தக்
கழகப்பதிப்பிலு மின்று. ஆகலின் இஃது இடைச்செருகல் எனக்
கருதலாம்.

நச்சினார்க்கினியத்திலுள்ள தோற்றக்கேட்டுக்காலக்கழிவு என்ற
சொற்கு, முன்தோற்றத்திற்கும் பின் கேட்டிற்கும் இடையிலுள்ள
காலத்தின் கழிவு என்றது பொருளாம்.

நச்சினார்க்கினியத்தில் இச்சூத்திரத்திற்குப் பொருள் கூறத்
தொடங்குங்கால் "இது மாத்திரைக்கு அளவு கூறுகின்றது" என்
றும் பின்னர் "எ த்திற்கே அளவு கூறி மாத்திரைக்கு அளவு கூறிற்
றிலர் " என்று முள. பொருளில் ஒன்றுக்கொன்று மாறுபடுகின்றமை
யின், பின்னர்க் கூறிய தொடர் இடைச்செருகலோ வெனப்

புலவர் ஆராய்தற்குரியது. அன்றியும்
'மாத்திரைக்கு அளவு கூறுகின்றது' என்று கூறாது
'மாத்திரைக்கு இலக்கணங் கூறுகின்றது'
என உரையாசிரியர்போல் அவர் கூறியிருப்பின்
நலம்.

சூத்திரத்துள் "கண்ணிமையை முன்னரே கூறியதற்குக் காரணம் தன் குறிப்பின்றி நிகழ்தலின் இமைமுன் கூறப்பட்டது" என்றார் உரையாசிரியர். அதனை விளக்கி "நொடியிற் கண்ணிமை சிறப்புடைத்து, உள்ளத்தான் நினைத்து நிகழானமயின்" என்றார் நச்சினார்க்கினியர். இளம்பூரணத்தில் "அவ்வளவைக்கு அளவை பெருமை அறிக" என்றுளது. அதற்கு நாலுமூச்சாசக் குறிக்க நாழி என்ற சொற் போன்று இரண்டு மாத்திரையையும் மூன்று மாத்திரையை
யுங் குறிக்கத் தனிச்சொல் இல்லை என்பதாகும்.

அம்மூப்பது எழுத்துக்களுள் குற்றெழுத்து நெட்டெழுத்து என்ற குறிகளைச் சிலவற்றிற்கு

இட்டு, பின்னர் மூவளபிசைக்கு
பெழுத்தில்லை யென்று கூறி, பின்னர் மாத்திரையிலக்கணமுங்
கூறினர். அதன் பின்னர் அக்குற்றெழுத்து நெட்டெழுத்து இவற் றிற்குப் பொதுக்குறி யாதென,

8. ஔகார விறுவாய்ப்
பன்னீ ரெழுத்து முயிரென மொழிப.

பொ-ள்.— அகரத்தை முதலாகவும் ஔகாரத்தை இறுதியாகவு முடைய பன்னிரண்டு எழுத்தும் உயிர் எனக் கூறுவர் (புலவர்).
அகரமுதல் என்றது முதற்சூத்திரத்திலிருந்து அதிகரிக்கும் என்பதைக் காட்டப் பன்னீரெழுத்தும் என்றனர் ஆசிரியர். ஔகாரவிறுவாய் என்றது உரையாசிரியர்கொள்கையில் பண்புத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; நச்சினார்க்கினியர் ஆகக் கிடந்த என்ற சொற்களை வருவித்துக்கொண்டு, அதனைப் பண்புத்தொகை என்றனர். உரையாசிரியர்கொள்கையே சிறக்கும்.

நச்சினார்க்கினியத்தில் "மெய் பதினெட்டினையு மியக்கித் தான் அருவாய் வடிவின்றி நிற்றலின் உயிராயிற்று" என்ற தொடர் உளது. *

அகாராதய: ஸ்வரா ஜ்ஞேயா:
ஔகாராந்தாஶ் சதுர்தஶ
—காட்யமாலாதி p 170,8.

19

அருவாய் என்றதற்கு உருவமின்றி என்பது பொருளாகும். இவ்வாறு கூறுதற்குக் காரணம் "மெய்யி னியக்க மகரமோடு சிவணும்." (தொல். எழுத். 46) என்ற சூத்திரத்தில் அகரம் தனி மெய்க்கண் கலந்து நிற்கும் என்ற அவர்கொள்கையே யாகும். அச்சூத்திரத்திற்கு உரையாசிரியர் கொள்ளும் பொருள் "தனிமெய்களினது இயக்கம் அகரத்தோடு பொருந்தும் என்றது." அப்பொருளைக் கொள்ளின், நச்சினார்க்கினியர்கூற்றுப் பொருந்தாது. "மெய்யினிற்கும் உயிருந் தனியே நிற்குமுயிரும் வேறென உணர்க" என்ற நச்சினார்க்கினியர்கொள்கை மொழிநூல்வல்லோர்கொள்கைக்கு மாறுபட்டது. நச்சினார்க்கினியர் இவ்வாறு கூறுதற்குக் காரணம் உயிர் என்றதும் சீவன் என்றதும் ஒருபொருட்கிளவி யென்ற

தாகும். 'உயிர்' என்றது பிராணன் என்ற பொருளில் வந்ததெனின், அவர்கூற்றுப் பொருந்தாது. "இறைவன் ஒன்றேயாய் நிற்குந் தன்மையும் பல்லுயிர்க்குந் தானேயாய் அவற்றின் அளவாய் நிற்குந் தன்மையும்போல" என்றவிடத்து "அவற்றின் அளவாய்" என்ற தொடரால் ஜைனர் கொள்கையை நச்சினார்க்கினியர் கூறினர் என அறியத்தகும்.

அம்முப்பதெழுத்துக்களுள் ஔகார விறுதியாயுள்ளன உயிரா யின், ஏனையவற்றின் குறி யாதெனின்,

9. னகார விறுவாய்ப்
பதினெண் ணெழுத்து மெய்யென மொழிப*

பொ-ள்.—ககரம் முதல் னகாரமிறுதியாயுள்ள பதினெண் ணெழுத்தும் மெய்யெனக் கூறுவர் (புலவர்).

ஔகாரம் முடிய முற்சூத்திரத்திற் கூறப்பட்டமையின் ககர முதல் என்றது தந்துரைக்கப்பட்டது. அவ்வாறு கொள்ளல்வேண்டு மென்பதைப் பதினெண்ணெழுத்தும் என்றது காட்டியது.

ஈண்டும் நச்சினார்க்கினியர் ஆய்க்கிடந்த என்றதை வருவித்து,
னகாரவிறுவாய் என்றதை "ஔகாரவிறுவாய்" என்றதுபோல்

*ஊகாராந்தாநி காதீநி வ்யஂஜநாநி விதுர்புதா: —
(நாட்யசாஸ்த்ர p. 170, 8)

**20**

பண்புத்தொகையாகக் கொண்டனர்.
நச்சினார்க்கினியத்தில் "மூன்னர் னகரவிறுவா
யென்புழி முப்பதெழுத்திற்கும் ஈறுமென்றார்.
ஈண்டுப் பதினெட்டெழுத்திற்கு
மீறுமென்றாராதலிற் கூறியது
கூறிற்றன்று" என்ற சொற்றொடர் உளது. அதற்கு "எழுத்தெனப்
படுப அகரமுத னகரவிறுவாய்..." (தொல். எழுத்.1,) என்ற முதற்
சூத்திரத்திற் கூறப்பட்ட னகரவிறுவாய் என்றதே
இச்சூத்திரத்
தாங் கூறப்படவில்லையாகலான் கூறியது
கூறிற்றன்று எனப் பொருள் கொள்ளல்வேண்டும்.
கூறியது கூறல் என்றது ஒரு கருத்துப்பற்றியே
யன்றி ஒரு சொல்லைப்பற்றி யன்று ; ஆகவின்
அச்சொற்றொடர் நச்சினார்க்கினியம் படித்த
மாணவரால் எட்டிற் சேர்க்கப்பட்டதோ வென
எண்ண இடந்தருகின்றது.

அகரமுதல் னகரவிறுவாய் முப்பதும்

எழுத்தென்றும், அவற்

றுள் அ முதலியன ஓரளபும், ஆ முதலியன ஈரளபும் இசைக்கும் என்றும், அப்பன்னிரண்டும் உயிரென்றும், க முதலியன மெய்யென்

றுங் கூறப்படுமென்றவுடன், மெய்க்கு அளவு

யாது என்ற அவா

பிறந்தது. அப்போது உயிராற் றொடர்ந்த

மெய்க்கா, தனிமெய்க்கா

என்ற வினா எழ, * அவ்விரண்டற்கும்

விடையைப் பின்வரும்

இரண்டு சூத்திரங்களாற் கூறினர்.

ஆதலின் வருஞ் சூத்திரத்துள்ள இயல் என்பது

மாத்திரை

யைமேய குறிக்கும்.

**10.** மெய்யோ டியையினு முயிரிய றிரியா.

பொ-ள் —உயிர்கள் மெய்யோடு கூட ஒலிப்பினும் தம் தன்மையி னின்றும் மாறா. அஃதாவது அவற்றின் மாத்திரை முதலியன

மாறாதிருக்கும்.

* இதற்கோர் உவமை கூறல் தகும். அஃதாவது—ஒரு குடும்பம் ஆண்மக்கள் பெண்மக்கள் இவர்களால் ஆக்கப்படுமென்றாம். ஆண்மக்கட்குத் தகப்பன் சொத்து பாகம் உண்டு என்றும் ஒருவர் கூறினர். அங்ஙனம் கேட்ட மற்றொருவர் பெண்மக்கட்கோ என வினவினர் அவர் மணஞ் செய்யப்பட்டாராயின், அவர்க்குப் பாகம் இல்லை யென்றும். மணம் பெறாதவராயின் அவர்க்கு ஒரு பகுதி உண்டென்றுங் கூறினர். என தே

**21**

இச்சூத்திரத்தான், உயிரால் தொடரப்பட்ட மெய்களுக்கு மாத்திரை இல்லை யென்பது அறியக்கிடந்தது. கருத்துவகையாற் பொருள் அறியுமாறு சூத்திரிக்காது

**உயிரோ டியையின் மெய்மாத் திரையில**

என ஏன் ஆசிரியர் சூத்திரிக்கவில்லை யெனின், ஓடுவென் கிளவி சிறப்புப்பொருளோடு வருதலானும், ஈண்டு மெய்யே அவ்வாறுத லானு மென்க. "மெய்யோடு இயையினும்" என்றதற்கு "உயிர்மெய்யாவன மெய்களோடு உயிர் இயையப் பிறந்த நிலைமையவாயினும்" என இளம்

பூரணர் பொருள் கூறுதல் பொருந்தாததாகும், உயிர்மெய்யாவன

எனபதற்கு அதிகாரமின்மையான்.

இச்சூத்திரத்தில் "இயல்" என்ற சொல் மாத்திரையையே

குறிக்கு மென்பது இதற்கும் முன் சூத்திரத்திற்கு முள்ள இயைபால்

அறியப்படுதலின் "இயலென்றது பெரும்பான்மை மாத்திரையினை,

சிறுபான்மை குறியும் எண்ணும் கொள்க" என்ற இளம்பூரண

ருரையும், "அ என்புழி நின்ற அளவுங் குறியும் ஒன்றென்னு

மெண்ணும் க என நின்றவிடத்தும் ஒக்கும், ஆ என்புழி

நின்ற அளவும் குறியும் ஒன்றென்னு மெண்ணும் கா என

நின்ற இடத்தும் ஒக்கும் என்பது இதன்

கருத்து" என்ற

நச்சினார்க்கினியருரையும் பொருந்தாவென்க.

உயிர்களுக்குள் சில ஒரு மாத்திரை பெறுமென்றும், சில

இரண்டு மாத்திரை பெறுமென்றும், மெய்யின் பின்னர் உயிர் ஒலிப்

பின், ஆங்கு மாத்திரை பெறாது என்றுங் கூறவே, மெய்களுக்கு ஒரு

போதும் மாத்திரை இல்லையோ என்ற ஐயமெழ,

**11.** மெய்யி னளவே யரையென மொழிப*.

பொ-ள்.—மெய்யின் மாத்திரை அரையென்று கூறுவர் (புலவர்).

உ-ம். தங்கை என்றவிடத்து 'ங்' என்றதற்கு அரை மாத்திரை ;

அதற்கு அரை மாத்திரை என்றது ககரத்தின் பின்னருள்ள உயிராகிய 'ஐ'யை ஒலித்த பின்னரே அறியப்படும்.

"மெய்" என்றாரேனும், உயிரான் தொடரப்படாத தனி

மெய்யே கொள்ளல்வேண்டும்.

* ஹ்ரஸ்வார்த்த மாத்ரம் வ்யஞ்ஜநம் (தை. ப்ரா. 1, 37)

இச்சூத்திரவுரையில் இளம்பூரணத்தில் "ஈண்டு வேற்றுமைநயங் கருதப்பட்டது" என்ற தொடர் உளது. வேற்றுமை நயம் என்பதற்கு உயிர்மெய்யினை உயிர் மெய் என வேறுபடுத்துக் காட்டும் நயம் எனப் பொருளும், ஒற்றுமைநயம் என்பதற்கு அதனை ஒன்றாகக் காட்டும் நயம் எனப் பொருளுங் கொள்ளின் இத்தொடர் ஈண்டுப் பொருந்தாது. முற்சூத்திரத்தில் இருப்பின் நலம். இச் சூத்திரத்திலே இளம்பூரணர் அவ்வாறு கூறியிருப்பின் காக்கை, கோங்கு என்ற விடத்திலுள்ள ககர ஙகர வொற்றுக்கள் இடத்தானும் முயற்சியானும் வேறுபடினும், அரை மாத்திரை ஒலிக்கும் என்ற தன்மையில் ஒற்றுமைப்பட்டன என்ற பொருளை அத்தொடர்க்குக் கூறல்வேண்டும்.

பா-ம். நச். ம-. பதி.

புடைபெயருந் துணையாய்

தா. பதி. புடைபெயருந் தன்மையாய்

முப்பது எழுத்துக்களுக்கும் மாத்திரை கூறப்பட, சார்பெழுத்துக்களாகிய மூன்றற்கும் மாத்திரை யாது எனின்,

**12.** அவ்விய னிலையு மேனை மூன்றே.

போ-ள் —எஞ்சிய குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆய்தம் என்ற மூன்றும் அத்தன்மையவா யிருக்கும். அஃதாவது அரை மாத்திரை பெறும்.

உ-ம். கேண்மியா ; நாக்கு ; எஃகு.

மெய்யுள் அரைமாத்திரைக்குக் குறைவாக மாத்திரை பெறும் மெய்யு முண்டோ வென்ற ஐயம் நிகழ,

**13.** அரையளபு குறுகன் மகர முடைத்தே
இசையிட னருகுந் தெரியுங் காலை.

போ-ள் —மகரம் தன்னியற்கை மாத்திரையின்

அரையளவாகக்

குறுகுதலை யுடைத்து ஆராயுமிடத்து.
துச் சிறபான்மைவரும்.

அஃது (வேறு) ஒலியிடத்

உ-ம். போன்ம்.

23

ஈண்டு 'அரையளவு' என்றதற்கு 'அரைமாத்திரை' எனப் பொருளெனவும், அஃது ஐந்தாம் வேற்றுமை யெனவும் 'சான்மாத் திரை என்பது உரையிற்கோடல், எனவுஞ் சொண்டனர் இளம் பூரணர். நச்சினார்க்கினியர் அவ்வாறே கொண்டு "இது பிறன்கோட் கூறலென்னும் உத்தி" எனவுங் கூறினர். அவர்களுள் மாறுபாடு ஓரிடத்திலுண்டு :—"இசையிடன்" என்றது

இளம்பூரணர்கொள்கை யில் 'அருகும்' என்றதைத் தழுவும்; நச்சினார்க்கினியர்கொள்கை யில் 'குறுகலுடைத்து' என்றதைத் தழுவும். 'அரையளவு' என்ற தற்குத் தன்னியற்கையளவின் அரையளவு எனப் பொருள் கொள்ளின், அதற்கே கான்மாத்திரை என்ற பொருள் கிடைக்கும். அப்போது கான்மாத்திரையை உரையிற்கோடலாற் கொள்ளல் வேண்டாம். அந்த இசை னகர மென்பது

**ணகாரை முன்னர் மகாரங் குறுகும்** (எழுத். 52)

என்ற சூத்திரத்தாற் பெறப்படும்.

" சார்பெழுத்து மூன்றென் பவர்க் கிது கூறல்வேண்டாவாக லின் பிறன்கோட்கூறல் என்னும் உத்தி என்றார்" என வித்வான் சி. கணேசையரது குறிப்பில் உள்ளது. மகரக்குறுக்கத்தைச் சார் பெழுத்தாகக் கொள்ளாமைக்குக் காரணம் அது மற்றொன்றைச் சார்ந்து அதன் பிறப்பிடத்திற் பிறவாமையே

யாகும். அக்காரணம் பற்றி மகரக்குறுக்கத்தை ஆசிரியர் தன் கொள்கையாகக் கொள்ள வில்லை என்பது நேரிதாகாது. அவ்வாறு கொள்ளாக்கால் ஆசிரியர் ஐகாரக்குறுக்கத்தைக் கூறியதுங் குற்றமாகும். ஆகலின் பிறன் கோட்கூறலாக நச்சினார்க்கினியர் கொள்வது பொருந்தாது.

அம்மகரத்தின் வடிவு என்னை எனின்,

**14.** உட்பெறு புள்ளி யுருவா கும்மே.

பொ-ள் —(அம்மகரக்குறுக்கத்தின்) வடிவம் உள்ளே பெற்ற புள்ளியை உடையது ஆகும். உ-ம். போன்ம்

இச்சூத்திரம் பகரத்திற்கும் மகரத்திற்கும் வடிவத்தில் வேற்று . மையைக் கூறுகின்றதென இளம்பூரணரும் நச்சினார்க்கினியருங்

கூறினர். அஃது இவ்விடத்திற்குப் பொருந்தாமையானும், மகரக் குறுக்கத்தின் வடிவம் மகரத்துள் புள்ளிபெற்று நிற்குமென வீர சோழியவுரைகாரர் கூறியிருத்தலானும் மேற்கூறப்பட்ட உரையே சிறந்ததாகும்.*

மகரக்குறுக்கத்தின் வடிவினைக் கூறுங்கால், மெய்களின் வடிவம் யாதென எண்ணம் நிகழ,

15. மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்.

பொ-ள் —மெய்களின் தன்மை புள்ளிபெற்று நிற்றல் வேண்டும்.

உ—ம். க், ச், த், ப்...

இச்சூத்திரம் உயிர்மெய்யோடு

தனிமெய்யிடை வடிவு வேற் றுமை
செய்தனுதலிற்று என்று இளம்பூரணர்
நச்சினார்க்கினியர் இவ்விருவருங் கொண்டனர்.
இதுவரை ஆசிரியர் உயிர்மெய்யினைப் பற்றிக்
கூறாமையானும்

புள்ளி யில்லா வெல்லா மெய்யும்
உருவுரு வாகி யகரமோ டுயிர்த்தலும்

(தொல் எழுத். 17.) எனப் பின்னர்க்

கூறப் போகின்றமையானும் அவர்தங்கூற்று ஆராய்
தற்பாலது.

வடிவத்தின்கண் புள்ளிபெறுமியல்பை
நோக்கி மெய் எனக் கூறுமிடத்து † புள்ளி என
ஆசிரியர் வழங்கினர்.

மெய்கள் புள்ளி பெறு மெனின், உயிருள்
புள்ளி பெறு கின்றவை உளவோ எனின்,

**16.** எகர ஒகரத் தியற்கையு மற்றே.

பொ-ள் — எகரம், ஒகரம் இவற்றின் தன்மையும் அவ்வாறே. அஃதாவது அவையும் புள்ளிபெறும். உ-ம் எ். ஒ்.

* இதனை 1925 ஆண்டு திருச்சிராப்பள்ளி பிஷப் ஈபர் காலேஜ் பத்திரிகையில் யான் வெளியிட்டதைக் காண்க.

† (தொல். எழுத் 151,165...)

25

ஈண்டு 'எகரம்' 'ஒகரம்' என்பனவற்றின் 'கரம்' சாரிகை யாகு மென்பது

காரமுங் கரமுங் கானொடு சிவணி
நேரந் தோன்று மெழுத்தின் சாரியை

(தொல் எழுத். 135) என்ற சூத்திரத்தான் விளங்கும்.

இச்சூத்திரத்தான் தற்போது எழுதப்படும் எ, ஏ, ஒ, ஓ என்

பனவற்றிற்குப் பிரதியாக ஆசிரியர்காலத்து, எ, ஏ, ஒ, ஓ என எழுதப்பட்டு வழங்கின என அறியத்தகும். நச்சினார்க்கினியருரையில் "இஃது உயிர்மெய்க்கு மொக்கும்" என்றுளது*. ஈண்டு இஃது என்றது 'எகார ஒகாரங்கட்குப் புள்ளியின்றுயிற்று' என அவர் இச் சூத்திரத்திரத்தாற் கொண்ட பொருளைக் குறிக்கும். உயிர்மெய் இங்கு அதிகரித்து வாராமையின் அத்தொடர்க்குப் பயன் யாது மில்லை.

மெய்களுக்கும் உயிர்களுக்கும் தனித்தனிவடிவ மிருப்பினும், உயிர்மெய்களுக்குத் தனிவடிவ முண்டா இல்லையா வென ஐயம் நிகழ,

**17.** புள்ளி யில்லா வெல்லா மெய்யும்
உருவுரு வாகி யகரமோ டுயிர்த்தலும்
ஏனை யுயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல வுயிர்த்த லாறே.

**பொ-ள்.** புள்ளியை உடைத்தாயிராத மெய்களெல்லாம், (புள்ளி நீங்கிய) தத்தம் உருவமே உருவமாகி அகரத்தோடு ஒலிக்கப்படுதலும், உருவு மாற்றப்பட்டு ஏனையுயிரோடு ஒலிக்கப்படுதலும் ஆகிய அவ்விருதன்மையன ஒலிக்கப்படும் முறைமைகள்.

நச்சினார்க்கினியர் இல்லா என்றதற்கு நீக்கின எனப் பொருள் கூறினாரேனும் அவர் கருத்து யான் கூறியதே. அச்சொல் ஈறு கெட்ட பெயரெச்சமாகும். அதற்கு இளம்பூரணர் இல்லையாம்படியாக எனப் பொருள் கூறினர். அவர்கூற்றில் அது வினையெச்ச

* "மெய்யோடியையினும்..." (எழுத்-10) என்ற சூத்திரம் உயிர்மெய்யைப்பற்றிக் கூறியது எனக் கொள்ளல் வேண்டாமென்பது அச்சூத்திரவுரையான் விளங்கும்.



மாகும். அவ்வாறாயின் கன்னியப்பமுதலியார்பதிப்பில் "இல்லாத வென்பது இல்லாவென நின்றது" என்ற பாடம் பொருந்தாது. சிதம்பரம் பிள்ளைபதிப்பிலுள்ள இல்லாக என்ற பாடமே பொருந்தும். அதற்கு இல்லையாக என்பது பொருளாகும்.

"தன்னினமுடித்த லென்பதனான் அளபெடை உயிரோடும் சார்பிற்றோற்றத் துயிரோடும் கூடும் உயிர் மெய்யுங் கொள்க". எனக் கூறினர் இளம்பூரணர். ஈண்டு

அளபெடையைக் கூறிய தற்குக் காரணம் அது மூன்று மாத்திரை பெறு மெழுத்து என்ற கருத்தாகும். அஃது ஆசிரியர்க்கு உடன்பாடன்று என முன்

னரே கூறப்பட்டது. நச்சினார்க்கினியத்தில் "கா, ஙா முதலியன புள்ளி பெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினர்" என்றுளது. ஆகலின் கா, ஙா என்ற

விடத்து முற்கா லத்தில் க. ங. என்ற வடிவமே இருந்தன என்பது வெளிப்படை*.

ஆங்கே "மெய் தனக்கு இயல்பாகிய அகரத்தை நீங்கி நிற்பதோர் தன்மையும்...உடைய தென்பதூஉம்" என்றுளது. மெய்க்கு இயல்பாகிய அகரமின்மையானும், க, ங முதலியன உயிர்மெய்யாகக் கொள்ளப்பட்டமையானும் "தனக்கு இயல்பாகிய" என்ற அடைமொழி பொருந்தாதெனத் தோன்றுகின்றது.

இளம்பூரணத்தில்

"ஈண்டு உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க்கூட்டத்தினை எல்லா மெய்யு மென்று மெய்மேல் வைத்துக் கூறியது அது முன் கூறிக்

கூறப்படுதல் நோக்கிப்போலும்" என்றுளது. உயிர்த்தல் என்ற தற்கு "மெய்" என்றது சொல்வகையான் எழுவாயாயிருப்பினும், பொருள்வகையான் புள்ளியில்மெய், உருவுதிரிந்த மெய் என்பனவே எழுவாயாகும். "இராமன் சிங்காதனமேற அரசியற்றுவான்"† என்றாற் போன்ற உலகவழக்குக்களை நோக்கின், ஆசிரியரது சூத்திரத்தில் வழுவன்மையும் இளம்பூரணர் கூறியதற்கு இடமின்மையும் அறிதல்கூடும்.

பா-ம். நச். ம. பதி. "மகரமு மிரண்டு புள்ளியு ளுட்பெறு புள்ளியை வளைத்தெழுதினர்".

* இவ்வாறே சுன்னாகம் வித்வான் ஸி. கணேசய்யரது குறிப்பிலுங் காணக.

† அரசியற்றெழில் சொல்வகையால் இராமனிடத்தும், வகையால் சிங்காதனமேறிய இராமனிடத்துங் காண்க.

கருத்து



நச். தா. பதி "மகரம் உட்பெறுபுள்ளியை வளைத்தெழுதினர். முன்பாடஞ் சிறக்கும்.

மெய் அகரமோடும் ஏனையுயிரோடும் ஒலிக்குமெனின் உயிர் முன்னும் மெய் பின்னும் ஒலிக்கப்படுமா, மெய் முன்னும் உயிர் பின்னும் ஒலிக்சப்படுமா என ஐயம் நிகழ,

**18.** மெய்யின் வழிய துயிர்தோன்று நிலையே.

பொ-ள். :—உயிர் தோன்றுமிடம் மெய்யின் பின்னரே யாகும்,

உ-ம். க = க் + அ.

"உயிர்தோன்றுநிலை" என்றதனை எழுவாயாகவும் "வழியது"

என்றதனைப் பயனிலையாகவுங் கொண்டனர் நச்சினார்க்கினியர். "உயிர்" என்றதனை எழுவாயாகவும் "வழியது" என்றதனைப் பயனிலையாகவும் "தோன்றுநிலை"

என்றதை ஏழாம்வேற்றுமையுருபுதொக்க பெயராகவுங் கொண்டனர் இளம்பூரணர். "தோன்றுநிலை" என்றது மிகை யெனக் கருதி, அதனான் "உயிர்மெய்களைப் பிரிக்குமிடத்துங் கூட்டுமிடத்தும், அவ்வாறே முன்னும் பின்னுமாதலைக் கொள்க" எனக் கூறுகின்றனர். "புள்ளியில்லா வெல்லா மெய்யும்" என்ற முன் சூத்திரத்தைக் கேட்டவுடன் அவ்வுயிர் எங்குத் தோன்றும் என்ற எண்ணம் உடனே உண்டாதல் இயற்கையாதலின், நச்சினார்க்கினியர் கொண்டவாறே கொள்ளுதல் சிறப்புடைத்து. மிகை

யால் இளம்பூரணர் கொள்ளும் பொருள் சொல்லாதே கிடைக்கும். இங்கு "அக்கூட்டம் பாலு நீரும்போல வுடன் கலந்ததன்றி விரனுனிகள் தலைப்பெய்தாற்போல வேறு நின்று கலந்தனவல்ல" என் இளம்பூரணரும், "இதனானே மாத்திரை கொள்ளுங்கால் உப்பும் நீரும்போல ஒன்றேயாய் நிற்றலும் வேறுபடுத்துக் காணுங்கால் விரலும் விரலுஞ் சேர நின்றாற்போல

வேறாய் நிற்றலும் பெற்றாம்" என நச்சினார்க்கினியருங் கூறுகின்றனர். பாலில் நீரின் தன்மை யிருத்தலானும், உப்பில் நீரின் தன்மை யில்லாமையானும், மெய் யில் உயிரின் தன்மை யில்லாமையானும் "பாலு நீரும்" என்ற உதா ரணத்தைக்காட்டிலும் 'உப்பும் நீரும்' என்றது சிறக்கும். நச்சி னார்க்கினியத்தில் "நீர் உப்பின் குணமே யாயவாறுபோல உயிரும் மெய்யின் குணமேயாய் வன்மை மென்மை இடைமை எய்தி நிற்றல் கொள்க. உ-ம்.

க-ங-ய எனக் கூட்டமும் பிரிவும் மூவகையோசை

28

யுஞ் சான்ற" என்றுளது. ஙகரப்புள்ளியின் பின்னருள்ள அகரத்தின் ஒரு பகுதி மூக்கினா லொலிக்கப்படுவதாகக் கருதப்படினும், ககர யகரப்புள்ளிகளின்பின்ன ரொலிக்கப்பட்ட அகரங்கட்கு வேறு பாடு ஒலிநூல்வல்லோர்கள் சொல்லாமையின், உயிர்க்கு வன்மை, இடைமை உண்டென நச்சினார்க்கினியர் சொல்வது ஆராய்தற்பாலது.

மெய் பதினெட்டெனக் கூறிய பின்னர், உயிர், மெய் இவற்றின் அளவினையும், வடிவினையுங்

கூறினர். அம்மெய்கள் எத்துணைவகைப்படு மெனப் பின்வரும் மூன்று உணர்த்துகின்றனர்.

சூத்திரங்களால்

**19.** வல்லெழுத் தென்ப க ச ட த ப ற.

பொ-ள். க், ச், ட், த், ப், ற் இவற்றை வல்லெழுத்து எனக் கூறுவர் (முன்னோர்).

**20.** மெல்லெழுத் தென்ப ங ஞ ண ந ம ன.

பொ-ள்.— ங், ஞ், ண், ந், ம், ன் இவற்றை மெல்லெழுத் தென்று கூறுவர்.

**21.** இடையெழுத் தென்ப ய ர ல வ ழ ள.

பொ-ள்.— ய், ர், ல், வ், ழ், ள் இவற்றை இடையெழுத்து எனக் கூறுவர்.

இச்சூத்திரங்கள் மூன்றனுள்ளும் க, ங, ய முதலியவற்றின் அகரம், மெய்யைப் புறத்தார்க்கு எளிதில் அறிவித்தற்கு வந்தது. அவ்வாறு வழங்குதற்குச் சான்று

மெய்யீ னியக்க மகாரமோடு சிவணும்

என்ற சூத்திரமாகும்.

(எழுத். 46)

வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து எனக் குறியிட்டதற்குக் காரணம் வல்லென்ற தலைவளியாற் பிறத்தலானும், மெல்லென்ற மூக்கின் வளியாற் பிறத்தலானும், இடைநிகர்த்ததாய மிடற்றுவளியாற் பிறத்தலானும் என்பர் இளம்பூரணர். அவ்வாறே கூறினர் நச்சினார்க்கினியரும். வல்லெழுத்து தலைவளியானும், இடையெழுத்து மிடற்றுவளியானும் பிறக்குமென மொழிநூல்வல்லோர் ஒருவருங் கூறவில்லை. அன்றியும்"இடைநிகர்த்தாய மிடற்றுவளியால்' என்னுமிடத்து "இடைநிகர்த்தாய' என்ற அடைமொழியும்

29

பொருந்தவில்லை, மிடற்றுவளி தலைவளிக்கும் மூக்கின் வளிக்கும் இடையின்மையின். அவர்கள் அவ்வாறு கூறியதற்கு ஞாபகம் "மெல்லெழுத்தானும்"(எழுத்.100)என்ற சூத்திரத்தில்"யாப்புற" என்ற சொல எனக் கூறுகின்றனர். எல்லாவொலிகட்கும் வளி

மிடற்றுவழியாய்ப் போகவேண்டியிருத்தலான் அவ்வாறு கூறுதல் பொருந்தாதென்க. "உந்தி முதலா..." என்ற சூத்திரத்தில் "தலையினு மிடற்றினு நெஞ்சினு நிலைஇ" என்றிருத்தலின் அவ்வாறு கூறினரெனின் "நெஞ்சுவளியாற் பிறக்கும் எழுத்துக்களை ஏன் கூறாதிருந்தனர் என்ற வினவிற்கு விடையளித்தல் வேண்டும்.

வல்லெழுத்துக்களை முன்னரும் அதன்பின்னர் மெல்லெழுத்துக்களையும் அதன்பின்னர் இடையெழுத்துக்களையும் ஆசிரியர் கூறியதற்கு "மொழிக்கு முதலாமெழுத்து நான்கு உளவாகலானும் அவற்றால் வழக்குப் பயிற்சி பெரிதாகலானும் (வல்லினம்) முற்கூறப்பட்டது; மொழிக்கு முதலாமெழுத்து மூன்று உளவாகலானும் அவற்றின் வழக்குப்பயிற்சியானும் (மெல்லினம்), முதலாமெழுத்துச் சிறுபான்மை வழக்கினவாய் இரண்டாகிய இடையினத்தின் முன் வைக்கப்பட்டது" என இளம்பூரணர் காரணங் கூ

றினர். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறினர்.

நெடுங்கணக்கில் மெய்களுள் ககரம் முதலாயிருத்தலானும், மெல்லினம், வல்லினம் பிறக்குமிடத்தையும் மூக்கினையும் தமக்குப் பிறப்பிடமாகக் கொண்டமையானும், அப்பன்னிரண்டு மெய்யுமுண் டாம்போது வாய் முழுவதும் மூடியிருத்தலானும், வல்லினத்தை முன்னரும் பின்னர் மெல்லினத்தையுங் கூறினர். இடையெழுத்து உண்டாம்போது வாய் சிறிது மூடியுஞ் சிறிது திறந்துமிருத்த லான், அவற்றைப் பின் கூறினர். அவை, முழுதும் வாய்திறக்க உண் டாம் உயிருக்கும், வாய் முழுதும் மூட உண்டாம் வல்லினமெல் லினங்கட்கும் இடையாய் நிற்றலின், இடையெழுத்து எனப் பெயர் பெற்றன. * ஆகலின் "அவ்விரண்டு நோக்கியல்லது இடைநிகரனவா

* ஸ்ப்ருஷ்டம் ப்ரயத்நம் ஸ்பர்சாநாம்; ஈஷத் ஸ்ப்ருஷ்டம் அந்தஸ்தாநாம் விவ்ருதம் ஸ்வராணாம், ய ர ல வ அந்தஸ்தா: (பாணிநீயசிக்ஷா)

*They are called antahstha in the Pratisakhyas as standing midway between vowels and consonants.* (*Mac. Ved. Gr.P. 10*)



யொலித்தலறியப்படாமையின் அதுபற்றி

இடையெழுத்துக்கள் அவ்விருகூற்றிற்கும் பின் வைக்கப்பட்டன" (தொல். சூ. வி. பக். 24) எனச் சிவஞானமுனிவர் கூறியது ஆராய்தற்பாலது. இம்மூன்று சூத்திரங்களிலும் 'என்ப' என்ற சொல் வழங்கப்படுதலின், வல்லெழுத்து முதலிய மூன்று குறிகளும் முன்னோரா லிடப் பட்டன என்பது அறியத்தகும்.

பா. ம், நச். ம. பதி. "இடைநிகர்த்தாய மிடற்றுவளியால்" நச். தா. பதி. "இடைநிகர்த்தாய் மிடற்றுவளியால்"

முன்பாடமே சிறக்கும்.

19, 20, 21 ஆவது சூத்திரங்களிற் கூறப்பட்ட மெய்கள் எல்லாம் எல்லாவற்றோனுந் தொடரப்படுதல் இயற்கையன்மையின், அத்தொடர்பின் வகையைக் கூறியது இச்சூத்திரம்.

**22.** அம்மூ வாறும் வழங்கியன் மருங்கின்
மெய்ம்மயங் குடனிலை தெரியுங் காலை.

பொ-ள்:— அப்பதினெட்டும்

(மொழிகளுள்) வழங்கப்படு
மிடத்து ஆராயப்படின், அவை பிறமெய்யோடு
கூடும் நிலையையும் தம்மோடுகூடும் நிலையையும்
உடைய.

ஈண்டு 'மயங்குதல்' என்ற சொற்குக் 'கூடுதல்'
என்றது பொருள் என்பது, கசதப வொழித்தவீ
ரேழன் கூட்டம் (நன்.110) என்ற
சூத்திரத்திலுள்ள 'கூட்டம்' என்ற சொல்லான்
விளங்கும். சூத்தி ரத்தில் 'அம்மூவாறும்' என்பது
எழுவாய்; அன்மொழித்தொகை யாகிய
'மெய்மயங்குடனிலை' என்றது பெயர்ப்பயனிலை.
மெய்ம்

மயங்குநிலை உடனிலை என்பன முறையே
மெய்ம்மயக்கம் உடனிலை
மயக்கம் என்ற சொற்களாற் பின்னர்
வழங்கப்பட்டன காண்க.

ஒரு மெய் தன்னோடு மயங்குதலை
உடனிலைமயக்க மென்றும், பிறமெய்யோடு
மயங் தலை மெய்ம்மயக்கம் என் ம் இளம்பூரணர்
நன்னூலார், இலக்கணவிளக்கநூலார் எல்லோருங்

கருதினர். நச் சினர்க்கினியரோ தனிமெய் பிறமெய்யோடுந் தன்மெய்யோடும் மயங் கும் மயக்கத்தை மெய்ம்மயக்கமெனவும், உயிர்மெய் உயிர் மெய்யோடுந் தனி மெய்யோடும் மயங்கும் மயக்கத்தை உட னிலைமயக்கமென்றுங் கூறுவர். இச்சூத்திரத்தில் "அம்மூவாறும்" என்ற சொல் இதற்கு முன்னுள்ள மூன்று சூத்திரத்திலுள்ள தனிமெய்யையே றித்தலானும், பின்வருஞ் சூத்திரங்கள் எட்ட னுள் ஒன்றிலேனும் உயிர்மெய் உயிர்மெய்யோடுந் தனிமெய்யோடும் ம்யங்கும் மயக்கத்தை ஆசிரியர் கூறாமையானும், அவர் கூற்றுப் பொருந்தா தென்க. சூத்திரத்திலுள்ள 'உடன்' என்ற சொல் லைத் தன்னுடன் எனப் பொருள்கொள்ளாது "உயிருடன்" எனப் பொருள்கொண்டதும், பின்னருள்ள "உடன்" என்ற சொல்லால் முன்னருள்ள 'மெய்' என்ற சொல்பிற மெய்யையே

குறிக்கும் எனக்
கொள்ளாமையுமே அவர் அவ்வாறு கூறியதற்கு
ஏதுவாகுமெனத்
தோன்றுகின்றது. ஆகலின்றே அவர் கூறும்
பொருளை இலக்
கணவிளக்கவாசிரியர் கொண்டாரல்லர்.

பா-ம். சி. பதி. மெய்ம்மயக்குடனிலை

ஏனைபதி. மெய்ம்மயங்குடனிலை

இளம். கன். பதி. "அவற்றுட்

டனிமெய்யோடு தனிமெய்ம்
மயக்கம் மெய்யாற் கூறியதென்னெனின்;
அவற்றிற்கு வரையறையின்
மையின், வரையறையுடையது
தனிமெய்ம்மயக்கமே கூறி யொழிந்
தாரெனை வுணர்க.

இளம். சி. பதி. " அவற்றுள்
தனிமெய்யோடு தனிமெய்
மயக்கம் ஒன்றே கூறியதென்னெனின்,

மற்றவற்றிற்கு வரையறை யின்மையின், வரையறையுடைய தனிமெய்மயக்கமே கூறி னொழிந் தார் என உணர்க.”

பின்னருள்ள பாடந் தெளிவாயுள்ளது.

நச். ம. பதி. (1) “இடைநின்ற தனிமெய் பின்னர் நின்ற”

நச். தா. பதி. “இடைநின்ற தனிமெய் முன்னர் நின்ற.”

பின்னருள்ள பலவிடங்களில் முப்பதிப்பிலும் முன்னர் என்றே இருத்தலின், பின்பாடமே உரைகாரரது என விளங்கும்.

(2) ம. “இம்மயக்கங்களுள்”

தா. “மேய்ம்மயக்கங்களுள்” — முன்னருள்ள பாடமே சிறக்கும்.

(3) ம. எழுத்துக் கடம்மிற் கூடுமாறு கூறுதலின் ”

தா “ எழுத்துக்கள் தம்மிற் கூடிப் புணருமாறு கூறுகின்ற ... தாதலின்

32

இங்குப் புணர்ச்சியைக் கூறுமையின் முன்னருள்ள பாடமே சிறக்கும்.

மெய்ம்மயக்கத்தைப் பின்வரும் எழுசூத்திரங்களான் உணர்த்தினர்.

**23.** டறலள வென்னும் புள்ளி முன்னர்க்
கசப வென்னு மூவெழுத் துரிய.

பொ-ள். ட், ற், ல், ள் என்பனவற்றின் பின்னர்* க், ச், ப், இவை வரும்.

உ-ம். கட்க, கற்க, செல்க, கொள்க ; ... நீட்சி, ஞாற்சி, வல்சி, வாள், செலவு ; தட்பம், பொற்பு, செல்பு, வள்பு;

* தொல்காப்பியத்துள் ‘ முன்னர் ’ என்ற சொல் ‘இடமுன்னர்’ எனப் பொருள்படும்.

இரண்டு மெய்கள் சேர்ந்து மொழிமுதலில் வாரா என்பது

'உயிர்மெய் யல்லன மொழி முதலாகா.' (எழுத். 60)

என்ற சூத்திரத்தாற் கூறப்படுமாதலானும் 'போன்ம்' என்ற சொல் லைப்போன்றவிடத்தன்றி வேறிடங்களில் மொழியீற்றின் கண்ணும் இருமெய்கள் சேர்ந்து வாராவாதலானும், ஈண்டு மொழிகளிடையில் எம்மெய் எம்மெய்யின் பின்னர் வரும் என்பதே உணர்த்தப்பட்டது. இவ்விதிகள் தனிமொழி தொகைமொழி, தொடர் எல்லா வற்றிற்கும் பொருந்துமென இளம்பூரணரும், தனிமொழிக்குத் தானென நச்சினார்க்கினியருங் கூறினர். இளம்பூரணர் கருத்தே சிறக்குமென்பது என் கொள்கை. "கட்சிறார் கற்சிறார் என்பன இருமொழிப்புணர்ச்சி யாகலின் ஈண்டைக் காகா" என்ற தொடரான் இளம்பூரணரை மறுத்த நச்சினார்க்கினியர் ஈண்டு நீள்சினை என்ற உதாரணத்தைத் தந்தது ஆராய்தற்பாலது.

**24.** அவற்றுள்

லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்.

பொ-ள். மேற்கூறப்பட்ட நான்கெழுத்துள்; ல், ள் இவற்றின்
பின்னர் ய், வ் இவையுந் தோன்றும்.

உ-ம். கொல்யானை, வெள்யானை, கோல்வளை, வெள்வளை.

* இ—முன்னர் காலத்தாற் பின்னரையே குறிக்கும்.

33

தனிமொழியில் இச்சூத்திரத்திற்கு உதாரணங்காட்ட இயையாமையின் நச்சினார்க்கினியரும் 'கொல்யானை' என்றதனை உதாரணமாகக் கூறி,
அது பிரிவிலொட்டாகும் என்ற சேனாவரையர் கூற்றைத் தழுவி, அதனை ஒருமொழியாகக் கொள்வர் ஆசிரியர்
எனக் கூறினர்.

பா-ம். நச். ம. பதி. "இவற்றுள்

வினைத்தொகையும் பண்புத்
தொகையும் ... கூறலுமொன்றும்"

நச். தா. பதி. "இவற்றுட் கொல்யானை என வினைத்தொகையும் வெள்யாறு எனப் பண்புத்தொகையும் ... கூறலு மொன்று". முன்னருள்ள பாடமே சிறக்கும். ஈண்டு ஒன்று கவனிக்கத் தக்கது:—"இவ்வாசிரியர் ஒருமொழியாகக் கொள்வர்" என்ற விடத்து ஒருமொழி என்றதற்குப் பிரிவிலொட்டு எனப் பொருளாயின்,

அஃது "வினையின் றொகுதி காலத் தியலும் (தொல். சொல். 415) என்ற சூத்திரத்தின்கண்ணுள்ள அவருரையோடு பொருந்தாது. ஆகலின் "இவற்றுள்...ஒன்றும்" என்றது இடைச்செருகலாகக் கொள்ளல் வேண்டும். ஒருமொழி என்றதற்கு ஒருசொன்னடைத்தாகிய மொழி எனப் பொருள் கொள்ளின் முற்சூத்திரத்திலுள்ள "கட்சிறூர் ... ஈண்டைக்காகா" என்றது இடைச் செருகலாதல் வேண்டும்.

**25.** ஙஞணநமனவெனும் புள்ளி முன்னர்த்
தத்த மிசைக ளொத்தன நிலையே.

பொ-ள் ங், ஞ், ண், ந், ம், ன் இவற்றின் பின்னர் அவற்றுள் ஒவ்வொன்றுக்கும் முன்னருள்ள க், ச், ட், த், ப், ற் என்பன

(முறையே) மெய்ம்மயங்குநிலைக்கண் பொருந்தின.
பஞ்சு, பண்டு, வந்து, நம்பு, கன்று.
உ-ம். தெங்கு,

நச்சினார்க்கினியருரையில் "தமக்கினமாய் முன்னின்ற கசடதபற-க்கள் பின்னிற்றற்குப் பொருந்தின" என்றுளது. ஆங்கு இனமாய், பின்னிற்றற்கு என்பன வருவித்துரைக்கப்பட்டது காண்க.

தத்தம் மிசைகள் என்றதனுன் க், ச், ட், த், ப், ற் என்பன எவ்வாறு கொள்ளப்பட்டன எனின், நெடுங்கணக்கில் அவ்வாறு கூறப்பட்டமையானும், அதனை ஆசிரியர் ஏற்றுக்கொண்டு "அகரமுத னகரவிறுவாய்" என முதற்சூத்திரத்திற் கூறினமையானு மென்க.

34

நச்சினார்க்கினியத்தில் "தெங்கு, பிஞ்சு, வண்டு, பந்து, கம்பு, கன்று எனக் குற்றுகரமுங் காட்டுப" என்றுளது. ஈண்டுக் குற்றுகரம் என்றதற்குக் குற்றியலுகரங்கொண்ட மெய் என்பது பொருள் போலும். இவ்வுதாரணங்களை விசேடித்துக் கூறுதலின் பயன் நன்கு விளங்கவில்லை.

**26.** அவற்றுள்

ணனஃகான் முன்னர்க்

கசஞப மயவவ் வேழு முரிய.

**பொ-ள்.**—*அவ்வாறனுள் 'ண்' 'ன்' இவற்றின் பின்னர் க், ச், ஞ், ப், ம், ய், வ் இவ்வேழும் வரத்தகும். உ-ம். வெண்கலம், புன்கண் ; வெண்சாந்து, புன்செய், வெண்ஞாண், பொன்ஞாண் ; காண்ப, என்ப ; கொண்மூ, என்மனார் ; மண்யாறு, இன்யாழ் ; மண்வன்மை, பொன்வன்மை.*

**27.** ஞநமவ வென்னும் புள்ளி முன்னர்

யஃகா னிற்றல் மெய்பெற் றன்றே.

**பொ-ள்.**—*ஞ், ந், ம், வ் இவற்றின் முன்னர் யகரம் நிற்றல்தன் மைத்து. உ-ம். உரிஞ்யாது, பொருந்யாது ; திரும்யாது ; தெவ்யாது.*

ஈண்டு 'மஃகான்' என்றது எழுவாய்;

'நிற்றல்மெய்பெற்றன்று' என்றது பயனிலை. நச்சினார்க்கினியர் "இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ் செய்தலின் அக்காலத்து ஒரு மொழியா வழங்கிய சொற்கள் உள வென்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன" எனக்கூறி, "இனி உரையாசிரியர் உரிஞ்யாது, பொருந்யாது, திரும்யாது, தெவ்யாது என இருமொழிக்கண் வருவன உதாரணமாகக் காட்டி னாலெனின் ... புணர்ப்பர். ஆதலின் ஈண்டு இருமொழிப் புணர்ச்சி காட்டிற் கூறியது கூறலென்னுங் குற்றமாம். அதனால் அவை காட்டுதல் பொருந்தாமை உணர்க" என இளம்பூரணரை

35

மறுத்தனர். புணர்ச்சியைப்பற்றிச் சிறப்பாய்ப் புணர்ச்சி கூறுமியல்

களிலும், மெய்ம்மயக்கத்தை ஈண்டும் ஆசிரியர் கூறினரெனின், கூறியது கூறல் என்னுங் குற்றமாகுமா?

**28.** மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும்.

போ-ள்.—'ம்' என்றதின் பின்னர் 'வ்' உம்

வரும். உ-ம் நிலம் வலிது. நச்சினார்க்கினியர் "வரும் வண்ணக்கன் என்றாற்போல்வன காட்டின் வகார மிசையு மகாரங் குறுகும் (எழுத். 331) என்ற விதி வேண்டாவாம்" என்றனர். அவ்விதியால் மகரம் தன்னரைமாத்திரை யிற்குறுகு மென்றது புதிதாய் விதிக்கப்படுதலான், அவர்கூற்றுப் பொருந்தாது.

பா-ம். நச். ம. பதி. "உதாரணம் ... இறந்தது"
நச். தா. பதி. "உதாரணம் ... இறந்தன"

**29.** யரழ வென்னும் புள்ளி முன்னர்
முதலா கெழுத்து ஙகரமோடு தோன்றும்.

பொ-ள்.—ய், ர், ழ், இவற்றின் பின்னர் மொழிக்கு முதலாக வரும் எழுத்துக்களாகிய க், த், ந், ப், ம், ச், வ், ஞ், ய் இவையும் ஙகரமும் தோன்றும். உ-ம். வேய்க, ஊர்க, வீழ்க ; வேய்தல் ஊர்தல், வீழ்தல்; வேய்நர், ஊர்நர், வீழ்நர்; வேய்ப, ஊர்ப, வீழ்ப வாய்மை, நேர்மை, கீழ்மை...

இச்சூத்திரத்துள்
"முதலாகெழுத்து" என்றதற்கு "மொழிக்கு

முதலாமென்னப்பட்ட ஒன்பது மெய்யும்" என இளம்பூரணரும், "மொழிக்கு முதலாமென மேற்கூறும் ஒன்பதெழுத்துக்களும்" என நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர். நச்சினார்க்கினியர் "எழுத்து" என்றதற்கு "உயிர்மெய்", எனப் பொருள்கொண்டனர் என்பது "உம்மையான் மொழிக்கு முதலாகாத பிற எழுத்துக்களும்" என்ற தொடராலும் அதற்கு அவர் கூறும் உதாரணங்களாலும் விளங்கும். ஆகலினன்றே, "முதலாகெழுத்தும்" என அவர் பிரித்து, உம்மைக்குப் பொருள் கூறினர்.

36

'உயிர்மெய் யல்லன மொழிமுத லாகா'

(எழுத். 60.) என்ற சூத்திரத்தை மனத்துட்கொண்டு நச்சினார்க்கினியர் அவ்வாறு கூறினும்,

கஙந பமவெனு மாவைந் தெழுத்தும் (எழுத். 61.)

வ என் னெழுத்தொடு வருத லில்லை

(எழுத். 63)

என்ற சூத்திரங்களிலுள்ள "எழுத்து" என்ற சொல் மெய்யினையே குறிக்கின்றமையின், இளம்பூரணர் கொள்கையே சிறக்கும்.

யகரத்தின் பின்னர் யகரம் வரும் என்றது 'தம்முற்றும் வரூஉம் ...' (எழுத். 30) என்ற சூத்திரத்தாற் பெறப்படுதலின், "உடனிலை யாதலான் யகரம் ஒழித்து ஓட்டுக" என இச்சூத்திர வுரையின்கண் இளம்பூரணர் உணர்த்தினர்.

பா-ம். நச். ம. பதி. 'போர் செய்'

நச். தா. பதி. 'வார் சிலை'

ம. பதிப்பில் போர்யானை என்றதற்கு என்றதில்லை.

முன்னர் 'செய்யாறு'

மெய்ம்மயக்கங்கூறி உடனிலைமயக்கங் கூறத் தொடங்கினர்.

**30.** மெய்ந்நிலைச் சுட்டி னெல்லா வெழுத்துந்
தம்முற் றும்வரூஉம் ரழவலங் கடையே.

பொ-ள்.—மெய்ம்மயங்குநிலையாராய்ச்சியின்கண் எல்லா எழுத்துக்களும் தம்முன் தாம் வரும் ர், ழ் இவையல்லாவிடத்தின்கண். உ-ம். காக்கை, பச்சை......

ஈண்டு மெய்ந்நிலை என்றதற்கு பொருள்நிலைமை என இளம்பூரணர் நச்சினார்க்கினியர் இருவரும் பொருள் கொண்டனர். 'மெய்ந்நிலை மயக்க மான மில்லை' (எழுத். 47) என்ற சூத்திரத்தின்கண் அச்சொற்கே 'மெய்ம்மயக்கநிலை' என இளம்பூரணர் பொருள்கொண்டதை நோக்கின், ஈண்டும் அப்பொருளைக் கொள்ளுதலே சிறக்குமெனத் தோன்றுகின்றது. "மெய்ந்நிலைச் சுட்டின் என்றதனால் தம்முற்றும் வரும் என்றது மெய்ம்முன்னர் மெய்யென்னும்

37

மாத்திரையன்றி உடனிலை மெய்மேலதாம் என்பது

கொள்க" எனக்

கூறினார் இளம்பூரணர். அதிகாரத்தான் ஈண்டு எழுத்து என்றதற்கு மெய்யெழுத்தே பொருளாகலானும், தாம் என்ற சொல்லான் ஒவ்வொரு மெய்யெழுத்துந் தனித்தனியே கொள்ளப்படுதலானும், அவ்வாறு அவர் கொள்ளவேண்டுவதின்று.

"மெய்ந்நிலைச்சுட்டின் என்றதனால் தனிமெய் முன்னர் உயிர்மெய் வருமென்று கொள்க" என்றனர் நச்சினார்க்கினியர். அவ்வாறு

கூறியதற்குக் காரணம் ஒருமெய் இருமுறை

தன்னூற்றொடராது

எனக் குறித்தற்கு என்னலாம். அவ்வாறுள்ள சொல் எம்மொழியிலுங் காண்டற்கு எளிதன்மையானும், இலக்கியத்திற்கே இலக்கணம் வரைய வேண்டுமாதலானும், அவர் அவ்வாறு கூறவேண்டிய நியதியின்று எனத் தோன்றுகின்றது.

பா-ம். இளம். "மெய்ந்நிலை"

நச். "மெய்ந்நிலை"

மெய்களுள் மயங்கும் நிலையைக் கூறிய பின்னர், உயிருள் சில, சில விடங்களில் சுட்டு, வினா என்ற குறியைப் பெறுதலின், அவற்றைக் கூறத் தொடங்கினர் ஆசிரியர்.

**31.** அ இ உ அம் மூன்றுஞ் சுட்டு.

பொ-ள்.—அ, இ, உ என்ற மூன்றும் சுட்டு ஆகும்.

உ-ம். அவன், இவன், உவன்.

சுட்டு என்றது ஒரு குறி. பொருளைச் சுட்டிக்காட்டுந்தன்மை

யுடையது சுட்டாகும். ஆகலின் சுட்டெழுத்து அவன் இவன் போன்ற ஒரு தனிமொழியிலோ, அக்கொற்றன், இக்கொற்றன் போன்ற தொகைமொழியிலோ தான் காணப்படும். ஆகலின் இச்சூத்திரத்தையும் பின்வருஞ் சூத்திரத்தையும் நூன்மரபினிறுதியில் மொழிமரபின்முன்னர் வைத்தார் ஆசிரியர் என்பர் நச்சினார்க்கினியர்.

நச்சினார்க்கினியத்தில் "தன்னினமுடித்தலென்பதனான் ஏகரம் வினாப்பொருள் உணர்த்தலுங் கொள்க" என்ற தொடர் உளது. இஃது இச்சூத்திரவுரையிலில்லாது மேலைச்சூத்திரவுரையில் இருப்



இருப்பின் நலம். ஆங்கே "இவை பெயரைச் சார்ந்து தத்தங் குறிப்பிற் பொருள் செய்த இடைச்சொல்" என மற்றொரு தொடர் உளது 'இவை' என்ற சொல்லால் அ, இ, உ இவை தழுவப்பட்டன.

'அக்கொற்றன்', 'அவன் கொற்றன்' என்ற இரண்டு தனிச்சொற் களாலாக்கப்பட்ட தொகைமொழியே யாகும். ஆகலின் ஆங்குள்ள அகரம் இடைச்சொல்லன்று, சுட்டுப்பெயரின்

பகுதியே யாகும். வந்தனன் என்றவிடத்து அன்விகுதியிலுள்ள அகரம் சுட்டே

யாகும்; ஆங்கு அஃது இடைச்சொல்லின் ஒரு பகுதியாகும். வருகி என்ற இடத்துள்ள முன்னிலை யிகரம் இடைச்சொல்லே யாகும் ஆகலின் சுட்டு எங்கும் இடைச்சொல் என்பது பொருந்தாது.

எல்லாரு மென்னும் படர்க்கை யிறுதியும்
எல்லீரு மென்னும் முன்னிலை யிறுதியும் (எழுத். 191.)

என்ற சூத்திரத்தால் 'எல்லாரும்'

'எல்லீரும்' என்பன முறையே படர்க்கைப்பெயரும் முன்னிலைப்பெயரு மாகலின், அவற்றுள்

படர்க்கையின் தன்மையும் முன்னிலையின் தன்மையும் ஆகார ஈகாரங் களாற் குறிக்கப்படுகின்றமையானும், அவை மொழிகளின்

இடையில் இருக்கின்றமையானும், சொல்லதிகாரத்துள் 'அர், ஆர்' என்பனவற்றை பல்லோர்படர்க்கை யென்றும் 'இர், ஈர் என்பனவற்றைப் பல்லோர்முன்னிலை யென்றும், ரஃகானெற் றைப் பல்லோரறியுஞ்சொல் லென்றும் ஆசிரியர் குறிப்பிடு கின்றமையானும், அன் ஆன் அள் ஆள் என்பனவற்றை ஒருவர் மருங்கிற்படர்க்கைச்சொல்லென்றும், னஃகானெற்றை ஆடூஉவறி சொல்லென்றும், ளஃகானெற்றை மகடூஉவறிசொல் லென்றும் குறிப் பிடுகின்றமையானும், சுட்டு நீண்டுவரலாமென 'நீட வருதல் செய் யுளு ளுரித்தே' எனச் சூத்திரஞ்செய்திருத்தலானும், ஆங்குஞ் சுட்டாகிய அ இ முதலியன மொழிகளின் இடையில நின்று அன் ஆன் முதலிய இடைச்சொற்களின் ஒரு பகுதியா யிருக் கின்றமையானும் சுட்டு மொழி முதலில் தனியாய் வருமென நன்னூலார் முதலியோர் கொண்டது பொருத்தமின்றென உணர்க.

**32.** ஆ ஏ ஓ அம மூன்றும வி்னா.

பொ-ள்.—ஆ, ஏ, ஓ, அம்மூன்றும் வினாவாகும்.

உ—ம். அவனா வந்தான்? அவனே வந்தான்? அவனோ வந்தான்?

இச்சூத்திரவுரையில் இளம்பூரணர் "எகாரமும் யகர ஆகாரமும் வினாப் பெறுமெனக் கொள்க" என்றனர். யாகாரம் உயிர்

மெய்யெழுத்தே யன்றி, தனியுயிரில்லாமையானும், அது வினாப் பொருளைக் குறிக்குமென்று 'யாவென் வினாவி னையினி றுதியும் (எழுத். 178) என்ற சூத்திரத்தில் ஆசிரியர் தாமே கூறினமை யானும், யாவன் யாவள் என்பனவே இக்காலத்தில் எவன் எவள் என வழங்குதலானும், ஆசிரியர் அவற்றைக் கூறிற்றிலர். 31, 32 ஆவது சூத்திரங்களை 5, 6 ஆவது சூத்திரங்களாகக் கூறாமைக்குக் காரணம் 'இவை சொல்நிலைமையிற் பெறுங் குறியாகலின்' என்றனர்.

நச்சினார்க்கினியர்பதிப்புக்களில் "ஆகாரம் இக்காலத்து வினா வாய் வருதலரிது" (தா. பதி), "ஆகாரமும் ஏகாரமுமிக்காலத்து வினாவாய் வருதலரிது" (ம. பதி.) என்றுள்ளன. அவன் வந்தானா? அவனே வந்தான்? போன்ற வழக்கு அக்காலத்து இல்லையா என்றது ஆராய்தற்பாலது.

இவ்வினாவெழுத்துக்கள் பெயர் வினை இவற்றின் ஈற்றிலே வரு மென்று கொள்க.

இளம்பூரணத்திலுள்ள " இவ்வதிகாரத்துப் பெயர் வினை யல்லனவற்றிற்குக் கருவி செய்யாமையின் " என்ற தொடர்க்குப் பொருள், " இவ்வெழுத்ததிகாரத்தின்கண் பெயர் வினை இவற்றிற்கு உறுப்பாயுள்ள எழுத்துக்களின் பெயரும், குறியும், வகையும், மாறுதல்களும் கூறப்பட்டு அப்பெயர்வினைகளுக்குக் கருவிகளே நிகழ்த்தப்படுகின்றமையின் " என்பதாகும்.



## 40

இவ்வியலை முடித்தற்கு முன் மேற்கூறிய உயிர்களும் மெய்களும் தம் இயல்பு மாத்திரையின் மிக்கு ஒலிக்குமோ என்றும்,
அவ்வாறு மிக்கு ஒலிப்பின் அவற்றின் அளவு எங்குக் கூறப்படுமென்றும் ஐயம் நிகழ,

**33.** அளபிறந் துயிர்த்தலு மொற்றிசை நீடலும்
உளவென மொழிப விசையொடு சிவணிய
நரம்பின் மறைய வென்மனார் புலவர்.

பொ - ள். உயிர் தமளவை மிக்கு ஒலித்தலும், மெய் இசை நீண்டு ஒலித்தலும், இசையொடு பொருந்திய யாழிசையைப்பற்றிக் கூறும் நூல்களின்கண்ணதாக உள என்று சொல்லுவர் எனக் கூறுவர் புலவர்.

இளம்பூரணர் "மறைய" என்றவிடத்து அகரத்தைச் சாரியையாகவும் "மறை" என்றதை ஏழாம்வேற்றுமைப்பெயராகவும் கொண்டனர்.

'குஐ ஆனென வரூஉ மிறுதி
அவ்வொடு சிவணுஞ் செய்யு ளுள்ளே'
(சொல். 108)

என்றவிடத்து கு, ஐ, ஆன் இவற்றின் பின்னரே அகரச்சாரியை வருமென ஆசிரியர் கூறியிருக்க, ஏழாம்வேற்றுமைக்குப் பின் அகரச் சாரியையைக் கூறினர் என்பது பொருந்தவில்லை. "மறைய" என்

றதைக் குறிப்புவினையாலணையும்பெயராகக் கொளல் நலம்.

புலவர் என்ற சொல்லானும் 'மொழிப' என்ற சொற்கு எழுவாயானும் முதனூலாசிரியராகிய அகத்தியனாரே குறிக்கப்படுவர்

என்பர் இளம்பூரணர். சில விடங்களில் ஆசிரியர் (எழுத். 390) என்றும், சிலவிடங்களில் புலவர் என்றுந் தொல்காப்பியனார் கூறுவது நோக்கற் பாலது. 'புலவர்' என்ற சொல்லான் தனக்கு முன்னுள்ள இலக்கணவாசிரியர் பலரைக் குறிக்கின்றனரோ வென்ற ஐயம் உண்டாகின்றது.

41

இதனை ஈண்டுக் கூறியது எற்றுக்கு எனின், அளபிறந்துயிர்த்தலும், ஒற்றிசைநீடலும் யாழிற் பாடப்பட்ட செய்யுட்கண் என்றும், நீட்டத்தின் அளவு இசைநூலா லறியத்தகும் என்றும் உணர்த்தற்பொருட் டென்க. நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்தை 'அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசைநீடலும் நரம்பின் மறையவென்

மஞர் புலவர்', 'இசையொடு சிவணிய உளவென மொழிப" என இருதொடராக்கி 'இசையொடு சிவணிய' என்றதற்கு 'ஓசையோடு பொருந்திய நால்வகைச் செய்யுட்களுக்கும்' எனப் பொருள் கூறினர். அவ்வாறு கூறுதற்குக் காரணம், "மாத்திரையளவும்" என்னுஞ் சூத்திரத்தில் 'மேற்கிளந்தன்ன' என்னும் மாட்டேற்றிற்கு இவ் வோத்தினுள் வேறோர் சூத்திரமின்மையின்" எனக் கூறினர்.

நீட்டம் வேண்டி னவ்வள புடைய
கூட்டி யெழூஉத லென்மனூர் புலவர்.

(தொல். எழுத். 6)

குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே

(தொல். எழுத். 41)

ஐ ஔ வென்னு மாயீ ரெழுத்திற்
கிகர வுகர மிசைநிறை வாகும்.

(தொல். எழுத். 42)

முதலிய சூத்திரங்களான் இசைநிறைக்காக எழுத்துக்களின் அளவு மிகும் என்றது பெறப்படுதலின், அவர் அவ்வாறு கூறவேண்டுவ தின்று. அன்றியும் அவர் கூறிய முறைப்படி வாக்கியபேதம் என்ற குற்றத்திற்கு இச்சூத்திரம் இடனாகும். சிவணிய என்றதை நான்காம் வேற்றுமையுருபு தொக்க தொழிற்பெயராகக் கொண்ட னர் நச்சினார்க்கினியர்.

பா - ம். இளம். க. பதி. " ஒற்றிசை நீடலு மென்றது அள பிறந்துயிர்த்த லென்றது அதிகாரத்தா னின்ற வுயிர்மேற் சேறலி னென்பது."

இளம். சி. பதி. " ஒற்றிசை நீடலு மென்றனர். அளபிறந் துயிர்த்த லென்றது அதிகாரத்தா னின்ற உயிர்மேற் சேறலின்."

நச். ம. பதி. அல்லாக்காற் செய்யுளியலுட்

கூறிய மாத்திரை யளவு மென்னுஞ் சூத்திரத்தின் மேற்கிளந்தன்னவென்னு மாட்டேற்றிற் கிவ்வோத்தினுள் வேறோர் சூத்திரங் கூறல் வேண்டுமெனா - வுணர்க.

நச். தா. பதி. என்னை ? செய்யுளியலுட்

கூறிய மாத்திரை யளவு மென்னுஞ் சூத்திரத்தின் " மேற்கிளந்தன்ன " என்னும் மாட்டேற்றிற்கு இவ்வோத்தினுள் வேறோர் சூத்திரமின்மையின். முன்னருள்ள பாடஞ் சிறக்கும்.

நூன்மரபு முற்றும்.

---

## 2. மொழிமரபு.

---

எழுத்துக்களின் குறியையும், வகையையும், மயக்கத்தையும் உணர்த்தும் நூன்மரபின் பின்னர் அவற்றின் பிறப்பிடத்தைப் பற்றிக் கூறும் பிறப்பியலை வையாது மொழிமரபினை வைத்ததற்குக் காரணம் ஒன்றுண்டு. அஃதாவது—நூன்மரபின்கண் அகரமுதல னகரவிறுவாயுள்ள எழுத்துக்களையும் அவற்றின் குறிமுதலியவற்றையுங் கூறியதுடன் ஆசிரியர் குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்பன சார்ந்துவரும் என்றுங் கூறினர். அவற்றின் இலக்கணத்தையும் வருமிடத்தையுங் கூறாது அவற்றின் பிறப்பிடத்தைப்பற்றிக் கூறுதல் பொருந்தாததாகும். அவை மொழிகளின்கண் வருமேயன்றித் தனித்து வாரா. ஆகலின் மொழிகளின் வகையை உணர்த்த வேண்டியது இன்றியமையாததாயிற்று. அம்மொழிகள் எழுத்துக் களானாக்கப்பட்டமையின், மொழிமரபிலே மொழிகளின் தொடக்கத்திலும் இறுதியிலும் வரும் எழுத்துக்களைப்பற்றியுங் கூறினர். மரபுபற்றி சொற்கள் வழங்கப்படுகின்றமையின் அவற்றைப்பற்றிக் கூறும் இயலுக்கு 'மொழிமரபு' எனப் பெயரிட்டனர் ஆசிரியர்.

அவைதாம்

குற்றியலிகரம் ...

(எழுத. 2) என்ற சூத்திரத்துள் கூறப்பட்ட குற்றியலிகரம் எங்கு எவ்வெழுத் தைச் சார்ந்து வருமென்ற எண்ணந் தோன்ற இச்சூத்திரத்தைக் கூறினர் ஆசிரியர்.

**34.** குற்றிய லிகர நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை யுரையசைக்
கிளவிக்
காவயின் வரூஉ மகர மூர்ந்தே.

பொ - ள்.—(மியா என்ற) உரையசைக்கிளவியினிடத்து வருகின்ற மகரத்தை ஊர்ந்தும் யாவென்ற உறுப்பின் முன்னரும் குற்றியலிகரம் இருத்தல்வேண்டும். உ - ம். கேண்மியா.

சினைமிசை, ஆவயின் இரண்டும் ஏழாம்வேற்றுமையுருபு தொக்க பெயர்.

நிற்றல் என்றதனை இரண்டாம்வேற்றுமையாகவும் ஆசிரியன் என்ற சொல்லை வருவித்து அதனை வேண்டும் என்றதற்கு எழுவாயாகவுங் கொண்டனர் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும். முற்சூத்திரத்துள்ள 'புலவர்' என்றதனை வருவித்து அதனை எழுவாயாகவுங்கொள்ளல் தகும். 'வரூஉம்' என்ற பெயரெச்சத்தை 'யாவென் சினைமிசை' என்பதைத் தழுவுவதாக இளம்பூரணரும், 'ஆவயின்' என்பதைத் தழுவுவதாக நச்சினார்க்கினியருங் கூறினர். சூத்திரத்துச் சொற்களின் முறையை நோக்கின் 'வரூஉம்' என்றது 'மகரம்' என்பதைத் தழுவுவதாகக் கொள்ளல் பொருந்துமெனத் தோன்றுகின்றது.

'கேள்' என்றது உரையசைக்கிளவி என நச்சினார்க்கினியர் கூறினர். 'ஆங்க வென்னு முரையசைக் கிளவி' (எழுத். 205), 'அம்ம வென்னு முரைப்பொருட் கிளவி' (எழுத். 211), 'அந்தி லாங்க வசைநிலைக் கிளவி' (சொல். 267), 'மியா யிக மோமதி யிகுஞ்சின்... அசைச்சொல்' (சொல். 274) என்ற சூத்திரங்களுள்ள 'உரையசைக் கிளவி' 'உரைப்பொருட்கிளவி', 'அசைநிலைக்கிளவி', 'அசைச்சொல்' என்ற சொற்களை நோக்கின் 'மியா' என்றது உரையசைக்கிளவியே யன்றி 'கேள்' என்றது உரையசைக்கிளவி யாகாது. உரையாசிரிய ரும் மியா

என்பதையே உரையசைக்கிளவி என்றனர்.

நச். ம. பதி. ஈண்டுப் போந்து கூறினர்.

நச். தா. பதி.

முன்பாடஞ் சிறக்கும்.

ஈண்டுப் போத்தந்து கூறினர்.

தனிமொழியுள் குற்றியலிகரம் வருமிடத்தைக் கூறி, புணர்ச்சியில் எங்கு வருமென்பதை உணர்த்த இச்சூத்திரத்தைக் கூறினர்.

**35.** புணரிய னிலையிடைக் குறுகலு முரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்.

பொ-ள். அக்குற்றியலிகரம் புணர்ச்சி நிகழுமிடத்துக் குறுகலும் உரித்து. அஃதாவது கால் மாத்திரை பெறும். அதனை அறியுமாறு கூறப் புகின், முன்னர் (குற்றியலுகரப்புணரியலின்கண்) தோன்றும். உம்மையான் குறுகா திருத்தலு முரித்து.

45

உ-ம். நாகு + யாது = நாகியாது.

குற்றியலிகரம் என்பது அதிகரித்தது

ஆங்கு

யகரம் வருவழி யிகரங் குறுகும்.

(தொல். எழுத். 411)
எனக் கூறப்பட்டது காண்க.

உம்மை எச்சவும்மையாகலான் "புணரிய னிலையிடையும்" என மொழிமாற்றி யுரைத்தல் வேண்டு மென்பர் உரைகாரர்கள். முன் சூத்திரத்தில் அரை மாத்திரையுள்ள குற்றியலிகரத்தைப் பற்றியும், ஈண்டு அதன் குறுக்கத்தைப்பற்றியும் கூறப்படுகின்றது எனக் கொண்ட நச்சினார்க்கினியரது கொள்கையில் அது பொருந் தாது. "குறுகல்" என்பதற்கு எழுவாயாக "அவ்விகரம்" என இளம் பூரணரும், "அக்குற்றியலிகரம்" என நச்சினார்க்கினியருங் கொண் டனர். "குற்றியலிகரம்" என்பதே முன் சூத்திரத்திலிருந்து

அதிகரித்து வருதற்கு உரித்தே யன்றி, இகரம் அவ்வாறு வருதற்கு உரித்தன்மையான், நச்சினார்க்கினியர்கொள்கையே சிறக்கும்.

குற்றியலிகரத்தின் சார்பினைக் கூறிய பின்னர், குற்றிய லுகரத்தின் சார்பினைக் கூறத் தொடங்கினர்.

**36.** நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே.

பொ-ள் குற்றியலுகரம் வல்லெழுத்து ஆறினையு மூர்ந்து,

நெட்டெழுத்தின் பின்னரும் தொடர்மொழியின் ஈற்றின்கண்ணும் நிற்றலை வேண்டும்.

உ-ம். நாகு, வரகு....

நிற்றல்வேண்டும் என்றது 34வது சூத்திரத்தினின்றும், புலவர் என்பது 33வது சூத்திரத்தினின்றும் அதிகாரித்தன.

மொழிகள் ஓரெழுத்தொருமொழி, ஈரெழுத்தொருமொழி தொடர்மொழி என மூவகைப்பட்டன வெனவும், நெட்டெழுத்தேழே ஓரெழுத்தொருமொழியாக வருதல் கூடுமெனவும் 45, 43-ஆவது சூத்திரங்களிற் கூறப்பட்டமையான் “நெட்டெழுத்திம்பர்” என்ற

தற்குக் கருத்துவகையான் நெட்டெழுத்தைக்கொண்ட ஈரெழுத்தொருமொழியின் இறுதியின்கண் எனப் பொருள்கொள்ளல் வேண்டும். இவ்வாறே

" நெட்டெழுத் திம்ப ரொற்றுமிகத் தோன்றும் (எழுத். 106) என்றவிடத்துங் கொள்ளல் வேண்டும்.

குற்றியலுகரம் குற்றெழுத்தைக் கொண்ட ஈரெழுத்தொரு மொழியில் தோன்றுதெனவும், நெட்டெழுத்தைக்கொண்ட ஈரெழுத்தொருமொழியில் தோன்றுமெனவும், தொடர்மொழியில் எங்கும் வல்லெழுத்தைச் சார்ந்து ஈற்றில் தோன்றும் எனவும் கூறுவதற்காகவே மொழியை மூவகையாக வகுத்தனரே யன்றி வடமொழியைப் பின்பற்றி அவ்வாறு வகுத்தனரல்லர், வடமொழியில் மொழி அவ்வாறு வகுக்கப்படாமையின்.* நன்னூலார் மொழியை இருவகையாகப் பிரிப்பினும் 'நெடிலோடு' (நன், 94, 183) என்று

அவர் கூறுமிடத்து நெடிலைக்கொண்ட ஈரெழுத்தொருமொழியையே நாம் கொள்ளல் வேண்டியுளது.

இச்சூத்திரவுரையில் 'பரசு, இங்கு, ஏது' என்பன முற்றுகர வீறாகிய வடமொழிச்சிதைவு' என நச்சினார்க்கினியர் கூறுகின்றனர். அவ்வாறு கூறுதற்குக் காரணம் புலப்படவில்லை. சொற்களை இயற் சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என நான்கு வகையாகப் பிரித்து

'வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே
(சொல். 401)
சிதைந்தன வரினு மியைந்தன வரையார்
(சொல். 402)

எனக் கூறுகின்ற ஆசிரியரது கொள்கையில் 'பரசு' முதலிய சொற்கள் செய்யுளீட்டச்சொற்களுள் ஒன்றாகிய வடசொல்லாகலின், அவையும் தமிழிலக்கணத்தடங்கியவாகலின், அவற்றின் ஈற்றிலுள்ள உகரம் முற்றுகரம் என்பது எவ்வாறு பொருந்தும்?

பா - ம்.—நச்- ம. பதி. பெருமுரசு, திருமுரசு என்பன இரு மொழிக்கண்வந்த குற்றுகரம். பரசு, இங்கு, ஏது என்பன முற்றுகர வீருகிய வடமொழிச்சிதைவு.

* ஆகலின் நன்னூலுரையிற் சங்கரநமச்சிவாயர் கூறுவது பொருந்தாது. 47

நச். தா. பதி. பெருமுரசு, திருமுரசு என்பன இருமொழிக் கண்வந்த முற்றுகரம். வடமொழிச்சிதைவு. பரசு, இங்கு, ஏது * என்னும் முற்றுகரங்கள் முன்னருள்ள பாடமே சிறக்கும்.

" நெட்டெழுத்தினது பின்...தொடர்மொழியினது ஈறென நிலத்ததகலப்போல ஒன்றியற்கிழமைப்பட்டு நின்றது " என்ற தொடர் நச்சினார்க்கினியத்திலுள்ளது. 'நெட்டெழுத்தினது பின்' என்றதற்கு 'நெட்டெழுத்தைக் கொண்ட

ஈரெழுத்தொருமொழி யின் பின்' எனப் பொருள் கொள்ளல் வேண்டும். அல்லாக்கால் அது ஒன்றியற்கிழமைப்பட்டு நிற்றல் கூடாது.

தனிமொழியுள் குற்றியலுகரம் வருமென்றதைக் கூறி, புணர்ச்சியிலும் வருமென்றதைக் கூறு மிச்சூத்திரம்.

**37.** இடைப்படிற் குறுகு மிடனுமா ருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான.

போ - ள்:—அக்குற்றியலுகரம் (மொழிகளின்) இடையில் வரின், குறுகும் இடனும் உண்டென (குற்றியலுகரப்புணர்ச்சி) விதிகளை அறிவிக்கும் குற்றியலுகரப்புணரியலின்கண் (உணர்த்தப்பட்டது.)

உ. ம். செக்குக்கணை.

குற்றியலுகரம் என்பது முற்சூத்திரத்திலிருந்து அதிகரித்தது.

"குறுகும்" என்பதற்கு எழுவாயாக அவ்வுகரம் என இளம்பூரணரும் நச்சினார்க்கினியருங் கூறினும், அதன் பொருளில் இருவரும் மாறுபட்டனர். நச்சினார்க்கினியர்கருத்தில் அதற்கு அக்குற்றிய லுகரம் எனப் பொருளாகும். இளம்பூரணர்கருத்தில் அவ்வாறில்லை. நச்சினார்க்கினியர்கொள்கையே சிறக்கும்.

'இடனும்' என்றவிடத்துள்ள உம்மையை 'இடைப்படினும்' என மொழிமாற்றி யுரைப்பர் இளம்பூரணர். 35ஆவது சூத்திரத் துள்ளும் உம்மையை மொழிமாற்றி யுரைத்தனர். நச்சினார்க்கினியர் 35ஆவது சூத்திரத்தின்கண் இளம்பூரணரொடு ஒற்றுமைப்பட்டு, ஈண்டு வேற்றுமைப்பட்டனர். இளம்பூரணரது கொள்கைப்படி உம்மை எச்சவும்மையாய்த் தனிமொழி, புணர்மொழி இரண்டையுந் தழுவும். நச்சினார்க்கினியர்கொள்கைப்படி உம்மை எதிர்மறையும்மை

* வார மா., உ ஊ, ஜெத.

யாகும். இடனுமுண்டு என்றதனால் இடனுமில்லை என்றது பெறப் படும். 'ஆர், ஏ' என்பன அசைநிலைக்கிளவிகள் (சொல். 271, 272): புணரியலான என்றவிடத்து அகரச்சாரியை வந்ததற்குச் சான்று

தகஐ ஆனென வநஉ மிறுதி

அவ்வொடு சிவணுஞ் செய்யு ளுள்ளே.

(சொல், 108)

ஆசிரியர் தொல்காப்பியனார் சூத்திரத்தினிறுதியில் வரும் ஆனுருபேற்ற சொற்கள் பெரும்பாலும் ஏழாம்வேற்றுமைப்பொருளில் வருகின்றன.

குற்றியலிகரம் குற்றியலுகரம் இவற்றைக் கூறி எஞ்சிய ஆய்தம் தனிமொழியின்கண் யாண்டு வருமென உணர்த்தினர் இச் சூத்திரத்தின்கண்.

**38.** குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன்
மிசைத்தே.

பொ - ள் :—ஆய்தமென்ற புள்ளியெழுத்து குற்றெழுத்தின் பின்னரும் உயிரொடு புணர்ந்த வல்லெழுத்துக்கள் ஆறின் முன்னரும் வரும்.

உ-ம். எஃகு, கஃசு, அஃது.

'கஃறீது என்பதனை மெய்பிறிதாகிய புணர்ச்சியென்னு மாகலிற் புள்ளியென்றதனுய்தத்தை மெய்ப்பாற் படுத்துக்கொள்க' என்றனர் இளம்பூரணர். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறினர். ஆய்தத்தை ஒலிக்கும்போது வாய் சிறிது திறந்தும் சிறிது மூடியு மிருத்தலின், அதனை இடையெழுத்துப்போன்ற மெய்யெனக் கூறல்தகும்.

இச்சூத்திரத்துள் 'உயிர்' என்றது பெரும்பான்மையுங் குற்றியலுகரத்தினைக் குறிக்குமென்றதற்கு இளம்பூரணர் 'மேல் ஆய்தத் தொடர்மொழி யென்றோதலின்', என்றும், நச்சினார்க்கினியர் 'வல்லாறன்மிசைத் தென்றதனும் ஈண்டுப் புள்ளியென்றதனும், ஆய்தத் தொடர்மொழியென மேற்கூறுதலானும்' என்றுங் கூறுவர்.

அவ்வாய்தம் இருமொழி புணருமிடத்துந் தோன்றுமெனக் கூறுமிச்சூத்திரம்.



**39. ஈறியன் மருங்கினு மிசைமை தோன்றும்.**

**பொ - ள் :**—(நிலைமொழி) யீறு (வருமொழி முதலோடு) பொருந்தி நடக்குமிடத்தும் ஆய்தப்புள்ளியின் ஒலி தோன்றும்.

உ-ம். கஃறீது, முஃடீது.

ஆய்தப்புள்ளி என்பது முற்சூத்திரத்திலிருந்து அதிகாரித்தது. ஈண்டு இசைமை என்றதற்கு ஒலி என இளம்பூரணரும் அரை மாத்திரையே அசைக்குந்தன்மை என நச்சினார்க்கினியருங் கூறினர். இசைமை என்றது ஒலிப்பொருளில் பரிபாடலில் வழங்கப்பட்ட மையான், இளம்பூரணர்கொள்கையே பொருந்தும்.

தனிமொழிக்கண்ணும் ஆய்தம் தான் அரைமாத்திரையாய் ஒலிக்காதவிடத்து ஏனையெழுத்துக்களைப்போன்று அளபெடுத்து நிற்குமெனக் கூறும் இச்சூத்திரம்.

**40.** உருவினு மிசையினு மருகித் தோன்றும்
மொழிக்குறிப் பெல்லா மெழுத்தி னியலா
ஆய்த மஃகாக் காலை யான.

போ - ள் :—ஆய்தம் (தான் அரைமாத்திரையாய்) சுருங்கி நில்லாதவிடத்து (ஏனைப்புள்ளி) எழுத்துக்களின் தன்மையுற்று

உருவம், இசை, மொழியாற் குறிக்கப்படும் பொருள் எல்லாவற்றின் கண்ணுஞ் சிறுபான்மையாய்த் தோன்றும்.

உ-ம். உருவு—கஃஃஃறு; இசை – சுஃஃஃறு; குறிப்பு—வெஃஃஃகு.

இளம்பூரணர் இச்சூத்திரத்தை இருதொடராக்கினர். அவை வருமாறு :—ஆய்தம் அஃகாக்காலையான உருவினும் இசையினும் அருகித் தோன்றும். குறிப்புமொழியெல்லாம் எழுத்தின் இயலா. அவர்கொள்கைப்படி 'தோன்றும்' என்பதும் 'இயலா' என்பதும் வினைமுற்று. 'எழுத்தின்' என்றது 'எழுத்தான்' என்ற பொருளில் வந்தது. 'ஆய்தம் சுருங்கில்லாத விடத்து உருவின் கண்ணும் இசையின்கண்ணுஞ் சிறுபான்மையாய்த் தோன்றும்; குறிப்பு மொழிகளெல்லாம் ஆய்தவெழுத்தானிட்டு எழுதப்பட்டு நடவா' எனச் சூத்திரத்திற்குப் பொருளுங் கூறினர்.

எஃஃகு, வெஃஃகுவார்க்கு எனச் செய்யுளில் வருகின்றமையான் அவர் தங்கூற்றுப் பொருந்தாதெனக் கூறி, "நிறத்தின்கண்ணு மோசையின்கண்ணுஞ் சிறுபான்மையாய்த் தோன்றும் பொருள் குறித்தலையுடைய சொல்லும் அவை யொழிந்த எல்லா மொழிகளும் ஒற்றெழுத்துக்கள்போல அரைமாத்திரையின் மிக்கு நடந்து ஆய்தஞ் சுருங்காத விடத்தான சொற்களாம்" எனப் பொருள் கூறினர். அவரது கொள்கையில் தோன்றும் என்றது பெயரெச்சமாய் மொழிக்குறிப்பு என்றதனைத் தழுவும்; மொழிக்குறிப்பெல்லாம் என்றது எழுவாயாகவும் ஆய்தமஃகாக்காலயான என்றது குறிப்பு வினைமுற்றாகவும் இருக்கும்; இயலா என்றது செய்யா என்றவாய் பாட்டு

உடன்பாட்டுவினையெச்ச மாகும்; 'எழுத்து'
என்றது ஒற் றெழுத்து எனப் பொருள்படும்.
நச்சினார்க்கினியர் கூறும் பொருள்
பொருத்தமாயிருப்பினும், அவர் கூறும் அந்நுவயம்
நேரிதாக இல்லை. 'அஃகாக்காலையான'
என்றாற்போன்று ஆசிரியர் சூத்திரங்களுள்
காணப்படுகின்ற பல மொழிகள் பெரும்பான்மையும்
ஏழாம்வேற்று மைப்பொருளில் வந்த ஆனுருபேற்ற
சொல்லாய்க் கொள்ளப்படுகின்
றனவேயன்றி குறிப்புவினைமுற்றாகக் கொள்ளப்பட்டில. மொழிக்
குறிப்பெல்லாம் என்றதனை குறிப்புமொழியெல்லாம் எனப் பிரித்
தனர். அன்றியும் 'நிறத்தின்கண்ணும்
ஓசையின்கண்ணுஞ் சிறுபான்மை ஆய்தந்தோன்றும்
பொருள் குறித்தலையுடைய சொல்' என்று அவர்
கூறினமையின் 'குறிப்பினும் பண்பினு மிசையினும்'
(எழுத். 482) 'இசையினுங் குறிப்பினும் பண்பினும்'
(சொல். 297) முதலிய சூத்திரங்களிற் கூறப்பட்ட
'குறிப்பு' என்ற சொல்லின் பொருளை அவர் ஈண்டுக்
கொண்டிலர் எனக் கிடைக்கின்றது.

பா-ம். நச். ம. பதி.

அரைமாத்திரையின் மிக்குநடந்து

நச். தா. பதி. அரை மாத்திரையின்

கண்ணும் சிறுபான்மை மிக்கும் நடந்து. முன்பாடமே சிறக்கும்.

'அவைதாம் - குற்றியலிகரம்...' (எழுத். 2) என்ற சூத்திரத்தின் கூறப்பட்ட குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் இவற்றைப்பற்றிக் கூறிய பின்னர் 'நீட்டம் வேண்டினவ்வள புடைய... (எழுத். 6) என்ற சூத்திரத்தால் நான்கு மாத்திரை யொலிக்கவேண்டிய விடத்து ஆகாரத்துடன் அவ்வளவுபெற்ற ஆகாரத்தையே யொலித்தல் வேண்டுமென்று பெறப்பட, அவ்வாறு ஒலித்தல் தகாது என உணர்த்து மிச்சூத்திரம்.

## 51

**41.** குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்ப ரொத்த குற்றெழுத்தே.

**பொ-ள்.** குறுகிய இசையையுடைய மொழிகளின்கண்ணுள்ள நெட்டெழுத்தின் பின்னர் அவற்றினை ஒத்த குற்றெழுத்தே நின்று இசையை

நிறைக்கும். உ-ம். தொழீஇ.

இளம்பூரணர் சூத்திரத்துள்ள மொழி என்றதற்கு அள பெடைகொண்ட ஓரெழுத்தொருமொழி எனப் பொருள் கூறினர். 'இனி மொழி என்றதற்குத் தனிநிலை ஏழனையுமே கொள்ளின், ஒழிந்த இயற்சீர்ப்பாற் படும் அளபெடைகோடற்கு இடமின்மை உணர்க' என நச்சினார்க்கினியர் இளம்பூரணரை மறுத்தனர். அம்மறுப்பு பொருந்துமெனத் தோன்றுகின்றது. ஆயினும் நச்சினார்க்கினியர் 'மொழி' என்றதற்கு அளபெடைச்சொற்கள் எனப் பொருள் கொண்டனர். அவ்வாறு கொள்ளாது சொற்கள் என்றே கொள்ளல் தகும். ஏனெனின், இளம்பூரணர் இச்சூத்திரத்திற்கு அஆ, ஈஇ முதலிய உதாரணங்களையும், நச்சினார்க்கினியர் அவற்றுடன் கடாஅ, படாஅகை முதலிய உதாரணங்களையுங் கூறினர். இவற்றை நோக்கின் இச்சூத்திரம் 'நெட்டெழுத்தின் ஓசை குறைவாயிருப்பின் அதன்பின்னர் ஒத்த குற்றெழுத்தின் ஓசையைச் சேர்த்தல் வேண்டும்' என உணர்த்த வந்தது எனக் கூறல் வேண்டும். 'நீட்டம் வேண்டின்...' என்ற சூத்திரத்து

'அவ்வள புடைய கூட்டி எழூஉதல்' எனக் கூறியிருத்தலின், ஒரு மாத்திரை கொண்ட எழுத்து கூட்டப்படவேண்டுமெனப் பெறுதலின், இச் சூத்திரத்து 'குற்றெழுத்து' என்றது மிகையாகும். ஆகாரம் முத

லியவற்றின் பின்னர் இனமல்லாத ஓரளபுடைய இகரம் முதலியன கூட்டப்படுமோ என ஐயுற்று இச்சூத்திரம் வந்ததெனின், 'ஒத்த குற்றெழுத்து' என்றதற்குப் பிரதியாக 'ஒத்த வெழுத்து' எனக் கூறல் தகும். ஆகலின் நான்கு மாத்திரை ஒலிக்கவேண்டின், ஆ, ஈ, முதலியவற்றின் பின்னர் அஅ, இஇ, முதலியன வருமேயன்றி ஆகாரம் முதலியன வாரா வென இச்சூத்திரம் உணர்த்திற்றென்க. அன்றியும் ஒத்த என்றதனுல் ஆகாரம் முதலியவற்றின் பின்னர் அகரம் முதலாயினவே வரும்.

52

இனமொத்த என்றதற்கு, பிறப்பானும் புணர்ச்சியானும் ஓசையானும் இனமொத்த என இளம்பூரணரும், பிறப்பும் புணர்ச் சியும் ஓசையும்

வடிவும் ஒத்த என நச்சினார்க்கினியருங் கூறுகின்றனர். புணர்ச்சி என்ற சொல் ஓரிடத்தவராயிருத்தல் என்ற பொருளில் 'புணர்ச்சி பழகுதல் வேண்டா' (குறள். 785) என்னுமிடத்து வழங்கப்பட்டிருத்தலின், புணர்ச்சி என்றது ஈண்டு அப்பொருளில் வழங்கப்பட்டதோ என்பது ஆராய்தற்பாலது. 'வடிவும்' என்றதையும் நச்சினார்க்கினியர் சேர்த்துக் கூறினமையின் அவர் நன்னூலார்க்குப் பிற்பட்டவராவர். 'ஓசை' என்றதனால் வாய்முழுவதுந்திறத்தல், சிறிது திறத்தல், மூடியிருத்தல் என்ற முயற்சியைக் கொள்ளுகின்றன ரென்னலாம்.*

நெட்டெழுத்துள் அடங்கிய

ஐகாரஔகாரங்கட்கு நேரிதில் ஒத்த குற்றெழுத்தின்மையின், அவற்றின் பின்னர் யாவை வருமெனின்,

**42.** ஐ ஔ வென்னு மாயீ ரெழுத்திற்கு
இகர வுகர மிசைநிறை வாகும்.

போ - ள். ஐகாரஔகாரங்கட்கு முறையே

இகரவுகரங்கள் இசையை நிறைப்பன வாகும்.

'இசைநிறைவு' என்றது தொழிலைக்குறிக்கும் பெயராயினும் ஈண்டு வினையாலணையும்பெயராய்க் கொள்ளல் வேண்டும்.

நச்சினார்க்கினியருரையில் 'தமக்கு இனமில்லாத' என்றதற்குத் 'தமக்கு நேரினமில்லாத' எனப் பொருள்கொள்ளவேண்டும்.

'நீட்டம் வேண்டின்...'(எழுத். 6) என்ற சூத்திரத்தின்

ஒழிபினைக் கூறிய பின்னர் 8ஆவது சூத்திரத்திற் கூறப்பட்ட ஒருயிரெழுத்தே எங்கேனும் மொழியாகவும் வருமோ வென்ற ஐயத்தையும், வரின் எவை வரும் எனின் இவை வரும் என்பதையும் பின்வருமிரண்டு சூத்திரங்களும் போக்கும்.

* 'வடமொழியில் இனவெழுத்தென்பன பிறப்பிடமும் உள்முயற்சியும் ஒன்றுபட்ட எழுத்துக்களே ஆகும்.

**43.** நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி.

போ - ள். (பன்னீருயிருள்) நெட்டெழுத்தேழே ஓரெழுத்தாலாக்கப்பட்ட ஒருமொழியாகும். கோ முதலிய சொற்களும் ஓரெழுத் தொருமொழியாகக் கொள்ளப்படுதலின், ஈண்டு 'நெட்டெழுத்து' என்றது நெட்டெழுத்தைக் கொண்ட உயிர்மெய்யினையுங் குறிக்கும். நெட்டெழுத்தேழே என்றவிடத்து ஏகாரம் ஈற்றசையெனவும், முற்றும்மை தொக்கதெனவுங் கூறினர் உரைகாரர்கள். விதேயத் தின்பின்னர் வரும் ஏகாரம் ஈற்றசையாகுமேயன்றி உத்தேசியத்தின் பின்னர் வரும் ஏகாரம் ஈற்றசையாகா ; அன்றியும், உயிர் பன்னிரண் டனுள் நெட்டெழுத்தைப் பிரித்துக் கூறினமையின் ஏகாரம் பிரி நிலையேகார மென்னலாம். ஆயின் அப்போது முற்றும்மை தொக்க தெனக் கொள்ளுதல் வேண்டா.

**44.** குற்றெழுத் தைந்து மொழிநிறை பிலவே.

போ - ள். குற்றெழுத்தைந்தும்

ஓரெழுத்தொருமொழியாக நிறைந்து நில்லா.

ஈண்டு மொழி என்றது முற்சூத்திரத்திற் குறிக்கப்பட்ட ஓரெழுத்தொருமொழியைக் காட்டும். நிறைபு என்றது செய்பு என்ற வாய்ப்பாட்டு வினையெச்சம். மொழிநிறைவு என்றதைத் தொகையாகக் கொள்ளின் அதனை இரண்டாம்வேற்றுமைப்பெயராக வுங் கொள்ளல்தகும். உரைகாரர்கள் உம்மையை எச்சவும்மையாகக் கொண்டு "குற்றெழுத்துள் சில ஓரெழுத்தொருமொழியாய் நிற்கும்" இவற்றை எனப் பொருள்கூறி, அவற்றிற்கு து, நொ உதாரணமாக உணர்த்தினர். து, நொ என்பன உயிர் மெய்யே யன்றிக் குற்றெழுத் தாகாமையின், அது பொருந்தாதென்க. அவ்வாறு கொள்ளின் உம்மையை முற்றும்மையாகவே கொள்ள லாகும்.

அ, இ, உ, எ இவற்றை இடைச்சொல்லென உரைகாரர் ஈண்டுங் கூறுகின்றனர். அவை அவ்வாறில்லை யென்பது முன்னரே கூறப்பட்டது. 43, 44 ஆவது சூத்திரங்களை ஒரே சூத்திரமாக

ஆசிரியர் கொண்டனரோ என்ற
ஐயமுண்டாகின்றது.

# 54

"மொழி" என்றது அதிகரித்து நிற்க, அஃது எத்துணை வகைப்படுமென உணர்த்தக் கூறினர் இச்சூத்திரத்தை.

**45.** ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி
இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே.

**பொ-ள்.** மொழியின்நிலை வழக்குநெறிக்கண் ஓரெழுத்தொருமொழி, ஈரெழுத்தொருமொழி இரண்டற்கு மேற்பட்ட எழுத்துக்களாகிய தொடர்மொழி என மூன்றாகும்.

உ-ம். ஆ, மணி, வரகு.

"வரகு" என்றதை ஈண்டு
ஈரெழுத்தொருமொழியாகக் கொண்டு, அவ்வாறு
கோடற்கு " உயிரிலெழுத்து மெண்ணப்படா",
"குறிலே

நெடிலே குறிலிணை" என்ற செய்யுளியற் சூத்திரங்கள் சான்றாகு மென்ற நச்சினார்க்கினியர், குற்றியலுகரப்புணரியலுள் "வரகு" என்றதை முதற்சூத்திரத்திலுள்ள உயிர்த்தொடர்மொழிக்கும் "யாடு" என்றதை ஆறுஞ்சூத்திரத்துள்ள ஈரெழுத்தொரு மொழிக்கும், "நாகு" என்றதை முதற்சூத்திரத்துள்ள ஈரெழுத் தொருமொழிக்கும் உதாரணங்களாகக் கூறுதல் எவ்வாறு பொருந் தும்? ஆகவின் இளம்பூரணர் கூறிய உதாரணமே சிறக்கும்.

மொழிகளை மூவகையாகப் பிரித்தது

குற்றியலுகரத்திற்காக

என முன்னர்க் கூறப்பட்டது. அதனை அறியாது 'ஓரெழுத்தொரு மொழியுந் தொடர்மொழியு மென்னாது ஈரெழுத்தொருமொழியும் ஓதினார், சிலபல என்னுந் தமிழ் வழக்கு நோக்கி' என்றனர் நச்சி னார்க்கினியர். இத்தொடரானே அவர் நன்னூலார்க்குப் பிற்பட்டவர் எனக் கூறலாகும்

பா-ம். நச். ம. பதி. இவற்றையும் ஈரெழுத்தொருமொழி... நச். தா. பதி. இவற்றை ஈரெழுத்தொருமொழி... முன் பாடமே சிறக்கும்.

தொல். எழுத். 19ஆவது சூத்திரத்துள் "வல்லெழுத் தென்ப கசட தபற" என்றவிடத்து க, ச முதலியன உயிர் மெய்யைக் குறிக்கின்றனவோ என்ற ஐயம் வர, அவை மெய்யையே குறிக்குமெனவும், கேட்போன் எளிதில் அவற்றை ஒலித்தற்கு அகரஞ் சேர்க்கப்பட்டதெனவுங் கூறிற்று இச்சூத்திரம்...

**46.** மெய்யி னியக்க மகரமொடு சிவணும்.

**பொ - ள்.** மெய்யின் ஒலிக்கும்வகை அகரத்தோடு பொருந்தும்.

உ-ம் வல்லெழுத் தென்ப கசட தபற.

" இது மொழியிடையெழுத்துக்களன்மையின் நூன்மரபின் வைக்கவெனில், தன்னை உணர்த்தாது வேறு பொருள் உணர்த்துஞ் சொல்நிலை போல 'டறலள' வென்றது உயிர்மெய்யை யுணர்த்தாது தனிமெய்யை உணர்த்தலானும், ஒற்றினை உயிர்மெய்போலச் சொல் லுகின்ற வழுவமைதியிலக்கணத்தானும் மொழிமரபின் கண்ணதா யிற்று" என இளம்பூரணரும், " இதனை நூன்மரபிற் கூறாது ஈண்டுக் கூறினர் " வல்லெழுத் தென்ப க ச ட த ப ற என்ற இடத்துத் தான் இடை நின்று ஒன்றென்பதோர்

பொருளை உணர்த்தி மொழியாந் தன்மை எய்தி நிற்றலின்" என நச்சினார்க் கினியருங் கூறினர். மொழிமரபில் நூன்மரபிலுள்ள சூத்திரங் களின் ஒழிபைக் கூறினர் ஆசிரியர் எனச் சிவஞானமுனிவர் கூறு தலின், "வல்லெழுத் தென்ப க ச ட த ப ற" (எழுத். 19) முத லிய சூத்திரங்களின் ஒழிபை இச்சூத்திரத்தில் ஆசிரியர் கூறினர் எனக் கொள்ளலாம். இச்சூத்திரத்தினடியில் உள்ள நச்சினார்க் கினியத்தினின்றும் இச்சூத்திரம் மெய்களின் ஒலிவடிவினையும் வரிவடிவினையுங் கூறுகின்றதென்றும் எல்லாவெழுத்தாந்தன்மையை அகரம் அடைகின்றதென்றும் அவர் கொண்டதாக அறியப்படும். மெய்களின் ஒலியைப் பிறர் அறியுமாறு தனியாய் ஒலித்தல் இயை யாமை விருப்பினும் அவற்றின் வடிவத்தை க், ச் என அகரமின்றி எழுதுதற்கு இயையுமாதலானும், ககரமென்று ஒலிப்பின் "க்" என்ற எழுத்தைக் கொள்ளுதல்போல் "க" என்ற வரிவடிவை "க்" என்ற தனிமெய்யாகக் கொள்ளாமையானும், "ஒருவன் தனி மெய்களை நாவாற்

கருத்துப்பொருளாகிய உருவாக இயக்கும் இயக்கமும், கையாற் காட்சிப்பொருளாகிய வரிவடிவாக இயக்கு மியக்கமும் அகரத்தோடு பொருந்தி நடக்கும் ” என்ற அவர் தந்தொடர் பொருந்தாதென்க. பகவத்கீதையில் கண்ணன் கூறிய தொடர்க்கு * “ அகரமாகின்றேன் யான் ” எனச் சொல்வகையான் பொருள் கொள்ளப்படினும், கருத்துவகையான் அதற்குப் பொருள் “ என்னை ஓரெழுத்தாக தியானிக்கவேண்டுமாயின், அகரமாகத் தியானித்தல்

*அக்ஷராணாமகாரோஸ்மி



வேண்டும் ” என்றதே. கடவுள் எல்லோருக்கும் முதலாதலின், அகரமும் எல்லா வெழுத்திற்கும் முதலாயிருத்தல்வேண்டுமென்ற நியதி இல்லை. அவ்வாறு நியதி இருப்பின் வேதத்துள் ஸாமவேதமாயிருக்கின்றேன்.* என அவர் கூறுவது பொருந்தாக் கூற்றாகும். ஏனெனில் ஸாமவேதம் ருக்வேதத்தை அடிப்படையாகக் கொண்டதன்றோ ? இனி, எல்லா வாக்கும் அகாரமாயுள்ளது† என

உப நிஷத்துள் கூறப்பட்டது எவ்வாறு பொருந்துமெனின், ஆங்கு ஆகா ரம் என்றதற்குப் பரைநிலையிலுள்ள நாதமே பொருளென உரைகாரர்கள் கூறியிருக்கின்றனர். அவ்வாறே ஈண்டும் "அகரமொடு" என்றதற்குப் பரைநிலையிலுள்ள நாதம் எனப் பொருள் கொள்ளின் படும் இழுக்கென்னையெனின், அப்பொருள்

அஃதிவ ணுவலா தெழுந்து புறத் திசைக்கும்
மெய்தெரி வளியிசை யளபுநுவன் றிசினே
(எழுத் 103.)

என்ற விடத்து, வெளிப்படையாய் வைகரிநிலையிலுள்ள ஒலிகளைப் பற்றியே இந்நூலுள் வழங்குகின்றேன் என்ற ஆசிரியர் கூற்றுக்கு முரண்படு மென்க.

அவ்வாறாயின் "அகர முதல வெழுத்தெல்லா—மாதிபகவன் முதற்றே யுலகு" என்ற விடத்துக் கடவுள் உலகிற்கு எவ்வாறு முதற்காரணமோ அவ்வாறு எழுத்துக்களுக்கெல்லாம் அகரம் முதற்காரணமெனக் கொள்ளவேண்டாவோ வெனின், உவமைக்கும் பொருளுக்குஞ் சிறிது

ஒற்றுமையிருப்பின் உவமையணி யாருமாக லின்†, கடவுளும் அகரமும் முறையே உலகத்திற்கும் எழுத்துக்களுக்கும் முதன்மையா யிருத்தலான், முதன்மையையே பொதுத் தன்மையாகக் கொள்ளின் தகும்.

பா-ம். நச். ம. பதி. இது தனிமெய்களை இயக்குமாறு கூறு கின்றது ... கையாற் காட்சிப்பொருளாகிய வரிவடிவாக

நச். த. பதி இது தனிமெய்களை அகரம் இயக்குமாறு கூறுகின்

றது. மூவகையாற் காட்சிப்பொருளாகிய வடிவாகிய முன் பாடஞ் சிறக்கும்.

ஒலிக்கும்போது மெய்கள் அகரத்தோடு பொருந்து மெனக் கூறியபின்னர், அம்மெய்கள் தந் தன்மையைக் குறிக்க

*[illegible]

†𑌅𑌕𑌾𑌰𑍋 𑌵𑍈 𑌸𑌰𑍍𑌵𑌾 𑌵𑌾𑌕𑍍

‡ 𑌉𑌪𑌮𑌾𑌨𑍇𑌨 𑌉𑌪𑌮𑍇𑌯𑌸𑍍𑌯 𑌗𑌣𑌲𑍇𑌶𑌤𑌃 𑌸𑌾𑌮𑍍𑌯𑌮𑍍 𑌉𑌪𑌮𑌾
—𑌵𑌾𑌗𑍍𑌭𑌟𑌾𑌲𑌙𑍍𑌕𑌾𑌰𑌃

வேண்டின் அவை தமக்கு முன்னருள்ள ஒலிக்கியைய மாற்றி ஒலிக் கப்படவேண்டுமா, வேண்டாமா என்ற ஐயம் வந்தது. ஏனெனில் புணர்ச்சிவிதிப்படி அவை உருவத்தில் மாறுபடவேண்டும் ; உருவத்தில் மாறுபடின் கேட்போனுக்கு எளிதில் அவ்வெழுத்து புலப் படாது. அவ்வையத்தைப் போக்கிற்று இச்சூத்திரம்.

**47.** தம்மியல் கிளப்பி னெல்லா வெழுத்தும்
மெய்ந்நிலை மயக்க மான மில்லை.

**பொ-ள்.** எல்லா மெய்யெழுத்தும் தமது தன்மையைக் குறிப் பின், மெய்களின் நிலைமயக்கம் குற்றமாகாது.

**உ-ம்.** வல்லெழுத் தியைபின் டகார மாகும்.

முன்னர்ச் சூத்திரத்தில் " மெய்" என்றும், இச்சூத்திரத்துள் " மெய்ந்நிலைமயக்கம் " என்றும் இருத்தலான் " எழுத்து " என்றது மெய்யினையே குறிக்கும். எழுத்து என்றதற்கு உயிர் என்ற

பொருளை யும், சூத்திரத்தில் " எல்லா வெழுத்தும் மெய்ந்நிலை தம்மியல் மயக் கந் கிளப்பின் மானமில்லை " என்ற அந்நுவயத்தையும் பன்னீருயிரும் மெய்யின் தன்மையிலே தம்முடைய தன்மை மயங்கிற்றாகப் பெயர் கூறின் குற்றமில்லை எனப் பொருளையுங்கொண்டு, நச்சினார்க் கினியர் " இஃதன்றிப் பதினெட்டு மெய்யுந் தன்மை கூறுமிடத்து மெய்மயக்கங் கூறிய வகையானன்றி வேண்டியவாறு மயங்குமென்று கூறி ' அவற்றுள் ளஃகான் முன்னர் ' என்பதனைக் காட்டின் அஃது இருமொழிக்கண்ண தென மறுக்க" என்ற தொடரால் இளம்பூரணரை மறுக்கின்றனர். மொழிமரபு தனிமொழியைப் பற்றியே கூறுகின்றது என்றதற்குச் சான்று ஒன்று மின்று ; அவர் கூறும் பொருளுக்குக் காரணம் "வல்லெழுத் தியைபி னவ்வெழுத்து மிகுமே " " இடையெழுத் தென்ப ய ர ல வ ழ ள " முதலிய சூத்திரங்களில் வல்லெழுத்து, இடையெழுத்து என்பவற்றால் உயிர் மெய்யை ஆசிரியர் குறிக்கின்றனர் என்ற மயக்கமே யாகும். " இடை

யெழுத்தென உயிர்மெய்க்கும் பெயரிட்டாளுதல் ” என ஈண்டும்,

“ தனிமெய்களை ” இடையெழுத் தென்னுங் குறியினுடைய என்று கூறுவர் ” என 2ஆவது சூத்திரவுரையிலும் அவர் கூறியிருத்தல் நோக்கற்பாலது.

## 58

“ மயக்கமான மில்லை ” என்றவிடத்து “மயச்சம் மானம் இல்லை” எனப் பதப்பிரிவு காட்டியுள்ளார் பதிப்பித்தோர். பிற்காலத்து நிகண்டுகளில் “ மானம்” என்றதற்குக் குற்றம் என்ற பொருளிருத்தலின் அவ்வாறு செய்தனர் ஆகும். ஆனால் “ மயக்கம் ஆனம் இல்லை ” என்ற பதப்பிரிவே தக்கதாகும். ஏனெனில், மானம், ஆனம், என்பன மாநம், ஹாநம் என்ற வடமொழிச் சொல்லின் தற்பவமாகும் ; வடமொழியில் “ மாநம் ” என்றதற்குக் குற்றம் என்ற பொருளில்லை ; ஹாநம் என்றதற்கே அப்பொருள் உண்டு.

பா-ம். நச். ம. பதி. பன்னீருயிரையும்

முன்பாடந் தெளிவாயுள்ளது.

இச்சூத்திரத்தை

ட ற ல ள வென்னும்

(எழுத். 23) முதலிய ஏழு சூத்திரங்களின் ஒழிபாகக் கொள்ளல் தகும்.

29-ஆவது சூத்திரத்தில் ய், ர், ழ் இவற்றின் பின்னர் ஙகாரமும் மொழிமுதலாகெழுத்தும் வருமென்று கூற, அவற்றுள் சில ஈரொற்றாக வருமென இச்சூத்திரம் கூறிற்று.

**48.** யரழ வென்னு மூன்றுமுன் னொற்றக்
கசதப ஙஞநம வீரொற் றாகும்.

பொ-ள். ய், ர், ழ் இவற்றின் பின்னர் க், ச், த், ப், ங், ஞ், ந், ம் இவை ஈரொற்றாய் வரும்.

உ-ம். வேய்க்குறை, வேய்ங்குறை; வேர்க்குறை, வேர்ங்குறை; வீழ்க்குறை, வீழ்ங்குறை.

இளம்பூரணர் குறிற் கீழும் நெடிற் கீழும் முன்னே ஒற்றாய் நிற்ப அவற்றின் பின்னே

கசதபக்களி லொன்றுதல் ஙஞநமக்களி லொன்றுதல் ஒற்றாய் வர அவை ஈரொற்றுடனிலையாம்” எனப் பொருள் கூறினர். அப்பொருளில் கசதபக்கள் ஒவ்வொன்றும் ஈரொற்றாகவும் வரும் என்பது தெளிவாய் உணர்த்தப்படவில்லை. ஆயினும் அவர்கருத்து அவ்வாறு தான் என்பது ‘மூவொற்றுட னிலையாதல் நோக்கி’ என்ற தொடரான் விளங்கும்.

59

இச்சூத்திரத்தை நூன்மரபில் வையாது ஈண்டு வைத்தற்குக் காரணம் “ஆண்டு வேற்றுமைநயங் கொண்டதாகலின் மூவொற்று உடனிலையாதல் நோக்கி ஒற்றுமைநயம் பற்றி ஈண்டுக் கூறப்பட்டது” என இளம்பூரணரும், “இஃது ஈரொற்றுடனிலையாதலின் ஈண்டு வைத்தார்” என நச்சினார்க்கினியருங் கூறினர். “மூவொற்றுடனிலையாதல்” “ஈரொற்றுடனிலையாதல்” என்பவற்றுள் ஒன்று தவறான பாடமாயிருத்தல் வேண்டும். சூத்திரப்பொருளைக்

கூறுதற்கு முன் "இஃது ஈரொற்றுடனிலையாமாறு உணர்த்துதல் நுதலிற்று" என இளம்பூரணருங் கூறுகின்றமையின், "மூவொற்றுடனிலை யாதல்" என்றது தவறெனத் தோற்றுகின்றது. ஈண்டு வேற்றுமைநயம் என்பது தொடரும் எழுத்துக்கள் வெவ்வேறிடத்திற் பிறத்தலைக் குறிக்கும்; ஒற்றுமைநயம் என்பது அவை பெரும்பான்மையும் ஓரிடத்திற் பிறத்தலைக் குறிக்கும்.

" உரையாசிரியர் இருமொழிக்கட் காட்டியவற்றிற்கு அவ்வீறுக

டோறுங் கூறுகின்ற சூத்திரங்கள் பின்னர் வேண்டாமை யுணர்க." என இளம்பூரணரை நச்சினார்க்கினியர் மறுத்தல் பொருத்தமாகத் தோன்றவில்லை.

பா-ம். நச். ம. பதி. இக்காலத்து வழங்குமேனு முணர்க. இனித் தாழ்ங்குலை, தாழ்ஞ்சினை, வீழ்ம்படை ... உரையாசிரியர் இரு மொழிக்கட் காட்டியவற்றிற்கு ...

நச். தா. பதி. இக்காலத்து வழங்கு மேனின் உணர்க. இனித் தாழ்ங்குலை தாழ்ஞ்சினை தாழ்ந்திரள், வீழ்ம்படை ... உரையாசிரி யரும் இருமொழிக்கட் காட்டியவற்றிற்கு ...

முற் சூத்திரத்துட் கூறப்பட்ட ய், ர், ழ் இவற்றுள் ர், ழ் இவ்விரண்டிற்குஞ் சிறப்புவிதி கூறினர்.

**49.** அவற்றுள்

ரகார ழகாரங் குற்றொற் றாகா.

போ-ள் முற்சூத்திரத்துட் கூறப்பட்ட ய், ர், ழ் இம்மூன் றனுள் ர், ழ் இவ்விரண்டும் குற்றெழுத்தின் பின்னர் வாரா.



உ-ம். தார், தாழ்.

இச்சூத்திரம் ரகரழகரவொற்றினைப்பற்றிக் கூறுதலின் "அவை குறிற் கீழ் உயிர் மெய்யாம்"

என உரைகாரர்கள் கருத்தாகக் கூறுதல் வேண்டுவதன்று.

"குற்றொற்று என்பது குறிதாகிய ஒற்று எனப் பண்புத் தொகை. குறிற்கீழ் நிற்றலான், குறியது எனப்பட்டது" என இளம்பூரணர் கூறுகின்றனர். ஈண்டு ரகரழகரவொற்றைக் குறியது என்பது பொருந்தாக் கூற்றாகும், குற்றெழுத்தின் பின்னர் வந்த ஒற்றை எங்கும் அவ்வாறு வழங்காமையின். அக்காரணம் பற்றியே குற்றொற்று என்பதைப் பண்புத்தொகையாகக் கொண்டதும் பொருத்தமின்று. குற்றொற்று என்பது குறிலின் கீழ்வரும் ஒற்று என வேற்றுமைத்தொகையாகக் கொள்ளல்வேண்டும். நச்சினார்க்கினியர்க்கும் இதுதான் உடம்பாடு என்பது "கீழென்னும் உருபு தொகுத்துக் கூறினர்" என்ற தொடராற் பெறப்படும்.

இச்சூத்திரத்தில் "குற்றொற்று" என்றதற்கு ஈரெழுத்தொரு மொழியுள் குறிலின் கீழுள்ள ஒற்று" எனப் பொருள் கொள்ளல் வேண்டுமென்பது, வருஞ் சூத்திரத்தான் விளங்கும்.

பா-ம். நச். ம. பதி. எழுத்தினைச்
சேர்வனவற்றிற்கே.

நச். தா. பதி எழுத்தினைச்
பாடஞ் சிறக்கும்.
சொல்வனவற்றிற்கே. முன்

புகர், புகழ் முதலியன
வழக்கிலிருக்கின்றமையின், ஆங்கு ரகாரழகர
வொற்று குற்றெழுத்தின் பின்னர்
வந்திருக்கின்றமையின், அவ்வாறு கூறுதல்
பொருந்தாதெனை ஐயம் நிகழ,

**50.** குறுமையு நெடுமையு மளவிற் கோடலின்
தொடர்மொழி யெல்லா நெட்டெழுத்
தியல.

**பொ-ள்.** குறுமை, நெடுமை என்பன
மாத்திரையாற் கொள் ளப்படுதலின், எல்லாத்
தொடர்மொழியும் நெட்டெழுத்தைக் கொண்ட
ஈரெழுத்தொருமொழியின் தன்மையன.

**உ-ம்.** புகர், புகழ், பொருள், முதல் ...

நெட்டெழுத்து என்ற சொல்லைப் பல
விடங்களிலும் ஆசிரி

யர் நெட்டெழுத்தைக்கொண்ட ஈரெழுத்தொருமொழி என்ற ளைக் குறிக்குமாறு வழங்குதலைக் காணலாம்.
பொரு



உ-ம்.

நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றும்
(எழுத் 36)

நெட்டெழுத் திம்ப ரொற்றுமிகத் தோன்றும்
(எழுத். 197) ஆகலின், " புகர், புகழ் என்பனவற்றை நெட்டெழுத் தென்றே எவ்
விடத்தும் ஆளாமையான்" என்ற காரணத்தைக் கூறி னியர் இளம்பூரணரை மறுத்தது பொருந்துமோ?
நச்சினார்க்

பொருள் + நிலை = பொருணிலை, முதல் + நிலை = முதனிலை, விரல்+தீது=விறீது முதலிய விடங்களில் ஒற்றுமெய் கெடுதல், தொடர்மொழி

நெட்டெழுத்தைக்கொண்ட ஈரெழுத்தொருமொழி யின் தன்மையைப் பெறும் என்றதனாலும்

" நெடியதன் முன்னர் " (எழுத் 161)

என்ற சூத்திரத்தாலும் பெறப்படுதலின் " நெட்டெழுத்தாகக் கூறிய இலக்கணத்தால் ஒரு பயன் கொள்ளாமையான் " என்ற நச்சி ஞார்க்கினியர்கூற்றுப் பொருந்தா தென்க. இதனை விரல் தீது என்புழி லகரம் " நெடிற் கீழ் ஒற்று " என்று கெடுக்கப்படும் " என இளம்பூரணரே குறித்தது காண்க.

இச்சூத்திரத்திற்குப் பொருள் கூறும்போது இளம்பூரணர் முன் சூத்திரத்திலிருந்து " ரகாரழகாரங்கள் " என்றதை வருவித்து, இச்சூத்திரத்துள்ள ". தொடர்மொழி" என்றதற்குத் தொடர்மொழிக்கீழ் நின்ற ரகார ழகாரங்கள் " எனப் பொருள் கொண்டனர். அவ்வாறு கொண்டமையானே " எல்லாம் என்றத ஞன் ரகாரழகாரங்களே யன்றிப் பிற ஒற்றுக்களும் நெடிற்கீழ் ஒற்று " எனக் கூறவேண்டியதாயிற்று. அவ்வாறு கொள்ளாது தொடர் மொழி என்றதற்கு

ஆற்றலாலுள்ள பொருளே கொள்ளல் சாலும். அவ்வாறு கொள்ளின்

" நெடியதன் முன்ன ரொற்றுமெய் கெடுதலும் " (எழுத். 161) என்றதனால் பொருள்+ நிலை போன்ற விடத்துள், ஒற்றுமெய் கெடு தல் கொள்ளல் கூடும்.

நச்சினார்க்கினியர் சூத்திரத்துள்ள அளவு தொடர்மொழி என்பனவற்றிற்கு ஆற்றலாலுள்ள பொருளைக் கொள்ளாது, அளவு தொழில், அம்மாத்திரை தம்முள் தொடர்ந்து நிற்கின்ற சொல் என



முறையே பொருள் கொண்டனர். அன்றியும் " நெட்டெழுத் தியல " என்ற குறிப்புவினைமுற்றை எச்சமாக்கி, "நெட்டெழுத்து மாத்திரை மிக்கு நடக்கும்படியாக" எனப் பொருளுரைத்தனர்.

அன்றியும் " இஃது " " அளபிறந்துயிர்த்தலும் " என்னுஞ் செய்யுளியலை நோக்கிய நூன்மரபிற் சூத்திரத்திற்குப் புறனடை யாய் அதன்கண் நிகழ்வதோர் ஐயம் அகற்றுகின்றது; என்னை? உயிரும் உயிர்மெய்யும் அளபிறந்து இசைக்குங்காற் குறிலோ நெடிலோ இசைப்பதெனை மாணாக்கர்க்கு நிகழ்வதோர் ஐயமறுத்த லின் " எனக் கூறினர். அப்பொருளை ஈண்டுக் கூறுதற்கு இடனின்மையானும், புகர், புகழ் என்பனவற்றிற்கு இலக்கணம் கூற வேண்டுவது இன்றியமையாமையானும், அவர் கூறும் ஐயம்

குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கு
நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே.

(எழுத். 41) என்ற சூத்திரத்தாற் போக்கப்படுமாகலானும், அவர் கூற்றுப் பொருந்தா தென்க.

" செய்யுளியலுள் இவற்றைக் குறிலிணை ஒற்றடுத்த நிரையசை யாகவும் தார், தாழ்

என்பனவற்றை நெட்டெழுத்து ஒற்றடுத்த நேரசையாகவுங் கோடலானும் அது பொருளன்மை உணர்க" எனவும் நச்சினார்க்கினியர் இளம்பூரணரை மறுக்கின்றனர். ஒரு செய்கையில் தொடர்மொழியெல்லாம் நெட்டெழுத்தைக்கொண்ட ஈரெழுத்தொருமொழியை ஒக்குமெனின் எல்லாச்செய்கையினும் ஒத்திருத்தல் வேண்டாமையான், அவர்மறுப்புப் பொருந்ாதென்க.

"அளபென்று பகரவுகரமாக மாத்திரையைக் கூறுது அள வென வகரவுகரமாகச் சூத்திரஞ் செய்தமையான் அளவு தொழின் மேனின்றது" என்கின்றனர்.

அளவு நிறையும் ... (எழுத். 164) முதலிய சூத்திரங்களில் " அளவு " என்றது மாத்திரை என்ற பொருளில் வாராமை உண்மையாயினும்,

**எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து**

.........

அளவிற் கோட லந்தணர் மறைத்தே (எழுத். 102)

என்ற சூத்திரத்தில் " அளவிற் கோடல் " என இளம்பூரணப் பதிப்பொன்றிலும் " அளபிற் கோடல் " என இளம்பூரணப் பதிப்பு மற்றொன்றிலும் நச்சினார்க்கினியப்பதிப்புக்களிலும் காணப்படுகின்ற

மையின், அதே சொல் ஈண்டும் இருத்தலின், ஈண்டு " அளவிற் கோடலின் " என்னும் ஆங்கு அளபிற்கோடல் என்றும் பாடம் மாற்றிக்கொண்டதற்குக் காரணந் தெரியவில்லை. அச்சூத்திரத்தில் " அளபிற் கோடல் " என்றதற்கு மாத்திரை கூட்டிக் கோடல்" என்றே பொருள் கூறினர். ஆகலின் அளவு என்ற சொல் ஒரு பொருளையும், அளபு என்ற சொல் மற்றொரு பொருளையுங் குறிக் குஞ் சொற்கள் எனக் கொள்ளாது இரண்டும்

பல்பொருளொருசொல்
லெனவே கோடல் தகும்.

பா-ம் நச். ம. பதி. நெட்டெழுத்தே மாத்திரைக்கு நிற்ப
தென்றமையான் ... அளபென்று பகரவுகரமாக மாத்திரையைக்
கூறுது அளவென வகரவுகரமாக..
.இயலவென்றதனைச் செயவெ
னெச்சமாக. ..நெட்டெழுத்துக்களோடுங் கூடியவற்றை யோசை
மிகுத்து...

நச். தா. பதி. நெட்டெழுத்தே மாத்திரைபெற்று மிக்குநிற்கு
மென்றமையான்.. .அளபென்று மாத்திரையைக் கூறுது அளவெனச்
சூத்திரஞ் செய்தமையான்...இயலவென்றதனைச் செயவெனெச்ச மாக்கி. . .அவற்றையே ஓசை மிகுத்து...முன்பாடஞ் சிறக்கும்.

ஓரொற்றின் பின்னர் மற்றோர் ஒற்று வரும் என்ற அதிகா ரத்தை நோக்கி இச்சூத்திரங் கூறினர்.

**51.** செய்யு ளிறுதிப் போலி மொழிவயின்
னகார மகார மீரொற் றாகும்.

போ - ள். செய்யுளின் இறுதிக்கண்ணுள்ள "போலும்" என்ற சொல்லின்கண் ன், ம் இவ்விரண்டும் ஈரொற்றுகும்.

போலும் என்ற சொல்லின்கண் உகரங் கெட்டு, மெல்லெழுத் தியையி னகாரமாகும்" (எழுத். 367) என்ற சூத்திரத்தால் லகரம் னகரமாய்த் திரிந்து நிற்க, இச்சூத்திரத்தான் செய்யுளிறுதிக் கண்ணே னகரவொற்றின் பின்னர் மகரவொற்று வருமென உணர்த் தப்பட்டது.

64

இளம்பூரணரும் (சுப். பதி.)
நச்சினார்க்கினியரும் "இறுதி" என்ற சொல்லைச் செய்யுளோடு கூட்டாது போலுமொழியோடு கூட்டினர். அம்மொழி செய்யுளின் இடையிலும்

வருமாயின் இச். சூத்திரம்
எற்றுக்கு எனக் கேட்டல் வேண்டும்.
செய்யுளின்கண்ணே "போன்ம்" என்ற சொல்
வருமென்று உணர்த்தற்கு எனின், சூத் திரத்தில்
"இறுதி" என்ற சொல் வேண்டாவாம்.
ஆகலின்.

அவர்தங்கூற்றுப் பொருந்தாது. சிதம்பரம் பிள்ளை பதித்த இளம் பூரணத்தில் "செய்யு ளிறுதிக்கண்போலும் என்னுமொழிக்கண்" என உளது. இஃதே பொருந்தும்.

உ-ம். வஞ்சினம் வாய்த்தானும் போன்ம் (கலித். 101, 20.)

பா-ம். நச். இளம். சுப். பதி—போலி
மொழிவயின்
இளம். சிதம். பதி. "போலும்
மொழிவயின்" இளம். சுப். பதி. ஈரோற்றிலக்கணமா
மாறுணாற்று. செய்யுட்கண் போலு மென்னு மொழி
யிறுதிக்கண்.

இளம். சிதம். பதி. ஈரோற்றிடனிலை ஆமாறு உணரத்துதல் நுதலிற்று. செய்யுளிறுதிக்கண் போலுமென்னு மொழிக்கண்.

பின்பாடஞ் சிறக்கும்.

நச். ம. பதி. போன்ம் எனச் செய்புமென்னும் பெயரேச்ச மீற்று மிசையுகர மெய்யொழித்துக் கெட்டு லகாரந் திரிந்து நின்றது. இது பெயரேச்சமாகிய உவமவுருபு.

நச். தா. பதி. போலும் என்னும் செய்யு மென்னும் முற்று ஈற்றுமிசை யுகரம் மெய்யொழித்துக் கெட்டு லகாரந் திரிந்து நின்றது. இஃது இறுதியில் முற்று; இடையிற் பெயரெச்சமாகிய உவமவுருபு. ஈண்டு முற்றென்பார் இறுதிமொழி என்றார். முன் பாடமே பொருந்தும்.

"போன்ம்" என வரும் என்று முற்சூத்திரத்தாற் பெறப்பட, னகரமகரவொற்றுக்கள் தம்மியல்பு மாத்திரையைப் பெறுமா, பெறாதா என ஐயம் வர, அதனைப் போக்கு மிச்சூத்திரம்.

**52.** னகாரை முன்னர் மகாரங் குறுகும்.

**பொ - ள்.** னகரவொற்றின் பின்னருள்ள மகரவொற்று (தன் னியல்பு மாத்திரையினின்றுங்) குறுகும்.



எவ்வளவு குறுகுமென்று ஈண்டு ஐயமும், நூன்மரபிலுள்ள அரையளபு குறுகன் மகர

முடைத்தே (எழுத். 13) என்ற சூத்திரத் ;தில் அம்மகரக்குறுக்கம் யாண்டு நிகழும் என ஐயமு மெழ, இரண்டு சூத்திரத்தையும் ஒன்றாக்கி, போன்ம் என்ற விடத்துள்ள மகரம் கரன்மாத்திரை யொலிக்கு மெனப் பொருள்கொள்ளல் வேண்டும்.

ஆகலின் இச்சூத்திரம் எழுத். 13 ஆவது சூத்திரத்திற்கு ஒழி பெனக் கொள்க.

“ னகாரையென இடைச்சொல் ஈறுதிரிந்து நின்றது ” என்ற நச்சினார்க்கினியத்தொடர்க்குப் பொருள் ‘னகாரம்’ என்ற இடத் துள்ள ‘காரம்’ என்ற சாரியையாகிய இடைச்சொல் ‘காரை’ என ஈற்றின்கண் திரிந்தது என்பதாகும்.

நச்சினார்க்கினியர் தன்னினமுடித்தலான் மருண்ம் என்ற உதாரணத்தைக் கொண்டனர். இது பிற்காலவழக்கென அறியக் கிடக்கின்றது.

பா - ம்.—இளம். சி. பதி. னகாரமுன்னர்
இளம். க. பதி. நச். பதி. னகாரைமுன்னர்.

" னகாரம் முன்னர் மாத்திரை குறுகும்" என்ற முற்சூத்திரத்தைக் கேட்ட பின்னர் ஏனைய எழுத்துக்களும் மொழிகளில் இணைத்து இசைக்கும்போது தம்மியல்பில் மாறுமோ என்ற ஐயம் வர அதனைப் போக்கிற்று இச்சூத்திரம்.

**53.** மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்துவே றிசைப்பினும்
எழுத்திய றிரியா வென்மனார் புலவர்.

போ - ள். எழுத்துக்கள் மொழியின்கண் சேர்த்து கூறப் படினும், மொழிகளினின்றும் பிரிக்கப்பட்டுத் தனியாய் ஒலிக்கப் படினும், அவை தம் இயல்பினின்றும் மாறு என்று கூறுவர் புலவர்.

எழுத்துக்களின் இயல்பாவது, அவை பிறக்குமிடம் அவற்றின் முயற்சி, மாத்திரை முதலியன வாகும்.

இளம்பூரணர் " இயறிரியா " என்றதற்கு, " தத்தம் மாத்திரை யியல்பில் திரியா" எனப் பொருள் கூறினர்; அவ்வாறு கூறுதற்குக்

காரணம் முற்சூத்திரத்தில் மகாரம் தன்னியல்பு மாத்திரை யினின்றுங் குறுகும் எனக் கூறப்பட்டதாகும். பின்னருள்ள சூத் திரங்களில் ஐகாரஔகாரங்கட்குப் பிரதியாக அகரஇகரமும் அகர உகரமும் வரும் எனக் கூறினமையான், ஆங்கு ஐகாரஔகாரங்கட் கும் அகரஇகர அகர உகரங்கட்கும் மாத்திரையில் வேறுபாடின்மை யானும், பிறப்பிடங்களில் வேறுபாடின்மையானும், இயல் என்றதற்கு மாத்திரையியல்பு எனச் சுருக்கிப் பொருள்கொள்ளாது தன்மை யென்றே பொருள் கொள்ளல் சாலும்.

இச்சூத்திரம் பொதுவாக எழுத்து தனியாய் இருப்பினும், மொழிக்கண் இருப்பினும் ஒரே தன்மையன எனக் கூறினமையானும், எழுத்து என்றது உயிர், மெய் இரண்டையுங் குறித்தலானும், 'தங்கை' போன்ற

சொற்களில் ககரம் வல்லினமாக ஆசிரியர்காலத்து ஒலிக்கப்பட்டதேயன்றி தற்போதுபோன்று ஒலிக்கப்படவில்லை என்பது அறியக்கிடக்கும். ஆகலின் டாக்டர் கால்ட்வெல் கூறும் 'வல்லினமெல்லினமாறுகை' என்றது பிற்காலத்துத்தமிழ்மொழிக் குப் பொருந்துமேயன்றி ஆசிரியர்காலத்துள்ள தமிழ்மொழிக்குப் பொருந்தாது.

இக்கருத்தை நோக்கியே

மொழியாய்த் தொடரினு முன்னனைத்

தெழுத்தே (நன். 27) என்ற நன்னூற்சூத்திர மெழுந்தது.

நச்சினார்க்கினியர் இளம்பூரணர்கூறிய பொருளை " அது முன்னர்க்கூறிய இலக்கணங்களாற் பெறப்படுதலிற் பயனில்கூற்று மென்க" என மறுத்து, " ஒற்றுங் குற்றுகரமும் பொருள்தருநிலை மையை யாராய்ந்து சொல்லாகச் சேர்த்துச் சொல்லினும் செய்யுளிய

லுள் ஒற்றுங் குற்றுகரமும் பொருள் தருமேனும் மாத்திரை குறைந்துநிற்கும் நிலைமையை நோக்கி எழுத்தெண்ணப்படாவென்று ஆண்டைக்கு வேறாகக் கூறினும் அவ்விரண்டிடத்தும் அரை மாத்திரை பெற்றுநிற்கும் ஒற்றுங் குற்றுகரமும் முற்கூறிய எழுத்தாந்தன்மை திரியாவென்று கூறுவர் புலவர்" எனப் பொருள் கூறினர். இப் பொருள் இவ்விடத்திற்குப் பொருந்தாமையானும், தெரிந்து என்றதற்கு "ஒற்றுங் குற்றுகரமும் பொருள்தருநிலைமையு

67

ஆராய்ந்து" என்றும், வேறிசைப்பினும் என்றதற்கு, "செய்யு ளியலுள் ஒற்றுங் குற்றுகரமும் பொருள்தருமேனும் மாத்திரை குறைந்து நிற்கும் நிலைமையை நோக்கி எழுத்தெண்ணப்படாவென்று ஆண்டைக்கு வேறாகக் கூறினும்" என்னும் பொருள் கொள்ளுதற் குக் காரணம் அறியப்படாமையானும், அவர் இங்குக் கொள்வனவெல்லாம் செய்யுளியற்சூத்திரங்களாற் பெறப்படுகின்றமையானும், அவர் உரை

பொருத்தமுற்றதாகத் தெரியவில்லை.

பா-ம். நச். ம. பதி. "இதனான் ஒற்றுங்குற்றுகரமு மெழுத்தாகி நின்று பொருடந்தும் எழுத்தெண்ணவும் அலகிடவும் பெறுவேன் பதுங் கூறினாராயிற்று."

நச். தா. சை. பதி. இதனான் ஒற்றுமாய்தமுங்குற்றுகரமு மெழுத் தாகி நின்று பொருள் தந்தும் எழுத்தெண்ணவும் அலகிடவும் பெறு வேன்பது கூறினாராயிற்று.

பொருடந்தும் என்றவிடத்துள்ள உம்மை எதிர்மறையும்மை யாகலான் "பெறுவென்பது" என்ற பாடமே சிறக்கும்.

பொதுவாக எழுத்துக்கள் தனித்தும் மொழிக்கண்ணும் ஒரே தன்மையன எனக் கூறியதற்குப் புறனடையாகப் பின்வருஞ் சூத்திரங்கள் எழுந்தன.

**54.** அகர இகர மைகார மாகும்.

**பொ-ள்.** (நெட்டெழுத்துள் கூறப்பட்டுள்ள)

ஐகாரம் அகர இகர மாகவும் ஆம்.

உ-ம். ஐவனம், அ இவனம்.

**55.** அகர உகர மௌகார மாகும்.

பொ-ள். (நெட்டெழுத்துள் கூறப்பட்டுள்ள) ஔகாரம் அகர வுகர மாகவும் ஆம்.

உ-ம். ஔவை, அஉவை.

இவ்விரண்டு சூத்திரங்களிலும் அகரஇகரம், அகரஉகரம்



சொல்ல அல்லது கூட்டிச் சொல்ல என்றது தொக்க தெனவும், ஐகாரம் ஔகாரம் இவற்றின் பின்னர் போல என்றது தொக்கது

எனவும் இளம்பூரணரும் நச்சினார்க்கினியருங் கொண்டனர். ஐகாரஔகாரங்கள் எழுவாயெனவும் இகரஉகரங்களின் பின்னர் உம்மை தொக்கது எனவுங் கொள்ளின் பொருந்து மெனத் தோற்று கின்றது. இவ்வாறு உரை கூறச் சான்று 56ஆவது சூத்திரமாகும்.

நச்சினார்க்கினியப்பதிப்புக்களிலும்,

சிதம்பரம்பிள்ளை இளம்பூரணப்பதிப்பிலும் இரண்டு சூத்திரத்துரையினுறுதியில் "அது கொள் ளற்க" என்றுளது. அன்றியும் "ஆகுமென்றதனான் இஃது இலக்கண மன்றாயிற்று" என நச்சினார்க்கினியத்திலுள்ளது. இவையெல்லாம் பொருந்தாக்கூற்றாகும் என்பர் சிவஞான முனிவர். கன்னியப்ப முதலியார் இளம்பூரணப்பதிப்பில் முற்சூத்திரத்தினிறுதியில் "அது கொள்ளற்க" என்றுளது. பிற்சூத்திரத்திறுதியில் அஃது இல்லை. இத்தொடர் நச்சினார்க்கினியம் படித்தவரால் இளம்பூரணப் பதிப்பில் எழுதியிருத்தல் வேண்டும்."*

**56.** அகரத் திம்பர் யகரப் புள்ளியும்

ஐயே னெடுஞ்சினை மெய்பெறத்
தோன்றும்.

போ-ள். (மொழிக்குச்) சினையாகிய ஐயென்ற நெட்டெழுத் தும் " அய் " என்றதின் வடிவுபெறத் தோன்றும்.

உ-ம். ஐவனம்—அய்வனம்.

பா-ம். இளம். க. பதி. " அகரத்தின் பின்னர் " யகரமாகிய புள்ளியும் தோன்றும். ஐயெனப்பட்ட நெட்டெழுத்தின் வடிவு பெறத்

இளம். சி. பதி. " அகரத்தின் பின்னர்...யகரமாகிய புள்ளியும் ஐயெனப்பட்ட நெட்டெழுத்தாம். அவை வடிவுபெறத் தோன்றும் ". முன்பாடமே சிறக்கும்.

* வித்வான் சுன்னுகம் கணேஐயர்

'கொள்ளற்க என்றது பொருந்தாது, இது அக்காலத்துக் கொள்ளப்பட்டு வழங்கிவந்தமையின்'
எனக்கூறியது நோக்கற்பாலது.

பஎ

யகரப்புள்ளியும் என்றவிடத்துள்ள உம்மை எச்சவும்மை யாகலின், யகரமாகிய புள்ளி வந்தாலும் என அதற்கு நச்சினார்க்கினியர் பொருள் கூறுவது ஆராய்தற்பாலது. நச்சினார்க்கினியர் பதிப்புக்களிலும், கன்னியப்பமுதலியார் இளம்பூரணப்பதிப்பிலும் "மெய் பெற என்றதனான் அகரத்தின் பின்னர் உகரமேயன்றி வகரப்புள்ளியும் ஔகாரம்போல வருமென்று கொள்க" என்று உளது. சிதம்பரம்பிள்ளைப்பதிப்பில் யகரப்புள்ளியும் என்றது யவகரப்புள்ளியும் என்றும், ஐயென் என்றது ஐயென என்றும் பாடம் இருந்திருத்தல் வேண்டுமெனக் கூறப்பட்டுளது. "அகரத் திம்பர் வகரப் புள்ளியும் ஔவே னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" என்ற ஒரு சூத்திரம் மயக்கத்தால் ஏடெழுதுவோரான் விடப்பட்டது என்பது என் கொள்கை.

**57.** ஓரள பாகு மிடனுமா ருண்டே

தேருங் காலை மொழிவயி னான.

போ-ள். (முற்சூத்திரங்களிற் கூறப்பட்ட) ஐகாரஔகாரங்கள் மொழியின்கண் ஆராயுமிடத்து ஓரளபாகு மிடனு முண்டு.

உ-ம். இடையன்; கௌவை.

ஐகாரம் ஔகாரம் என்பன அதிகரித்தன. "இடன்" என்றதனான் இக்குறுக்கம் சிறுபான்மை யென்பது கொள்க" என இளம்பூரணத்திலும் "உம்மையான் இரண்டு மாத்திரை பெறுதலே வலியுடைத்தாயிற்று" என நச்சினார்க்கினியத்திலு முள. நச்சினார்க்கினியர் இளம்பூரணரை மறுக்காமையின், இளம்பூரணத்தில் இடன் என்றதற்குப் பிரதியாக இடனும் என்றிருந்திருக்குமோ வெனக் கருத இடந்தருகின்றது.

மொன்றே யாகும்.

அவ்வாறாயின் இருவரது கொள்கையு

உண்டு என்றதற்கு எழுவாய் ஐகாரமென இளம்பூரணரும் ஐகாரஔகாரங்கள் என நச்சினார்க்கினியருங் கொண்டனர். உண்டு என்றது ஒருமைவினை யாதலானும், "இகர யகர மிறுதி விரவும்" என்ற சூத்திரத்தின் பின்னர் இகர வகர மிறுதி விரவும் என இல்லாமையானும், இளம்பூரணர் கொள்கையே சிறப்புடைத்து என்று

தோன்றுகின்றது. ஆயினும் "அகர இகர மைகார மாகும்" "அகர உகர மௌகார மாகும்' என ஆசிரியர் முன்னர்க் கூறியிருக் கின்றமையின், ஐகாரஔகாரங்களுள் ஒவ்வொன்றும் என்றதை இச் சூத்திரத்துள்ள " உண்டு " என்றதற்கு எழுவாயாகக் கொள்ளல் தகும்.

**58.** இகர யகர மிறுதி விரவும்.

**பொ-ள்** (மொழியின்) இறுதிக்கண் இகரமும் யகரமும் விரவி வரும.

உ-ம். நாய், நா இ.

மொழி என்பது 53ஆவது சூத்திரத்தினின்று அதிகரித்தது. "அவ்விகாரங் கொள்ளற்க" என்ற நச்சினார்க்கினியர்கொள்கை பொருந்தாக் கூற்றாகும்.

இவ்வியல் மொழிகளைப்பற்றி உணர்த்துகின்றமையானும் முன் சூத்திரத்தில் இகரயகரங்கள் மொழிகளின் இறுதிக்கண் விரவி வரு மெனக் கூறப்பட்டமையானும், மொழிகளின் முதலிலும், இறுதியி

னும் எவ்வெழுத்துக்கள் வரும் என்ற எண்ணம் வர, அவற்றை உணர்த்தும் பின்வரும் 23 சூத்திரங்கள். அவற்றுள் முதலொன்பது

சூத்திரங்கள் முதலில் வரும் எழுத்துக்களையும் எஞ்சிய சூத்திரங்கள் இறுதிக்கண் வரும் எழுத்துக்களையும் உணர்த்தும். *

**59.** பன்னீ ருயிரு மொழிமுத லாகும்.

**பொ-ள்** உயிரெழுத்து பன்னிரண்டும் மொழிக்கு முதல் ஆகும்.

உ-ம். அசை, ஆவி, இசை, ஈகை ...

**60.** உயிர்மெய் யல்லன மொழிமுத லாகா.

**பொ-ள்.** உயிரான் தொடரப்பட்ட மெய்களல்லாதனவாகிய மெய்யான் தொடரப்பட்ட மெய்கள் மொழி முதல் ஆகாவாம்.

* ருக்வேதப்ராதிசாக்கியம் முதலான ப்ராதிசாக்கியநூல்கள் வடமொழியில் மொழிமுதலாகவும் இறுதியாகவும் வரும் எழுத்துக்களை உணர்த்துகின்றன என்பதும் அறியத்தக்கது

## 71

உரைகாரர்கள் "ஈண்டு உயிர்மெய் யென்பது வேற்றுமைநயங் கருதிற்று" என்பர். வேற்றுமைநயமாவது உயிர்மெய் என்றவிடத்து உயிரையும் மெய்யையும் தனித்தனியெழுத்தாகக் கொள்ளுதலே யாகும்.

இச்சூத்திரம் இல்லாவிடின் வருங் குற்றமென்னை யெனின், தமிழ்மொழியில் மொழிக்கு முதலில் ஒருமெய் மற்றொரு மெய்யான் தொடரப்பட்டு வாராது என்பது பெறப்படாததாகும். பின்னர்க் கூறப்பட்ட 6 சூத்திரங்களான் அது பெறப்படாதா வெனின், ஆங்கு மொழிமுதலில் வரும் மெய்கள் எவ்வெவ்வுயிரான் தொடரப்படும் என்று கூறப்பட்டமையின், அவ்வுயிர்களைத் தவிர்த்து ஏனையுயிர் களால் தொடரப்படா எனப்

பெறப்படுமேயன்றி, மற்றொரு மெய் யான் தொடரப்படா எனப் பெறப்படாவாம். ஆகலின் இச்சூத்திரம் வேண்டுமென்க*

பா - ம்.

இளம். க. பதி.

" சுருங்கவோர் துமன்றி ... எடுத்தோத வேண்டில் "

இளம். சி. பதி.

" சுருங்க வருவதன்றி ... எடுத்தோத வேண்டி "

'எடுத்தோத வேண்டின்' என்ற பொருளில் 'எடுத்தோதவேண்டில்' என இளம்பூரணர்காலத்து வழங்கியிருத்தல் கூடுமாதலானும், " எடுத்தோதவேண்டி " என்றது அப்பொருள் கொடாமையானும், முன் பாடமே சிறக்கும்.

**61.** கதந பமவெனு மாவைந் தெழுத்தும்

எல்லா வுயிரோடுஞ் செல்லுமார் முதலே.

பொ - ள். மொழிமுதலாயிருக்குங்கால் க், த், ந், ப், ம் இவ் வைந்து மெய்யும் எல்லா உயிரொடுந் தொடரப்பட்டு வரும். உ-ம். கண், கால்...; தந்தை, தாய்...; நன்மை, நாம்,...; பயிர், பாடு...; மந்தை, மான்...

* வடமொழியில் மொழிக்கு முதலாக ஸம்யுக்தாக்ஷரம் வரலாமாகலின், வடமொழிக்கும் தமிழ்மொழிக்குமுள்ள வேற்றுமைகளுள் ஒன்றனை இச்சூத்திரம் உணர்த்துகின்றது.

72

இளம்பூரணவுரையில் "முதற்கு என்னும் நான்காமுருபு விகாரத்தாற்றொக்கது" என்ற தொடர் உளது. சூத்திரப்பொருள் கூறுமிடத்து "முதலாதற்கு" என்றிருக்கின்றமையின், இஃது இடைச்செருகலெனத் தோன்றுகின்றது. அவ்வாறில்லீரது

" முதற்கு " என்றதற்கு " முதலாதற்கு " எனப் பொருள் எனின், சூத்திரவிறுதியில் இரண்டேழாம் வேற்றுமையுருபுகள் தொகலா
நான்காம்வேற்றுமையுருபு தொகுதல் ஆசிரியர்க்கு உடம்பாடின்று என்க. அஃது " ஐயுங் கண்ணும் ..." என்ற சொல்லதிகாரச் சூத்திரத்தான் விளங்கும்.

" ஆர் " என்றது அசைநிலையாதல்
கூடுமென்றது

" அசைநிலைக் கிளவி யாதுவழி யறிதல் "
(சொல். 271) என்ற சூத்திரத்தான் அறியப்படும்.

**62.** சகரக் கிளவியு மவற்றோ ரற்றே
அஐ ஔவெனு மூன்றலங் கடையே.

போ - ள். சகரமும் அ, ஐ, ஔ என்ற மூன்றுமல்லாத விடத்து முன் கூறப்பட்டவற்றோடு ஒரு தன்மைப்பட்டது. அஃதாவது அ ஐ ஔ இவையல்லாத உயிர் மொழிமுதலில் சகரத்தைத் தொடரும்.

உ-ம். சாரை, சில...

அ ஐ ஔ வெனு மூன்றலங்கடை என்றது ஒரேதொகைமொழி யென்றும் இறுதியில் " கண்ணுருபு " தொக்கது என்று மறிக.

இளம்பூரணத்தில் " சகடமெனவும் சையமெனவும் விலக்கினவும் வருமாலெனின், அவற்று ளாரியச்சிதைவல்லாதன 'கடிசொல் லில்லை, என்பதனாற் கொள்க." என்ற தொடர் உளது. செய்யுளீட்டச்சொற்களுள் வடசொல்லை ஆசிரியர் எச்சவியலுட் கூறினமையின் ஈண்டு " ஆரியச்சிதைவல்லாதன " என்றது பொருந்தாதென்க. சிதம்பரம்பிள்ளைப்பதிப்பில் " ஓர் அன்ன, ஓர் அற்று என்றுவரும் இடங்களில் ஓர் என்பதனை அசையென்று கொள்ளுதல் பொருத்த முடையதாகத் தோன்றுகின்றது " என்ற தொடர் இல்லாதிருப்பின்



நலம்; ஓரன்ன, ஓரற்று என்பன ஒருதன்மையன, ஒருதன்மைத்து என்ற பொருளில் வருகின்றமையின், ஓர் என்றது ஒன்றென் கிளவியின் பகுதியின் விகார மெனக.

நச்சினார்க்கினியத்தில் "சையம், சௌரியம் என்பனவற்றை வடசொல்லென மறுக்க" என்ற தொடருளது. வடசொல் செய்யுளீட்டச்சொற்களுள் ஒன்றாகலின், அதனை என் மறுத்தல்வேண்டும்! அவை பிற்காலத்தே தமிழில் வழங்கப்பட்டன எனக் கூறுதலே தகும.

**63.** உ ஊ ஒ ஓ வென்னு நான்குயிர்
வஎன் னெழுத்தோடு வருத லில்லை.

பொ-ள். (மொழி முதலாயிருக்குங்கால்) வகரத்தின் பின்னர் உ, ஊ, ஒ, ஓ இவை வாரா.

உ-ம். வலை, வாய் ...

மொழிமுதல் என்றது 60ஆவது சூத்திரத்தினின்று அதிகரிக்கப்பட்டு ஏழாம் வேற்றுமையுருபு கொண்டது.

**64.** ஆ எ
ஒஎனு மூவுயிர் ஞகாரத் துரிய.

பொ-ள்.—(மொழிமுதலாயிருக்குங்கால்) ஞகாரத்தின் பின்னர் ஆ, எ, ஒ என்ற மூன்றுயிரும் வருதற்குரிய.

உ-ம். ஞாலம் ஞெண்டு, ஞொள்கிற்று.

ஞகாரத்திற்கு என்றது நான்காம் ஞகாரத்து என ஆயிற்று.

வேற்றுமையுருபு குன்ற

"ஞமலிதந்த மனவுச் சூலுடும்பு என்பது திசைச்சொல்" என்ற தொடர் நச்சினார்க்கினியத்தி லுள்ளது. இவ்விலக்கணம் செய்யளீட்டச்சொற்கள் எல்லாவற்றிற்குங் கொள்ளப்படவேண்டுமே யன்றி இயற்சொற்களுக்கு மாத்திரம் கொள்ளப்படுதல் இயலாது. அவ்வாறு எங்குங் கூறப்படாமையின். அவ்வாறாயின் "ஞமலி" என்ற சொல் இருக்கும்போது ஆசிரியர் ஏன் அதனைக் கொள்ளவில்லை யெனின், அச்சொல் அவர்காலத்துப் பெரும்பான்மையும் வழங்கப்

74

படவில்லை எனக் கொள்ளுதலே சாலும். அன்றியும் பூதம், தெய்வம் முதலிய வடசொற்களைச் சொல்லதிகாரத்துள் ஆசிரியர் கூறி, அவற்றிற்குப் பயனிலை எவ்வாறு வருமென்றதைக் கூறுதல் நோக்கத் தக்கது.

**65.** ஆவோ டல்லது யகரமுத லாது.

**பொ - ள்.**—யகரம் ஆகாரமின்றி ஏனைய உயிரான் தொடரப் பட்டு மொழிமுத லாகாது.

உ-ம். யான்.

யவனர் முதலிய சொற்கள் தமிழிலக்கியத்தில் ஆசிரியர்காலத்து வழங்கப்படவில்லை போலும்.

"யவனர் என்றாற் போல்வன விலக்கினவும் வருமாலெனின் அவை ஆரியச்சிதைவென்று மறுக்க" என்ற இளம்பூரணத் தொடரும், "யவனர், யுத்தி, யூபம், யோகம், யௌவனம் என்பன வடசொல் லென மறுக்க" என்ற நச்சினார்க்கினியத்தொடரும் ஆராய்தற்பாலன.

**66.** முதலா வேன தம்பெயர் முதலும்.

**பொ - ள்.**—மொழிக்கு முதலில் வாராதென்ற ஏனை மெய்களும்
தம்பெயரின்கண் மொழிக்கு முதலாக வரும்.

மொழிக்குமுதலில் வாராத மெய்கள் அ, ஐ, ஔ இவை தொடர்ந்த சகரம், உ, ஊ, ஒ, ஓ இவை தொடர்ந்த வகரம், ஆ, எ, ஒ இவையல்லாத உயிர்தொடர்ந்த ஞகரம், ஆவல்லாத உயிர் தொடர்ந்த யகரம், ங, ட, ண, ர, ல, ழ, ள, ற, ன என்பன.

உ-ம் யகரவிறுதி (எழுத். 358), ஞகாரை (எழுத். 297), ணகாரம் (எழுத். 303).

"என என்றதனுன் முதலாம் என்னப்பட்ட ஒன்பது உயிர் மெய்யும் பன்னிரண்டு உயிரும் தம் பெயர் கூறும்வழியும் மொழிக்கு முதலாமெனக் கொள்க" எனக் கூறுகின்றனர் இளம்பூரணர். "என"



என்றதற்குப் பொருளாகவே "மொழிக்கு முதலாமென்ற ஒன்பது மெய்யும் பன்னிரண்டு உயிரும்" எனக் கொள்ளுகின்றனர் நச்சினார்க்கினியர். சொல்லதிகாரத்தில்

பொருண்மை தெரிதலுஞ் சொன்மை

தெரிதலுஞ்

சொல்லி னாகு மென்மனார் புலவர்

(சொல். 156)

என ஆசிரியர் கூறியிருக்கின்றமையின் மொழிக்கு முதலில் வரக் கூடும் என்று கூறப்பட்டவை தம்பொருண்மையையும் தஞ்சொன்மை

யையும் குறிக்கலாமாகலின்,
வேண்டாவாம்.
அவ்வாறு அவ்விருவருங் கொள்ளுதல்

முப்பது எழுத்துக்களுள் மொழிமுதலில் வருவனவற்றைக் கூறிப் பின்னர்ச் சார்பெழுத்துள் குற்றியலுகரம் மொழிமுதல் மெய்யைச் சார்ந்து ஓரிடத்து வருமென இச்சூத்திரத்திற் கூறினர்.

**67.** குற்றிய லுகர முறைப்பெயர் மருங்கின்
ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்.

போ - ள் முறைப்பெயரின்கண் நகரவொற்றின் முன்னர் மற்றொரு நகரவொற்றைச் சார்ந்து குற்றியலுகரம் மொழிமுதலாக வரும்.

உ-ம். நுந்தை.

61ஆவது சூத்திரத்தில் நகரம் எல்லாவுயிரொடுஞ் செல்லுமார் முதலே எனக் கூறப்பட்டிருக்க இச்சூத்திரம் எற்றுக்கு எனின், நூன்மரபில் அகரமுதல் ஔகாரவிறுவாயுள்ள எழுத்துக்களையே உயிராக ஆசிரியர் கூறினமையானும், எல்லாவுயிரொடும் என்றதனுள் குற்றியலுகரம் கொள்ளப்படாமையானும், இச்சூத்திரம் வேண்டு மென்க. நகரம் எல்லாவுயிரொடுஞ் செல்லுமென்றவாறு ஈண்டும் நகரம் குற்றியலுகரமோடு செல்லுமார் முதலே எனக் கூறாது குற்றியலுகரம் நகரமொடு முதலும் என ஏன் ஆசிரியர் கூறினார் எனின், ஆண்டு உயிர்மெய்களுள் உயிர் சிறப்புடைத்து என்றதை நோக்கியும், ஈண்டுச் சார்பெழுத்தாகிய குற்றியலுகரத்தினைக் காட்டிலும் அதன் சார்பாகிய மெய் சிறந்தது என்றதை நோக்கியு மென்க.

76

நகரத்தின் பின்னர் வருங் குற்றியலுகரத்தை மொழிக்கு முதலெனக் கூறுதல் எவ்வாறு பொருந்துமெனின், "அவையோருள் முன்னர் அரசனொடு வேலைக்காரன் வந்தான்" என்ற

வழக்குப்போலக் கூறினரென்க. ஆகவின் நுந்தை என்ற சொல்லின்கண் 'ந்தை' என்ற பகுதிக்கு முதலில் குற்றியலுகரம் வரும் என்றதே கருத்தாயிற்று.

நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே
(எழுத். 36)

என ஆசிரியர் கூறியிருக்க, ஈண்டு நகரத்தின் பின்னர் எவ்வாறு குற்றியலுகரம் வருமெனின், அவர்காலத்து 'நுந்தை' என்ற சொல்லி லுள்ள உகரம் முற்றியலுகரமாயுங் குற்றியலுகரமாயும் ஒலிக்கப் பட்டதை நோக்கி இச்சூத்திரங் கூறினர் என்க ஆகவின் முற்றிய லுகரங்கொண்ட நகரம் மொழிமுதலாய் வருமென 61ஆவது சூத்திரத்தாற் பெறப்பட, அவ்வுகரம் குற்றியலுகரமாகவும் ஒலிக்கப் பட்டது என்பது இச்சூத்திரத்தாற் கிடைத்த பொருளாகும்.

அவ்வாறாயின் நுந்தை என்றதற்கும் நுந்தை

என்றதற்கும் பொருளில் மாறுபாடு உண்டோ என்ற ஐயம் வர,

**68.** முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ
தப்பெயர் மருங்கி னிலையிய லான.

போ - ள்.—குற்றியலுகரம் அப்பெயர் மருங்கின் நிற்குமிடத்து முற்றியலுகரமொடு பொருளின்கண் வேறுபடாது.

நிலையியலான என்றதற்கு நிலையியலின்கண் எனப் பொருள் கூறினர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் அதனைப் பெயரெச்சமாகக் கொண்டு அதற்கு நிற்றலிலக்கணமான எனப் பொருள் கூறினர்.

" இரட்டுறமொழிதல் என்பதனால் பொருள் என்றதனை இடனும் பற்றுக்கோடும் ஆக்கிப் பிற உகரங்கள் போல ஈண்டை உகரங்கள் இடனும் பற்றுக்கோடும்

வேறுபடா என்பது
கொள்க" என இளம்பூரணரும், "இயலென்றதனுன் இடமும் பற்றுக்கோடும் இரண்டிற்கும் வேறுபாடின்றென்று கொள்க" என



நச்சினார்க்கினியருங் கூறினர். சார்பெழுத்திற்குப் பற்றுக்கோடு
எவ்வாறு இன்றியமையாதோ, அவ்வாறு உயிர்களுக்கு இல்லையாதலின், இத்தொடர்களான் மிக்க பயனில்லை யெனத் தோன்றுகின்றது.

இளம்பூரணத்தில் "குற்றியலுகரம் ஆண்டு இதழ் குவித்துக் கூறும்வழி முற்றுகரத்தோடு பிற உகரம்போலப் பொருள் வேறுபடாது" என்ற தொடர் உளது.
இதழ்குவிதலோடு ஒலிக்கப் படின் முற்றியலுகரமாதலானும், அவ்வாறு ஒலிக்கப்படாதிருப்பின் குற்றியலுகரமாதலானும் கூறும்வழி என்றவிடத்து கூறும் என்றிருப்பின் நலம்.

இவ்விரண்டு சூத்திரங்களிலும் நுந்தை என்ற சொல்லைப் போன்று, நுந்தாய் என்ற

சொல்லைக் கொள்ளல் கூடாதென "நுந்தா யென்பதோ வெனின் அஃது இதழ் குவித்தே கூறவேண்டுதலிற் குற்றுகரமன்று" என்ற தொடரான் விளக்கினர் நச்சினார்க்கினியர். அவ்வாறு கூறியதற்குக் காரணம் ஆசிரியர் காலத்து "நுந்தாய்" என்றதை "நும் தாய்" எனப்பிரித்தல் கூடுதலும், அவ்வாறு "நுந்தை" என்றதைப் பிரித்த லாகாதலு மென்க. அஃது எதனால் அறியப்படு மெனின்,

> தநநு எ எனு மவைமுத லாகிய
> கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா

(சொல் 410) என்ற சூத்திரத்தா லெனக் கூறல் வேண்டும்.

"காது கட்டு கத்து முருக்கு தெருட்டு என்பன முற்றுகரமுங் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற்போல" எனக் கூறினர் நச்சினார்க்கினியர். முற்றியலுகரமாய் இருத்தற்கு இலக்கணம் யாதெனத் தெரியவில்லை.

மொழிக்கு முதலில் வரு மெழுத்துக்களைக் கூறி, இறுதியில் வரு மெழுத்துக்களைக் கூறத் தொடங்கினர்.

**69.** உயிர் ஔவெஞ்சிய விறுதி யாகும்.

போ - ள். ஔகாரத்தை நீக்கிய உயிரெழுத்துக்கள் மொழிக்கு ஈறாகும்.



மொழி என்றது 60ஆவது சூத்திரத்தினின்றும் அதிகரித்தது.

உ - ம். ஆஅ, ஆ, பல, பலா...

இச்சூத்திரவுரையில் "இஃது உயிர்க்கும் உயிர்மெய்க்கும் பொது" எனக் கூறினர் உரைகாரர்கள். இம்மொழிமரபினுள் உயிரையும் மெய்யையும் தனி எழுத்துக்களாய்க் கொண்டு ஆசிரியர் சூத்திரங்கள் கூறினமையின், அவ்வாறு உரைகாரர்கள் கூறுதல் வேண்டா.

**70.** கவவோ டியையி னௌவு மாகும்.

போ - ள்:—(இறுதியாகாதெனக் கூறப்பட்ட) ஔவும் க், வ் இவற்றின்பின் வரின், இறுதியாகும்.

உ -ம். கௌ, வௌ.

இறுதி என்றது முன் சூத்திரத்திருந்து அதிகரித்தது.

**71.** எஎன வருமுயிர் மெய்யீ றாகாது.

போ- ள். எகரம் மெய்யின் பின்னர் மொழிக்கு ஈறாகாது. எனவே உயிரின் பின்னரே ஈறாகு மென ஆயிற்று.

உ-ம். ஏஎ கொண்டான்.

**72.** ஒவ்வு மற்றே னவ்வலங் கடையே.

போ - ள். நகரத்தைத் தவிர்த்து

ஏனைய மெய்களின் பின்னர்

ஒகாரமும் அத்தன்மைத்து. எனவே ஒகரம் உயிரின் பின்னரும் நகரத்தின் பின்னரும் வருமென ஆயிற்று.

உ-ம். ஓஒ கொண்டான்; நொ.

**73.** ஏஓ எனுமுயிர் ஞகாரத் தில்லை.

போ - ள். ஞகாரத்தின் பின்னர் ஏ, ஓ

என்பன மொழிக்கு ஈறாகா.

**74.** உஊ கார நவவொடு நவிலா.

போ-ள். உ, ஊ இவை முறையே ந், வ் இவற்றின் பின்னர் மொழிக்கு ஈறுகா.



உரைகாரர்கள் இருவரும் உ ஊ ஒவ்வொன்றும் நகரவகரங்களோடு வாரா எனப் பொருள் கொண்டனர்.

சேலவினும் வரவினுந் தரவினுங் கோடையினும் (சொல் 28) என்ற சூத்திரத்தில் செலவு, வரவு தரவு என்ற சொற்களை ஆசிரியரே வழங்கியிருத்தலானும், நு என்பது எள் ளெனப் பொருள்படு மெனச் சூடாமணிநிகண்டு கூறுதலானும், நிரனிறையாகப் பொருள் கொள்ளலாம். வகரவுகரம் ஈற்றில் வருதலை "நவிலா" என்றதனாற் கொள்ளுகின்றனர் உரைகாரர்கள்.

**75.** உச்ச கார மிருமொழிக் குரித்தே.

போ-ள். சகரத்தின பின்னர் உகரம் இருமொழிக்கண்ணே ஈறாய் வரும்.

உ-ம். உசு, முசு.

இச்சூத்திரவுரையில் "பசு என்பது ஆரியச்சிதைவு" என இளம்பூரணர் கூறுகின்றனர். அக்கொள்கையோடு உடன்பட்டனர் நச்சினார்க்கினியர். அச்சொல் தமிழிலக்கியங்களில் ஆசிரியர்காலத்து வழங்கப்படவில்லை எனக் கூறின் பொருந்தும்.

**76.** உப்ப கார மோன்றெ னமொழிப
இருவயி னிலையும் பொருட்டா கும்மே.

**பொ-ள்.** பகரத்தின் பின்னர் உகரம் ஒருமொழியின் ஈறாகவே வருமென்று கூறுவர். அது தன்பாலானும் பிறன்பாலானும் ஈரிடத்தும் பொருள் பெறும்.

உ-ம். தபு.

ஈண்டு இருவயினிலையும் என்றதற்குத் தன்வினை பிறவினை யென்னு மிரண்டிடத்தும் என உரைகாரர்கள் கூறினர். அவ்வாறு பொருள் கொள்ளற்கு

இதுசெயல் வேண்டு மென்னுங் கிளவி

இருவயி னிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும் (சொல்.
243.) என்ற சூத்திரமாகு மெனத்
தோற்றுகின்றது. அச்சூத்திரப்



போக்கை நோக்கின் ஈண்டும் "தன்பாலானும்..."
என்ற ஓரடி இருந் திருத்தல் கூடுமோ வென்ற ஐய
முண்டாகின்றது.

இளம்பூரணர் "இது படுத்துச் சொல்ல நீசா
எனத் தன்வினை. யாம், எடுத்துச் சொல்ல நீ
ஒன்றனைச் சாவி எனப் பிறவினையாம்"
எனக் கூறினர். படுத்துச்சொல்லுதலும்,
எடுத்துச்சொல்லு. தலும் மொழியின் ஒரு
பகுதியிலா, மொழி முழுவதுமா என
ஐய முண்டாகின்றது. எடுத்தலும்
படுத்தலும் உதாத்தம் அநுதாத்தம் என்றவற்றின்

பொருளில் வந்தன என்பது பொருத்த மாகத் தோன்றவில்லை*. ஆயினும் வீரசோழியவாசிரியரும் பிர யோகவிவேகநூலாரும் அவ்வாறு கூறியுள்ளனர்.

**77.** எஞ்சிய வெல்லா மெஞ்சுத லிலவே.

போ - ள். மூன் எட்டு சூத்திரங்களிற் கூறப்படாதன வெல் லாம் தம் பெயர் கூறின் வழங்கா தொழியா.

66-ஆவது சூத்திரத்தினின்று தம் பெயர் என்ற சொல் ஈண்டு அதிகரித்தது.

இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கொள்ளும் அந்நுவயம் " எஞ்சியவும் எஞ்சுத லில, எல்லாம் எஞ்சுத லில " என்றது. அது பொருத்தமாகத் தோன்றவில்லை.

உயிரிறுதியைக் கூறி மெய்யிறுதியைக் கூறத் தொடங்கினர். **78.** ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள வென்னும்

அப்பதி னொன்றே புள்ளி யிறுதி.

போ - ள். மொழியின் ஈறுயுள்ள மெய் ஞ்,
ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் என்ற
பதினொன்றே யாகும்.

உ-ம். உரிஞ், எண், பொருந்.....
இச்சூத்திரவுரையில் இளம்பூரணர் னகாரத்தை
ஈற்றின்கண்வையாது

* வடமொழியில் உதாத்தம் அநுதாத்தம் இவற்றை போல் தமிழ்மொழியில் சொற்களை ஒலித்தல் காணோம்.
ஒலிப்பது

81

மகரத்தோடு வைத்தது அதன் மயக்க இயைபு
நோக்கி" என்றும், நச்சினார்க்கினியர் "னகரம் ஈற்று
வையாது மகரத்தோடு வைத்தது வழக்குப்பயிற்சியும்

மயக்க இயைபும் நோக்கி " என்றுங் கூறினர். இந்திவரும் மெல்லெழுத்துக்களனைத்தையும் முதலினும் இடை யெழுத்துக்களனைத்தையும் அதன் பின்னரும் கூறுதல் ஆசிரி யர் முறையென்பது புள்ளிமயங்கியலான் நன்கு உணரப்படும். ஆக லின் அவ்விருவர்கூற்றும் ஆராய்தற்பாலன வாகும்.

**79.** உச்ச காரமொடு நகாரஞ் சிவணும்.

**பொ-ள்** நகாரம் சுகரத்தோடு பொருந்தும். அஃதாவது அதுபோன்று இஃது இருமொழிக்கு ஈறாய் வரும்.

**உ-ம்.** பொருந், வெரிந்.

"நகாரந்தானு மிருமொழிக் குரித்தே."

எனச் சூத்திரஞ் செய்யாது இவ்வாறு ஆசிரியர் ஏன் சூத்திரித்த னர் எனின், அக்காலத்தில் ஏடு முதலியவற்றில் நூல்கள் எழுதப் பட்டமையானும், பெரும்பான்மையும் படிப்போர் அவற்றை மனப் பாடஞ் செய்தமையானும், அதற்கு

முன்னுள்ளவற்றையும் பின் னுள்ளவற்றையும் ஞாபகப்படுத்திக் கூறும் முறை சிறந்ததெனக் கருதி ஆசிரியர் அவ்வாறு கூறின ரென்க.

**80.** உப்ப காரமோடு ஞகாரையு மற்றே
அப்பொரு ளிரட்டா திவணை யான.

பொ-ள். ஞகாரமும் புகரத்தோடு ஒருதன்மைத்தாகும். ஈண்டு அதன் பொருள் இரண்டாகாது.

உ-ம். உரிஞ்.

இச்சூத்திரவுரையில் இளம்பூரணத்தில் "ஞகாரம் ஒருமொழிக் கீறுதலின் பகரத்தின் பின் வைக்கப்பட்டது" என்றும், நச்சினார்க் கினியத்தில் "ஞகாரம் ஒருமொழிக்கு ஈறுதலின் நகரத்தின் பின் வைத்தார்" எனவும் உள. அவற்றுள் முன் பாடம் ஏட்டில் பிழை யாக எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.

அவ்வாறு அவர் கூறுதற்கு யாது காரணமெனின், 78-ஆவது சூத்திரத்தில் "ஞ ண ந ம ன" என்ற முறை யிருத்தலின் ஞகாரத்தைப்பற்றிய சூத்திரத்தை முன்னும் நகாரத்தைப்பற்றிய சூத்திரத்தைப் பின்னும் கூறுதல் முறையாயிருக்க, ஏன் ஆசிரியர் முறை மாற்றிக் கூறினர் என்ற ஐயமே யாகும். அவ்வாறாயின் நான்மொழியீற்றதாகிய வகரத்தைக் கூறி அதன்பின்னர் ஏன் நகரத்தைப்பற்றி ஆசிரியர் கூறவில்லை யெனின், மெல்லினவெழுத்துக்களை முன்னரும் இடையினவெழுத்துக்களைப் பின்னரும் ஆசிரியர் 78-ஆவது சூத்திரத்திற் கூறினமையான் என்க.

**81.** வகரக் கிளவி நான்மொழி யீற்றது.

பொ-ள். "வ்" என்ற எழுத்து நாலு மொழியின் ஈற்றில் வரும்.

உ-ம். அவ், இவ், உவ், தெவ்.

ஈண்டு கிளவி என்றது ஆகுபெயரான் எழுத்து

என்ற பொருளில் வந்ததென்பர் நச்சினார்க்கினியர். இது சினையிற்கூறுமுதலறிகிளவிக்கு ஆசிரியர் கூறிய உதாரணமாகும்.

மொழியீற்றில் வரும் மெய்களைக் கூறிய பின்னர், மகரமும், னகரமும் அஃறிணைப்பெயருள் சிலவற்றுள் மயங்கா தெனக் கூறி, ஏனையிடங்களில் அவை மயங்கு மெனக் குறிப்பா லுணர்த்துகின்றனர்.

**82.** மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி யொன்பஃ தென்ப
புகரறக் கிளந்த வஃறிணை மேன.

பொ-ள். குற்றமறச் சொல்லப்பட்ட அஃறிணைப்பெயருள் மகரவீற்றுத் தொடர்மொழியாக மயங்காத னகரவீற்றுத்தொடர் மொழி ஒன்பது எனக் கூறுவர் (புலவர்).

இறுதி என்ற சொல் 78-ஆவது சூத்திரத்தினின்று அதிகரிக்கப்பட்டு "மகரத் தொடர் மொழி", "னகரத் தொடர்மொழி" என்ற

சொற்களின் மகரம் னகரம் என்றதன் பின்னர்க் கொள்ளப்·



பட்டது. இச்சூத்திரத்துள் " அஃறிணைமேன எனப் பொதுப் படக் கூறப்படினும், அஃறிணைப்பெயரையே கொள்ளல் வேண்டும்" என்றனர் இளம்பூரணர். அவ்வாறு கூறுதற்குக் காரணம் வினைகளி னீற்றின் னகரம் மகரமாக மயங்கின் ஆடூஉவறிசொல்லினைக் குறிக்காது.

இச்சூத்திரத்தால் அறியக் கிடப்பன சில வாகும். ஆசிரியர் புகரறக் கிளந்த என்ற அடைமொழியைக் கூறுதலின், அவர் காலத்தே னகரவீற்றுத்தொடர்மொழி மகரவீறாக மிகுதியாக மயங்கிற்று என்பதொன்று. தொடர்மொழி என்றமையின் அவர் காலத்து ஈரெழுத்தொருமொழியில் அம்மயக்கமில்லை என்பது மற்றொன்று. னகரத்தொடர்மொழி

மயங்குமே யன்றி, மகரத் தொடர்மொழி னகரத்தொடர்மொழியாக மயங்குதலின்று என் பது மூன்றாவது.

நச்சினார்க்கினியத்தில் "வட்டம், குட்டம், ஓடம், பாடம் இவைபோல்வன மயங்காதன. வரையறை னகரத்தின் மேற் செல் லும்" என்ற தொடர் உளது. மேற்செல்லு மாகலான் என்ற பாடம் இருப்பின் பொருள் தெளிவாய்ப் புலப்படும்.

மொழிமரபு முற்றும்.

---

## 3. பிறப்பியல்.

எழுத்துக்களின் வகை, தொகை, தன்மை,

அவ்வெழுத்து மொழிகளில் வரும் இடம், இவற்றை நூன்மரபு, மொழிமரபு இவ் விரண்டியலுட் கூறினர். அவற்றின் பின்னரும், இருசொற்கள் புணரும்போது நிகழும் மாறுதல்களை அறிதற்கு அவ்வெழுத்துக்கள் பிறக்கும் இடத்தின் அறிவு இன்றியமையாமையின் புணர்ச்சியைப் பற்றிக் கூறும் இறுதியாறுயியல்களுக்கு முன்னரும், எழுத்துக்க ளின் பிறப்பிடத்தை உணத்தினர்.
அக்காரணம்பற்றி இவ்வியலுக் கும் பிறப்பியல் எனப் பெயர் வந்தது.

ஒவ்வொரு எழுத்தின் பிறப்பிடத்தைக் கூறுதற்கு முன் எவ் வாறு உடல்வளி எழுத்தாக மாறுகின்றதென்றும், எவ்விடங்களிற் செல்ல அவ்வாறு மாறுமென்றும் உணர்த்த இச்சூத்திரத்தைக் கூறினர் ஆசிரியர்.

**83.** உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினு மிடற்றினு நெஞ்சினு நிலைஇப்
பல்லு மிதழு நாவு மூக்கும்
அண்ணமு முளப்பட வெண்முறை
நிலையான்

உறுப்புற் றமைய நெறிப்பட நாடி
எல்லா வெழுத்துஞ் சொல்லுங் காலைப்
பிறப்பி னுக்கம் வேறுவே றியல
திறப்படத் தெரியுங் காட்சி யான.

பொ - ள். உதானன் (முந்துவளி) கொப்பூழின்கண் முதலாகத் தோன்றி, தலை, மிடறு, நெஞ்சு, பல், இதழ், நா, மூக்கு, அண்ணம் இவை எட்டிடத்தின்கண்ணும் முறையாக நிலைபெற்று, தனித்தனி எழுத்தாக உறுதற்குப் பொருந்துமாறு வழியின்கண் பொருந்த நாடி, எல்லாவெழுத்துக்களாகவுங் கூறப்படுமிடத்து, அவ்வெழுத்துக்களின் பிறப்பு வெவ்வேறு தன்மையன என்பது (நுண்ணறிவான்) ஆராய்ச்சியின்கண் சீர்மைப்பட அறியப்படும்.

இச்சூத்திரத்தான் உதானன் என்ற உடல்வாயு எட்டிடத்தில்
நிலைபெற்று வெவ்வேறு எழுத்துக்களாக மாறும் என்பதும், அஃது ஒவ்வொருவரானும் ஆராய்ந்து காட்சிப்பிரமாணத்தால் அறியப்படும் என்பதும் உணர்த்தப்பட்டன. மேலே கூறியவாறு பொருள்

கூறின், சூத்திரம் ஆற்றொழுக்காக அமைக்கப்பட்டதாகும் "தலை யினும் மிடற்றினும் நெஞ்சினும்" என்றதிலுள்ள இன் பழியி னென்று, கற்பினென்று (சொல். 72). என்றவிடத்துள்ள இன் போன்றதாகும்.

சூத்திரத்துள் தலை, மிடறு, நெஞ்சு, பல், இதழ், நா மூக்கு, அண்ணம் என்ற முறையிருப்பினும் உதானன்
செல்லும் வழியின் முறை நெஞ்சு, மிடறு, தலை, மூக்கு, அண்ணம், நா, பல், இதழ், என்றிருத்தலான் அம்முறையையே கொள்ளல் வேண்டுமென்று
உணர்த்த ஆசிரியர் " எண்ணிலையான் " எனக் கூறாது " எண்முறை நிலையான் " எனக் கூறினர்.
சொல்லுங்காலை, தெரியும் என்பன

சொல்வகையான் செய்வினையாயிருப்பினும், பொருள்வகையான் செயப்பாட்டுவினையாகக் கொள்ளப்பட்டன. தெரியும் என்ற பயனிலைக்குப் பிறப்பினுக்கம் வேறு வேறியல என்ற தொடர் எழுவாயாகக் கொள்ளப்பட்டது.

இளம்பூரணர் இச்சூத்திரத்திற்குக் கூறும் பொருளாவது— தமிழெழுத்துக்களெல்லாம் ஒருவன் முறைப்பட ஆராய்ந்து தம்மைச் சொல்லுங்காலத்து கொப்பூழ் அடியாக மேலே கிளர்கின்ற உதானன் என்னும் பெயரையுடைய வாயுத் தோன்றி தலையின்
கண்ணும் மிடற்றின்கண்ணும் நெஞ்சின்கண்ணும் நிலைபெற்று, தலையும் மிடறும் நெஞ்சும் என்னும் மூன்றனோடும் பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உளப்பட எட்டாகிய முறைமையையுடைய இடங்களில் ஓர் உறுப்போடு ஓர் உறுப்புத் தம்மிற்பொருந்தி அமைதிபெற, பிறப்பினது ஆக்கம் வேறு வேறு புலப்பட்டு வழங்குதலுடைய கூறுபாடுளதாக ஆராயுமறிவிடத்து.
இதழ் போறலான் வாய் இதழெனப்பட்டது.

எல்லா வெழுத்தும்
என்னும் எழுவாய்க்கு " பிறப்பினுக்கம் வேறு
வேறு இயல" என் பதனை ஒரு
சொன்னீர்மைப்படுத்திப் பயனிலை யாக்குக.

## 86

ஈண்டு தலையினும், மிடற்றினும்,
நெஞ்சினும் இம்மூன்றனை
" நிலைஇ" என்றதைத் தழுவக் கூறினமையின்
'எண்முறை நிலை
யான்' என்றது பொருந்தாதெனக் கருதி,
மறுமுறை " தலையும்
மிடறும், நெஞ்சும் என்னும் மூன்றனோடும் "
என்பதைக்கூட்டிக்
கூறினர். " நெறிப்படநாடி " என்றதற்கு
வளியை எழுவாயாய்க்
கொள்ளுதல் நேரிதாயிருக்க, ஒருவன் என்றதை
எழுவாயாக்கினர்.

" உறுப்புற்றமைய " என்றதற்கு " ஓர் உறுப்போடு ஓர் உறுப்புத்
தம்மிற் பொருந்தி அமைதிபெற" என்ற பொருள் கொள்ளுதலான்
அவ்வளியே எழுத்தாக மாறுகின்றது என்றது கூறப்படாததா
யிற்று. " பிறப்பினுக்கம் வேறுவேறியல" என்றதை ஒரு சொன்
னீர்மைப்படுத்தல் நேரிதாகத் தோன்றவில்லை. " இதழ்போறலான்
வாய் இதழெனப்பட்டது " என்றதும் பொருந்தாக் கூற்றாகும்,
" இதழியைந்து பிறக்கும் பகாரமகாரம் " என்ற சூத்திரத்தின்
இதழ் என்றது வாயைக் குறிக்கின்றது எனக்கூற இயையாமையின்.
அச்சூத்திரவுரையில் " இதழ் " என்றதற்கு " வாய் " என்று
பொருள் கூறாமையின், இத்தொடர் இடைச்செருகலாயிருக்கலா
மெனத் தோன்றுகின்றது.

நச்சினார்க்கினியர் கூறும் பொருளாவது — தமிழெழுத்து

எல்லாவற்றிற்கும் ஆசிரியன் கூறிய பிறப்பினது தோற்றரவை

யாங் கூறுமிடத்து கொப்பூழடியாகத் தோன்றி முந்துகின்ற உதான

னென்னுங் காற்று தலையின்கண்ணும் மிடற்றின்கண்ணும் நெஞ்சின்

கண்ணும் நிலைபெற்று பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமு

மென்ற ஐந்துடனே அக்காற்று நின்ற தலையும் மிடறும் நெஞ்சுங்கூட

எட்டாகிய முறைமையையுடைய தன்மையோடு கூடிய உறுப்புக்

களோடு ஒன்றுற்று இங்ஙனம் அமைதலானே அவ்வெழுத்துக்களது

தோற்றரவு வேறு வேறு புலப்பட வழங்குதலையுடைய அதனை அறி

வானாராய்ந்து அவற்றின் வழியிலே மனம்பட அப்பிறப்புவேறுபாடு

களெல்லாங் கூறுபட விளங்கும்.

தலையினும், மிடற்றினும், நெஞ்சினும்

நிலை இ என்றதன்
பொருளை உரையாசிரியர் கூறியவாறே கூறினர். ஆண்டுக் கூறிய
குற்றம் ஈண்டும் நிற்கும். 'உறுப்பு' என்ற சொல் தலை, மிடறு
முதலியவற்றைக் குறிக்கின்றது என்றது பொருத்தமாகத் தோன்றவில்லை. "வேறு வேறியல" என்றதற்கு "அவ்வெழுத்துக்களது



தோற்றரவு" என்றதை எழுவாயாக வருவிக்கின்றனர். "காட்சி
யான நாடி நெறிப்பட" என்ற
அந்நுவயங்கொள்ளுவது சூத்திரப் போக்கிற்குப் பொருந்துமாறில்லை. "தெரியும்" என்றதற்குப் அப்பிறப்பு வேறுபாடுகளெல்லாம்" என்றதை எழுவாயாக வருவிக்
கின்றனர். இங்ஙனங் கூறவே முயற்சியும் முயலுங் கருத்தாகவும் '
உண்மை பெற்றும்" எனக் கூறினர். எழுத்துக்கள் கூறுவோனின்றிப்
பிறவாமையானும், உதானவளி எட்டு இடங்களில் நிலைபெற்று

அமைதலான் வெவ்வேறு எழுத்துக்களாக உருவமெடுக்கின்றது

என்றதே இச்சூத்திரத்தின் கருத்து ஆகலானும், அவர் கொள்ளும்

அந்நுவயமும், பொருள்கூறும் முறையும் சிறவா.

ஈண்டு நெஞ்சு, மிடறு, தலை இவற்றை ஆசிரியர் கூறியதற்குக் காரணம் அவ்வளி கொப்பூழின்கண்ணின்றும் புறப்பட்டு அவற்றின் வழியே சென்று வாயை யடைதலே யாகும். வாய்க்குள் காற்று வந் தடைந்த பின்னரே அஃது உயிராகவோ, வல்லினமெல்லினமா கவோ, இடையினமாகவோ ஆகும். வாய் முழுவதுந் திறந்திருக்க அவ்வளி எழுத்தாக ஆகுமாயின், அஃது உயிராகவே யாகும். சிறிது மூடியுஞ் சிறிது திறந்துமிருக்க எழுத்தாக ஆமாயின், அஃது இடையினவெழுத்தாகவேனும் றகரமாகவேனுமாகும், வாய் முழுவதும் மூடப்பட்டிருக்க

அவ்வளி எழுத்தாகுமாயின், றகர மொழிந்த வல்லினமெல்லினவெழுத்தாகும். வல்லினங்களை ஒலிக்கும்போது தொண்டையிலுள்ள இரண்டு நரம்புகள் இடம் விட்டு நிற்குமென்றும், மெல்லினங்களை ஒலிக்கும்போது அவை நெருங்கி நிற்குமென்றுங் கூறுவர் மொழிநூல்வல்லோர். ஆகலின் 100-ஆவது சூத்திர

வுரையில் "இடையெழுத்திற்கு மிடற்றுவளியும் வல்லெழுத்திற்குத் தலைவளியும் கொள்க" என இளம்பூரணர் கூறுதல் பொருந்தாததா

கும். அவ்வாறு கூறுபடுத்தியவர் எனக் கூறுதும் போயினர்.

நெஞ்சுவளி எவ்வெழுத்திற்கு

அவ்வாறே வீரசோழியவுரைகாரர் "உரத்தை வல்லினமும் சிரத்தை ஆய்தமும், கண்டத்தை உயிரும் இடையினமும், மூக்கை மெல்லினமும் பொருந்துமெனக் கொள்க" எனக்

கூறியதும், அவரைப் பின்பற்றி

நன்னூலார் கூறியதும்

பொருந்தாவென்க. இச்சூத்திரப்



பொருளுக்கும் பாணினிமுனிவரா னியற்றப்பட்ட சிக்ஷையிலுள்ள

சிலதொடரின் பொருளுக்கும் ஒற்றுமை நோக்கத்தக்கது*. இரண்

டற்கும் வேற்றுமை சிறிதுளது. ஆங்குள்ள ஜிஹ்வாமூலம்

என்றதற்கு நாவின் வேர் என்றது பொருளாகும். கவர்க்கத்தின்

முதலிரண்டெழுத்துக்களுக்கு முன்னர் ஒலிக்கப்படும் விஸர்க்கத்திற்கு அஃது இடமாதலின் பாணினி முனிவர் அவ்வாறு கூறினர்.

அதற்கு முதல்நா என்றதையே இடமாகக்கொள்ளல் தகுமென்றும்

நா எல்லா வெழுத்துக்களையும் ஒலிக்கக் கருவிவாய் இருக்கின்றது என்றுங் கருதி ஆசிரியர் "நாவின் வேர்" எனக் கூறாது "நா"

எனக் கூறினர் என்னலாம். "தாலு" என்றது சுவர்க்கத்திற்கு இடமாகக் கூறப்பட்டமையான், அஃது இடையண்ணத்தைக் குறிக்கின்றது எனச் சிலர் எண்ணலாம். "தாலு" என்ற சொற்கு அண்ணம் முழுமையும் பொருளாகலான், ஆங்கு இருவர்க்கும் வேற்றுமை யிலது.

பா-ம். நச். ம. பதி.. "அவற்றின் வழிபடத் தெரியுமென்க"

நச். தா. சை. பதி. "அவற்றின் வழியிலே மனந் திறப்படத் தெரியுமெனக் கூட்டி உரைத்துக் கொள்க."

உந்தி முதலாகத்தோன்றிய வளி எவ்வெழுத்தாக மாறினும் மிடற்றினின்றும் வாய்க்குள் வரும்வரை தன்னுடைய நிலையில் திரியாது என்றதையும், வாய்க்குள் அவ்வவ்விடத்தில் அவ்வளி மெய்யாக மாறும்போது தடைபடும் என்றதையும், உயிராக மாறும்போது அவ்வளி தடைபடாமல் வாயைவிட்டு வெளியில் வரினும், அது அவ்வவ்வுயிராக மாறுமிடம் வாய்தான் என்றதையும் நன்குணர்ந்த ஆசிரியர் மிடற்றுவரை, உயிராக மாறும் வளி, தன்னிலையினின்றும் மாறாது என்றதை உணர்த்த இச்சூத்திரங் கூறினர்.

*[illegible]

[illegible]

[illegible]
[illegible]



**84.** அவ்வழிப்

பன்னீ ருயிருந் தந்நிலை திரியா
மிடற்றுப் பிறந்த வளியி னிசைக்கும்.

பொ - ள். அவ்விடத்து, மிடற்றுத் தோன்றிய வளியினின்றுமப பன்னீருயிரும் தத்தம் இடங்களின்கண் திரிந்து ஒலிக்கும். திரியா என்பது விதிவினையெச்சம்.

இளம்பூரணர் அதனை மறைவினையாலணையும் பெயராகக் கொண்டு அதன்பின்னர் "ஆய்" என்ற வினையெச்சத்தை வருவித்துக் கூறினர். உயிர்கள் தத்த மிடங்களில் திரிகின்றமையான் அவ்

வாறு கூறுதல் பொருந்தாது.

நச்சினார்க்கினியர் " அவ்வழி " என்றதைப் " பிறந்த " என்றதனோடு கூட்டி " அவ்வுந்தியிடத்துப் பிறந்த " எனப்பொருள் கூறதலோடு " நிலை " என்ற சொற்கு மாத்திரை எனப் பொருள் கூறினர். வாயைவிட்டுப் புறத்தே வளிவருகின்ற காலத்தானே உயிர்களின் மாத்திரை வேறுபடுகின்றமையானும், வளி மிடற்றின் கண்ணே யிருக்குமளவில் அவற்றிற்கு மாத்திரை புலப்படாமையா

னும், அவர்தங்கூற்று ஆராய்தற்குரியது. அன்றியும் இருவரும் " தந்நிலை திரியா " என்றதனால் குற்றியலிகரம் குற்றியலுகரம் தந் நிலை திரியுமென்பது பெறப்பட்டது " எனக் கூறினர். ஈண்டுப் பன்னீருயிரைப்பற்றி மாத்திரம் கூறப்படுகின்றமையானும், சார் பெழுத்துக்களைப்பற்றிப் பின்னர் ஆசிரியர் கூறுகின்றமையானும், இத்தொடர் இடைச்செருகலா யிருக்கலாம்.

இனி நான்கு சூத்திரங்களான் உயிரெழுத்துக்களின் பிறப்பிடமும் முயற்சியும் கூறுகின்றனர்.

**85.** அவற்றுள்

அ ஆ வாயிரண் டங்காந் தியலும்.

போ - ள். அவ்வுயிர் பன்னிரண்டனுள் அ, ஆ இவ்விரண்டும் வாயைத் திறக்கப் பிறக்கும்.

1a

90

அங்காத்தல் என்ற சொல்லான் ஈண்டு அகரஆகாரங்கட்குப் பிறப்பிடமும் முயற்சியும் கூறப்பட்டன வெனக. முதல்நாவும் முதலண்ணமுஞ் சேர்கின்ற இடந் திறத்தலே அங்காத்தல் என்ற சொல்லான் உணர்த்தப்படுதலின், அவ்விடமே அவ்விரண்டெழுத்திற்கும் பிறப்பிடமாகும் *. வாய்திறத்தல் என்ற பொருளால் அதன் முயற்சியும் கூறப்பட்டதாகும். இதனை உணர்ந்தே இளம்பூரணர் "அங்காந்து சொல்ல அஃது இடமாகப் பிறக்கும்"

எனறனா.

நச்சினார்க்கினியர்

" அங்காந்து கூறும் முயற்சியாற் பிறக்கும் "
என்றனர். அவர்கூற்றில் அகர ஆகாரங்கட்குப் பிறப்பிடம் கூறப் படாததாகும். சிலர் அவற்றிற்கு வாய் முழுவதையும் பிறப்பிடமாகக் கொள்வர்.

**86.** இ ஈ எ ஏ ஐயென விசைக்கும்
அப்பா லைந்து மவற்றோ ரன்ன
அவைதாம்
அண்பல் முதலு விளிம்புற லுடைய.

பொ - ள். இ, ஈ, எ, ஏ, ஐ என்ற ஐந்தெழுத்துக்களும் அவற்றின் தன்மையவாய் அங்காந் திசைத்து மேல்வாய்ப் பற்களுக்குப் பின்னருள்ள அண்ணமும் நாவிளிம்பும் பொருந்துதலை யுடைய.

ஈண்டு " இசைக்கும்," " உடைய " என இரண்டு பயனிலைகளும், " அப்பாலைந்தும்", " அவைதாம் " என்ற இரண்டு எழுவாய்களும் இருத்தலின் வாக்கியபேதம் என்ற குற்றம் வாராதோவெனின், வாராதென்க, அவைதாம், அப்பாலைந்தும் என்ற இரண்டு சொற்களானும் ஒரு பொருள் குறிக்கப்படுதலின்.

" அவற்றோரன்ன " என்ற சொல்லான் " அங்காந்தியலும் " என்றது குறிக்கப்படுகின்றமையான் அதனானே பிறப்பிடம் முயற்சி இரண்டுங் குறிக்கப்படுமெனக் கொள்ளலாமே யெனின், அற்றன்று, " அண்பன் முதனா விளிம்புறலுடைய " என்றதனான் பிறப்பிடங் குறிக்கப்படுதலின், " அவற்றோரன்ன " என்றதனான் அவற்றின் முயற்சி மாத்திரங் கொள்ளப்படும்.

*Cf. கண்ணத்: அகாரஃ (கூ, வ, ர, I. 8)

# 91

ஈண்டு " அண்பன் முதனா விளிம்புறல் " என்றது இரண்டாம் வேற்றுமையாய் " உடைய " என்றதற்குச் செயப்படுபொருளாயிற்று. " உடைய " என்ற குறிப்புவினை செயப்படுபொருளைக் கொள்ளுமோ வெனின், கொள்ளுமென ஆசிரியர்

இரண்டாகுவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பு
அவ்விரு முதலிற் றோன்று மென்ப. (சொல். 71)

என்ற சூத்திரத்திற் கூறினா ரென்க.

"அண்பல்முதனுவிளிம்பு" என்றதை
அண்பல்முதல், நாவிளிம்பு எனப் பிரித்தல் தகும்.
அண்ணம் நண்ணிய பன்முதல்
என்பதே அதற்குப் பொருளாகும்.
காரர் பிரித்தது ஆராய்தற்பாலது.
அண்பல் முதனு என உரை

பிறப்பிடத்தில் இகாரஎகாரஐகாரங்கட்குச் சிறிது வேறுபாடிருப்பினும் ஓரினத்தவாகக் கூறியதற்குக் காரணம் ஆசிரியரே "தத்தந் திரிபே சிறிய வேன்ப" (எழுத். 88) என்ற சூத்திரத்திற் கூறியுள்ளார்.*

**87.** உ ஊ ஒ ஓ ஒள வென விசைக்கும்
அப்பா லைந்து மிதழ்குவிந் தியலும்.

**பொ - ள்.** உ, ஊ, ஒ, ஓ, ஒள
இவ்வைந்தெழுத்துக்களும்
அத்தன்மையவாய் அங்கா முயற்சியுடன் இதழ்களைக் குவித்து ஒலிக்கப்படும்.

இவற்றின் பிறப்பிடமும் பகாரமகாரங்களின் பிறப்பிடமும் ஒன்றாக ஆசிரியர் கூறியிருத்தல் நோக்கத்தக்கது †.

ஈண்டு முற்சூத்திரத்தினின்று அவற்றேரன்ன என்ற தொடர் அதிகரித்தது.

* இவ்வாறே ஐந்தெழுத்திற்கும் ஒரே இடமாக ருக்வேதப்ராதி சாக்கியத்தில் முதற்படலம் 19-ஆவது சூத்திரத்திற் கூறப்பட்டது காண்க.
தாலுாவ்யா ஹகார அகார வர்ஜா
விகாரகாவெளகார: பகார:

† இவ்வாறே ருக்வேதப்ராதிசாக்கியத்திலுமுளது I,20.



## 88. தத்தந் திரிபே சிறிய வென்ப.

போ - ள். இ, ஈ, எ, ஏ, ஐ என்ற எழுத்துக்களுள் இ, ஈ இரண்டும் ஓரிடத்திற் பிறப்பினும், எ, ஏ இவ்விரண்டும் வேறிடத் திற்

பிறப்பினும், ஐகாரம் வேறிடத்திற் பிறப்பினும், அம்மூவகை எழுத்துக்களுக்கும் முயற்சியும் வேறுபடினும், அவ்வாறே உ, ஊ, ஒ, ஓ, ஔ இவற்றுள் உகாரஊகாரங்கட்கும் ஒகாரஓகாரங்கட்கும் ஔகாரத்திற்கும் பிறப்பிடமும் முயற்சியும் வேறுபடினும், தத்தம் வேறுபாடு சிறிய என்று கூறுவர் புலவர்.

இச்சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் " இது முற்கூறிய உயிர்க்கும் மேற்கூறும் மெய்க்கும் பொதுவிதி கூறிச் சிங்கநோக்

காகக் கிடந்தது" எனபர். பின்னருள்ள மெய்களின் இடத்தையும் முயற்சியையும் வெளிப்பட நன்கு ஆசிரியரே கூறியிருத்தலின், இச் சூத்திரம் மெய்களின் பிறப்பிடத்தைக் கூறுமிடத்துச் செல்ல வேண்டுவதில்லை. அன்றியும் " அவை எடுத்தல் படுத்தல் நலிதல் விலங்கல் என்றவாற்றானுந் தலைவளி நெஞ்சுவளி மிடற்றுவளி மூக்கு வளி என்றவாற்றானும் பிறவாற்றானும் வேறுபடுமாறு நுண்ணுணர் வுடையோர் கூறி உணர்க" என்று அவர்

கூறுகின்றார். எடுத்தல், படுத்தல், நலிதல், விலங்கல் என்ற சொற்கள் * உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், ப்ரசயம் என்ற ஸ்வரங்களைக் குறித்தலானும், அவை வடமொழியிற்போல தமிழ்மொழியில் அவ்வாறே வழங்கப் பட்டன என்றற்குப் பழைய சான்று ஒன்றுமில்லாமையானும் அவை ஒவ்வோரெழுத்திற்கும் இருக்கின்றமையான் "தத்தம்" என்ற சொல் பொருந்தாமையானும், அவர் தங்கூற்று ஆராய்தற் பாலது.

வல்லினம் தலைவளி யுடையது என்றும், இடையினம் மிடற்று வளி யுடையது என்றும் நச்சினார்க்கினியர் இங்குக் கூறியதற்குக் காரணம் 100-ஆவது சூத்திரவுரையில் இளம்பூரணர் அவ்வாறு கூறியதாயிருத்தல் கூடும். அவ்வாறாயின் நெஞ்சுவளியால் உண்டாம் இனம் யாதென இருவருங் கூறவில்லை. அன்றியும் மெல்லினங்களெல்லாம் தாங்கூறிய இடங்களுடன் மூக்கினையும் இடமாகக்கொள்

* *Cf.* பி. வி. 40; வீர. சந். 4.

விலங்கல் என்பதற்குப் பிரதியாக ஓயாதுாப்பல் என வழங்கிற்று வீரசோழியம்.

93

ளும் என ஆசிரியரே 100-ஆவது சூத்திரத்திற் கூறினமையான் மூக்குவளியான் மாத்திரம் அவை பிறக்கின்றன என்று கூறுதல் தவ .றாகும்.அவற்றைஒலிக்கும்போது சிறிது வளி வாய்வழியாகவும்,சிறிது மூக்கு வழியாகவும் வருதலை ஒவ்வொருவரும் உணரலாகும். இடை யினம் என்பன முழுதும் வாய் திறந்து ஒலிக்கப்படும் உயிருக்கும் முழுதும் வாய்மூடி ஒலிக்கப்படும் வல்லினமெல்லினங்களுக்கும் இடையே வாய் சிறிது மூடியும், சிறிது திறந்தும் ஒலிக்கப்படுகின்ற மையின் அப்பெயர் பெற்றனவே யன்றித் தலைக்கும் நெஞ்சிற்கும் இடையிலுள்ள மிடற்றுவளியாற் பிறத்தலான் அப்பெயர் பெற வில்லை. ஆகலின் இடையினம் மிடற்றுவளியுடையது எனக் கூறுதலும் பொருந்தாது.

பா-ம். நச். ம. பதி. வல்லினம் தலைவளியுடைய மெல்லி னம் மூக்குவளியுடைய, இடையினம் மிடற்றுவளியுடைய.

நச். தா. சை. பதி. வல்லினம் தலைவளியுடையது, மெல்லினம் மூக்குவளியுடையது, இடையினம் மிடற்றுவளியுடையது.

உயிரெழுத்துக்களின் பிறப்பிடத்தையும் முயற்சியையுங் கூறிப் பின்னர் 12 சூத்திரங்களில் மெய்யெழுத்துக்களின் பிறப்பிடத்தை யும் முயற்சியையும் ஆசிரியர் கூறுகின்றனர்.

**89.** ககார ஙகார முதனா வண்ணம். *

பொ - ள். க், ங் இவை யிரண்டும் நாவடியோடு பொருந்திய அண்ணத்தின்கண் பிறக்கும்.

இயலும் என்ற சொல் 87-ஆவது சூத்திரத்தினின்று அதி கரித்தது.

முதனாவண்ணம் என்றது முதனாவோடு பொருந்திய அண்ணம்

என்ற பொருளில் வந்த வேற்றுமைத்தொகை. அஃது ஈண்டு ஏழாம்வேற்றுமையுருபு தொகப் பெற்றது.

இச்சூத்திரவுரையில் உரைகாரர்கள் இருவரும் முதல் என்றதை அண்ணம் என்றதனோடுங் கூட்டி உரைத்தனர். முதனாவோடு

*Cf.* * ஹநூமூலே
ஜிஹ்வாமூலேந கவர்கே ஸ்பர்ஶயதி —

(தை. ப்ரா 2,35)

94

பொருந்தும் அண்ணத்தின் பகுதி அண்ணத்தின் முதல் ஆகுமே யன்றி மற்றொரு பகுதி ஆகாமையானும், சிறப்பித்துக் கூறவேண்டிய இடத்தே அடைமொழி இன்றியமையாததானும், அவ்வாறு கூட்டிச் சொல்லவேண்டுவதின்று. அவர்கள் கூட்டிச் சொன்னதற்குக் காரணம் முதனா அண்ணம் என்றதை இரண்டு தனிச்சொற்களாகக் கொண்டமையும், உற என்ற சொல்லை வருவித்தமையும் ஆகும்.

உயிர்களின் பிறப்பிடத்தைக் கூறிய பின்னர்

ககாஙகாங்களின் பிறப்பிடத்தை என் ஆசிரியர் கூறினரெனின், நெடுங்கணக்கில் உயிர் களின் பின்னர் அவ்வீரெழுத்தே இருக்கின்றமையானும், அம் முறையை எழுத்தெனப்படுப வகரமுத னகரவிறுவாய் என்ற முதற் சூத்திரத்தில் ஆசிரியர் கொண்டமையானு மென்க.

பா-ம். நச். ம. பதி. க ங என விவற்றின் வேறுபாடும் உணர்க.

நச். தா. சை. பதி. க ங என விவற்றின் வேறுபாடு உணர்க.

**90.** சகார ஞகார மிடைநா வண்ணம். *

பொ-ள். ச், ஞ் இவை இடைநாவோடு பொருந்து மண்ணத் தின்கண் பிறக்கும்:

ஈண்டும் இயலும் என்ற சொல் அதிகரித்தது.

இடையை இரண்டற்குங் கூட்டவேண்டும் என்ற உரைகாரர் களது கொள்கை

இன்றியமையாததன்று என்பது முற்சூத்திர
வுரையான் விளங்கும்.

பா-ம். நச். தா. பதி. வேறுபாடும் உணர்க.

நச். தா. சை. பதி வேறுபாடு உணர்க.

* தாலௌ ஜிஹ்வாமத்⁴யேந இவர்ணே
—(தை. ப்ரா 2,36)

தாலுஸ்தா²நா மத்⁴யேந

தாலவ்யாநாம் மத்⁴யஜிஹ்வம்

—(ரு. ப்ரா 1, 79)

—(ஶு. ப்ரா 1, 21)



**91.** டகார ணகார நுனிநா வண்ணம்.

பொ-ள். ட், ண் என்பன
ணத்தின்கண் பிறக்கும் *
நா நுனியோடு பொருந்திய அண்

இயலும் என்பது ஈண்டு மதிகரித்தது.

நச். ம. பதி. வேறுபாடும் உணர்க.

நச். தா. சை. பதி. வேறுபாடு உணர்க.

**92.** அவ்வா றெழுத்து மூவகைப் பிறப்பின.

பொ-ள். மேற்கூறப்பட்ட ஆறெழுத்துக்களும் பட்ட பிறப்பினை யுடைய.

மூவகைப்

இச்சூத்திரம் மேலனவற்றிற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று என இளம்பூரணரும், மேலனவற்றிற்கோர் ஐய மகற்றியது என நச்சினார்க்கினியருங் கூறி அவை நிரனிறை வகையான் அறுவகைப் பிறப்பின அல்ல என இச்சூத்திர முணர்த்துகின்றது என இருவருங் கூறினர். வருஞ் சூத்திரங்களில் நாநுனி அண்ணம் நண்ணிய பன்முதல் மருங்கின் ஒற்ற எனவும் நாநுனி அண்ணம் வருட எனவும் ஆசிரியர் கூறியிருத்தலைக் காணின், நிரனிறைவகை யாற் கொள்ளுத லியலாது எனப் பெறப்படுமாதலானும், " றஃகா னஃகா னுயிரண்டும் " " ரகார ழகார

மாயிரண்டும் ".

"லகார ளகார மாயிரண்டும்" என்றவிடத்து ஆயிரண்டும் என்ற தொகைச்சொல்லையும் ஈண்டு அவ்வாறெழுத்து என்ற தொகைச்

* ட் ண் இவை பிறக்கும்போது நாநுனி அண்ணத்தின் நுனியைத் தொடும் என ஆசிரியர் கூறுகின்றனர். தற்போது நாம் அவற்றை ஒலிக்கும்போது நாநுனி மடிக்கப்பட்டு அண்ணத்தின் உயர்விடத்தைத் தொடுகின்றது. இவ்வாறு ஒலிக்கும் முறை மாறியதற்கு வடமொழியிலுள்ள

டகாரணகாரம் ஆகலாம், அவற்றை அவ்வாறே

ஒலித்தனர் என்பது பிராதி

சாக்கியநூல்களான் அறியப்படுதலின். உமெயடூதுள

ஷகார டகார

வ.ம.ஒள (ஐ. வு 1, 9) ஜிஹ்வாமூரண வுதிவெஷ்டு உமெயடூதி டவ மெ.ஒ(செதெ. வு ர 2,37). இனமொழிகளான ஆங்கிலம், லத்தீன், க்ரேக் முதலியவற்றில் இன்மையானும், இந்தியாவிலுள்ள மொழிகளில் மாத்திரம் இருக்கின்றமையானும், அவ்வருக்கம் வடமொழியால் திராவிடமொழியி லிருந்து கொள்ளப்பட்டதென்பர் டாக்டர் கால்ட்வெல். அவ்வாறு தான் இருத்தல் வேண்டுமென்ற நியதியில்லை என்பர் யெஸ்பர்ஸன் முதலியோர்.



சொல்லையும் நோக்கின், 'இந்நான்கு

சூத்திரங்களையும் ககரஙகரம்

சகரஞகரம் டகரணகரம் ஆகிய ஆறெழுத்தும்

முதனிலை வண்ணம்

இடைநாவண்ணம் நுனிநாவண்ணமாகிய மூன்று வகைப்பட்ட

பிறப்பிடத்தையுடையன' என்ற பொருளைக்கொண்ட ஒரே

சூத்திரமாக ஆசிரியர் கருதின ரென்னலாம். இவ்வாறு கூறுவிடின், இச்சூத்திரம் வெற்றெனத் தொடுத்ததாகும். அவ்வாறு நான் கினையும் ஒரே சூத்திரமாகக் கொள்ளின் வாக்கியபேதம் என்ற

குற்றம் வாராதோ வெனின், அவ்வாறெழுத்தும் என்ற ஒரே

எழுவாயும் மூவகைப்பிறப்பின என்ற ஒரே பயனிலையுங்கொண்ட

மையின் வாராதென்க.

**93.** அண்ண நண்ணிய பன்முதன் மருங்கின்
நாநுனி பரந்து மெய்யுற வொற்றத்
தாமினிது பிறக்குந் தகார நகாரம். *

பொ - ள். அண்ணத்தை நெருங்கிய பற்களின் அடியிடத்தினை நாவின் நுனிப்பகுதி பரந்து நின்று தான் அதனோடு ஒன்றுபடுமாறு ஒற்ற, தகரநகரங்கள் பிறக்கும்.

தாம், என்ற சொல் கட்டுரைச்சுவை பட வந்தது எனக் கொள்ளல் தகும்.

பரந்து என்ற சொல்லைக் கூறுது 'மெய்யுற வொற்றும்' என்றே
கூறின் லகரத்தை ஒலிக்கும்போது எவ்வாறு நா நுனி அண்பல் முதலினை ஒற்றுகின்றதோ, அவ்வாறே தகரநகரங்களை ஒலிக்கும் போதும் ஒற்றும் எனக் கொள்ளவரும்; கொள்ளின், அஃது இயற்கைக்கு மாறாகும்; ஆயின் பரந்து ஒற்ற எனக் கூறின் சாலும், . மெய்யுற எனல் வேண்டா வெனின்,
அற்றன்று, மெய்யுற என்றது
இல்லாவிடின் நாவின் நுனிப்பகுதி அண்பல்
முதலோடு முழுமையும்
ஒற்ற எனப் பொருள் கொள்ளுதல் இயலாது ;
அப்போது தகர
நகரங்களை ஒலிக்கும்போது சிறிது காற்று வெளியிற் போகுமாறு உளது எனக் கொள்ளவரும். அஃதும் இயற்கைக்கு மாறுகும். ஆகலினன்றே, லகரத்தின் பிறப்பினைக் கூறுமிடத்து, பரந்து மெய்யுற
என்ற இரண்டு சொற்களையும் ஆசிரியர்

வழங்காராயினர். அண்ண

Cf *ஜிஹ்வாமூலேன தவமௌ த ஷ்மௌஷ்ம (தை.ப்ரா 2,38)
தஞ்சாதா ஜிஹ்வா மூல ப்ரவர்த்தி (தை.ப்ரா 1,24)

97

நண்ணிய என்ற அடைமொழியின் பயன்

யாதெனின், பன்முதல்

என்றது கீழ்வாய்ப்பல்லின் அடியையுங் குறிக்குமாகலின், அதனைத் தவிர்க்க என்க.

• 83ஆவது சூத்திரத்திலுள்ள

உறுப்புற்றமைய என்றது மெய்யுற என்றதின் பொருளைத்தாராமையான், "முன்னே உறுப்புற் றமைய என்று வைத்துப் பின்னும் மெய்யுற

என்றதனுன் எல்லா
எழுத்துக்களும் மெய்யுற்றபோதே இனிது பிறப்பதென்பது கொள்க" என்ற இளம்பூரணர்கூற்றும், "முன்னர் உறுப்புற்றமைய என்று கூறி ஈண்டு மெய்யுற ஒற்ற என்ருர் சிறிது ஒற்றவும் வருடவும் பிறப்பன உளவாகலின்" என்ற நச்சினர்க்கினியர்கூற்றும்

ஆராய்தற்பாலன. அன்றியும்

மெய்யுறுதலானே இனிது பிறக்குமென

இளம்பூரணர் கூறியவாறு கொளின், மெய்யுறு

தலின்றிப் பிறக்கும் உயிர்களும் இடையெழுத்துக்களும் இனிது பிறக்கவில்லை என்று கொள்ளல்வேண்டும்; அஃது பொருந்தாக்கூற்றும். கங, சஞ, டண இவையும், நாவின் ஒரு பகுதி அண்ணத்தின் ஒரு பகுதியோடு மெய்யுறுதலாற் பிறக்கின்றமையின் ஏன் அங்கு மெய்யுற என்றதை ஆசிரியர் வழங்கவில்லை எனின், ஆங்கு முதனாவண்ணம், இடைநாவண்ணம், நுனிநாவண்ணம் எனத் தொகைச்சொல்லை வழங்கினமையானும், அவற்றிற்கு விரி முதனாவோடு மெய்யுற்ற அண்ணம், இடைநாவோடு மெய்யுற்ற அண்ணம், நுனிநாவோடு மெய்யுற்ற அண்ணம் எனக் கூறல் அமையுமாகலானு மென்க. பகரமகரங்களும் இதழ்கள் ஒன்றுக்கொன்று மெய்யுற்று பிறக்கின்றமையானும் வகரம் பல்லுமிதழும் மெய்யுற்று பிறக்கின்றமையானும்

இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்
பல்லித ழியைய வகாரம் பிறக்கும்

(எழுத் 97),
(எழுத் 98)

என்ற சூத்திரங்களில் ஏன் மெய்யுற என்ற சொல்லை ஆசிரியர் வழங்கிலரெனின், அச்சூத்திரத்தில் இயைந்து, இயைய என்ற சொற்களுக்கு மெய்யுற்று, மெய்யுற எனப் பொருளாகலின் என்க.

இளம்பூரணத்திலுள்ள முன்னே உறுப்புற்றமைய என்று வைத்துப் பின்னும் மெய்யுற என்றதனான், எல்லா வெழுத்துக்களும் மெய்யுற்றபோதே இனிது பிறப்பதென்பது கொள்க'' என்ற தொடர் இடைச்செருகலாயிருத்தலுங் கூடும்.

**93**

மெய்யுற என்றதற்கு வடிவை உறும்படி என இளம்பூரணத்திலும், வடிவு உறும்படி என நச்சினார்கினியத்திலும் பொருள் உளது.

பா - ம். நச். ம. பதி. வேறுபாடு முணர்க. நச். தா. சை. பதி. வேறுபாடு உணர்க.

**94.** அணரி நுனிநா வண்ண மொற்ற
றஃகா னஃகா னுயிரண்டும் பிறக்கும்.

போ - ள். நாவின் நுனி மேனோக்கிச் சென்று அண்ணத்தை ஒற்ற றகரனகரங்க ளிரண்டும் பிறக்கும். ஈண்டு நோக்கத்தக்கன இரண்டு உள. அவையாவன :—(1) நகரத்தை ஒலிக்கும் போது போல னகரத்தை ஒலிக்கும்போது நாநுனி அண்ணத்தோடு மெய்யுறுதலின்று, பரந்து நிற்றலுமின்று. (2) நகரம் பிறக்கு மிடம் அண்பன்முதல், னகரம் பிறக்குமிடம் அதற்குப் பின்னருள்ள அண்ணம்.

இதற்கு முன்னருள்ள சூத்திரம்வரை நெடுங்கணக்கின் முறைப்படிக் கூறி, ஈண்டு பகரமகரத்தைக் கூறாது முறை மாற்றியதற்குக் காரணம் நாஅதிகாரப்பட்டமையின் என உரைகாரர்கள் கூறினர். அஃதாவது ப, ம, இவற்றை ஒலிக்கும்போது நாவிற்குச் செய்கை வெளிப்படையாய் இல்லாமையானும், ற், ன், ர், ழ், ல், ள், இவற்றையும் க், ங், ச், ஞ், ட், ண், த், ந் இவற்றையும் ஒலிக்கும்
போது நாவிற்குச் செய்கை வெளிப்படையா யிருத்தலானும் த் ந் இவற்றைப்பற்றிக் கூறிய பின்னர் ற், ன் இவற்றைப்பற்றிக் கூறினர் என்னலாகும்.

தகரநகரங்களை ஒலிக்கும்போதுள்ள நாவின் தன்மை பெரும் பான்மையும் லகரளகரங்களை ஒலிக்கும்போது இருத்தலானும், றகரனகரங்களை ஒலிக்கும்போது இல்லாமையானும், அண்ண நண்ணிய ... (எழுத் 93) என்ற சூத்திரத்திற்குப் பின்னர் "நாவி ளிம்பு வீங்கி ... (எழுத் 96)" என்ற சூத்திரத்தை வையாது ஏன்
இச்சூத்திரத்தைக் கூறினர் என்ற கடாவிற்கு விடை:—வல்லின மெல்லினங்கள் முறையே ஒரே இடத்திற் பிறத்தலானும், நாவதிகாரம் பற்றிப் பகரமகரத்தை ஈண்டுக் கூறுமையான் பகரத்திற்கு





அடுத்த வல்லினம் றகரமும், மகரத்திற்கு அடுத்த மெல்லினம்
னகரமும் ஆதலானும், இச்சூத்திரத்தை ஈண்டு ஆசிரியர் வைத்தன
ரென்க.

**95.** நுனிநா வணரி யண்ணம் வருட

ரகார ழகார மாயிரண்டும் பிறக்கும்.

போ-ள். நாவின் நுனி மேற் சென்று அண்ணத்தைத் தடவ ரகரம் ழகரம் ஆகிய இரண்டும் பிறக்கும். இவ்விரண்டிற்கும் றகர னகரங்கட்கும் பிறப்பிடம் ஒன்று யிருத்தலின், அவற்றின் பின்னர் இவற்றைக் கூறினர். றகரனகரங்கள், ரகரழகரங்கள் இவை நான் கற்கும் பிறப்பிடம் ஒன்றுயிருப்பினும், முன்னிரண்டு முண்டாம் போது நாநுனி அண்ணத்தை ஒற்றுகின்றது, பின்னிரண்டு முண் டாம்போது அஃது அண்ணத்தைத் தடவுகின்றது. ரகரழக ரங்கள் இரண்டும் உண்டாம்போது ஒன்றுக்கொன்று வேறுபாடு சிறிதே யாகலின், அதனைக் கூறாது விடுத்தனர் ஆசிரியர். அவ்வேறு பாடு யாது எனின், ரகரத்தை ஒலிக்கும்போது காற்றிற்கு வாயை விட்டு வெளியிற் செல்ல எவ்வளவு இடனிருக்கின்றதோ அவ்வளவு இடன் ழகரத்தை ஒலிக்கும்போது இல்லை. *

**96.** நாவிளிம்பு வீங்கி யண்பல் முதலுற
ஆவயி னண்ண மொற்றவும் வருடவும்
லகார ளகார மாயிரண்டும் பிறக்கும்.

போ-ள். நாவின் நுனிப்பகுதி பரந்து அண்பல்லினடியைப் பொருந்த, ஒற்ற லகாரமும் அவ்வண்பல்லினடிக்கருகிலுள்ள அண்ணத்தைத் தடவ ளகாரமும் பிறக்கும்.

ஆவயின் என்றதிலுள்ள அகரச்சுட்டு அண்பன்முதலைக் குறிக்கும். இச்சூத்திரத்திற்கு அந்நுவயம் "நாவிளிம்பு வீங்கி அண்பன் முதலுற ஒற்றவும், நாவிளிம்பு வீங்கி ஆவயினண்ணம் வருடவும், லகாரளகார மாயிரண்டும் பிறக்கும்" என்றது

அண்பன் முதலு மண்ணமு முறையின்
நாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்

என்ற நன்னூற் சூத்திரத்தான் விளங்கும். (நன். 84)

* ஆகலின் மொழிநூல்வல்லோர் ரகரத்தை *liquid* என்றும் ழகரத்தை *fricative* என்றுங் கூறுவர்.

நச்சினார்க்கினியர் "நா மேனோக்கிச்சென்று தன் விளிம்பு அண்ணல்லினடியிலே உறுநிற்க அவ்விடத்து அவ்வண்ணத்தை அங்நாத்தீண்ட லகாரமாயும், அவ்விடத்து அவ்வண்ணத்தை அங்நாத்தடவ ளகாரமாயும் இவ்விரண்டெழுத்தும் பிறக்கும்" எனப் பொருள் கூறினர். ஈண்டு வீங்கி என்ற சொல்லையும் 93ஆவது சூத்திரத்தில் பரந்து என்ற சொல்லையும் ஒரு பொருட்கிளவியாய்க் கொள்ளுதல்

தகாலகாரங்களை ஒலிக்கும் முறைக்கு ஒத்திருக்க, வீங்கி என்றதற்கு மேனோக்கிச்சென்று எனப் பொருள் கொள்ளுதலும், நாவிளிம்பு என்றதைத் தொகைமொழியாகக் கொள்ளாது, நாவினை வீங்குதற்கு எழுவாயாகவும், விளிம்பினை உற என்றதற்கு எழுவாயாகவும், கொண்டதும் ஆராய்தற்பாலன. இளம்பூரணர் நச்சினார்க்கினியர் இருவரும் ஆவயின் என்றதற்குப் பொருள் விளக்கமாய்க்கூறவில்லை. நன்னூலாரும் அதன்பொருளைத் தன் சூத்திரத்திற் குறிக்கவில்லை. தகாலகாரங்களுக்கு முயற்சி வேறுபட்டிருப்பினும் பிறப்பிடம் ஒன்றாயிருத்தலின், இச்சூத்திரத்துள்ள "நாவிளிம்பு" என்றதும் நாநுனி என்றதும் ஒருபொருட் கிளவியாயிருத்தல் கூடும்.

இச்சூத்திரத்தை நோக்கின் ஆசிரியர் காலத்தில் ளகாரம் தற்போதுபால் ஒலிக்கப்பட்டிலது எனத் தோற்றுகின்றது.

தற்போது ளகாரத்தை ஒலிக்கும்போது நாநுனி மேனோக்கிச் சென்று அண்ணத்தைத் தடவுகின்றது. ஆகலின் ழகாரளகார மிரண்டும்

மயங்குகின்றன.*

பா - ம். இளம். க. பதி. "பல்வின தணிய விடத்துப் பொருந்த."

இளம். சி. பதி. "பல்வின தணிய விடத்தைப் பொருந்த."

நச். ம. பதி. "லகாரமுமாய் ... ளகாரமுமாய்."

நச். தா. சை. பதி. "லகாரமாயும் ... ளகாரமாயும்."

**97.** இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்.

பொ - ள். *பகரமகரங்கள் இதழ்களை மெய்யுறச் செய்து பிறக்கும்.*

இயைந்து என்றதை இயைய என்ற வாய்பாடாகத் திரித்துக் கொண்டனர் உரைகாரர்கள். அவ்வாறு கூறியதற்குக் காரணம் முன்னருள்ள சூத்திரங்களில் செயவென்வாய்பாட்டிலே உற, வருட,

* வாழைப்பழம், வாளப்பளம்.

ஒற்ற முதலிய எச்சங்கள் வந்திருத்தலா னென்னலாம். வினைகள் உருவத்தில் தன்வினையாகவும் பொருளில் பிறவினையாகவும் மிகுதி யாகப் பண்டையிலக்கியங்களில் வருதலின் இயைந்து என்றதற்கு இயையச் செய்து என்ற பொருள் கூறலாமெனவும், இதழ் என்றதை இரண்டாம்வேற்றுமையாகக் கொள்ளலா கின்றது.

மெனவும் தோற்று

**98.** பல்லித ழியைய வகாரம் பிறக்கும்.

பொ ள் மேற்பல்லும் கீழிதழும் இயைய வகாரம் பிறக்கும்.

பல், இதழ் எனப்பொதுவாக ஆசிரியர் கூறினும் மேற்பல்லும் கீழிதழும் கூடுதலே எளிதாகலின், அச்சொற்களுக்கு முறையே அப்பொருள்களைக் கூறினர் உரைகாரர்கள்.

**99.** அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை

கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்.

பொ-ள். அண்ணத்தோடு பொருந்திய கழுத்தினின்றும் எழுகின்ற வளியானாகிய ஓசை முன்புறத்தை அடைய யகாரம் பிறக்கும்.

கண் என்றது முன்புறம் என்ற பொருளில் "கண்ணின்திரப்பவர்" (குறள் 1058) முதலிய இடங்களில் வழங்கப்பட்டிருத்தலின், ஈண்டும் அப்பொருளிலே ஆசிரியர் வழங்கினரோ என்பது என் எண்ணம். அண்ணஞ்சேர்ந்த என்றதற்கு அண்ணத்தை நாச்சேர்ந்த (விடத்து) எனப்பொருள் கூறினர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் "எழுவளிமிடற்றுச்சேர்ந்த இசை அண்ணங் கண்ணுற்றடைய யகாரம் பிறக்கும்" எனச் சூத்திரத்திற்கு அந்நுவயங் கொண்டனர். நாவின் அதிகாரமின்மையான் இளம்பூரணர்கூற்றும், "மிடற்றெழுவளி யிசை" என்றதை முறைமாற்றிக் கூறுதல் பொருத்தமின்மையான் நச்சினார்க்கினியர்கூற்றும் பொருத்தமாகத் தோன்றவில்லை.

**100.** மெல்லெழுத் தாறும் பிறப்பி னாக்கஞ்
சொல்லிய பள்ளி நிலையின வாயினு

மூக்கின் வளியிசை யாப்புறத்

தோன்றும்.

**பொ-ள்.** ஆறு மெல்லெழுத்துக்களும் தம்பிறப்பு சொல்லப் பட்ட இடங்களில் நிலைபெற்றாலும், மூக்கின்வழியாகச் செல்லும் காற்றினிசையோடு பொருந்தித் தோன்றும்.

## 102

மூக்கின்வளியிசை என்றதற்கு மூக்கின்வளியிசையான் எனப் பொருள்கொண்டு யாப்புற என்றதை மிகையாகக் கருதி அம்மிகைக் குக் கருத்தாக இடையெழுத்திற்கு மிடற்றுவளியும் வல்லெழுத்திற் குத் தலைவளியும் கொள்க எனக் கூறினர் உரைகாரர்கள். மெல் லெழுத்துக்களை ஒலிக்கும்போது வளியின் ஒரு பகுதி வாய்வழி யாகவும் ஒரு பகுதி மூக்குவழியாகவுஞ் செல்லுகின்றமையான் மூக்கின் வளியிசை என்றதற்கு மூக்கின் வளியிசையோடு எனவும், யாப்புற என்றதற்குப் பொருந்த எனவும் பொருள் கொள்ளின் யாப் புற என்றது மிகையாகாது.

நச்சினார்க்கினியத்தில் "ஓசை கூறுங்கால்" என ஒரு சொல்

வருவித்துப் பொருள் கூறப்பட்டது.

பா-ம். இளம். க. பதி. மேற்சொல்லப்பட்ட விடத்தே நிலை

பெற்றவாயினும்

இளம். சி. பதி. சொல்லிய இடத்தே நிலைபெற்றனவாயினும்,

பின்னருள்ள பாடம் நச்சினார்க்கினியத்திலுமுள்ளது.

முதலெழுத்துக்களின் பிறப்பிடத்தையும் முயற்சியையுங் கூறிய பின்னர், சார்பெழுத்துக்களின் பிறப்பிடத்தை இச்சூத்திரத்திற் கூறினர்.

**101.** சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்து வெளிப்படுத்த வேனை மூன்றுந்
தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி
யொத்த காட்சியிற் றம்மியல் பியலும்.

பொ-ள். சார்ந்து வாராது தாமே தனியாய் வருதற்குத் தன்மையில வென ஆராய்ந்து வெளிப்படுத்தப்பட்ட

ஏனைச் சார்பெழுத்

துக்கள் மூன்றும் தத்தமது சார்பாயுள்ள எழுத்துக்களின் பிறப்பொடு பொருந்தித் தகுந்த இடங்களின்கண் தம்மியல்போடு தோன்றும்.

"சார்ந்து வரினல்லது... ஏனை மூன்றும்"

என்ற தொடரால்

குற்றியலிகரம் குற்றிய லுகரம் ஆய்தம் இவை குறிக்கப்பட்டன என்றது நூன்மரபு முதலிரண்டு சூத்திரங்களான் அறியப்படும்.

" சார்ந்துவரி

103

ன்லலது தமக்கியல் பிலவெனத் தேர்ந்து

வெளிப்படுத்த வேனை மூன்றும் என்று கூறுது "சார்ந்துவரும் ஏனை மூன்றும்" எனக் கூறின், ஆஅ, ஈஇ போன்ற இடத்துள்ள அளபெடையாகிய அகர இகரங்களில் அதிவியாப்தி வரும்,

அவை ஆகாரத்தையும் ஈகாரத்தையுஞ் சார்ந்து வந்தமையின் னல்லது தமக்கியல் பில" என்றதனுன் ஆங்கு அதிவியாப்தி வாராது, அவற்றிற்குத் தனியாய் வருதற்கும் இயல்புண்மையின். சார்பு என்றதற்குச் சார்பாகிய எழுத்து என்பது பொருளாகும். பிறப்பொடு என்றதற்குப் பிறப்பிடத்து எனப் பொருள்கொண்டு தத்தஞ் சார்பிற் பிறப்பொடியலும்" என ஆசிரியர் கூறுது, 'தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி—ஒத்த காட்சியிற் றம்மியல் பியலும்" என ஏன் கூறினரெனின், ஆசிரியர் அவ்வாறு கூறியிருப் பின் சார்பெழுத்துக்களுக்கு அவற்றின் சார்பாகிய எழுத்துக்களின் பிறப்பிடமே பிறப்பிடம் எனப் பொருளாகும். அவையே இவற் றிற்கும் இடமாகாது அவ்விடங்களுக்கு அருகாமையில் இவற்றை ஒலிக்கத் தகுந்த இடமே இவற்றிற்கு இடமாகும் எனக் கூறவேண்டி அவ்வாறு சூத்திரித்தா ரென்க. காட்சி என்றதற்கு இடம் என் பது பொருளாகும்.

இளம்பூரணர் " ஒத்த காட்சி என்றதனுன் ஆய்தத்திற்குக் குற் றெழுத்துச் சார்பே யெனினும் தலைவளியாற் பிறத்தலின், உயிரொடு புணர்ந்த வல்லெழுத்துச் சார்பாகவே பிறக்குமென்பது கொள்க" என்றனர். இஃது குறியதன் முன்னர் ... (எழுத். 38) என்ற சூத்தி ரத்தானே உணர்த்தப்பட்ட பொருளாகும்.

" தம்மியல்பியலும் என்றதனுன் அளபெடையும் உயிர்மெய்யும் தமக்கு அடியாகிய எழுத்துக்களது பிறப்பிடமே இடமாக வருமென் பது கொள்க" என இளம்பூரணத்திலுளது. உயிர்மெய் என்றது ஓரொலியெழுத்தாகாமையானும், 'கி' என்ற விடத்துள்ள இக ரத்திற்குக் ககரத்தினிடம் இடமாகாமையானும், அளபெடைகளெல்

லாம் தனியாய் நிற்குந்தன்மையுள்ள குற்றெழுத்துக்களாதலானும், அவற்றிற்குப் பிறப்பிடம் ஆசிரியராற் கூறப்பட்டமையானும், இத்தொடர் வேண்டுவதின்று.

நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்திற்குக் கொண்ட அந்நுவயம் 'சார்ந்து வரினல்லது தமக்கியல் பிலவென தேர்ந்து வெளிப்படுத்த

...

தம்மியல்பு மூன்றும் தத்தஞ்சார்பிற் பிறப்பொடு சிவணி இயலும், ஏனைஒத்த காட்சியின் இயலும்" என்பது. இவ்வாறு கொண்டதற்குக் காரணம்

ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய

(நன் 87)

என்ற நன்னூற்சூத்திரத்தில் ஆய்தத்திற்குத் தனியிடமும் ஏனையவற்றிற்குத் தத்தஞ் சார்பு இடமுமெனக் கூறியிருத்தல் ஆகலாம் இங்ஙனங் கூறின் தம்மியல்பு, ஏனை என்ற சொற்களைச் சூத்திரப் போக்கின்படி அந்நுவயிக்காதது ஒரு குற்றமாகும். அன்றியும்

தேர்ந்து வெளிப்படுத்த தம்மியல்பு மூன்றும் என்றதற்கு ஆராய்ந்து வெளிப்படுக்கப்பட்ட எழுத்துக்கள் தம்முடையபிறப்பியல்புமூன்றினை யுங் கூறுங்கால் எனப் பொருள் கூறுதல் பொருத்தமின்று. "ஏனை" என்றது எவ்வாறு ஆய்தத்தைத் காட்டும்? "ஏனை" என்றதனால் ஆய் தத்தைக் கொள்ளுமவர்க்கு ஈண்டு "மூன்று" ஏது? இரண்டுதானே உள; "கூறுங்கால்" என்றதனையும் வருவிக்கவேண்டுமே! மேலும் "ஏனை ஒத்த காட்சியின் இயலும்" என்றதற்கு "ஒழிந்த ஆய்தம் தமக்குப் பொருந்திய நெஞ்சுவளியாற் பிறக்கும்" எனப் பொருள் கொண்டனரே; காட்சி என்றதற்கு நெஞ்சுவளி என்பது பொருளென இவர்க்கு எங்ஙனந் தெரிந்தது? "ஒத்த" என்ற சொல் எற்றுக்கு?

ஆகலின் இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருள் ஆசிரியர்க்கு உடன்பாடின்று என்பது என் கொள்கை.

ஆய்தத்திற்கு இடம் தலையென்று இளம்பூரணர் நன்னூலார் சொல்லியிருக்கவும் நச்சினார்க்கினியர் நெஞ்சு இடமென்றது எவ்வாறு;

திற்போதுள்ள ஆய்தவொலி வடமொழியில்

க்வருக்கத்தின் முதலிரண்டெழுத்துக்களுக்கு முன்னருள்ள விஸர்க்கவொலியை

ஒத்திருத்தலானும், வடமொழியில் அவ்விஸர்க்கம் பவருக்கத்தின் முதலிரண்டெழுத்துக்களின் முன்னர் வேறாக ஒலிக்கப்படுகின்றமை யானும், ஆசிரியர் தொல்காப்பியனார் ஆய்தத்தின்பின்னர் ஆறு வல்

லெழுத்தும் வரலாமெனக் கூறினமையானும்
ஆய்தத்திற்கு அவர் காலத்து
அறுவகை யொலி யிருந்தனவென்றும்,
அவற்றுள் ககரத்தின் முன்னருள்ள ஒலியே
பிற்காலத்து எல்லாவிடத்தும் வந்தெனவும்
கொள்ளல் தகும். அவ்வாறு
கொள்ளாக்கால் முட்டீது என்றது .

105

முஃடீது எனவும், கற்றீது என்றது கஃறீது
எனவும் வருமென ஆசிரியர் புணரியலிற் கூறுவது
பொருந்தாக் கூற்றாகும், ககரவொலி யோடு
இயைந்த ஆய்தவொலியும் டகர றகரவொலிகளும்
ஒன்றுக் கொன்று மயங்காமையின்.

பா-ம். இளம். சி. பதி. பொருந்தி

பொருந்தின (பொருந்தின என்பது மிகை)

இதுவரை கூறப்பட்டனவெல்லாம்
புறத்தார்க்குப் புலப்படு மாறு ஒலிக்கப்படும்
எழுத்துக்களைப்பற்றியே யன்றி வடமொழி

நூலின்கண் பரை, பைசந்தி, மத்திமை எனக் கூறப்படும் எழுத்துக் களைப்பற்றி யன்று என கின்றனர்.

இரண்டு சூத்திரங்களான் உணர்த்து

**102.** எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்து
அகத்தெழு வளியிசை யரிறப நாடி
அளவிற் கோட லந்தணர் மறைத்தே.

பொ - ள். எல்லா

வெழுத்துக்களையும் (புறத்தார்க்கு) வெளிப்படு மாறு கிளந்து சொல்லப்பட்ட இடங்களில் தோன்றுகின்ற வளியினாற் பிறக்கும் பிறப்போடு கூறும்வழி, அவற்றோடு மாறுபடுகின்ற தன்மை யையுடைய அகத்தின்கண் (உந்தி, மார்பு, கழுத்து, என்னும் இடங் களில்) தோன்றுகின்ற வளியானுண்டாகும் இசையைக் குற்றமற ஆராய்ந்து அதன் தன்மையை அறிவித்தல் வேதத்தின்கண்ண தாகும்.

வாரம், அளவு என்பன தன்மை என்ற பொருளைத் தரும். எழுதருவளி என்றவிடத்து தரு என்றது துணைவினையாகும். அகத்தின்கண் உண்டாம் எழுத்துக்களின் நிலை மூவகைப்படும் எனவும், அவை பரை, பைசந்தி, மத்திமை எனவும், பரைநிலையில் எழுத்துக்களெல்லாம் ஒரே தன்மையவாய் இருக்கும் எனவும், அஃது

*சத்வாரி வாக் பரிமிதா பதாநி
தாநி விதுர் ப்ராஹ்மணா யே மநீஷிண꞉।
குஹா த்ரீணி நிஹிதா நேங்கயந்தி
துரீயம் வாசோ மநுஷ்யா வதந்தி ॥ ருக்வேத I 164,45

14



மூலாதாரத்தில் நிகழுமெனவும், பைசந்தி உந்தியிற்றோன்றுமெனவும், அது யோகிகளுக்கே புலப்படுமெனவும், மத்திமை நெஞ்சிற்றோன்றுமெனவும் வடமொழி யிலக்கணங்களிற் கூறப்பட்டது.

இச்சூத்திரவுரையில் இளம்பூரணர் அளவு என்பதற்கு மாத்திரை எனப் பொருள் கூறினர். அச்சொற்குத் தன்மை என்ற பொருள் திருக்கோவையார் முதலியவற்றுட் * காணப்படுகின்றமையானும், அப்பொருள் ஈண்டுப் பொருந்துவதானும், பிறப்பியலில் எழுத்துக்களின் மாத்திரையைப்பற்றிக் கூறாமையானும் " தன்மை " என்ற பொருளைக் கொள்ளலே தகும்.

நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்தையும் வருஞ் சூத்திரத்தையும்

ஒன்றாகக்கொண்டு கூறும் பொருளாவது :—"ஆசிரியன் எல்லாவெழுத்துக்களும் பிறக்குமாறு முந்து நூற்கண்ணே கூறி வெளிப்படுக்கையினாலே யானும் அவ்வாறே கூறிய எண்வகை நிலத்தும் பிறக்கின்ற பிறப்போடே அவ்வெழுத்துக்களைக் கூறுமிடத்து யான் கூறியவாறன்றி உந்தியிற் றோன்றுங் காற்றினது திரிதருங் கூற்றின்

கண்ணே மாத்திரை கூட்டிக் கோடலும்

மூலாதாரத்தில் எழுகின்ற காற்றினோசையைக்

குற்றமற நாடிக் கோடலும் பார்ப்பாரது

வேதத்து உளதே அந்நிலைமை ஆண்டு உணர்க.

அங்ஙனங்கோடலை ஈண்டுக் கூறலாகாமையின்

இந்நூற்கட்கூறாதே உந்தியிற் றோன்றிப் புறத்தே

புலப்பட்டு ஒலிக்கும் பொருடெரியும் காற்றினது

துணிவிற்கே யான் மாத்திரை கூறினேன்

அவற்றினது மாத்திரையை உணர்க."

கிளந்து என்றதற்கு எழுவாயாக ஆசிரியன்

எனக் கொண்டதும், வெளிப்பட

என்றதை வெளிப்படுக்கையினாலே என்ற காரணப்பொருளிற் கொண்டதும், எழுதருவளியின்

என்றது உந்தியிற்

றோன்றும் பைசந்திநிலையைக் குறிக்கும் எனக்

கொண்டதும், "அகம்" என்றதற்கு மூலாதாரம் எனப் பொருள்கொண்டதும் ஆராய்தற் குரியன.

"இது பிறன்கோட் கூறலென்னும் உத்திக்கு இனம்" என

நச்சினார்க்கினியர் கூறினர். அஃதிவண் நுவலாது எழுந்து புறத் திசைக்கும் ... நுவன்றிசின் என்ற பகுதி எவ்வாறு பிறன்கோட் கூறலாகும். இனி "எல்லா வெழுத்தும் ... அந்தணர் மறைத்தே" என்ற சூத்திரம் அவ்வாறு மெனின், அற்றன்று; அடுத்த சூத்தி

* ஏளா வில்லா வளவினர் (திருக்கோ. 308)



ரத்திற்குத் தோற்றுவாயாகலின். ஆசிரியர் வடமொழி தென்மொழி இரண்டனையும் நன்கு ஆய்ந்தவராதலின், ஆங்காங்குத் தமிழ் மொழி யைப்பற்றிக் கூறுமிடத்து வடமொழியிற் கூறியவாறே கூறுமையின் குற்றமெனச் சிலர் கருதுவரென நினைத்து இருமொழியிலுள்ள மாறுபாட்டினைச் சொல்லிச் செல்வர். ஆகலினன்றே "மூவள பிசைத்த லோரெழுத் தின்றே" என்ற சூத்திரத்தையுங் கூறினர்.

**103.** அஃதிவ ணுவலா தெழுந்துபுறத் திசைக்கும்
மெய்தெரி வளியிசை யளபுநுவன் றிசினே.

போ - ள். அதனை ஈண்டுக் கூறாது எழுந்து வெளியில் ஒலிக்கப் படும் தன் தன்மை தெரிவிக்கும் வளியிசையின் தன்மையைக் கூறி னேன்.

மெய் என்றதற்குப் பொருள் பொருளெனக் கொண்டனர் உரைகாரர்கள். ஓரெழுத்தொருமொழியைத் தவிர்த்து ஏனைமொழிகளிலுள்ள எழுத்துக்களுக்குப் பொருளில என்றது பெரியோர் * துணிந்த கொள்கையாகலின், அவர் கூற்றுப் பொருந்துமா? சொற்குப் பொருளிருத்தலின் அவற்றின் உறுப்பாகிய எழுத்துக்களுக்கும் பொருளுண்டெனக் கொள்ளுதல்தான் பொருந்துமா? ஆகலின் "மெய்தெரி" என்றதனுன் முற்கு முதலியன முயற்சியாற் பிறக்குமெனினும், பொருள் தெரியா நிலைமையவாகலின் என்ற இளம்பூரணத்தொடரின்கண்ணும், மெய்தெரிவளியெனவே பொருடெரியாமுற்கும்† வீளையும்‡" முயற்சியானுமெனினும் பொருடெரியாமையின் என்ற நச்சினார்க்கினியத்தொடரின்கண்ணும் பொருள், தெரியாநிலைமைய, பொருடெரியா என்றவை தன்மை, தெரியாநிலைமைய, தன்மைதெரியா என்றிருப்பின் நலம்.

பா - ம். இளம். கா. பதி. பிறன்கோட் கூற்று நேர்த்துடம்படுதற்கு...மெய் தெரியா முறைமையவாகலின் ... நுவன் றென்பது·

இளம். சி. பதி. பிறன்கோட்கூறி ... பொருள் தெரியா நிலைமையவாகலின் ... நுவன்றிசின் என்பது. முன் பாடஞ் சிறக்கும்.

பிறப்பியல் முற்றும்.

* யாதூவ்ராதிவதிகவ்ரதூய நிவாதா:

வாகவண்ஆ் ஸயஓ வஹ: ஸஜெஹ ஸுரயஓகா: (உ. ஸூ I. 1. 2)

† கர்ச்சனை ‡ சீழ்க்கை.

# 4. புணரியல்

---

எழுத்துக்களின் வகை, இயல்பு முதலியவற்றையும் அவற்றின் பிறப்பிடம் முயற்சி இவற்றையும்பற்றி நூன்மரபு, மொழிமரபு, பிறப்பியல் என்ற மூன்று இயல்களிற் கூறிய பின்னர், இரண்டெழுத்துக்கள் ஒன்றன்பின் மற்றொன்று கூட்டி ஒலிக்கப்படும் பொழுது நேரும் மாறுதல்களைக் கூறத் தொடங்கினர். அவ்வெழுத்துக்கள் சொற்களின் உறுப்பாய் நின்று புணரும்போது நிகழும் மாறுதல்களின் வகையையும், ஆங்கு இடையிற் றோன்றுஞ் சாரியைகளையும், பகுதிக்கும் சாரியைக்கும் நேரும் புணர்ச்சிகளையும் புணரியலிலும், பெரும்பாலும் வருமொழிமுதலில் வரும் மாறுதல்களைக் கூறும் விதிகளைத் தொகைமரபிலும், பெயருக்கும் வேற்றுமையுருபுக்கும் இடையில் வரும் புணர்ச்சிவிதிகளை உருபியலிலும் நிலைமொழியீறு உயிராயிருக்க வரும் புணர்ச்சிவிதிகளை உயிர்மயங்கியலிலும், நிலைமொழியீறு மெய்யாயிருக்க வரும் புணர்ச்சிவிதிகளைப் புள்ளிமயங்கியலிலும், நிலைமொழியீறு குற்றியலுகரமாயிருக்க வரும் புணர்ச்சிவிதிகளைக் குற்றியலுகரப்புணரியலிலும் ஆசிரியர் கூறினர்.

104. மூன்றுதலை யிட்ட முப்பதிற் றெழுத்தின்
இரண்டுதலை யிட்ட முதலா கிருபஃ
தறுநான் கீறொடு நெறிநின் றியலும்
எல்லா மொழிக்கு மிறுதியு முதலும்
மெய்யே யுயிரென் றாயீ ரியல.

பொ - ள்.

முப்பத்துமூன்று எழுத்துக்களுள் மொழிக்கு முத லாக வரும் இருபத்திரண்டு மொழிக்கு ஈறாக வரும் இருபத்து நான்கு இவற்றுடன் வழங்கிவரும் எல்லாமொழிக்கும் ஈறும் முத லும் மெய், உயிர் என்ற இருதன்மையன.

இச்சூத்திரம் எற்றுக்கு எனின்,
மொழிமரபில் "உயிர் மெய்யல்
லன மொழிமுத லாகா (எழுத். 60) " எனவும், உச்ச கார மிருமொழிக் குரித்தே (எழுத். 75) உப்ப கார மொன்றெனை மொழிப (எழுத். 76) எனவுங் கூறினமையாலும், நிலைமொழியீற்றினையும் வருமொழி

முதலையும் உயிர்மெய்யாகக்கொண்டு புணர்ச்சிவிதிகளை ஆசிரியர் கூறுமையானும், அவற்றைக் கூறுமிடத்து இறுதியெழுத்தையும் முதலெழுத்தையும் உயிராகவேனும் மெய்யாகவேனுமே கொள்ளல் வேண்டுமென்றற் கென்க..

அவ்வாறுயின் மொழிமுதலில் வருகின்ற உயிர்மெய்யெழுத்துக் களுள் ஒருபகுதியாகிய மெய்யெழுத்துக்கள் மெய்யி னியற்கை புள்ளி யொடு நிலையல் (எழுத். 15) என்ற சூத்திரத்தான் புள்ளிபெறுமோ வென்ற ஐயம் வர அவ்வையத்தைப் போக்க இச்சூத்திரங் கூறினர்.

**105.** அவற்றுள்

மெய்யீ றெல்லாம் புள்ளியோடு நிலையல்.

போ - ள். மொழிக்கு இறுதியிலும் முதலிலும் வரும் மெய் களுள், மொழியீற்றிலுள்ள மெய்களெல்லாமே புள்ளியொடு நிற் றல் வேண்டும்.

இச்சூத்திரம் நியமவிதி யாகும், மெய்யினியற்கை புள்ளி யோடு நிலையல் என்ற சூத்திரத்தான் வருமொழிமுதலின்கண்ணும் நிலைமொழியிறுதியின்கண்ணுமுள்ள மெய்கள் புள்ளி பெறுமெனப் பெறப்பட அவற்றுள் நிலைமொழி யீற்றின்கண்ணுள்ளனவே புள்ளி பெறும் எனக் கூறினமையின். இதனுல் வருமொழிமுதலி லுள்ள மெய் புள்ளி பெருது எனப் பெறப்பட்டது.

இச்சூத்திரத்திற்குஉதாரணம் "நிற்கும், மரா" என்பனவாகும்.

இச்சூத்திரத்துள்ள அவற்றுள் என்பதற்கு "மேல் மெய் யும் உயிரும் என்று கூறிய இரண்டனுள் " என இளம்பூரணரும், "முற்கூறிய மெய்யும் உயிருமென்ற இரண்டினுள்" என நச்சிஞர்க் கினியரும் பொருள் கூறினர். எல்லாவுயிர்களுக்கும் புள்ளி பெறு தல் இயல்பாயின் அவ்விருவர்தங்கூற்றும் பொருந்தும்.

" மொழிமுதன்மெய் புள்ளியொடு நில்லா

தென்னாது ஈறெல் லாம் புள்ளியொடு நிலையல் என ஈற்றின்மேல் வைத்துக் கூறியவதனான் அவ்வீற்றின் மெய் உயிர்முதன்மொழி வந்த இடத்து அஃது ஏற இடங்கொடுக்கு மென்பது பெறப்பட்டது" என இளம்பூரணத் 110 திலும் "இன்னும் ஈற்று மெய் புள்ளிபெற்று நிற்குமென்றதனானே உயிர்முதன்மொழி தம்மேல் வந்தால் அவை உயிரேற இடங் கொடுத்து நிற்குமென்பதூஉங் கூறினாராயிற்று" என நச்சினார்க் கினியத்திலும் உள. அவை உயிரேற இடங்கொடுக்கு மென்பது

"புள்ளி யீற்றுமு னுயிர்தனித் தியலாது
மெய்யோடுஞ் சிவணா மவ்வியல் கெடுத்தே"

(எழுத். 139) என்ற சூத்திரத்திற் கூறப்பட்டமையான், அவர்தங் கூற்று வேண்டுவ தன்று.

பா-ம். இளம். க. பதி. "மெய்மொழிக் கீறாயவை யெல்லாம்...நிற்கும்"

இளம். சி. பதி.

"மொழிக்கீறுய மெய்யெல்லாம்.. .நிற்க." பின்னர் " முதலாயவெல்லாம் " என்ற பாடம் இரண்டு பதிப்புக் களிலு மிருத்தலின், முன்னருள்ள பாடமே சிறக்கும்.

நச். ம. பதி. " நிற்கு மென்ரு யிற்று "

நச். தா. சை. பதி. " நிற்குமென்ரு ராயிற்று "

**106.** குற்றிய லுகரமு மற்றெண மொழிப.

**பொ - ள்.** மொழியீற்றிலுள்ள குற்றியலுகரமும் அத்தன் மையது எனக் கூறுவர் (புலவர்).

முற்சூத்திரத்திலிருந்து ஈண்டு ஈறு என்ற சொல் அதிகரித்தல் வேண்டும்.

அம்முப்பாற்புள்ளி (எழுத். 2) என்றதனுனே குற்றிய லுகாரமும் புள்ளி பெறும் எனப் பெறப்படுதலான், இச்சூத் திரம் எற்றுக்கு என ஐயந் தோன்றும். அம்முப்பாற்புள்ளி என்றத னுன் மொழியீற்றிலுள்ள குற்றியலுகாரமும் "நுந்தை" என்ற சொல்லி லுள்ள குற்றியலுகாரமும் புள்ளி பெறும் எனப் பெறப்பட இச்சூத்திரத்தான் மொழியீற்றுக்குற்றியலுகரமே புள்ளிபெறு மென்று நியமிக்கப்பட்டதென்க. இதனுற் பெறப்பட்டது யாது எனின், நுந்தை என்னுமிடத்துக் குற்றியலுகரம் புள்ளிபெருது என் பதே யாகும். இச்சூத்திரமும் முற்சூத்திரம் போன்று நியமவிதியா மென்க.

## 111

மெய்யீறும், ஈற்றுக்குற்றியலுகரமும் புள்ளி பெற்ருலென், பெருவிடின் என், எனின்

புள்ளி யீற்றுமு னுயிர்தனித் தியலாது
மெய்யொடுஞ் சிவணு மவ்வியல் கெடுத்தே.

(எழுத். 139)

என்ற சூத்திரத்தான் உயிரேற
தற்கு என்க.

இடங்கொடுக்கு மென்று உணர்த்

இச்சூத்திரத்திற்கு உரைகாரர்கள் " ஈற்றிற் குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங்கொடுக்கு மத்தன் மைத்து என்று சொல்லுவர் " எனப் பொருள் கூறினர். அது பொருந்தாதென, " குற்றிய லுகரமு மற்றென மொழிப் என்னுஞ் சூத்திரத்தாற் குற்றியலுகரமும் புள்ளிபெற்று நிற்குமென முற்றுகரத்தோடி தனிக்கட வரிவடிவினும் வேற்றுமை தோன்றக் கூறி " என்ற தொடரான் சிவஞானமுனிவர் கூறினர். " அம்மூன்றும் புள்ளிபெறுதல் பற்றிப் பொதுப்பெயராக முப்பாற்புள்ளியும் என்றும் " என அவரே முன்னர்க் கூறினமையான், இச்சூத்திரம் குற்றியலுகரம் புள்ளிபெறும் என உணர்த்திற்று எனக் கொள்ளுதல் பொருந்தாது.

ஆகலின் ஈற்றுக்குற்றியலுகரமே புள்ளி பெறும் எனப் பொருள் கொள்வதே சாலும்.

“ இம்மாட்டேறு ஒருபுடைச்சேறல் ” என இளம்பூரணர் கூறினர். ஒருபுடை என்றதும் ஏகதேசம் என்பதும் ஒருபொருட்கிளவியாகும். புள்ளி யீற்றுமுன் (எழுத். 139) என்ற சூத்திரப் பொருளை நோக்கின், குற்றியலுகரம் நிலைமொழியிறுதியில் வர வருமொழிமுதலில் உயிர் வரின் ஆங்கு வரும் புணர்ச்சிக்கும், மெய் நிலைமொழியிறுதியில் வர வருமொழி முதலில் உயிர் வரின் ஆங்குவரும் புணர்ச்சிக்கும் உள்ள மாறுபாடு யாதெனின் முற்கூற்றில் குற்றியலுகரங்கெட, மெய்யுடன் உயிர் ஒலிக்கும், பிற்கூற்றில் நேரிலே மெய்யுடன் ஒலிக்கும் என்றதே ; ஒற்றுமையாவது இரண்டின்கண்ணும் உயிர் மெய்யுடன் ஒலித்தலேயாகும். சிறிது ஒற்றுமையும் சிறிது வேற்றுமையு மிருத்தலின் “ இம்மாட்டேறு ஒருபுடைச் சேறல் ” என இளம்பூரணர் கூறியிருத்தல் கூடும். இவ்வாறிருக்க நச்சினார்க்கினியர் “ இம்மாட்டேறு ஒருபுடைச்சேறல் புள்ளி பெறு

112

மையின். அங்ஙனம் உயிரேறுங்காற் குற்றுகரங் கெட்டுப்போக நின்ற ஒற்றின்மேல் உயிர் ஏறிற் றென்க” எனக் கூறினர். புள்ளி பெறும் என்றது அம்முப்பாற் புள்ளி (எழுத் 2.) என்றதனான் பெறப்படு மெனச் சிவஞானமுனிவர் கூறியிருத்தலானும், குற்றுகரங் கெடாது முன்னர் குற்றுகரவோசையும் பின்னர் உயிரோசையும் பெற்று அவ்விரண்டுங் கூடி நின்று பொருளுணர்த்தும்” எனக் கூறுதல் பொருந்தாமையானும், நச்சினார்க்கினியர்கொள்கைகள் ஆராய்

தற்பாலன.

**107.** உயிர்மெய் யீறு முயிரீற் றியற்றே.

போ-ள். மொழியீற்றுயிர்மெய்யும், மொழியீற்று உயிரின்

தன்மையது.

ஈண்டு உம்மையால் இளம்பூரணர் " இடையில் நின்றதுவும் உயிரின் இயல்பையுடைத்து" என்று கொண்டனர். உயிரின் இயல்பையுடைத்து என அவர் கூறியது பொருந்தாதெனக் கருதி, நச்சினார்க்கினியர் உம்மையான் இடை நின்ற உயிர்மெய்யும் உயிரீற்றின் இயல்பை யுடைத்து" எனக் கூறினர்போலும். ஈண்டு " ஈறு" என்றதனுன் மொழியின் ஈற்றை இருவருங்கொண்டு "வரகு" என்றவிடத்து இடையில் வந்த உயிர்மெய்யும் உயிரின் தன்மைத்து எனக் கொள்வது எவ்வாறு பொருந்தும்? உம்மையை எச்சவும்மை

யாகக் கொள்ளின் அதனுற் றழுவப்படுதற்கு உயிரைப் போன்றது வேறொன்றில்லாமையின், அது பொருந்ாது. சிறப்பும்மையாகக் கொள்ளின் ஒருவாறு பொருந்து மென்னலாம். சிறப்பும்மையாற் பயனின்மையான் உம்மை யின்றியே பாடமிருந்ததோ வென ஐயமுண்டாகின்றது. மெய்யே உயிரேன் றுயீ ரியல

(எழுத். 104) என்ற
சூத்திரத்தானே இப்பொருள்
பெறப்படுகின்றமையானும், விளக்கத்.
திற்காகத் தனியாய்க் கூறின ரெனின் உயிர்மெய்
முதலே மெய்ம்முத
லியற்றே எனச் சூத்திரமுங் கூறியிருத்தல்
வேண்டுமாதலானும், இச்
சூத்திரங் கூறியதற்கு ஆசிரியரின் உட்கருத்து
விளங்கவில்லை.

" இத்துணையும் ஒருமொழியிலக்கணங்
கூறலின் மொழிமர
பின் ஒழிபாயிற்று" என இளம்பூரணரும், "
இத்துணையும் மொழி
மரபின் ஒழிபு கூறிற்று" என
நச்சினார்க்கினியருங் கூறினர்.
புணர்ச்சியில் நிலைமொழியீற்றிற்கும்
வருமொழிமுதலுக்குமே மாறு
தல் நிகழ்கின்றமையானும், புணர்ச்சிவிதிகளில்
உயிர்மெய்யைக்

கூறுமையானும், புணர்ச்சிவிதிகளுக்கு இச்சூத்திரங்கள் கருவியா
யிருத்தலின். அவர்கூற்று ஆராய்தற்பாலது.

113

நச்சினார்க்கினியத்தில்

" உயிர்மெய்யென்பதோரீறுண்டேனும் அது புணர்க்கப்படாது அதுவும் உயிராயே யடங்குமென்றலின்" என்ற தொடர் உளது. ஆங்கு உயிராயே யடங்குமென்றலின் என்றதற்குப் பிரதியாக உயிரின் தன்மைத் தென்றலின் என்றிருப்பின் நலம்.

பா-ம். இளம். க. பதி. " இடையி னின்றனவும் உயிரினியல் டையுடைத்து."

இளம். சி. பதி. "இடையில் நின்றதுவும் உயிரினியல்பை

யுடைத்து". பின்னருள்ள பாடமே பொருந்தும்.

இரண்டு சொற்கள் புணருமிடத்தே

புணர்ச்சி நிகழுமாதலின்,
அவ்விரண்டனுள் முதன்மையிலிருக்குஞ்
சொற்கும், பின்னருள்ள
சொற்கும் முறையே நிறுத்தசோல்,
குறித்துவருகிளவி எனப்
பெயர் என்றதை இச்சூத்திரம்
உணர்த்துகின்றது.

**108.** உயிரிறு சொன்மு னுயிர்வரு வழியும்
உயிரிறு சொன்முன் மெய்வரு வழியும்
மெய்யிறு சொன்மு னுயிர்வரு வழியும்
மெய்யிறு சொன்முன் மெய்வரு
வழியுமென்று
இவ்வென வறியக் கிளக்குங் காலை
நிறுத்த சொல்லே குறித்துவரு
கிளவியென்று
ஆயீரி யல புணர்நிலைச் சுட்டே.

**பொ-ள்.** உயிரீற்றுச்சொல்லின் பின்னர்
உயிர்முதன்மொழி
வருமிடமும்,
உயிரீற்றுச்சொல்லின் பின்னர் மெய்முதன்மொழி

வரு . மிடமும், மெய்யீற்றுச்சொல்லின் பின்னர்
உயிர்முதன்மொழி வரு
மிடமும், மெய்யீற்றுச்சொல்லின் பின்னர்
மெய்முதன்மொழி வரு
மிடமும் என்று (அந்நான்கும்) புணர்நிலையைக்
கருதுமிடத்து இவை
யென அறியச் சொல்லப்படுமிடத்து
நிறுத்தசொல் குறித்துவரு
கிளவி என இருதன்மையன.

கிளக்குங்காலை என்றதற்கு எழுவாயாக

ஆசிரியன் என்றதை
இளம்பூரணரும், யாம்
என்றதை நச்சினார்க்கினியருங் கொண்டனர்.
அதனைச்
செயப்பாட்டுவினைப்பொருளதெனக்கொண்டு இவை
என்
றதனை அதற்கு எழுவாயாகக் கொள்ளலாம்.
15

இளம்பூரணர் " என்றப்புணர்ச்சிவகை" "ஆகிய அவ்விரண் டியல்புடைய" என்று கூறுதலின், இச்சூத்திரத்துள்ள என்று இரண்டும் பெயர்ப்பொருளில் வந்தன என்றது வெளிப்படை. ஆகலின் "என்று இரண்டும் எண்ணிடைச் சொல்" என்ற சிதம்பரம் பிள்ளைக்குறிப்புப் பொருந்தா தென்க.

பா-ம் இளம். க. பதி. "என்றப்புணர்ச்சிவகை...சொல்லுங் காலத்தும்"

இளம். சி. பதி. "அப்புணர்ச்சிவகை ... சொல்லுங்காலத்து". " என்றப்புணர்ச்சிவகை சொல்லுங்காலத்து" என்றதே இளம் பூரணர்பாடமா யிருத்தல் வேண்டும்.

நச்சினார்க்கினியர் முன்னருள்ள "என்று" என்ற சொல்லை, "புணர்நிலைச் சுட்டு" என்றதனோடு கூட்டி "என்று சொல்லப் பட்ட ஒன்றினொ டொன்று கூடும் நிலைமையாகிய கருத்தின்கண்" என்று கூறுதல் நேரிதாகத் தோன்றவில்லை. அன்றியும் "முன்னர் மெய்யே யுயிர் என்றது ஒருமொழிக்கு; இஃது இருமொழிக்கு" என்ற தொடர் பொருந்தவில்லை, ஈண்டு அச் சூத்திரம்போல் மொழி களின் ஈற்றினையும் முதலையுங் கூறாது, புணர்நிலையின்கண் நிறுத்த சொல் குறித்துவருகிளவி என இரண்டாகக் கொள்ளல் வேண்டு மென்றே கூறலின்.

அவ்விருவகைச்சொற்களும் புணரும்போது புணர்ச்சிவகை நான்கென உணர்த்தும் இச்சூத்திரம்.

**109** அவற்றுள்

நிறுத்த சொல்லி னீறு கெழுத்தொடு
குறித்துவரு கிளவி முதலெழுத் தியையப்
பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்
பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலுந்

தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலுந்
தொழிலொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
மூன்றே திரிபிட னொன்றே யியல்பென
ஆங்கந் நான்கே மொழிபுண ரியல்பே.

பொ-ள். *நிலைமொழி வருமொழி இவ்விரண்டனுள் நிலைமொழி யீற்றொடு வருமொழி முதல் பொருந்துமாறு பெயரும் பெயரும்*

115

*புணருமிடத்தும், பெயரும் வினையும் புணருமிடத்தும், வினையும் பெயரும் புணருமிடத்தும், வினையும் வினையும் புணருமிடத்தும் மொழிபுணருந் தன்மை, மூன்று திரிபிடனும், இயல்பாம் இடம் ஒன்றும், ஆகிய நான்கே யாகும்.*

*நச்சினார்க்கினியத்தில் " இனி முயற்கோடு*

உண்டென்றால் அது குறித்துவருகிளவியன்மையிற் புணர்க்கப்படாது " என்ற தொடர் உளது. ஒருவன் மயக்கத்தால் "முயற்கோடு உண்டு" எனக் கூறின், ஆங்கு முயற்கோட்டினை
நிறுத்தசொல்லாகவும் உண்டு என்றதனைக் குறித்துவருகிளவியாகவுங் கொண்டால் இழுக்கு என்னை? இவ் வதிகாரத்துள் சொற்களுக்கேயன்றி, பொருளுக்குப் புணர்ச்சி கூற வில்லையே.

பா-ம். நச். ம. பதி. "நான்கிலக்கணத்தோடும் ... இருவகைத்து வினை."

நச். தா. சை. பதி.
தொழில்."

" நான்கினத்தோடும் ... இருவகைப்படுந்

**110.** அவைதாம்
மெய்பிறி தாதன் மிகுதல் குன்றலென்று
இவ்வென மொழிப திரியு மாறே.

போ - ள். அம்மொழிபுணரியல்பு திரிபாய்

வருமிடத்து மெய் பிறிதாதல், மிகுதல், குன்றலென்று இவை எனக் கூறுவர் (ஆசிரியர்).

" அவைதாம் " என்றதற்கு " அத்திரிபுதான் " என இளம் பூரணரும், " முன்னர்த் திரிபென்று கூறிய அவைதாம் " என நச்சி னார்க்கினியரும் பொருள் கூறினர். அவ்வாறாயின் சூத்திரத்துள்

" திரியுமாறே " என்றது எற்றுக்கு? அன்றியும் " அவைதாம் திரிந்து புணரும் நெறியை " என்று அவர் கூறுதற்குப் பொருள் யாது? ஆக லின் " அவைதாம் " என்றது கீழ் மொழிபுணரியல்பு என்று வந்த தைச் சுட்டுமென்று கொண்டு பொருளுரைப்பதே சாலும்.

பா—ம் இளம். க. பதி. " திரிபு
மூன்றனுள் யாதாயினு
மொன்றாயினும், ஒரு புணர்ச்சிக்கு
மொருங்கு வரப்பெறும்."
இரண்டும் மூன்று

ஜளம். சி. பதி. "ஒரு புணர்ச்சிக்குத் திரிபு மூன்றனுள் ஒன்றாயினும் இரண்டாயினும் மூன்றாயினும் வரப்பெறும்."

சிதம்பரம்பிள்ளைப்பதிப்பில் "முதல் உதாரணத்தில் அத்திரிபு மூன்று வந்தது என்றிருத்தல் வேண்டும். இரண்டாம் உதாரணம் பிழை. இப்பிழைகள் ஏடு பெயர்த்தெழுதினோரால் நேர்ந்தன போலும்" என்ற குறிப்பு

கொண்டான்" என்றது.
உளது. முதல் உதாரணம் "மகத்தாற்
மகம்+கொண்டான் என்றவிடத்து
'நாட்பெயர்க் கிளவி." (எழுத். 332) என்ற சூத்திரத்தான் அத்து, ஆன் என்ற சாரியைகள் வந்தன. ஆகலின் ஆங்கு "மிகுதி இரண்டு வந்தது" என்று கூறுதல் பிழையாகாது.
இரண்டாம் உதாரணம் "நீயிர் குறியிர்" என்றது. '
நும்' என்றது அல்வழிப்
புணர்ச்சியில் "அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை..." (எழுத். 327) என்ற சூத்திரத்தான், உகரங்கெட, நகரத்தின்மேல் 'ஈ' வர, ஈறு கெட, ரகரம் வர இடையில் இகரம் தோன்ற, நீஇர் என மாறுகின்றது. ஈண்டு ஈகாரம், இகரம், ரகரம் மூன்றும் மிகுதலின்

அம் நிகுதி மூன்று வந்தது எனக் கூறுதலும் பிழையாகாது. ஆகவின் அக்குறிப்பினை அழித்தல் வேண்டும்.

பா—ம் நச். ம. பதி. "சா நின்றான் ... மூன்று மொருங்கே யாப்பெறும்."

நச். தா. சை. பதி. "சா ஞான்றான் ...மூன்று மொருங்கேயும் யாப்பெறும்"

நிலைமொழியும் வருமொழியும் அடைமொழி யடுத்துவரினும் புணர்ச்சிக்குரிய என உணர்த்தினர் இச்சூத்திரத்தில்.

111.

நிறுத்த சொல்லுங் குறித்துவரு கிளவியும்
அடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய.

பொ-ள் நிலைமொழியும் வருமொழியும் அடையோடு வரினும் புணர்ச்சிக்குரிய.

உ-ம். பதினாயிரத்தொன்று, ஆயிரத்தொருபஃது.

இச்சூத்திரம் எற்றுக்கு எனின் தனிச்சொற்கள் போலத் தொகைச்சொற்களும் நிலைமொழி வருமொழியாய் வருமெனத் தெற்றென விளக்க என்னலாம்.

## 117

இச்சூத்திரவுரையில் "ஈண்டு அடையென்றது உம்மைத் தொகையினையும், இருபெயரொட்டுப்பண்புத்தொகையினையும் என வுணர்க" என இளம்பூரணத்திலும் "அடையாவன உம்மைத் தொகையும் இருபெயரொட்டுப்பண்புத்தொகையுமாம்" என நச்சினார்க்கினியத்திலும் உள.

"பதினாயிரம்" என்றது வேற்றுமைத்தொகை யாகுமே

யன்றி ஆயிரத்திற்கு அடையாகிய "பத்து" உம்மைத் தொகையாகாமையான் அத்தொடர்கள் ஆராய்தற்பாலன. அன்றியும் "அவையல்லாத தொகைகளுள் வினைத்தொகையும் பண்புத் தொகையும் பிளந்து முடியாமையின் ஒரு சொல் எனப்படும். அன்மொழித்தொகையும் தனக்கு வேறோர் முடிபின்மையின் ஒரு சொல்லெனப்படும். இனி ஒழிந்த வேற்றுமைத்தொகையும் உவமத்தொகையும் தன்னினமுடித்தல் என்றதனான் ஈண்டு ஒரு சொல் எனப்படும்." என்ற தொடர் இளம்பூரணத்திலும், அப் பொருள் கொண்ட மற்றொரு தொடர் நச்சினார்க்கினியத்திலும் உள. "எல்லாத் தொகையு மொருசொன் னடைய" (சொல் 420) என்ற சூத்திரத்தான் பண்புத்தொகை உம்மைத்தொகை இவையும் ஒரு சொல்லேயா மென உணர்த்தப்படுதலின் அத்தொடர்களின் உட் கருத்து நன்கு விளங்கவில்லை.

பா—ம் இளம். க. பதி. "ஓரோர் சொல் இடைவந் தொன் றினும் அவையும் புணர்நிலைக் குரிய"

இளம். சி. பதி. "ஓரோர் சொல்லிடைவந்து ஒன்றித் தோன் றினும் புணர்நிலைக்குரிய"

புணர்நிலையின்கண் நிலைமொழிவருமொழிகள்

ஒன்றுக்கொன்று
சில விடங்களில் மாறுமென உணர்த்தற்கு

இச்சூத்திரங் கூறினர்.

112.

மருவின் றொகுதி மயங்கியன் மொழியும்
உரியவை யுளவே புணர்நிலைச் சுட்டே.

போ - ள். வழக்கில் வருஞ்

சொற்கூட்டங்களுள் புணர்நிலை

யைக் கருதுமிடத்து மயங்குந் தன்மையுடைய சொற்களும் உரியவை யுள.

உ - ம். நுனிநா. முன்றில்.

118

நாவின் நுனி, இல்லின் முன் என்பன
தொகையாம்போது

நாநுனி, இல்முன் என ஆகாது, நுனிநா, முன்றில் என ஆயின. "நிலை"

என்ற சொல் எற்றுக்கு எனின், நாவின் நுனி என்ற தொகையாகி நா நுனி என்ற சொற்கள் புணர்கின்ற நிலையில்தான் மயங்குமேயன்றி

நாவின் நுனி எனத் தனிச்சொற்களாய் நிற்கும்போது மயங்கா

தென்றற் கென்னலாம். இவ்வாறு "நிலை" என்ற சொற்கும் பயன் காணலாம். சோணாடு முதலிய மரூஉச்சொற்களோ தொகைச்

சொற்களாகலான்" நிறுத்த சொல்லும் ... " (எழுத். 111) என்ற

சூத்திரத்ாலேயே புணரலாம். ஆகவே 'நிலை' என்றதனுன் இலக்கணத்தொடு பொருந்திய மரூஉவழக்கல்லா மரூஉவழக்கும் புணர்க்கப்படும் எனக் கொள்க" என்ற இளம்பூரணத் தொடரின் கருத்து விளங்கவில்லை.

இச்சூத்திரத்தான் மரூஉச்சொற்களின் பகுதிகள் புணரும் போது இடம் மாறுமென உணர்த்தப்பட்டதாகக் கொள்ளல் வேண்டுமேயன்றி "மரூஉக்களும் புணர்க்கப்படும்" என்பது உணர்த்

தப்பட்டதாகக் கொள்ளல் பொருந்தா தென்க.

இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருள் "இருவகையாகிய மருவிய சொற்களும், செவிக்கினிதாகச் சொற்றிரனிடத்து நிறுத்தசொல்லுங் குறித்துவருகிளவியுமாய் ஒட்டினாற்போல நின்று பொருளுணர்த்தாது, பிரிந்து பின்னர்ச் சென்று ஒட்டிப் பொருளுணர்த்த மயங்குதல் இயன்ற சொற்களும் புணரும் நிலைமைக் கருத்தின்கண் உரியன உள" என்பதாகும்.

இவ்வாறு கூறியதற்குக் காரணம் "இரும்பு திரித்தன்னமாயிரு மருப்பிற்—பரலவலடைய விரலை தெறிப்ப" போன்றவிடத்து "மருப்பின்" என்றது "பரல்" போன்றதோடு அந்நுவயிக்காது விரலைபோன்றதனைத் தழுவுதலானும். செய்யுளில் சொற்களின் முறை பிறழல் பன்மொழியிலுங் காணப்படுதலானும் "இரும்பு திரித்தன்னமாயிரு மருப்பின்" என்றதை அன்மொழித்தொகையாகக் கொள்ளலா மாகலானும் "குறித்துவருகிளவி" என்றதனாற் பின்னர்க் கூறப்படும் "வருமொழி" என்றதே பொருளாகக் கொள்ளப்படுமாகலானும் நச்சினார்க்கினியர் கூறும் பொருள் ஆராய்தற்குரியது.

119

110-ஆவது சூத்திரத்துக் கூறப்பட்ட மிகுதல் இருவகைப்படும் என இச்சூத்திரம் உணர்த்தும்.

**113.** வேற்றுமை குறித்த புணர்மொழி
நிலையும்

வேற்றுமை யல்வழிப் புணர்மொழி
நிலையும்
எழுத்தே சாரியை யாயிரு பண்பின்
ஒழுக்கல் வலிய புணருங் காலை.

பொ-ள் வேற்றுமைப்புணர்ச்சி அல்வழிப்புணர்ச்சி இரண் டிடத்தும் (நிலைமொழியும் வருமொழியும்) புணருங்காலத் து எழுத்து, சாரியை இவ்விரண்டானும் மிகுந்து வழங்குதல் வேண்டும்.

111-ஆவது சூத்திரத்தினின்று நிறுத்தசொல்லும் குறித்துவரு கிளவியும் என்பன அதிகரித்தன. அவை ஒழுக்கல்வலிய என்ற தற்கு எழுவாயாகும்.

பின்னர்ச்சூத்திரங்களி லெல்லாம் அல்வழி எனக் கூறுமிடத்து வேற்றுமையல்வழி எனக் கொள்ளல்வேண்டும் என்றது இச்சூத்தி ரத்து இரண்டாமடியாற் குறிக்கப்பட்டது.

முன்னர்ச் சொல்லப்பட்ட நால்வகைப்

புணர்ச்சியும் வேற்று மைப்புணர்ச்சி,
அல்வழிப்புணர்ச்சி என்றவற்றுள் அடங்கு மென்றதும் இச்சூத்திரத்தாற் பெறப்பட்டது.

வேற்றுமைகுறித்தபுணர்மொழி என்றதற்கு வேற்றுமையுரு பால் (நின்றும் தொக்கும்) இயைபு குறிக்கப்பட்ட புணர்மொழிகள் என்பது பொருளாகும்

"ஒழுக்கல்வலிய என்றதனுன் எழுத்துஞ் சாரியையும் உடன் பெறுதல் கொள்க" என்று இளம்பூரணத்திற் காணப்படுகின்றது. "வலிய" என்ற சொல்லே, இச்சூத்திரம் மிகுதல் என்ற திரிபைப்பற்றிக் கூறும் என உணர்த்துகின்றமையான் ஒழுக்கல் என்பது வேண்டுவதன்று.

இச்சூத்திரத்தில் "வேற்றமை குறித்த புணர்மொழி நிலையும் வேற்றுமையல்வழிப் புணர்மொழி நிலையும்" என்றதை எழுவாயாகக்கொண்டனர் உரைகாரர்கள். நிறுத்தசொல்லும் குறித்துவரு கிளவியும் அன்பன புணருங்காலே என்றனவற்றிற்கு

எழுவாயாகலின் 120

அவற்றையே ஒழுக்கல் வலிய என்றதற்கும் எழுவாயாகக் கொள்ள லாம். புணருங்காலை என்ற சொல் எற்றுக்கு எனின், மரத் தைக் குறைத்தான் என்ற இருசொற்களும் புணர்தற்குத் தகுந் தன வா யிருப்பினும், அவ்விரண்டனையும் சேர்த்து ஒலிக்காவிடின்

புணர்ச்சியானுண்டாம் மிகுதல் நிகழாது என்றதற்காக. புணருங் காலை என்றதனல், " புணர்ச்சிக்கண்ணே, வேற்றுமை அல்வழி என இரண்டாவது ; அல்லாக்கால், வேற்றுமையெனவே படும் என்பது

கொள்க " என்ற இளம்பூரணம் எற்றுக்கு எனின், வேற்றுமைப்

புணர்ச்சி என்றதனல் வேற்றுமைப்பொருட்புணர்ச்சியையே இளம் பூரணர் கொண்டமையானும், அப்புணர்ச்சியுடையது தொகைச் சொல்லே யாதலானும் அவ்வாறு கூறினா ரென்க.

நச்சினார்க்கினியத்தில் " வேற்றுமை யல்லாத

அல்வழியிடத்து" என்றதற்குப் பிரதியாக "வேற்றுமையல்லாதவழி"என்றிருப்பின் நலம்.

முற்சூத்திரத்திற் கூறப்பட்ட வேற்றுமை, வேற்றுமையுரு பினைக் குறித்தலின், அவை யாவை என இச்சூத்திரம் உணர்த்தும்.

**114.** ஐஒடு குஇன் அதுகண் ணென்னும்
அவ்வா றென்ப வேற்றுமை * யுருபே.

போ - ள். வேற்றுமையுருபுகள் ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்ற ஆறும் என்பர் (புலவர்).

பெயருக்கும் சில வேற்றுமையுருபிற்கும் நேரும் புணர்ச்சியைக் கூறுமிச் சூத்திரம்.

**115.** வல்லெழுத்து முதலிய வேற்றுமை யுருபிற்கு
ஒல்வழி யொற்றிடை மிகுதல் வேண்டும்

போ-ள். வல்லெழுத்தை முதலாகவுடைய

வேற்றுமையுருபு களாகிய கு, கண் இவற்றிற்குப் பொருந்தியவிடத்து அவற்றிற்கும் பெயர்க்கும் இடையில் ஒற்று மிகுதல் வேண்டும்.

* வேற்றுமை என்ற தமிழ்ச் சொல்லும் விஜக்திः என்ற வடமொழிச் சொல்லும் ஒருபொருட் கிளவியாவது நோக்கற்பாலது. அச்சொல் வேதத்தில் அப்பொருளில் வழங்கியது காண்க Cf. விஜக்தய: (தைத். 1.5 2)

## 121

ஒற்று எனப் பொதுப்படக் கூறினமையான், வல்லொற்றும் மெல்லொற்றுங் கொள்ளப்படும். இடை என்றதனுன் அவற்றிற்கும் பெயர்க்கும் என்பன வருவிக்கப்பட்டன.

உ-ம். சினைக்கிளவிக்கு, நுங்கண்

ஒல்வழி யென்றதனுன் சிலவிடத்து மிகுதல் இல்லை.

உ-ம். அவன்கட்படும் (புறநா. 183).

முதற்கண் (வினை 38), போக்கற்கண் (அகத். 39) முதலிய விடங்களில் கண்ணின் முன்னர் றகரவொற்றின் மிகுதியை † ஆசிரியர் கொண்டமையானும் லகரவொற்றிற்குப் பின்னர் றவொற்று வருமென ஆசிரியர் கூறுமையானும் நிலைமொழியீற்றுலகரங் கெட்டதென்க.

அவ்வாறே தங்கண் நங்கண், உங்கண் என்ற விடங்களில் மக ரக்கேட்டினைக் கொள்க.

" மெய்பிறிதாதலை எடுத்தோதாது மிக்கதனை எடுத்தோதிய வதனான் மிக்க புணர்ச்சியல்லனவும் ஈண்டே கொள்க; பொற்கு
பொற்கண், ஆங்கண், ஈங்கண், ஊங்கண், அவற்கு, இவற்கு, நுங்கண்,
கொற்றற்கு, சாத்தற்கு என வரும் "
என இளம்பூரணரும் அவரைப் பின்பற்றியே நச்சினார்க்கினியருங் கூறினர்,

ஈண்டுப் பொற்கு,
பொற்கண், அவற்கு, இவற்கு, கொற்றற்கு, சாத்தற்கு என்ற உதாரணங்களில் உரைகாரர்கள் கொள்வதுபோல் மிக்க புணர்ச்சியல்ல எனக் கொள்ளாது, மிக்க புணர்ச்சியெனக் கொள்ளுதல் சாலும். உருபியலில் ஆசிரியர் னகரவீறு . றகரமாக

* ஈண்டு மகரம் ஙகரமாய்த் திரிந்தது எனக்

கூறலாகாதோவெனின்
ஆசிரியர்க்கு அது கருத்தன்று என்பது "நம்மெ ஞெரு பெயர் மெல்லெழுத்து மிகுமே..." (எழுத். 326) போன்ற இடங்களில் மெல்லெழுத்து மிகுதியைக் கூறியதேயாகும்.

† ஆசிரியர் உருபியலில் லகரவீறு நகரமாக மாறும் எனக் கூறுமையானும், ஈண்டு ஒல்வழியொற்று இடையில் மிகும் எனக் கூறினமையானும் முதற்கண் போன்ற இடங்களில் லகரம் நகரமாகத் திரிந்தது எனக் கொள்ளுதல் ஆசிரியர்க்கு உடன்பாடன்று,

16

# 122

மாறும் எனக் கூறுமையானும், இங்கு ஒல்லொழியொற்று இடைமிகும் எனக் கூறினமையானும், ய ர ழ என்னும் மூன்றன் பின்னரே ஈரொற்று வருமென எழுத். 48-ஆவது சூத்திரத்திற் கூறினமையான் னகர வொற்றின் பின்னர் ஈரொற்று வாராது எனப் பெறப்படுகின்றமையான் அவ்வொற்று கெடும் எனக் கொள்ளுதல் பொருந்துமாகலானும் என்க. தங்கண், எங்கண் என்பனவற்றிற்கும் நுங்கண் என்பதற்கும் மாறுபாடின்மை.

படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும்

... ......
மெல்லெழுத்து மிகுத லாவயி னான" (எழுத். 321)
நம்மெ ஞெருபெயர் மெல்லெழுத்து மிகுமே (எழுத். 326)

என்ற சூத்திரங்களின் ஒற்றுமையால் அறியக்கிடக்கின்றமையான் அஃது இடைச்செருகலா யிருத்தல் கூடும். ஆங்கண், ஈங்கண், ஊங்கண் என்பன அது + கண், இது + கண், உது + கண் * என்ற இருபெயர்களாலாகிய தொகைச்சொற்களாகலான் அவை ஈண்டு உதாரணமாகா. "நீட வருதல் செய்யுளு ளுரித்தே" (எழுத். 209) என்ற சூத்திரத்தால் சுட்டு நீள, ஐம்பா லறியும் பண்பு தொகு மொழியும் ..." (எழுத். 482) என்ற சூத்திரத்தால் ஙகரவொற்று வந்தது எனக் கொள்ளல் வேண்டும்.

ஆறனுருபாகிய அது என்றதின் முன்னர் நிகழும் ஒரு மாறுதலைக் கூறும் இச்சூத்திரம்.

**116.** ஆற னுருபி னகரக் கிளவி
ஈறு ககரமுனைக் கெடுதல் வேண்டும்.

பொ-ள், அகரத்தை ஈறாகவுடைய சொற்குப் பின்னருள்ள

ஆறாம்வேற்றுமையுருபின் அகரங் கெடும்.

உ-ம். தமது.

தாம் + அது என்றவிடத்து "தாம்நா மென்னும் ..." (எழுத். 189) என்ற சூத்திரத்தான் தம் + அது என்றாக, "ஆற

* "கண்" என்பது இடப்பொருளை புணர்த்தும் பெயரேயன்றி ஏழாம்வேற்றுமையுருபன்று.

னுருபின் " (எழுத். 162) என்ற சூத்திரத்தான் தம+அது என்றாக, இச்சூத்திரத்தான் தம+து என்றாயிற்று. இதனை நோக்கின் இளம்பூரணத்தில் "மேல் ஈறுகு அகரம் இதற்குத் தாராது இவ்வுரு பகரமே ஏறி முடியப் அமைதலின், அது கேடாதல் வேண்டா எனின், நெடுமுதல் குறுகி விகாரப்பட்டு நின்ற மொழியாக லின், அதன்மேல் உருபகரமேறி முடியல் வேண்டாராயினர் போலு மென்பது " என்ற தொடர் இடைச்செருக லாயிருத்தல்கூடும். இக் கொள்கையை " இது நிலைமொழிக்கு ஓர் அகரம் பெறுமென விதி யாது உருபு அகரம் ஏறிமுடியுமென் விதித்தால் வரும் குற்றம் உண் டோவெனின் ... 'நினவ கூறுவலெனவ, கேண்மதி' என்றாற்போல ஆறுவதற்குரிய அகரவுருபின் முன்னரும் ஓர் அகர எழுத்துப் பேறு நிலைமொழிக்கண் வருதலுளதாகக் கருதினாராதலின், ஆறனுரு பிற்கும் நான்கனுருபிற்கும் பொதுவாக நிலைமொழிக்கண் அகரப்பேறு விதித்து, அதுவென்னும் ஒருமையுருபுவந்தால் ஆண்டுப் பெற்று நின்ற அகரத்தின் முன்னர் அதுவென்பதன்கண் அகரங்கெடுக வென்று ஈண்டுக்கூறினாராதலின் அதற்குக் குற்றம் உண்டென்று உணர்க" என்ற நச்சினார்க்கினியத்தொடர் வலியுறுத்துகின்றது.

மண்ணுன் + குடம் போன்று குடம் + மண்ணுன் என்பனவும் வேற்றுமைகுறித்த புணர்மொழிகள் ஆகுமோ என ஐயம் வர, அஃது ஆகாது என உணர்த்தும் இச்சூத்திரம்.

**117.** வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே.

போ - ள். வேற்றுமை குறித்த புணர்நிலையின்கண் பெயர்கள் வேற்றுமையுருபேற்ற பெயரின்பின்னர் வரும்.

ஈண்டு புணர்நிலை என்றது வேற்றுமை குறித்த புணர்மொழி நிலையைக்குறிக்கும், "வேற்றுமை வழிய" என்திருத்தலின். இச் சூத்திரத்தில் வேற்றுமை என்றது "உருபு தொடர்ந்தடுக்கிய வேற்றுமைக் கிளவி" (சொல். 102) என்ற சூத்திரத்து வேற்றுமைக் கிளவி என்ற சொல்லைப் போல வேற்றுமையுருபை யிறுதியாக வுடைய சொல்லைக் குறிக்கும்.

இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் "வேற்றுமை பெயர்களின் பின்னிடத்தன அவற்றோடு புணரும் நிலைமைக்கண்" எனப் பொரு

ளும், "மேல் உருபுநிலை கிரியா தீறுபெயர்க்காகும் என்கின்றானன்றோ வெனின், பெயரொடு பெயர் முதலிய நால்வகைப் புணர்ச்சியையும் வேற்றுமை அல்வழியென இரண்டாக அடக்கலின், வினைவழியும் உருபு வருமென்பது படநின்றதாகலின் ஈண்டு இது கூறப்பட்டது" என இச்சூத்திரம்

கூறியதுகூற லென்ற குற்றத்திற்கு இலக்காகா தெனக் கூறினர். "வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது— நினையுங் காலைக்காலமொடு தோன்றும்" (சொல் 198) என்ற சூத் திரத்துள் வினை உருபேலா தென வெளிப்படையாய்க் கூறப்பட்டமை யின், இளம்பூரணர் கூறும் ஐயம் எழா தென்க. நச்சினார்க்கினியரும் இளம்பூரணரைப் பின்பற்றியே கூறினர்.

நச்சினார்க்கினியர் "ஆயின் இவ்விலக்குதல் வினையியன் முதற் சூத்திரத்தாற் பெறுதுமெனின், அது முதனிலையைக் கூறிற்றென் பது" என்கின்றனர். சொல்லெனப்படுப-பெயரே வினையென்று (சொல். 158) என்றும், வினையெனப் படுவது வேற்றுமை கொள் ளாது-நினையுங்காலைக் காலமொடு தோன்றும் (சொல். 198) என்றும்,

காலமொடு வரூஉம்
வினைச்சொல்லெல்லாம்-உயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையும்... (சொல். 201) என்றும் ஆசிரியர் கூறுகின் றமையின், வினையெனப் படுவது என்றவிடத்து வினை என்றது முதனிலையைக் குறிக்காதென்பது தெற்றென விளங்கும்.*

புணர்ச்சியை வேற்றுமைப்புணர்ச்சி, அல்வழிப்புணர்ச்சி என இருவகையாய் ஆசிரியர் பிரித்தமையானும், அவை புணர்மொழி களின் பொருள் அறியப்படாது அறிதற்கு இயலாமையானும்,
புணர்மொழிகளின் பொருளை அறிதற்குக் கருவியாகப் இருவகைப்படுமென இச்சூத்திர முணர்த்தும்.
பெயர்

**118.** உயர்திணைப் பெயரே யஃறிணைப்
பெயரேன்று
ஆயிரண் டென்ப பெயர்நிலைச் சுட்டே.

போ-ள். பெயர் புணர்நிலைச்சுட்டின்கண் உயிர்திணைப்பெயர் அஃறிணைப்பெய ரென இருவகைப்படு மென்பர்.

* சொல்லதிகாரக்குறிப்பில் அச்சூத்திரவாராய்ச்சியின்கண் நச்சினார்க்கினியர் கொள்கை பொருந்தாதெனக் கூறப்பட்டதையுங் காண்க.



உ-ம். அவன் ; அது.

பெயர்நிலைச்சுட்டு என்றதற்குப் "பெயராகி நிலைமையது கருத் திணை" என இளம்பூரணரும் "பொருளை ஒருவர் கருதுதற்குக் காரணமான நிலைமையை யுடைய பெயர்களை" என நச்சினார்க்கினியரும் கூறினர். புணர்நிலைச்சுட்டே என்றும் புணர்நிலையே என்றும் முன்னர்ச் சூத்திரங்களில் ஆசிரியர் வழங்குதலின், ஈண்டும் நிலைச் சுட்டே என்றதற்கு புணர்நிலைச்சுட்டே என்றதனைப் பொருளாகக் கொள்ளுதல் நேரிதாகும். அன்றியும் இச்சூத்திரத்துள் பெயரின் வகை கூறப்படுதலின் "பெயர்" என்றது எழுவாயாயிருத்தல் வேண்டும்.

" நிலைச்சுட்டு " என்றது எற்றுக்கு எனின், பெயரின் வகை உயர்திணை, அஃறிணை, விரவுத்திணை யென மூன்றாக " அம் மூவுருபின " (சொல். 160) என்றவிடத்துக் கூறியிருப்பினும், புணர்ச்சியின்கண் இருவகையாகக் கொள்ளுதலே சாலுமென்றற்
கென்க.

நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்துள் நிலை என்ற சொல் மிகை எனக்கருதி "இனி அஃறிணை விரவுப்பெயரியல்பு மாருளவே என்றாற் போலப் பிறாண்டும் ஓதுதல் பற்றி நிலை யென்றதனான் விரவுப்பெயர் கோடலும் ஒன்று" எனக் கூறினார். விரவுப்பெயர் என்றது உயர் திணை அஃறிணை இரண்டாகவும் வழங்கும் பெயராயிருப்பினும், ஓரிடத்தில் உயர்திணையாகவேனும் அஃறிணையாகவேனும் இருத்தல் வேண்டுமேயன்றி இரண்டு திணையாகவுமிருத்தல் பொருந்தாமையான் அங்ஙன் கூறவேண்டுவதின்று. அவ்வாறாயின் " அஃறிணை விரவுப் பெயர்" என அச்சூத்திரத்தில் ஆசிரியர் கூறாது "அஃறிணை" எனவே கூறியிருத்தல் கூடுமெனின், அற்றன்று ; அவ்வாறு கூறின்

அஃறிணைச்சொற்களெல்லாவற்றிற்கும் இயல்பாயிருக்குந்தன்மை விதிக்கப்பட்டதாகும்; விரவுத்திணையாக வரத் தகுதியுள்ள சொற்கள் அஃறிணையாய் வரினே இயல்பு விதிக்கப்படவேண்டுமென்பது ஆசிரியர்கருத் தென்க.

"பெயர்" என்றது முற்சூத்திரத்திலிருந்து அதிகரிக்க இயலு தலின், இச்சூத்திரத்தில் பெயர்நிலைச்சுட்டே என்றதற்குப் பிரதியாக ஆசிரியர் புணர்நிலைச்சுட்டே எனப் படித்திருத்தல் கூடும்.

120

113ஆவது சூத்திரத்துள் "எழுத்தே சாரியை... ஒழுக்கல் வலிய" எனக் கூறப்பட்டது. அச்சாரியை யாண்டு வரும் என்ற ஐயத்தைப் போக்கும் இச்சூத்திரம்.

119. அவற்றுவழி மருங்கிற் சாரியை வரும்.

பொ-ள். உயர்திணையஃறிணைப்பெயர்களின்

பின்னர் சாரிகை

கள் வரும்.

உ-ம். ஆடு உவின்கை, பலவற்றுக்கோடு.

சாரியை என்றது முன்னேரிட்ட குறியாகும்.

ஆகலின் அதனி

லக்கணத்தை ஆசிரியர் கூறிற்றிலர். அவற்றைப் புணரியனிலையிடைப் பொருணிலைக்குதவுந என இடையியல் இரண்டாஞ் சூத்திரத்திற் கூறினர். ஆகலின் நச்சினார்க்கினியர் "ஆடுஉவின்கை மகடூஉவின் கை பலவற்றுக்கோடு எனப் புணரியனிலையிடைப் பொருணிலைக்கு உதவிவந்தன" என்றனர். அத்தொடர்க்குப் பொருள் ஆடூவின்கை,

மகடூஉவின்கை, பலவற்றுக்கோடு என்றவிடத்துள்ள

இன் சாரியை

யும் வற்றுச் சாரியையும்

புணரியனிலையிடைப் பொருணிலைக்கு உதவி

வந்தன என்பது பொருளாகும்.

பா-ம். இளம். க. பதி. "அவற்றுள்வழி

மருங்கின்"

இளம். சி. பதி.
நச். தா. சை. பதி. } "அவற்றுவழி மருங்கின்"

இளம். க. பதி.
கோடு"

" ஆடூஉவின்கை மகடூஉவின்கை, பலவற்றுக்

இளம். சி பதி.
" ஆடூஉவின்கை பலவற்றுக்கோடு"

அச்சாரியைகள் யாவை என்றதை இச்சூத்திரத்துள் உணர்த்தினா ராசிரியர்.

**120.** அவைதாம்
இன்னே வற்றே யத்தே யம்மே
ஒன்னே யானே யக்கே யிக்கே
அன்னென் கிளவி யுளப்படப் பிறவும்
அன்ன வென்ப சாரியை மொழியே.



பேரா - ள். அவற்றுவழி மருங்கின்

வருவனதாம் இன், வற்று, அத்து, ஆம், ஒன், ஆன், அக்கு, இக்கு, அன் என்ற சொற்கள் உளப்பட, பிறவும் மத்தன்மையனவாகக் கூறப்பட்டன சாரியை மொழிகளாம்.

அவைதாம் என்றதற்கு இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் "மேற்சாரியை எனப்பட்டவைதாம் எனப்பொருள் கூறினும், அவற்றுவழி மருங்கின் வருவனதாம் எனப் பொருள் கூறின் பொருந்துமெனத் தோற்றுகின்றது. அவைதாம்...விளிகோள்பெயரே (சொல். 120) என்ற சூத்திரத்துள்ள அவைதாம் என்றதற்குக் கிளக்கப்படுவனவாகிய பெயர்தாம் என்ற பொருளைச் சேனாவரையர் கூறியதும் விளிதாம் எனக் கூறுததும் நோக்கத்தக்கன. அச்சூத்திரத்துள் "மெய்ப்பொருள் சுட்டியவிளிகொள் பெயர் அப்பால் நான்கென்பன எழுவாயும் பயனிலையுமாய் இயைந்து, ஒருசொன்னீர் மையவாய் அவைதாமென்னும் எழுவாய்க்குப் பயனிலையாயின' என அவர் கூறியவாறே ஈண்டும் சாரியை மொழியே பிறவுமன்ன என்பன என்பன எழுவாயும் பயனிலையுமாய் இயைந்து ஒரு சொன்னீர் மையவாய்

அவை தாமென்னும் எழுவாய்க்குப் பயனில்லையாயிற்று எனக் கூறுதல் சாலும்.

இவ்வாறு கொள்ளாது சாரியைமொழியே என்றதனை இரண்டாம் வேற்றுமையாக இளம்பூரணர் கொண்டனர். அவ்வாறாயின் அவை தாம் என்றதற்கு நேரிதான முடிவு இல்லை. நச்சினார்க்கினியரோ உளப்படப் பிறவுமன்ன என்றதை உளப்பட அன்ன பிறவும் என மாற்றி, "கூட ஒன்பதாகிய அத்தன்மையுடையனவும் பிறவும்" எனப் பொருள்கூறினர். அவர் கூற்றின் அன்ன என்றது மிகையாவதுடன் உளப்பட என்றதற்கு முடிக்குஞ் சொல்லாய் நிற்பது இயற்கைக்கு மாறாய் நிற்கின்றது. ஆகலின் "உளப்பட, பிறவுமன்ன" என்றேஅந்துவயங் கொள்ளல்வேண்டும்.*

"பிற" என்றதனால் தம்மிடை வரூஉம் படர்க்கை மேன—நும்மிடை வரூஉம் முன்னிலை மொழிக்கே (எழுத். 191) உயர்திணை யாயி-னம்மிடை வருமே (எழுத்- 190) என்றவிடத்துக் கூறப்பட்ட தம், நும் நம் என்பனவும், "னகாரை முன்னர் மகாரங் குறும் (எழுத். 52)

* இவ்வாறு அமைப்புள்ள சூத்திரங்கள் தொல். சொல். 120,202,299.

என்றவிடத்து ஆசிரியரான் வழங்கப்பட்ட ஐயும், லனவேன வரூஉம் புள்ளியிறுதிமுன் - உம்முங் கெழுவும்...” (எழுத். 481) என்ற சூத்திரத்துக் கூறப்பட்ட உம் ,கெழு இவையும், ஒத்த தென்ப வேயேன் சாரியை (எழுத். 164) என்றவிடத்துக் கூறப்பட்ட ஏயும் அவைபோ ன்றனவுங் கொள்ளப்படும்.

இச்சூத்திரத்தில் இன், வற்று...இவற்றின் முறைக்குக் காரணங் கூறுமிடத்து இன்னும் அன்னும் சிறப்புநோக்கி ஒன்று தொடக்கத் திலும் மற்றொன்று இறுதியிலும் வைக்கப்பட்டன என்பர் உரை காரர்கள். முறைக்குக் காரணங்கூறாமையே நலமாம்.

இளம்பூரணத்தில் பிறவும் என்றதனாற் கொள்ளப்படுமவற்றில் எம்மும் உள்ளது. நச்சினார்க்கினியத்தில் உம் என்றது அதற்குப் பிரதியாக உளது. எம் என்ற சாரியை ஆசிரியர் யாண்டு வழங்கியிருக் கின்றாரென்பது புலப்படாமையானும் உம் என்றதை ஆசிரியரே கூறியிருத்தலானும், அஃது இளம்பூரணத்திலில்லாமையானும் ‘உம்’ என்றதற்குப் பிரதியாக ‘எம்’ எனத் தவறி வந்திருக்கலா மென்று தோன்றுகின்றது.

இளம்பூரணத்துள்ள ‘அலங்கு காந்தள் என்பதன் விகார மென்ப” என்றதற்கும் நச்சினார்க்கினியத்திலுள்ள “இது வினைத்

தொகை'' என்றதற்குங் கருத்து ஒன்றென அறிக.
பின்வரும் பதின்மூன்று சூத்திரங்களில் அச்சாரியைகள் புணர்ச்சியில் அடையும் மாறுதல்கள் கூறப்படும்.

**121.** அவற்றுள்

இன்னி னிகர மாவி னிறுதி
முன்னர்க் கெடுதே லுரித்து மாகும்.

போ-ள். அச்சாரியைகளுள் இன்சாரியையின் இகரம் ஆகாரத்தை இறுதியாகக்கொண்ட சொற்களின் பின்னர் கெடுதலும் உண்டு.

உ-ம். ஆ + ஐ = ஆ + இன் + ஐ (எழுத். 173) ஆனை, ஆவினை; மா + ஐ = மானை, மாவினை.

ஆவினிறுதி என்றதற்கு ஆ என்ற சொல்லின் இறுதி என உரைகாரர்கள் இருவருங்கொண்டு முன்னர் என்ற சொல் மிகையெனக்



கருதி அதனால் மானை என்றதையுங் கொள்ளுகின்றனர். அத்தி னகர மகரமுனை யில்லை (எழுத். 126), இக்கி னிகர மிகரமுனை யற்றே

(எழுத். 127), ஐயின் முன்னரு மவ்விய னிலையும் (எழுத். 128) முதலிய சூத்திரங்களில் முன்னர் என்ற சொல்லையேனும் அப் பொருள்கொண்ட சொற்களையேனும் ஆசிரியர் வழங்குதலானும், அச் சொல் இல்லையெனின் பொருள் விளக்கமாய்க் கொள்ள இயலாமை யானும், இச்சூத்திரத்தில் "முன்னர்" என்ற சொல்லை மிகையாக உரைகாரர்கள் கொள்ளுதல் பொருத்தமின்று அவ்வாறாயின் "மானை" என்றது எதனாற் பெறுமெனின், "ஆவினிறுதி" என்றதற்கு "ஆகாரத்தை இறுதியிற் கொண்டசொல்" எனப் பொருள் கொள்ளு தலான் என்க. இரட்டுறமொழிதலான் மாவினிறுதியெனப் பிரித்தால் மானை எனப் பெறப்படலாமெனின், உண்மையே; ஆயினும் "பா" போன்ற ஆகாரவிறுதிச்சொற்கள் அச்செய்கை பெறின் அவற்றிற்குத் தனிச்சூத்திரங் கூறல் வேண்டுமாகும்.

இச்சூத்திரத்தில் உரித்தும் என்ற உம்மையான் இகரங்கெடாது நிற்றலே பெரும்பான்மை யெனக் கொள்ளல் தகும்.

இன்சாரியையின் னகரம் சிலவிடத்து

மாறுமென இச்சூத்திரங் கூறும்.

**122.**

அளபாகு மொழிமுத னிலைஇய வுயிர்மிசை
னஃகான் றஃகா னாகிய நிலைத்தே.

பொ - ள். அளவைக் குறிக்குஞ் சொல்லின் முதலாயுள்ள உயிரெழுத்தின் முன்னருள்ள இன்னின் னகரம் றஃகானாகுந் தன்மைத்து.

உ - ம். பத்து + அகல் = பத்து + இன் + அகல் = பத் + இன் + அகல் (எழுத். 437) * = பத் + இற் + அகல் = பதிற்றகல்.

* "பத்து" என்றதன் "து" ஒன்றுமுதல் எட்டு வரையிலுள்ள எண்ணின் முன்னர்க் கெடும் என எழுத். 434 ஆவது சூத்திரத்திற் கூறப்படினும் அத்தை அளவுப்பெயரின் முன்னரும் எழுத். 437 ஆவது சூத்திரத்தால் ஒருவாறு கொள்ளல் வேண்டுமெனத் தோன்றுகின்றது. றகரவொற்றிரட்டலை இறுதிப்புறனடைச்சூத்திரத்தாற் கொள்ளல் வேண்டும்.

"நிலைத்து என்றதனால் பிறவழியும் இன்னின்னகரம் றகரமாதல் கொள்க; பதிற்றொன்று, பதிற்றேழு எனவரும்" எனக் கூறினர் இளம்பூரணர். நிலைஇய என்றதனால் அதனையே கொண்டனர் நச்சினார்க்கினியர். அவை பிற்காலத்து வழக்காயின் ஒற்றுமைப் போலியான் வந்தது எனக் கூறுதல் சாலும்.

இன்னின் சாரியையைப்பற்றிக் கூறிய பின்னர் வற்றென் சாரியையைப் பற்றிக் கூறினர்.

**123.** வஃகான் மெய்கெடச் சுட்டுமுத லைம்முன்
அஃகா னிற்ற லாகிய பண்பே.

போ - ள். (அவற்றுள்) சுட்டெழுத்தை முதலாகவும் ஐகாரத்தை ஈற்றெழுத்தாகவுங் கொண்ட அவை, இவை, உவை என்ற சொற்களின் பின்னர் வருகின்ற வற்றுச்சாரியை வகரங்கெட்டு அகரம் நிற்றற்பண்புடைத்து.

உ - ம். அவை + ஐ = அவை + வற்று + ஐ (எழுத். 178) = அவை + அற்று + ஐ = அவையற்றை; இவையற்றை; உவையற்றை.

வற்று என்றது 120 ஆவது சூத்திரத்தினின்றும் அவற்றுள் என்றது 121ஆவது சூத்திரத்தினின்றும் அதிகரித்தன.

"ஆகிய பண்பு என்றதனால் சுட்டு முதலாகிய ஐயென்னிறுதி ஐகாரத்தோடு நில்லாதவழி வற்றின் வகரம் அகரம் நிற்கக் கெடாது வற்றேயே நிற்றல் கொள்க" எனக் கூறினர் இளம்பூரணர். அவை, அவ் என்பன இரண்டு தனிச்சொற்களாக ஆசிரியர் பல விடங்களிற் கூறுகின்றமையான், இவ்வாறு கூறுவேண்டுவதின்று எனத் தோன்றுகின்றது.

"ஆகிய பண்பு என்றதனானே எவனென்பது படுத்தலோசையாற் பெயராயவழி எவன் என நிறுத்தி வற்றும் உருபுங் கொடுத்து வற்றுமிசையொற்றென்று னகரங்கெடுத்து அகரவுயிர்முன்னர் வற்றின் வகரங் கெடுமெனக் கெடுத்து எவற்றை, எவற்றொடு என

* Analogy.

முடிக்க” எனக் கூறினர் நச்சினார்க்கினியர். ஆசிரியர் யாவற்றை, யாவற்றொடு என்பனவற்றிற்குச் சூத்திரங் கூறுகின்றமையானும் “எவன்” என்றது அறியாப்பொருள்வயின் செறியத்தோன்றும் என்றமையானும் “எவன்” என்றது அவர்காலத்துப் பெயராக வழங்கவில்லை யெனலாம்.

**124.** னஃகான் றஃகா னான்க னுருபிற்கு.

பொ - ள். நான்காம்வேற்றுமையுருபிற்கு முன்னுள்ள னகரம் றகரமாய்த் திரியும்.

உ - ம். விளவிற்கு, கோஒற்கு, ஒருபாற்கு, அதற்கு.

122ஆவது சூத்திரத்தினின்று மிசை என்ற சொல் அதிகரிக்கப்பட்டு “ நான்கனுருபிற்கு மிசை ” என அந்நுவயிக்கப்படல் வேண்டும். “ னஃகான் ” எனப் பொதுப்படக்

கூறியதனுன் னகரத்தை ஈற்றிற் கொண்ட எல்லாச் சாரியைகளையுங் கொள்ளல் வேண்டும். னகரவீற்றுப்பெயர்களைக் கொள்ளல் கூடாதாவெனின், கூடாததாகும், இவ்வியல் சாரியைகளின் மாறுதலைப்பற்றிக் கூறுகின்றமையின்.

இளம்பூரணத்தில் "னகாரவீற்றுச்சாரியை யெல்லாம்" என்றதற்குப் பிரதியாக " னகாரவீற்றுச்சாரியை யெல்லாவற்றினும் " என்றிருப்பின் நலம்.

**125.** ஆனி னகரமு மதனோ ரற்றே
நாண்முன் வரூஉம் வன்முதற் றொழிற்கே.

பொ - ள். (அவற்றுள்) நட்சத்திரத்தைக் குறிக்குஞ் சொல் லின் பின்னர் வல்லெழுத்தை முதலெழுத்தாகக் கொண்ட வினைக்கு முன்னுள்ள ஆன்சாரியையின் னகரம் அத்தன்மையது. (அதாவது றகரமாய்த் திரியும்.)

உ-ம். பரணியாற் கொண்டான்.

அவற்றுள் என்றது 121ஆவது சூத்திரத்தினின்று அதிகரித்தது.

132

இளம்பூரணர் தொழிற்கு என்பதனைத் தொழிற்கண் என மயக்கமாகக் கொள்க என்றும், நச்சினார்க்கினியர் தொழிற்கு என்றதற்குத் தொழிற்கு இடையேவரும் எனப் பொருளென்றுங் கூறினர். முற் சூத்திரத்திற்போல, “மிசை” என்றதை 122ஆவது சூத்திரத்தினின்றும் அதிகரித்து, தொழிற்கு மிசை என அந்துவயிக்கின் நேரிதாகும்.

முன் சூத்திரம் னகரவீற்றுச்சாரியைகளுக்கெல்லாம் பொது விதியையும் இச்சூத்திரம் ஆன்சாரியைக்குச் சிறப்புவிதியையுங் கூறுகின்றன.

120ஆவது சூத்திரத்து இன்சாரியையை முதலில் ஆசிரியர் கூறினமையாலும் 121, 122ஆவது சூத்திரங்கள் இன்சாரியைப்பற்றியனவாதலாலும், 124ஆவது சூத்திரம் இன்சாரியையும்பற்றிக்

கூறுதலானும், 125ஆவது சூத்திரம் ஆன்சாரியையு

மத்தன்மையது

எனக் கூறினமையானும், 126ஆவது சூத்திரம்

அத்துச்சாரியைப்

பற்றிக் கூறினமையானும், வற்றுச்சாரியைப்பற்றிக் கூறும் 123ஆவது சூத்திரத்தை என் " ஆனினகரம் " என்ற இச்சூத்திரத்தின் பின்னர் ஆசிரியர் கூறிற்றிலர் என்பது விளங்கவில்லை.

பரணியான் + கோண்டான் என்றது வேற்றுமைப்புணர்ச்சியாகவின் " னகார விறுதி வல்லெழுத் தியையின் றகாரமாகும் வேற்று மைப் பொருட்கே " (எழுத். 333) என்ற சூத்திரத்தான் னகரம் றகரமாய்த் திரியுமென்பது பெறப்படினும், இச்சூத்திரத்தை ஆசிரியர் கூறினமையின் சாரியைகளின் மாறுதல்கள் ஆங்குக் கூறப்பட வில்லை என்பது பெறப்படலாம். அவ்வாறாயின் " பனி + கொண் டான்", " வளி + கொண்டான் " என்னுமிடங்களில் இன் சாரியை வருமென்று "பனியென..." (எழுத். 242) "வளியென..." (எழுத் 243) என்ற சூத்திரங்களிற் கூறப்பட்டமையானும், ஆங்குள்ள

னகரம் றகரமாய்த் திரிதற்கு விதியின்மையானும் " உம்மையை இரட்டுற மொழிதலானே எதிரது தழீஇயதாக்கி அதனான் நாளல்ல வற்றுமுன்வரும் வன்முதற்றொழிற்கண் இன்னின் னகரமும் றகரமாய்த் திரிதல் கொள்க" என இளம்பூரணர் கூறவேண்டியுளது. "னகாரவிறுதி..." (எழுத். 333) என்ற சூத்திரத்தான் அதனைக் கொள்ளின் இவ்வாறு அவர் கூறவேண்டுவதின்று. அவ்வாறாயின் இச்சூத்திரம் எற்றுக்கு என்பது ஆராய்தற்பாலது.

133

இளம்பூரணத்தில் "ஆன்சாரியையி னகரமும் அந்நான்கனுருபின் கண் வரும் ஆன்சாரியையோடு ஒரு தன்மைத்தாய் னகாரம் றகார மாம்" என்றவிடத்து "னகாரம்" என்றது ஏட்டில் தவறிவந்தது போலும். ஆன்சாரியையின் அகரம் எனச் சிதம்பரம்பிள்ளை பதித்திருப்பதுந் தவறாகும்.

**126.** அத்தி னகர மகரமுனை யில்லை.

பொ-ள். (அவற்றுள்) அகரவீற்றுச்சொல்லின் பின்னருள்ள அத்துச்சாரியையின் அகரங் கெடும்.

உ-ம். மக + கை = மக + அத்து + கை (எழுத். 220) = மக + த்து + கை = மகத்துக்கை.

அவற்றுள் என்பது அதிகரித்தது.

நச்சினார்க்கினியர் "விளவத்துக்கண்ணென்புழிக் கெடாதுநிற்றல் அத்தேவற்றே என்பதனுட் டெற்றென்றற்றே என்பதனாற் கூறுப" என்றனர். அவ்வாறே அச்சூத்திரவுரையிற் கூறினர் இளம்பூரணரும். "அத்தொடுஞ் சிவணு மேழ னுருபே (எழுத். 182) என்ற விடத்து ஏழாம்வேற்றுமையின் முன்னர் அத்துவருமென்றமை யான் விளவத்துக்கண் என்றவிடத்து அகரங் கெடவில்லை யென்னலாம்.

**127.** இக்கி னிகர மிகரமுனை யற்றே.

பொ-ள். (அவற்றுள்) இகரவீற்றுச்சொல்லின் பின்னருள்ள இக்குச்சாரியையின் இகரம் அத்தன்மையது. (அஃதாவது கெடும்)

உ-ம்: ஆடி + கொண்டான் = ஆடி + இக்கு + கொண்டான் (எழுத். 249) = ஆடிக்குக் கொண்டான்.

"அவற்றுள்" என்பது அதிகரித்தது.

**128.** ஐயின் முன்னரு மவ்விய னிலையும்.

பொ - ள். ஐகாரவீற்றுச்சொல்லின் பின்னரும் இக்கின் இகரம் அத்தன்மை பெறும் (அஃதாவது கெடும்).



உ - ம். சித்திரை + கொண்டான் = சித்திரை + இக்கு + கொண்டான் (எழுத். 287) = சித்திரைக்குக் கொண்டான்.

அவற்றுள், இக்கின் இகரம் என்பன அதிகரித்தன.

**129.**

எஃகுபெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
அக்கி னிறுதிமெய்ம் மிசையொடுங் கெடுமே
குற்றிய லுகர முற்றத் தோன்றாது.

போ - ள். எவ்வகைப்பட்ட பெயர்களின் பின்னரும் வல் லெழுத்தை முதலாகக் கொண்ட வருமொழி வருமிடத்து (இடை

யில் வரும்) அக்குச்சாரியையின் இறுதியிலுள்ள ககரம் தன் முன்ன ருள்ள ககரவொற்றுடன் கெடும், குற்றியலுகாமும் இறுதியில் தோன்றாது.

உ - ம். குன்று + கூகை = குன்று + அக்கு + கூகை (எழுத். 419) = குன்று + அ + கூகை = குன்றக்கூகை ; மன்றப் பெண்ணை (எழுத். 419) ; ஈமக்குடம் (எழுத். 330) ; தமிழக்கூத்து (எழுத். 386)

"முற்ற" என்றது மிகையெனக் கருதி உரைகாரர்கள்

"மூற்ற என்றதனுல் வன்கணமன்றி மற்றக் கணங்கட்கும் கொள்க,

தமிழநூல், தமிழயாப்பு, தமிழவரையர்." என்று கூறினர். இவை

பிற்காலத்து வழக்காயின் ஒற்றுமைப்போலியான் வந்தனவென்றும்,

ஆசிரியர் காலத்து வழக்கே எனின்

அதிகாரப்புறனடையால் வந்தன
என்றுங் கூறல் தகும்.

பா - ம்.

இளம். க. பதி. " தாம்
வருமிடத்து...தமிழக்கூத்து, தமிழ
நூல், தமிழயாழ், தமிழவெழுத்து என வரும்."

இளம். சி. பதி. "வல்லெழுத்து
வருமிடத்து ... குன்றக்
கூகை ... மூற்ற என்றதனுல் ... எனவரும்."
மூன்பாடம் ஏட்டில்
தவறிவந்தது போலும்.

**130.** அம்மி னிறுதி கசதக் காலைத்
தன்மெய் திரிந்து ஙஞந வாகும்.

பொ - ள். க, ச, த இவற்றை முதலாகக்
கொண்ட வருமொழி
வருமிடத்து (அவற்றுள்) "அம்" சாரியையின் இறுதி மகரம் முறை
யே ங, ஞ, ந ஆகத் திரியும்.

உ - ம். புளி + கோடு = புளி + அம் + கோடு (எழுத். 245) = புளியங்கோடு ; புளியஞ்செதிள் ; புளியந்தோல்.

அவற்றுள், வரு என்பன அதிகரித்தன. வரு என்பதைக் காலை யுடன் கூட்டல் வேண்டும்.

உரைகாரர்கள் " தன்மெய் என்றதனால் அம்மினிறுதி மகரமே யன்றி, தம், நம், நும், உம் என்பனவற்றின் இறுதி மகரமும் திரியு மென்பது கொள்க. எல்லார்தங்கையும், எல்லார்நங்கையும் ... " எனக் கூறுகின்றனர்.

" மெல்லெழுத்து மிகுத லாவயி னான"

(எழுத் 321) எனக் கூறப்பட்டமையானும், அம்மெல்லெழுத்து மிகுதி மகரக் கேடின்றி முடியாமையானும், ஆங்கு மகரமே மெல்லெழுத்தாகத் திரியாமையானும் உரைகாரர்கள்கூற்று ஆராய்தற்பாலது.

பா - ம்.

நச். ம. பதி. " தன்னென்றதனான்"

நச். தா. சை. பதி. "தன்மெய் என்றதனான்"

**131.** மென்மையு மிடைமையும் வரூஉங் காலை
இன்மை வேண்டு மென்மனார் புலவர்.

போ ள். மெல்லெழுத்து இடையெழுத்து இவற்றை முதலாகக் கொண்ட வருமொழி வருமிடத்து 'அம்' சாரியையின் மகரங் கெடுதல் வேண்டு மென்பர் புலவர்.

உ - ம். புளி + ஞெரி = புளி + அம் + ஞெரி (எழுத். 244) = புளியஞெரி.

"அம்மினிறுதி" என்பது அதிகரித்தது.

"புளியவிலை" என்றதனை உரையிற்கோடலாற் கொண்டனர் உரைகாரர்கள். அது பிற்காலத்துவழக்குப் போலும்.

**132.**
இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கு
இன்னென் சாரியை யின்மை வேண்டும்.

போ - ள். 'இன்' என்ற வேற்றுமையுருபின்

முன்னர் 'இன்' என்ற சாரியை வாராது.

# 136

மிசை என்றது 129

ஆவது சூத்திரத்தினின்று அதிகரித்தது.

" அவற்றுள் இன்னினிகரம் " (எழுத். 121) என்றதன்பின் வையாததனால் சிறுபான்மை இன்சாரியை கெடாது நிற்றல் கொள்க. பாம்பினிற் கடிது தேள் என வரும்" என இளம்பூரணரும், " இனி அவற்றுள் இன்னி னிகரம் என்றதன்பின் இதனை வையாத முறை யன்றிக் கூறிஞன் இன்சாரியை கெடாது வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணும் நிற்றல் கொள்க...இனி இன்மையும் வேண்டுமென்னும் உம்மை தொக்கு நின்ற தாக்கி அதனுன் இவை கோடலுமொன்று" என நச்சினார்க்கினியருங் கூறினர்.

இனி " பெயருந் தொழிலும்..." என்ற அடுத்த சூத்திரத்தில் ஓடு உருபு வரும்போது சாரியை வாராமலுமிருக்குமெனக் கூறப் படுதலின் அதனை யொட்டி இச்சூத்திரமும் கூறப்பட்டதென்ன லாம் : பாம்பினிற் கடிது தேள் என்பது பிற்பட்ட வழக்குப்போலும்.

பா-ம். நச். ம. பதி. " இவை கோடலு மொன்றும் "

நச். தா. சை. பதி. " இவை கோடலு பொன்று " முன்பாடஞ் சிறக்கும்.

**133.** பெயருந் தொழிலும் பிரிந்தோருங் கிசைப்ப
வேற்றுமை யுருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்
ஒட்டுதற் கொழுகிய வழக்கொடு சிவணிச்
சொற்சிதர் மருங்கின் வழிவந்து விளங்காது
இடைநின் றியலுஞ் சாரியை யியற்கை
உடைமையு மின்மையு மொடுவயி னொக்கும்.

**பொ-ள்.** பெயரும் வினையும் பிரிந்திசைத்து இடையில் வேற் றுமையுருபு ஏற்றும் ஏலாதும் சேர்ந்து வரும் வழக்கொடும், பெயரும் தொழிற்பெயரும் ஒருசொன்னீர்மைப்பட்டு இடையில் வேற்றுமை யுருபு ஏற்றும் ஏலாதும் சேர்ந்துவரும் வழக்கொடும்

பொருந்தி,
சொற்களைப்பகுதியும் வேற்றுமை யுருபுமாகப் பிரித்துக்கூறுமிடத்து அவற்றின் பின்னர்த் தோன்றுது, (சேர்த்துச் சொல்லுமிடத்து) இடையில் தோன்றுஞ் சாரியையின் தன்மை ஒடுவுருபு வரும்போது இருந்துமில்லாது மிருக்கும்.

# 137

உ-ம். விளவினைக் குறைத்தான் : விளவினைக்குறைத்தான்
வந்தான் ; பூவொடு விரிந்த கூந்தல் : பூவினொடு விரிந்த கூந்தல்.
இச்சூத்திரத்தில் இளம்பூரணரும்
நச்சினார்க்கினியரும் கொள்ளு
மந்நுவபம் " பெயருந் தொழிலும் பிரிந்திசைப்ப வேற்றுமையுருபு நிலைபெறுவழியும் தோற்றம் வேண்டாத் தொகுதிக்கண்ணும்,
பெயருந் தொழிலும் ஒருங்கிசைப்ப வேற்றுமையுருபு நிலைபெறு வழியும் தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும், ஒட்டுதற் கொழுகிய ...''. சேனாவரையர்கொள்ளும்

அந்நுவயம் "பெயருந்தொழி

லும் பிரிந்திசைப்ப வேற்றுமையுருபு நிலைபெறு வழியும், பெயருந் தொழிலும் ஒருங்கிசைப்ப தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்

ணும் ஒட்டுதற் கொழுகிய. ..". இவ்வாறு அவர் அந்நுவயங் கொண்டனர் என்றது " எல்லாத் தொகையு மொருசொன் னடைய"

(சொல் 420) என்ற சூத்திரத்தின் உரையில் " வேற்றுமையுருபு

தொகப் பெயருந் தொழிலும் ஒருங்கிசைத்தல் ஆசிரியர் நேர்ந்தாராகலின் அவை தொகை யெனவே படுமென்பது" என்ற தொடரான் விளங்கும். சேனாவரையர்கொள்கைப்படி தொழில்,

தொகுதி

என்பன

என்ற சொற்களுக்கு முறையே வினை, சமாசன் பொருளாகும். இளம்பூரணர்கொள்கைப்படி தொழில் என்றதற்கு வினை, தொழிற்பெயர் என்பனவும் தொகுதி என்றதற்குக் கூட்டம் என்பதும் பொருளாகும். நச்சினார்க்கினியர்கொள் கைப்படி " தொழில் என்றதற்கு வினை, தொழிற்பெயர் என்பனவும் " தொகுதி " என்றதற்குத் " தொக்கு நிற்கும் நிலை " என்பதும்

பொருளாகும். தொகுதி என்ற சொல் கூட்டம் என்ற பொரு ளில் " மருவின்றேகுதி " (எழுத் 112) என்றவிடத்து வழங்கப்பட்டமையான், .ஈண்டும் அப்பொருள் கூறுதல் ஏற்கும். சமாசன் என்ற பொருளைக் கொண்டு " கடந்தான் " என்றது வினைமுற்றாயிருக்கும்போதும் நிலம் கடந்தான் என்ற தைச் சமாசனாகச் சேனாவரையர் கொள்ளுதல் இன்றியமையாத தன்று. தோகுதி என்றதற்கு நச்சினார்க்கினியர் கூறிய பொருள் "தோற்றம் வேண்டா" என்ற பகுதியான் கிடைக்கும். நச்சினார் க்கினியர் இங்குச் சூத்திரத்திற்கு அந்நுவயத்தில் இளம்பூரணரைப் பின்பற்றி, "எல்லாத் தோகையு மொருசோன் னடைய" என்ற சூத்தி ரத்தில் "நிலங்கடந்தான்" என்றது சமாசன் எனக் கூறிச் சேனாவரை

18



யுரைப் பின்பற்றுதல் பொருத்தமின்று.

இளம்பூரணர்கொள்கையே உலகவழக்கிற்கு ஒக்கும்.

இளம்பூரணருரையில் "பெயரும் பெயருமாய்" என்றவிடத்துப் பெயருமாய் என்றதற்குத் தொழிற்பெயருமாய் என்பதுபொருளாகும்

"எல்லாநம்மையும் எனச் சாரியை ஈற்றின் கண்ணும் வருதலின்
இடைநின்றியறல் பெரும்பான்மை யெனக் கொள்க" என்றனர்

இளம்பூரணர். "எல்லார்தம்மையும் எனச் சாரியை ஈற்றின் கண்ணும் வருதலின் இடைநிற்றல் பெரும்பான்மை யென்றற்கு இயலுமென்றார்" என்றனர் நச்சினார்க்கினியர். "எல்லா மென்னு மிறுதி மூன்னர் வற்றென் சாரியை முற்றத் தோன்றும்—உம்மை நிலையு மிறுதி யான (எழுத். 190) என்றவிடத்து வற்று என்றதைச் சாரியையாகவும், அடுத்த சூத்திரங்களில் நம், தம், நும் என்பன இடையில் வருமென்றும் ஆசிரியர் கூறுதலின், அவர் உம்மையைச் சாரியையாகக் கொண்டா ரென்பது தெற்றென விளங்கவில்லை. 481-ஆம் சூத்திரத்தையுங் காண்க.

நச்சினார்க்கினியத்தில் "விளவினது கோடு விளவின்கோடு" இவற்

றினை ஒருங்கிசைத்தனவாகவும், இதற்குப் பிரிந்திசைத்தவின்று எனவும் கூறப்பட்டுள. இவற்றையே பிரிந்திசைத்தனவாகக் கொள்ளின் குற்றம் யாதோ ?

**134.** அத்தே வற்றே யாயிரு மொழிமேல்
ஒற்றுமெய் கெடுத றெற்றென் றற்றே
அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து
மிகுமே.

பொருள். *அத்து, வற்று* இவ்விரண்டு இடைச்சொற்களின் முன்னருள்ள மெய் தன்வடிவங்கெடுதல் தெளியப்பட்டது. அவ்விடைச்சொற்களின் பின்னர் வரும் வல்லெழுத்து மிகும்.

உ-ம். கலம் + குறை = கலம் + அத்து + குறை (எழுத் 169) = கல + அத்துக்குறை = கலத்துக்குறை (எழுத் 126) ; அவ் + கோடு = அவ் + வற்று + கோடு (எழுத் 379) = அவற்றுக் கோடு.

இச்சூத்திரத்தான் அவை + கோடு என்றதும் அவற்றுக்கோடு என் ஆகுமென்று உரைகாரர்கள் கூறினர். ஈண்டு ஐகாரங் கெடுதற்கு விதியின்று. சூத்திரத்தில் ஒற்றுமெய் என்றதற்குப் பிரகியாக 129 ஆவது சூத்திரத்திலுள்ளவாறு இறுதிமெய் என இருப்பின் அச்சூத் திரத்தின்றும் மிசை என்ற சொல்லை அதிகரித்து இறுதியும் அதன் முன்னருள்ள மெய்யும் எனப் பொருள்கொளல் தகும். அவையற்றுக் கோடு என்பது அவை, கோடு என்ற சொற்களின் புணர்ச்சி யெனவும் அவற்றுக்கோடு என்றது அவ், கோடு என்ற சொற்களின் புணர்ச்சி யெனவுங் கொள்ளல் இளம்பூரணருக்கு ஒருவாறு உடன்பாடு என்றது 178 ஆவது சூத்திரத்து அவருரையான் விளங்கும்.

விண்ணத்துக் கொட்கும், வெயிலத்துக்

கொண்டான், இருளத் துக்கொண்டான் என்னுமிடங்களில் ஒற்று கெடாததை நோக்கி ஒற்று மெய் கெடும் எனனுது ஒற்றுமெய்கெடுதல் தெற்றேன்றற்றே என

ஆசிரியர் கூறியிருக்கலாம். உரைகாரர்கள் " அத்து முற்கூறிய முறை

யன்றிய கூற்றிஞன் அத்தின் மிசையொற்றுக் கெடாது நிற்கவும்

பெறும்" என்கின்றன. பிறவுயிரின் முன்னும் அத்தின் அகரங் கெடுதல் பிற்காலவழக்கு என்னலாம். தேற்று என்றதனால் அத் தின் அகரம் கெடாது நிற்றலுங் கொள்க. விளவத்துக்கண் எனவரும்"

என்ருர் இளம்பூரணர். இதற்கு விடை 126ஆம் சூத்திரத்தின் உரையிற் கூறப்பட்டது.

•

பா - ம.

இளம். க. பதி. "அவ்விருமொழி மேனின்ற வெழுத்து"

இளம். சி. பதி. "அவ்விருமொழி மேல் நின்ற ஒற்று"

பின்னருள்ள பாடஞ் சிறக்கும்.

மொழிகளுக்கு இடையிலும், பெயர்க்கும் வேற்றுமையுருபிற்கு மிடையிலும் வருஞ்சாரியைகளைக் கூறிய பின்னர்

எழுத்துக்களின்

சாரியைகளை நான்கு சூத்திரங்களிற் கூறினர்.

**135.** காரமுங் கரமுங் கானொடு சிவணி
நேரத் தோன்று மெழுத்தின் சாரியை.

பொருள். நிரம்பத் தோன்றும் எழுத்தின் சாரியைகள் காரம்,

கரம் இவ்விரண்டுங் கானொடு பொருந்தி அம்மூன்றும். ஈண்டு

எழுத்தின் சாரியை என்றதை எழுவாயாகவும்

நேரத்தோன்றும்

140

என்றதைப் பெயரெச்சமாகவும் கொள்ளுதல் நேரிதாகுமென்பது

" ஃகா னொற்றும்...நேரத்தோன்றும் பலரறிசொல்லே " (சொல். 7) என்றவிடத்துச் சேனாவரையர்நச்சினார்க்கினியருரைகளான் விளங் கும். ஆங்கு " நேரத்தோன்றும் " என்றதைப் பெயரெச்ச மாகக் கொண்ட நச்சினார்க்கினியர் ஈண்டு வினைமுற்றாகக் கொண்

டனர். "எழுத்தின் சாரியை" என்றதன் பின்னர் ஆதற்கு என வருவித்துக்கொண்டு இச்சூத்திரத்திற்கு "காரமுங் கரமும் கானொடு பொருந்தி எல்லா ஆசிரியரானும் உடன்படத் தோன்றும் எழுத்துச்சாரியை யாதற்கு" எனப் பொருள் கூறினர். "எழுத்தின் சாரியை" என்றது ஈண்டு உத்தேசியமாகையால் அதனை எழுவாய் வேற்றுமையாகக் கொள்ளுதலே நேரிதென்பது என்கொள்கை. அவ்வாறுயின் "சிவணி" என்றதன் பின்னர் அம்மூன்றும் என வருவித்தல் வேண்டும்.

"நேரத்தோன்றும்" என்ற பெயரெச்சத்தின் பயன் யாதெனின், நேரத்தோன்றாத காரை, ஆனம், ஏனம், ஓனம் என்ற சாரியைகளை நீக்குதற்கு என்னலாம்.

நச்சினார்க்கினியத்தில் "காரமுங் கரமும் அடுத்துச்சொல்லிய வழி இனிதிசைத்தலானும் வழக்குப்பயிற்சி யுடைமையானும் வடவெழுத்திற்கும் உரியவாதலானுஞ் சேரக் கூறினார்" என்ற தொடர் உளது. வடவெழுத்திற்குக் காரம் * என்ற சாரியை உளதே யன்றி கரம் என்ற சாரியை இல்லை.

பா - ம்.

நச். ம. பதி. "காரமுங் கரமும் அடுத்துச்

சொல்லியவழி... அத்தன்மை யில்லாததனுல்...ஒனம்
என விவை சிதைந்த வழக் · கேனும் ."

நச். தா. சை. பதி. "காரமுங்காரமும் எடுத்துச் சொல்லிய வழி... அத்தன்மை யின்மையினுல்...ஒனம் என்க. இவை சிதைந்த வழக் கேனுங் கடியலாகா வாயின".

"அடுத்துச்சொல்லிய வழி" என்றதும் "என்க" என்றதுஞ் சிறக்கும்.

* வண_ாக்கார ,,

141

**136.** அவற்றுள்

கரமுங் கானு நெட்டெழுத் திலவே.

பொ - ள். அவ்வெழுத்துச்சாரியைகளுள் கரம், கான் இவ் விரண்டனையும் நெட்டெழுத்துக்கள் உடையனவில்லை.

இதனால் "காரம்" ஒன்றே நெட்டெழுத்திற்கு உண்டு என்பது பெறப்பட்டது.

உ - ம். ஆகாரம்.

"காரந் தானே நெட்டெழுத் துண்டே" எனச் சூத்திரிக்காது இவ்வாறு சூத்திரித்ததற்கு யாது காரணமெனின், அவ்வாறு சூத்தி ரிப்பின் நெட்டெழுத்துக்குள் ஒரு பகுதியான ஐகார ஔகாரங் கட்கு கானும் வரும் என்று பின்கூறுதல் நேரிதன்றாகும்.

பா - ம்.

நச். ம. பதி. "மேற்சொல்லப்பட்டவற்றுள்".

நச். தா. சை. பதி. "முற் கூறியவற்றுள்".

**137.** வரன்முறை மூன்றுங் குற்றெழுத் துடைய.

போ - ள் வருதல் முறையைக்கொண்ட மூன்றனையும் குற் றெழுத்துக்கள் உடைய.

காரம், கரம், கான் மூன்றும் எழுத்துக்களின் சாரியை என்றும், காரம் நெட்டெழுத்துக்களின் சாரியை என்றும் முன்னர்ச் சூத்திரங்களாற் பெறப்பட, கரம், கான் என்ற இரண்டுந்தான் குற்றெழுத்துக்களுக்கோ என்ற ஐயம் ஒருவாறு வரலாமென நினைத்து, அதனைப் போக்கினர் ஆசிரியர் இச்சூத்திரத்தா னென்க. "வரன்முறை என்றதனான் அஃகான் என்புழி ஆய்தமிக்கு முடியுமென்பது கொள்க" என இளம்பூரணர் கூறினர். அவர்கொள்கையினையே பின்பற்றினர் நச்சினார்க்கினியர். அஃகான் (எழுத். 123). ளஃகான் (எழுத். 24), னஃகான் (எழுத். 26) என ஆசிரியர் வழக்கான் அதனைக் கொள்ளுதல் நேரிதாகும்.

# 142

பா - ம்.

நச். ம. பதி "எனப்பிறவுஞ் சூத்திரங்களுட் காண்க ....
பெருவழக்கின்று."

நச். தா. சை. பதி. "எனவும் பிறவுஞ் சூத்திரங்களுட் காண்க பெருவழக்கன்று..."

மூன்பாடஞ் சிறக்கும்.

“இது குறியதன்முன்ன ராய்தப்புள்ளி என்பதனுற் பெருதா யிற்று மொழியாய் நில்லாமையின்” என்ற நச்சினார்க்கினியர் தொடர்க்கு “ வஃகான்மெய் ” முதலியவற்றுள் வஃகான் முதலியன மொழியாய் நில்லா என்று கூறுதற்கு ஏதுவின்மையின், இது குறியதன்முன்ன ராய்தப்புள்ளி என்பதனுற் பெருதாயிற்று என்பது பொருளாகும்.

138. ஐகார ஔகாரங் கானொடுந் தோன்றும்.

பொ - ள். ஐ, ஔ இவ்விரண்டும் கான்சாரியையோடும் தோன்றும்.

இச்சூத்திரம் “ காரமுங் கானு நெட்டெழுத் திலவே” என்ற சூத்திரத்திற்கு ஒரு புறனடையாகும்.

பா - ம்.

இளம். க. பதி. காமொடு தோன்றும்

இளம். சி. பதி. கானொடுந் தோன்றும்.

பின்னருள்ள பாடமே நேரிது.

எழுத்துக்களின் சாரியைகளைக் கூறியபின்னர்

மொழியீற்றின் கண்ணுள்ள புள்ளியெழுத்துக்கள் வருமொழியின் உயிர்முதல் அதன் மேல்வற இடங்கொடுக்கும் என உணர்த்தினர் இச்சூத்திரத்தின்கண்.

**139** புள்ளி யீற்றுமு னுயிர்தனித் தியலாது
மெய்யோடுஞ் சிவணு மவ்வியல் கெடுத்தே.

**பொ-ள்** நிலைமொழியின் ஈற்றில், மெய் குற்றியலுகரம் இவ் விருபுள்ளியுள் ஒன்று நிற்க, வருமொழிமுதலில் உயிர் வரின், அப் புள்ளியின் தன்மையைக் கெடுத்து அவ்வுயிர் அம்மெய்யுடனும் அக்குறியலுகரப்பற்றுக்கோடாகிய மெய்யுடனும் பொருந்தும்.



உ-ம். பால்+ஆடை=பாலாடை,
கன்று+அங்கே=கன்றங்கே.

"புள்ளியீற்றுமுன்னும் என தொகுத்து நின்ற உம்மையை விரித் ததனேனே குற்றியலுகரத்தின் முன்னும் இவ்விதி கொள்க" என

இளம்பூரணரும், "புள்ளியீற்றுமுன் னுமென உம்மையை மாறி எச்சவும்மையாக்கிக் குற்றியலுகரத்தின் முன்னரு மென அவ்விதி கொள்க" என நச்சினார்க்கினியருங் கூறினர்.

"மெய்யீ றெல்லாம் புள்ளியோடு நிலையல்" (எழுத். 105)
என்றும்,
" குற்றிய லுகரமு மற்றென மொழிப" (எழுத், 106)
என்றும் ஆசிரியர் கூறினமையான் இச்சூத்திரத்துள்ள புள்ளி என்ற சொல்லே மெய் குற்றியலுகரம் இரண்டனையுங் குறிக்குமெனக் கொள்ளல் தகும்.

உயிரும் புள்ளியும் . ..
(எழுத். 165)
என்ற சூத்திரத்தில் " புள்ளி " என்றதற்கு அவ்வாறே பொருள் கொளல் வேண்டும்.

அச்சொற்களைக் கூட்டிச் சொல்லாது பிரித்துச் சொல்லின்,
ஈற்றுமெய் தன் வடிவத்தைப் பெறுமென்று கூறினர் இச்சூத்
திரத்துள்.

**140.** மெய்யுயிர் நீங்கிற் றன்னுரு வாகும்.

போ-ள் உயிர் நீங்கின் மெய் தன் வடிவாய் ஆகும்.

உ—ம்.

பாலாடை = பால் + ஆடை; கன்றங்கே = கன்று + அங்கே.

இனி நிலைமொழியீறும் வருமொழிமுதலும் உயிராயிருக்க,
இடையில் உடம்படுமெய் வரலாகும் என்பர்.

**141.** எல்லா மொழிக்கு முயிர்வரு வழியே
உடம்படு
மெய்யி னுருபுகோளல் வரையார்.

போ -ள்: மொழிகள் எல்லாவற்றிற்கும் வருமொழிமுதல்
உயிராயிருக்க (இடையில்) உடம்படுமெய்யின் வடிவுகோடலை நீக்கார்

(புல்வர்).



உ - ம். மணி + அழகு = மணியழகு.

எல்லாமொழிக்கும் என்று ஆசிரியர் கூறினும், உயிரை ஈற்றிற் கொண்ட சொல்லே கொள்ளல் வேண்டும்.

வரையார் என்றதனுன் உடம்படுமெய் கொள்ளுதல் இன்றி யமையாததன்று எனக் கொள்க. ஆகலின் பனுஅட்டு, எஎக் கொட்டில் என்ற விடங்களில் உடம்படுமெய் வரவில்லை. இளம்

பூரணர் "வரையார் என்றதனுல் உடம்படுமெய்கோடல் ஒருதலை அன்றென்பது கொள்ளப்படும். இனி அரிது, மூங்கா இல்லை" எனக் கூறினர்.

ணகர விறுவாய், அவ்வியல் ; ஆயிருதிணையின், ஆயிரண்டென்ப, ஆவினிறுதி, இல்லா வெல்லாம் ; நொடியென வவ்வே, கூட்டியெழூ உதல் ; ஈயாகும் ; உருவாகும் ; அம்மூவாறும் ; எ ஒ வென்னும் ; உளவே யவ்வும், மூப்பே யடிமை; உயர்திணைப் பெயரே யஃறிணை ; அரையளபு ; ஓ, ஔ வென்னும் என்ற ஆசிரியர் வழங்கிய சொற்களான் அ, உ, ஊ ஓ, ஔ இவற்றின் பின்னர் வகரமும், இ, ஈ, ஏ, ஐ

இவற்றின் பின்னர் யகரமும், ஆவின் பின்னர் யகர வகரங்களும் வருமென அறிக. ஆகலின் இவற்றை இளம்பூரணர் கூறியவாறு உரையிற்கோடலாற் கொள்ளாது, ஆசிரியர் வழக்காற்கொளல் தகும். இச்சூத்திரவுரையில் "இகர வீறும் ஈகாரவீறும் ஐகார வீறும் யகரவுடம்படுமெய் கொள்வன, அல்லன வெல்லாம் வகரமெய் கொள்வன" என இளம்பூரணரும், "உயிர்களுள் இகரஈகாரஈறு யகரவுடம்படுமெய் கொள்ளும் ; ஏகாரம் யகாரமும் வகாரமுங் கொள்ளும் ; அல்லனவெல்லாம் வகரஉடம்படுமெய்யே கொள்ளு மென்று உணர்க" என நச்சினார்க்கினியருங் கூறினர். நச்சினார்க் கினியர் நன்னூலார் கூறியவாறே கூறுதலின், அவர் நன்னூலார்க்குப் பிற்பட்டவர் என்றதற்கு இஃது மொரு சான்றாகும்.

"எல்லாமொழிக்கும்" என்றற்கு "மூவகைப்பட்ட மொழிக் கும்" என இளம்பூரணரும்

"நிலைமொழியும் வருமொழியுமாய்ப்

புணரும் எவ்வகை மொழிக்கும்"

என நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர்.

**142.** எழுத்தோ ரன்ன பொருடெரி புணர்ச்சி
இசையிற் றிரித னிலைஇய பண்பே.

பொ-ள். எழுத்துக்களில் ஒரு தன்மையவாய்ப் பொருள் தேர்ந்து அறியப்படும் புணர்ச்சியுடைய மொழிகள் ஓசைவேற்றுமையால் வேறுபடுந் தன்மையன.

உ-ம்.

செம்பொன்+பதின்றொடி (செம்பு+ஒன்பதின்தொடி; செம்பொன்+பதின் தொடி.)

பொருள் தெரிதல் என்றற்குப் பொருள் விளங்கி நிற்றல் எனப் பொருள் கூறினர் உரைகாரர்கள்.

**143.** அவை தாம்
முன்னப் பொருள புணர்ச்சி வாயின்
இன்ன வென்னு மெழுத்துக்கட னிலவே.

போர்ள். முற்கூறப்பட்டவை தாம் புணர்ச்சியின்கண் இவ்வாறெனை எழுத்து முறையில்லாதனவாய்க் குறிப்பான் உணரப்படும் பொருளுடையன.

இச்சூத்திரம் வரிவடிவிற்கெனக் கொள்க என உரைகாரர்கள் கூறினர். முன்னருள்ள சூத்திரத்தில் பல பொருளுள்ள ஒரு தொகைமொழி ஓசைவேற்றுமையால் மாறுபடுமெனக் கூறப்பட்டமையான், அப்பொருள்வேற்றுமை எதனாற் புலப்படுமென ஐயந் தோன்ற, குறிப்பான் உணரப்படும் என இச்சூத்திரம் ஐயம் அகற்றிற்று எனக் கூறின், குற்றமென்னை ?

இச்சூத்திரமும் இதற்கு முன்னுள்ள சூத்திரமும் எற்றுக்கு எனின், தமிழ்மொழியில் சொற்களின் பொருள் அறியப்படாத வரை, புணர்ச்சி வேற்றுமைப்புணர்ச்சியா அல்வழிப்புணர்ச்சியா என அறிதல் இயலாமையின் இவ்விரண்டு சூத்திரங்களும் வேண்டுமென்க.

புணரியல் முற்றும்.



# 5. தொகைமரபு.

பின்வரும் உருபியல், உயிர்மயங்கியல், புள்ளிமயங்கியல், குற்றிய லுகரப்புணரியல் இவற்றுள் விரிவாய்க் கூறவேண்டுவனவற்றுட் சிலவற்றைத் தொகுத்து ஈண்டு ஆசிரியர் கூறுதலானும், வருமொழி முதலின் மாறுதலை ஆங்குக் கூறாது ஈண்டே தொகுத்துக் கூறுதலானும், பகுதிக்கும் வேற்றுமையுருபிற்கும் இடையில் தோன்றுஞ் சாரியைகளின் மாறுதல்களைத் தொகுத்துக் கூறுதலானும், இவ்விய லுக்குத் தொகைமரபு எனப் பெயரிட்டன ரென்க.

தொகையியல் எனப் பெயரிடாது தொகைமரபு என என் பெயரிட்டனரெனின், இவ்வியலுள்ள சூத்திரங்களிற் பலவற்றிலும் முன்னோரது கொள்கையைத் தொகுத்துக் கூறினமையி னென்க. அஃது என்ப, என்மனார் புலவர், மொழிப என்ற சொற்களான் விளங்கும்.

உருபியல் முதலியவற்றிற் கூறப்படாதனவற்றை ஈண்டு ஆசிரியர் கூறினமையின், சொல்லதிகாரத்துள் மூன் எட்டு இயலி லுங் கூறப்படாதனவற்றை எச்சவியலுட்கூறி அதனை இறுதியிய லாகக் கூறியவாறு இதனையும் இறுதியிலாக ஏன் கூறிற்றிலரெனின், முன்னோரது கொள்கையை முன்னர் உணர்த்துவதே அவரிடமுள்ள

பெருமதிப்பைக் காட்டுமாகலின் என்க.

அவ்வாறாயின் இதனைப் புணரியலின் முன்னர் ஏன் கூறவில்லையெனின், ஆங்கே பெரும்பா லுங் கருவிச்சூத்திரங்கள் கூறப்பட்டமையானும், ஈண்டுச் செய்கைச் சூத்திரங்கள் கூறப்படுகின்றமையானும், செய்கைச்சூத்திரங்களுக்கு முன்னர்க் கருவிச்சூத்திரங்களைக் கூறுதல் இன்றியமையாததானு மென்க.

பின்வரும் மூன்று சூத்திரங்களும்

உயிர்மயங்கியல், புள்ளி மயங்கியல் இரண்டற்கும் பொதுவாகும்.

147

**144.**

கசதப முதலிய மொழிமேற் றோன்றும்
மெல்லெழுத் தியற்கை சொல்லிய முறையான்
ஙஞநம வென்னு மொற்றா கும்மே
அன்ன மரபின் மொழிவயி னான.

பொ-ள். க், ச், த், ப் இவற்றை முதலெழுத்தாகவுடைய வருமொழியின் முன்னர் வரும் மெல்லெழுத்து முறையே ங், ஞ், ந், ம், இவையே யாகும் அவ்வாறுள்ள மரபைக் கொண்ட மொழிகளின்கண்.

மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே
(எழுத் 218)

வேரிநே ன்றுதி முழுதுங் கெடுவழி
வருமிட னுடைத்தே மெல்லெழுத் தியற்கை
அல்வழி யெல்லா மெல்லெழுத் தாகும்

(எழுத் 302)
(எழுத் 315)

முதலிய சூத்திரங்களில் மெல்லெழுத்து எனப் பொதுப்படக் கூறியதனான், விள + கோடு = விள + செதிள், விள + தோல், விள + பூ; வெரிந் + குறை, வெரிந் + செய்கை, வெரிந் + தலை, வெரிந் + புறம்; மரம் + குறிது, மரம் + சிறிது, மரம் + தீது, மரம் + பெரிது; என்ற விடத்து ங், ஞ், ந், ம் இவை முறையே வருமென்பது இச் சூத்திரத்தா லுணர்த்தப்பட்டது.

அன்னமரபின் மொழிவயினான என்றது எற்றுக்கு எனின், விளக்குறுமை போன்ற இடங்களில் மெல்லெழுத்து வாராமையைக் குறித்தற் கென்க.

"தோன்றுமென்றதனால் தோன்றி நின்றனவும் அவ்வாறே திரிந்து மெல்லெழுத்தாமென்பது; மரங்குறிது .... எனவரும்" என இளம்பூரணர் கூறினர். தோன்றும் என்ற பெயரெஞ்சுகிளவி ஆசிரியர் தொல்காப்பியனாரது கொள்கையில் நிகழ்காலம் எதிர்காலம் இரண்டினும் வருமாகையான், அவ்வாறு கூறவேண்டுவதின்று.

பா—ம்.

இளம். க. பதி. "தோக்கு முடிவனவற்றை யெல்லாம் தொக்கு முடித்தலின் ... அல்வழியும் வேற்றுமையுமாகிய விருவழிக்கண் ணும்..."

## 148

இளம். சி. பதி. "விரிந்து முடிவனவற்றையெல்லாம் தொகுத்து முடித்தலின் .... அல்வழியும் வேற்றுமையுமாகிய இருவகைக் கண் ணும்...."

அல்வழி, வேற்றுமைவழி யென வழங்குகின்றமையான் முன்ன ருள்ள பாடஞ் சிறக்கும். தோக்கு என்றதற்குப் பிரதியாக விரிந்து என்று கூறுதல் நச்சினார்க்கினியத்தைப் பின்பற்றியோ வென்ற ஐய முண்டாகின்றது.

நச். ம. பதி. "ஒரோர் சூத்திரங்களால் .... விரிந்த சூத்திரம் பொருளவன்றித் தொக்குப் புணருமாறு .... மெல்லெழுத்துக்கள் யாவையெனின்..."

நச். தா. சை. பதி. "ஒரோவோர் சூத்திரங்களால் ... விரிந்த சூத்திரப்பொருளவன்றியுந் தொக்குப் புணருமாறு. ..மெல்லெழுத்துக்கள் ..."

முன்னருள்ள பாடஞ் சிறக்கும்.

145. ஞநமய வவெனு முதலாகு மொழியும்
உயிர்முத லாகிய மொழியு முளப்பட
அன்றி யனைத்து மெல்லா வழியும்
நின்ற சொன்மு னியல்பா கும்மே.

போ - ள். நிலைமொழியின் பின்னர் ஞ், ந், ம், ய், வ், உயிர்கள் இவற்றை முதலாகக் கொண்ட வருமொழிகள் வேற்றுமை, அல்வழி ஆகிய எல்லாவழியும் இயல்பாகும்.

இது பொதுச்சூத்திரம். இதற்குப் புறனடைகள் பல. அவை ஆங்காங்குக் கூறப்படும். "அகத்தோத்தினுள் நாற்பத்தெட்டுச் சூத்திரத்தான் முடிவதனை

ஈண்டு ஒரு சூத்திரத்தான் தொகுத்து முடித்ததாயிற்று."

உளப்பட என்றதற்கு ஆக என இளம்பூரணரும் தம்மிற்கூட என நச்சினார்க்கினியரும் பொருள்கூறினர். நின்றசொல் என்றதற்கு நிலைமொழி எனப் பொருளிருப்பினும், நிலைமொழியாகிய பெயர் எனப் பொருள்கொண்டனர் உரைகாரர்கள். வினையை நீக்குதற்குக்



காரணந் தெரியவில்லை. சூத்திரத்தில் ஞ, ந, ம, ய, வ, உயிர் இவற்றை முதலாகக்கொண்ட எல்லாமொழியும் நின்ற சொன்முன் இயல்பாகும் என்று ஆசிரியர் கூறியிருக்க, உரையாசிரியர்கள் உயிரின் பின், குற்றியலுகரத்துக்கும் தாம் உதாரணம் கொடுப்பதாகக் கருதி நுந்தையது நுந்தை யென்று கொடுத்துள்ளனர். குற்றியலுகரம் உயிரெழுத்திற் சேர்ந்ததல்ல என்பது ஆசிரியர் துணிபு ; ஆகையால், இது பொருந்தாது; அன்றியும் வருமொழியாகிய இச்சொற்களில் நகரமேயன்றி, உகரம் முதலிலில்லை யென்பதுங் கருதத்தக்கது.

இச்சூத்திரவுரையில் சூத்திரத்துள்ள எல்லாம் என்றதனால் யகரஈறு யகரத்தின் முன்னர் இரண்டிடத்துங் கெடுதலையும், உயிர்க்கணமாயின் ஒற்றிரட்டியும் உடம்படுமெய் பெற்றும் உயிரேறியும் முடியுங் கருவித்திரிபுகள் திரிபெனப்படா வென்பதையுங் கொண்டனர் நச்சினார்க்கினியர். பின்னருள்ளனவற்றை மாத்திரங் கொண்டனர் இளம்பூரணர். ஒற்றிரட்டலையும் உடம்படுமெய்கோடலையும் உணர்த்துஞ் சூத்திரங்களை இதற்குப் புறனடையாகக் கொண்டு அவற்றைத் திரிபெனக் கொள்ளின் குற்றம் யாது ?

பா - ம்.

இளம். க. பதி. "ஈறிற்று...இக்கருவித்திரிபு திரிபெனப்படா..."

இளம். சி. பதி. "ஈரிற்று...இக்கருவித்திரிபு மூன்று திரிபு மன்மையின் திரிபெனப்படா..."

நச். ம. பதி. எல்லாவழியு மென்றதனன்
உயிர்க்கணமாயின்..."

நச். தா. சை. பதி. எல்லா மேன்றதனன்
உயிர்க்கணமாயின்..." . பெரும்பான்மை

இயல்பாயினுஞ் சிறுபான்மை வருமொழி
முதலின்கண் வரும் மெல்லெழுத்து உறழு
மென்பர் இச்சூத்
திரத்துள்.

**146.** அவற்றுள்

மெல்லெழுத் தியற்கை யுறழினும் வரையார்
சொல்லிய தொடர்மொழி யிறுதி யான.

பொ - ள். மேற்கூறப்பட்ட வருமொழி
முதலாகிய ஞ், ந், ம், ய்,
வ், உயிர் இவற்றுள் ஞ், ந், ம், என்னும்
மெல்லெழுத்து, சொல்லப்
பட்ட தொடர்மொழியீற்றின்கண் உறழினும்
நீக்கார் (புலவர்)

இதனால் உறழாமையே பெரும்பான்மை யென அறிக.

உ - ம். கதிர்ஞெரி, கதிர்ஞ்ஞெரி.

உரைகாரர்கள் "வருமொழி முற்கூறியவதனால் ஓரெழுத்தொருமொழியுள்ளும் ஈரெழுத்தொருமொழியுள்ளும் சிலவற்றிற்கு உறழ்ச்சி முடிபுகொள்க சொல்லிய என்றதனான் ஓரெழுத்தொருமொழியுள்ளும் ஈரெழுத்தொருமொழியுள்ளும் சிலவற்றிற்கு மிக்குமுடிதல்கொள்க" என்றுங் கூறினர். ஆசிரியர் தொடர்மொழி எனக் கூறியிருக்கின்றமையான், அவை பிற்காலத்து வழக்காயிருத்தல் கூடும். ஆயின் சொல்லிய என்பது எற்றுக்கு எனின்?—தொடர்மொழியென்று இங்குக் கூறியது இரண்டு மொழிகள் தொடர்ந்த தொடர்மொழியை யன்று; ஓரெழுத்தொரு மொழி என்ற சூத்திரத்துக்கூறிய தொடர்மொழியைக் குறிக்கவென் பதற்கு என்னலாம்.

பா - ம்.

இளம். க. பதி. "

ஒரெழுத்தொருமொழியுள்ளுஞ் சிலவற் றிற்கு..."

இளம். சி. பதி. "

ஒரெழுத்தொருமொழியுள்ளும் ஈரெழுத்

தொருமொழியுள்ளுஞ் சிலவற்றிற்கு..."

நிலைமொழியீறு ணகரனகரமாயிருக்க

வருமொழி வினையாகி யகரத்தை முதலெழுத்தாகக் கொண்டவிடத்து, அந்த யகரத்திற்கு மாறாக ஞகரம் வரும் என இச்சூத்திரம் உணர்த்தும்.

**147.** ணனவேன் புள்ளிமுன் யாவு ஞாவும்
வினையோ ரனைய வென்மனார் புலவர்.

பொ - ள். (நிலைமொழியீறாகிய) ண், ன் இவற்றின் பின்னர் (வருமொழிமுதலாகிய) யா, ஞா இவ்விரண்டும் வினைக்கண் ஒரு தன்மையன எனக் கூறுவர் புலவர்.

உ - ம். மண்யாத்த, மண்ஞாத்த ;

பொன்யாத்த, பொன் ஞாத்த.

# 151

இச்சூத்திரத்துள் வினை என்றது எற்றுக்கு எனின், பெயர்க்கண் அவ்வாறு வாராது என விலக்க என்க. "ஞா முற்கூறுது யா முற்கூறியவதனுன் யாமுதன்மொழிக்கண் ஞா வருமென்று கொள்க" என்றனர் இளம்பூரணர்; அவரைப் பின்பற்றினர் நச்சினார்க்கினியர்.

• "யாவும் ஞாவும்" என்றதற்கு "யாவும் ஞாவும் முதலாகிய வினைச்சொற்கள்" என்றும் "வினையோரனைய" என்றதற்கு "ஒரு வினைவந்த தன்மையை ஒக்கும்" என்றும் பொருள் கூறினர் நச்சினார்க்கினியர். முன்னர் வினைச்சொற்கள் என்பது எவ்வாறு கிடைத்தது என்றது விளங்கவில்லை.

பா - ம்,

இளம். க. பதி. "ஆசிரியர்";

இளம். சி. பதி. "புலவர்."

நிலைமொழியீறு அவையாகவே யிருக்க

வேற்றுமையல்வழிக்கண்

திரிபில என உணர்த்தும் இச்சூத்திரம்.

**148.** மொழிமுத லாகு மெல்லா வெழுத்தும்
வருவழி நின்ற வாயிரு புள்ளியும்
வேற்றுமை யல்வழித் திரிபிட னிலவே.

போ - ள். மொழிமுதற்கண்வரும் எல்லாவெழுத்தும் வருமிடத்து நிலைமொழியீற்றின்கண்ணுள்ள ண், ன் என்ற அவ்விரு மெய்யும் அல்வழிப்புணர்ச்சியில் திரிபிடத்தை உடையனவல்ல.

உ - ம். மண் கடிது, பொன்பெரிது ; காண் கரிலை, கண்டான் கரியை.

இச்சூத்திரவுரையில் "எல்லாவெழுத்தும் வருவழி" என்றதற்கு "இருபத்திரண்டெழுத்தும் வருமொழியாய் வருமிடத்து" என நச்சினார்க்கினியத்தில் உள்ளது. அங்கு வருமொழியாய் என்பதற்குப் பிரதியாக வருமொழிமுதலாய் என்றிருப்பின் நலம்.

குறித்துவருகிளவி, நிறுத்தசொல் இவற்றிலுள்ள ஒருபகுதியாகிய "வரு" "நில்" என்பனவற்றை இச்சூத்திரத்துள்ள வருவழி, நின்ற என்ற சொற்களிற் காண்க.

வருமொழி முற்கூறியதனால் ணகரத்திற்குச் சிறுபான்மை திரிபு உண்டெனவும், அதற்குச் சாட்சோல் என்பது உதாரணமாகுமென வுங் கூறினர் உரைகாரர்கள். அது பண்புத்தொகையாகலின் "உயிரும் புள்ளியும்..." (எழுத் 482) என்ற சூத்திரத்தாற் கொள்ளல் தகும்.

பா-ம்.

இளம். க. பதி. " மேற் சொல்லி னின்ற ணனக்களாகிய..."
இளம். சி. பதி. " பெயர்ச்சொல்லி னின்ற ணனக்களாகிய..."

நிலைமொழி காண், சண்டான் முதலிய வினைச்சொற்களாயு மிருத்தற்கு முடியுமாகலான், முன்னுள்ள பாடமே தவறற்றதாகும்.

நிலைமொழியீறு அவையாயிருக்க வேற்றுமைக்கண்ணும் ஓரோ வழி இயல்பாம் எனக் கூறும் இச்சூத்திரம்.

**149.** வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத் தல்வழி

மேற்கூ றியற்கை யாவயி னான.

பொ - ள். அவ்விடத்து (அவ்விரண்டு மெய்யும் நிலைமொழி யீறாய் வருமிடத்து) வேற்றுமைப்புணர்ச்சிக்கண்ணும் வருமொழி முதல் வல்லெழுத்தல்லாதன வருமிடத்து மேற்கூறப்பட்ட இயல்பே (புணர்ச்சியாகும்).

உ-ம். மண்ஞீட்சி, பொன்ஞீட்சி.

ஆவயினை என்றதற்கு அவ்விரண்டுபுள்ளியிடத்து என இளம்பூரணரும், அவ்வழிக்கண் அங்ஙனந்திரியாது நின்ற அவ்வொற்றுக்கள் என்று நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர். பலவிடங்களிலும் சூத்திரத்தீற்றிலுள்ள "ஆவயினை" என்றதற்கு அவ்விடத்தின் கண் என்பது பொருளாகலின், ஈண்டு இளம்பூரணர் கூறும் பொருளே பொருந்தும்.

பா-ம்.

நச். ம. பதி. "மேனன்கு சூத்திரத்தாற் கூறும் இவை வல்லெழுத்து .."

நச். தா. சை. பதி. "மேல் நான்கு சூத்திரத்தாற் கூறியன வல்லெழுத்து ." பின்பாடமே பொருத்தமானது.

வருமொழி முதலின் திரிபைக் கூறும் இச்சூத்திரமும் அடுத்த சூத்திரமும்.

## 153

150. லனவென வருஉம் புள்ளி முன்னர்த்
தநவெனவரிற் றனவா கும்மே.

போ - ள். ல், ன் இவற்றின் பின்னர் த், ந் இவை வரின் த், ந் இவை முறையே ற், ன் ஆகும்.

உ - ம். கல் + தீது = கல் + றீது = கற்றீது (எழுத். 369), கஃறீது (எழுத் 370) ; கல் + நன்று = கல் + னன்று = கன்னன்று (எழுத். 368); பொன் + தீது = பொன்றீது; பொன் + நன்று = பொன்னன்று.

**151**. ணளவென் புள்ளிமுன் டணவெனத் தோன்றும்.

போ - ள்.

ண், ள் இவற்றின் பின்னர் த், ந் இவை வரின் அவை முறையே ட், ண் ஆகும்.

உ - ம். மண்டீது, மண்ணன்று; முள் + தீது = முள் + டீது = முட்டீது (எழுத். 397), முஃடீது (எழுத் 400); முண்ணன்று.

முற்சூத்திரத்திலிருந்து தனவெனவரின்

என்றது ஈண்டு அதிகரித்தது.

இளம்பூரணருரையில் "அதிகாரத்தினல் தகாரநகாரங்கள் வரின்" என்றுளது. ஈண்டு அதிகாரத்தினல் என்ற சொல்லை,

ஆசிரியர் பாடஞ்சொல்லும்போது, மாணவர் ஏட்டில் எழுதியிருத்தல் கூடும். அஃது இடைச்செருகலாய் உரையின் மூலத்தில் வந்துளது என்னலாம்.

பா-ம்.

நச். ம. பதி. "நிறனிறைவகையால்"

நச். தா. சை. பதி. "நிரனிறையானே"

முன்னிலைவினைச்சொற்கள் நிலைமொழியாயிருக்க நேரும் மாறுதலைக் கூறும் இச்சூத்திரம்.

## 154

**152.** உயிரீறாகிய முன்னிலைக் கிளவியும்

புள்ளி யிறுதி முன்னிலைக் கிளவியும்
இயல்பா குநவு முறழ்பா குநவுமேன்
ருயீ ரியல வல்லெழுத்து வரினே.

பொ - ள். உயிர், மெய் இவற்றை ஈற்றிற் கொண்ட முன்னிலைச் சொற்கள் நிலைமொழியாயிருக்க, வருமொழி முதலில்வல்லெழுத்து வரின், அவை இயல்பு, உறழ்ச்சி என்ற இரண்டு தன்மையுடையன.

"முன்னிலைக்கிளவி" என்றது பெயர், வினை இரண்டற்கும் பொதுவாயினும், நீ என்ற முன்னிலைப்பெயரைப்பற்றியதை 251, 254ஆவது சூத்திரங்களில் தனியாய் ஆசிரியர் கூறினமையானும், நீயிர் என்றது அவரது கொள்கையில் நும்மின்றிரிபெயராதலானும், ஈண்டு அச்சொல்லான் முன்னிலைவினையே குறிக்கப்படு மென்க.

"உயிரீறு...என்றமையான் முன்னிலைவினைச்சொல் என்பது கொள்க" என இளம்பூரணரும், "ஈறென்று ஓதினமையின் வினைச் சொல்லே கொள்க" என நச்சினார்க்கினியருங் கூறினர்.

உ - ம். எறிகொற்று ; நடகொற்று, நடக்கொற்று.

பா - ம்.

இளம். க. பதி "எனவும் இவையியல்பு.. .எனவும் இவை உறழ்ச்சி."

இளம். சி. பதி. "எனவும் வரும், இவையியல்பு...எனவும் வரும், இவை உறழ்ச்சி.

பின்பாடஞ் சிறக்கும்.

முற் சூத்திரத்திற்குப் புறனடை கூறுகின்றார்.

**153.** ஔவென வரூஉ முயிரிறு சொல்லும்

ஞநமவ வென்னும் புள்ளி யிறுதியுங்
குற்றிய லுகரத் திறுதியு முளப்பட
முற்றத் தோன்று முன்னிலை மொழிக்கே.

போ - ள். ஔகாரவீற்றுச்சொல்லும், ஞ், ந், ம், வ் இப் புள்ளியீற்றுச்சொல்லுங் குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லும் முன்னிலைமொழிக்கண் முன்போலத் தோன்று.

அவை பெறுஞ் செயல்கள் உயிர்மயங்கியல் முதலிய மூன்று இயல்களிலும் கூறப்படும்.

ஈண்டு முற்றுதல் என்றதற்கு ஒத்திருத்தல் என்றேனும் (முற்கூறியவிதி) நிரம்பியிருத்தல் என்றேனும் பொருள்கூறலாம்.

உளப்பட என்றதற்குப் பொருந்த என்ற பொருளைக் கூறி, அதனை முற்ற என்றதனோடு அந்நுவயித்தனர் நச்சினார்க்கினியர். அது சூத்திரப்போக்கிற்குப் பொருந்தாது.

" முற்ற என்றதனால் நிலைமொழி உகரம் பெற்று வருமொழி வல்லெழுத்து உறழ்ந்து முடிதல் கொள்க ", எனக் கொண்டனர் உரைகாரர்கள். உகரம் பெறுதலும் வல்லெழுத்து மிகுதலும் 297, 298, 299, 329, 383, ஆவது சூத்திரங்களாற் பெறப்படுதலின், இவ்வாறு அவர் கூறுதல் பொருந்துமா வென ஆராய்தற்பாலது.

இளம்பூரணம் க. பதிப்பில் " கூடுக்கொற்று "
என்றும், இளம்
சி. பதிப்பில் "கூடுகொற்று, கூட்டுக்கொற்று" என்றும் நச்சினார்க்கினி
யத்தில் " கூட்டுக்கொற்று " என்று முள.

பா—ம்.
நச். ம. பதி. வாராதனவற்றை.
நச். தா. சை. பதி. ஆகாதனவற்றை.

நிலைமொழி உயர்திணையாய் உயிரையும் புள்ளியையும் ஈற்றிற் கொண்டிருப்பின், அது புணரும் புணர்ச்சியைக் கூறும் இச்சூத்திரம்.

**154.** உயிரீ றாகிய வுயர்திணைப் பெயரும்
புள்ளி யிறுதி யுயர்திணைப் பெயரும்
எல்லா வழியு மியல்பென மொழிப.

போ - ள். உயிரையும் புள்ளியையும் ஈற்றிற் கொண்ட உயர் திணைப்பெயர் (நிலைமொழியாயிருக்க) வேற்றுமை, அல்வழி இரண் டன்கண்ணும் இயல்புபுணர்ச்சியா மென்பர் (புலவர்).

உ - ம். நம்பிகை ; பெரியன்.

நம்பி பெரியன் ; அவன்பெருமை, அவன்

## 156

"உயிரீறு புள்ளியிறுதி என்றதனல் உயர்திணைப்பெயருள் இயல்பன்றி முடிவன வெல்லாங் கொள்க. பல்சான்றார், கபிலபரணர், இறைவநெடுவேட்டுவர், மருத்துவமாணிக்கர், பல்லரசர் என இவை ஈறுகெட்டு முடிந்தன. கோலிகக்கருவி, வண்ணரைப்பாடி, ஆசீவகப் பள்ளி என இவை ஈறுகெட்டு வல்லெழுத்து மிக்கன. குமரகோட்டம் குமரக்கோட்டம், பிரமகோட்டம் பிரமக்கோட்டம் என இவை ஈறுகெட்டு வல்லெழுத்து உறழ்ந்து முடிந்தன" என்றனர் இளம்பூரணர். அவரைப் பின்பற்றினர் நச்சினர்க்கினியர். இவை யெல்லாம் 482-வது சூத்திரத்துள்ள "அன்னவையெல்லாம் மருவின் பாத்திய புணரியனிலையிடை உணரத்தோன்று" என்றதனற் கொள்ளப்படுமாதலான், உரைகாரர்கள் ஈண்டு அவற்றைக் கொள்ள வேண்டுவதின்று.

"எல்லாம் என்றதனன்...உண்டனெஞ் சான்றேம், உண்டேநாம் என இவை திரிந்தன" என்றனர் இளம்பூரணர் ; அவரைப் பின்பற்றினர் நச்சினர்க்கினியர். இதனை "அல்வழி யெல்லாம் மெல்லெழுத் தாகும்" (எழுத். 314) என்ற சூத்திரத்தானும் அச்சூத்திரத்துரையானும் பெறுதல் இயலுமாதலான், ஈண்டு அவர் அவ்வாறு கொள்ளவேண்டுவதின்று.

பா-ம்.

இளம். க. பதி.

"நிறுத்தி...நிறுத்தி,... உண்டேஞ் சான்றேம்"

இளம். சி. பதி. "நிறுத்து ... நிறுத்து ... உண்டனெம் சான்றேம்."

நச். ம. பதி "எனவு மொட்டுக...முடிதலுங் கொள்க...."

நச். தா. சை. பதி "எனவு முடிவனவுங் கொள்க..." மெல்லாவற்ரேடு மொட்டுக....

முற்சூத்திரத்திற்கு ஒரு புறனடை.

**155.** அவற்றுள்

இகரவீற் றுப்பெயர் திரிபிட

னுடைத்தே.

பொ - ள். அவ்வுயர்திணைப்பெயர்களுள் திரியுமிடமும் உடைத்து.

இகரவீற்றுப்பெயர்

157

உ ம். நம்பிப்பேறு.

உயர்திணைப்பெயர் என்பது ஈண்டு அதிகரித்தது. அதனை ஏழாம்வேற்றுமையாகத் திரித்தல் வேண்டும்.

" உரையிற்கோடல் என்பதனான் இது மிக்க திரி பென்பது கொள்ளப்படும்." என்றும், "இடனுடைத்து என்றதனான் இகர ஈறன் றிப் பிற ஈறும் திரியாது வல்லெழுத்து மிக்கு வருவன ஈண்டுக் கொள்க. திணைப்பூ, திணைப்புரவு " என்றுங் கூறினர் இளம்பூரணர்.

திணை என்பது உயர்திணையாகும்.

நிலைமொழி உயர்திணையாயிருக்கும்போதுள்ள புணர்ச்சியைக் கூறி, விரவுப் பெயர் அஃறிணையாயிருக்கும்போது வரும் புணர்ச் சியை ஈண்டுக் கூறினர்.

**156.** அஃறிணை விரவுப்பெய ரியல்புமா ருளவே.

பொ - ள். (எல்லா வழியும்) அஃறிணைவிரவுப்பெயர் இயல்பா யிருத்தலும் உள.

உ-ம். சாத்தன்குறிது ; சாத்தன்கை.

எல்லாவழியும் என்றது 154-ஆவது சூத்திரத்தினின்று அதிகரித்தது.

உம்மையால் இயல்பின்றி வருவனவும் உள என்பது அறியக் கிடக்கின்றது.

முற்சூத்திரங்களில் உயர்திணைப்பெயர் நிலைமொழியா யிருக் . கும்போதுள்ள புணர்ச்சி கூறப்பட்டமையான், இச்சூத்திரத்துள்

அஃறிணைப்பெயர் நிலைமொழியா யிருக்கும்போதுள்ள புணர்ச்சி

யைக் கூறுதற்கு விரவுப்பெயர் எனக் கூறின் சாலும்,

அஃறிணை என்ற அடைமொழி வேண்டா எனின், அவ்வாறு

யின் உம்மையால் உயர்திணைப்பெயரும் இயல்பின்றி வருவனவும்

உள என வறியப்படும்; அஃது ஆசிரியர்க்கு உடன்பாடன்று.

அவ்வாறுயின் அஃறிணை
என்றல் வேண்டாமெனின்,

என்றாற் சாலும், விரவுப்பெயர்
அவ்வாறுயின் விரவுப்பெயரல்லா

அஃறிணைப்பெயர்க்கும் இச்சூத்திரம் புணர்ச்சி விதிக்கின்றதெனக் கருதப்படும், அஃது உடன்பாடன்று.

பாடம். நச். ம. பதி. "செய்வாராதலின். . .அஃறிணையாண்பெண் ணுணர்த்திற் றென்றல்... கூறினரென்றுணர்க...ஒட்டுக..."

நச். தா. சை. பதி.
செய்வாராலெனின். . .அஃறிணையாண்பாலும் பெண்பாலும் காட்டினரென்றுணர்க...ஒட்டி உணர்க..."

மூன்றும் வேற்றுமையுருபுதொக்க சொல் நிலைமொழியாயிருக்க அதன் பின்னர், அதனாற் குறிக்கப்பட்ட பொருளின் வினையைக் குறிக்குந் தொழிற்சொல் வருமொழியாய் வர, நேரும் புணர்ச்சியைத் தொகுத்துக் கூறும் இச்சூத்திரம்.

**157.** புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியும்
வல்லெழுத்து மிகுதி சொல்லிய
முறையாற் றம்மி னாகிய
தொழிற்சொன் முன்வரின்

மெய்ம்மை யாகலு முறழத் தோன்றலும் அம்முறை
யிரண்டு முரியவை யுளவே வேற்றுமை மருங்கிற்
போற்றல் வேண்டும்.

பொ - ள். பின்னர் வல்லெழுத்து மிகுதி

கூறப்பட்ட முறை யிலுள்ள புள்ளி உயிர் இவற்றை இறுதியிற் கொண்ட சொற்கள் நிலைமொழியாகவும், அவற்றான் ஆகிய தொழிலைக் குறிக்கும் வினை வருமொழியாகவும் வரின், வேற்றுமைவழியில் இயல்பு, உறழ்ச்சி இவ்விரண்டின் கண்ணும் உரியவை உள. அவற்றைப் போற்றல் வேண்டும்.

இச்சூத்திரக்கருத்தில் நச்சினார்க்கினியர் இளம்பூரணரோடு மாறுபடாதிருப்பினும், சொன்முறையான் பொருளைக் கூறுமிடத்து வேறுபட்டனர். "வல்லெழுத்து மிகுதிசொல்லிய முறையான் வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்" என்ற தொடர்க்கு "வேற்றுமை மருங்கிற் சொல்லிய முறையான் வேண்டும் வல் லெழுத்து மிகுதி போற்றல்" என அந்நுவயங்கொண்டு "உயிர் மயங்கியலுள்ளும் புள்ளிமயங்கியலுள்ளும் வேற்றுமைப்புணர்ச் சிக்குச் சொல்லிய முறையான் விரும்பும் வல்லெழுத்து மிகுதியை ஈண்டுக் கொள்ளற்க." எனப் பொருள் கூறினர். இவ்வந்நுவயம் சூத்திரப்போக்கிற்கு மாறுபாடாயிருத்தலுடன்,

இவ்வாறு பொருள் கொள்ளின் இவ்விரண்டு அடிகளும் சூத்திரத்துள் மிகையாகும். ஆகலின் இளம்பூரணர் கொண்ட அந்நுவயமே சிறக்கும்.

## 159

இச்சூத்திரம் மூன்றாம்வேற்றுமையுருபு தொக்க பெயர் நிலைமொழியாயிருக்க வரும் புணர்ச்சியை உணர்த்துகின்றது என்றது எவ்வாறு அறியப்பட்டதெனின், "வேற்றுமை மருங்கின்" எனக் கூறப்பட்டமையானும், "தம்மினாகிய தொழிற்சொல்" எனக் கூறப்பட்டமையானும், வேற்றுமைவழியில் வினைமுதற்பொருள்* மூன்றாம்வேற்றுமைக்கு உரித்தாகலானும் அவ்வாறு அறியப்பட்டதென்க.

நிலைமொழி

இரண்டாம்வேற்றுமைப்பெயராயிருக்க நேரும் மாறுதல்களைக் கூறும் இச்சூத்திரம்.

**158.** மெல்லெழுத்து மிகுவழி வலிப்போடு தோன்றலும்

வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடு
தோன்றலும்
இயற்கை மருங்கின் மிகற்கை
தோன்றலும்
உயிர்மிக வருவழி யுயிர்கெட வருதலுஞ்
சாரியை யுள்வழிச் சாரியை கெடுதலுஞ்
சாரியை யுள்வழித் தன்னுருபு
நிலையலுஞ்
சாரியை யியற்கை யுறழத் தோன்றலும்
உயர்திணை மருங்கி னொழியாது வருதலும்
அஃறிணை விரவுப்பெயர்க் கவ்விய னிலையலும்
மெய்பிறி தாகிடத் தியற்கை யாகலும்
அன்ன பிறவுந் தன்னியன் மருங்கின்
மெய்பெறக் கிளந்து பொருள்வரைந்
திசைக்கும்
ஐகார வேற்றுமைத் திரிபென மொழிப.

**பொ - ள்** *மெல்லெழுத்து,*

*வல்லெழுத்து இவை மிக வேண்டிய*
*வழி மாறுபட்டு வல்லெழுத்து மெல்லெழுத்து*

இவை மிகுதலும்,

இயல்பிடத்து மிகுதல் வருதலும்,

உயிர்மிகுதலிடத்து உயிர் கெடுத

லும், சாரியை

வரவேண்டுமிடத்து வாராதிருத்தலும், சாரியை உருபு

இரண்டுமிருத்தலும், சாரியையின் உறழ்ச்சியும்,

உயர்திணை அஃ

றிணை விரவுப்பெயர் இரண்டிடத்தும் ஐகார

வேற்றுமை ஒழியா

திருத்தலும், மெய்பிறிதாதற்குப் பிரதியாக

இயல்பாதலும் அவ்வா

*மூன்றா குவதே
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி யனைமுதற் றதுவே.

(சொல். 73)

துள்ள பிறவும் தன் தன்மையை உண்மையாகக் கூறப்பட்ட பொருளினின்றும் வேறுபட்டு ஒலிக்கும் இரண்டாம்வேற்றுமைத் திரிபு அதன் பின்னர் வினைவரின் என்று கூறுவர் (புலவர்.)

தொழிற்சொன்முன்வரின் என்றதை முற்சூத்திரத்திலிருந்து ஈண்டு அதிகரித்தல் வேண்டும்.

உ - ம். விளக்குறைத்தான் (எழுத். 217) ; மரங்குறைத்தான் (எழுத். 311), தாய்க்கொலை (எழுத். 359); பலாக்குறைத்தான் (எழுத். 227) ; வண்டுகொணர்ந்தான் (எழுத். 196) ; வண்டினைக் கொணர்ந்தான் (எழுத். 421) ; புளி குறைத்தான், புளிக்குறைத்தான் (எழுத். 245) ; நம்பியைக் கொணர்ந்தான் (எழுத். 154) ; கொற்றனைக் கொணர்ந்தான் (எழுத். 156) ; மண்கொணர்ந்தான் (எழுத். 393).

சூத்திரத்தின் இறுதியிலுள்ள " தன்னியன் மருங்கின்... மொழிப " என்ற தொடருக்குப் பொருள் " தன்னையே நோக்கித்

திரிபு கூறுமிடத்து பொருள்பெற
எடுத்தோதப்பட்டு ஏனை
வேற்றுமைப்பொருட்புணர்ச்சியது
பொதுமுடிபினைத்தான் நீக்கி
வேறு முடிபிற்றாய் நின்று ஒலிக்கும் இரண்டாம் வேற்றுமையது வேறுபட்ட புணர்ச்சி என்று கூறுவர் ஆசிரியர் " என நச்சினார்க் கினியத்திற் காண்கின்றது. இவற்றுள் ஏனை என்பது தவறாய் வந்திருத்தல் வேண்டும்.

ஒழியாது. மெய்பெற முதலிய சொற்களான் இளம்பூரணரும்
நச்சினார்க்கினியரும் பெறப்பட்டதாகக் கொண்ட பொருளை அன்ன பிறவும் என்றதனானே கொளல் தகும்.

பா - ம்.

நச். ம. பதி. " தழுக்குணர்ந்தான் ..இயல்பாய் வருமென்றமை யின் ..வக்கண்டு..."

நச். தா. சை, பதி. கழுக்கொணர்ந்தான்..

இயல்பாய் வருமென் றமை... எக்கண்டு..."

பின்னருள்ள பாடமே பிழையற்றது.

நிலைமொழியீறு இ, ஐ இவையாயிருக்க அல்வழியில் நேரும் புணர்ச்சியைக் கூறும் இச்சூத்திரம்.

**161**

**159.** வேற்றுமை யல்வழி இஐ யென்னும்
ஈற்றுப்பெயர்க் கிளவி மூவகை நிலைஇய

அவைதாம்

இயல்பா குநவும் வல்லெழுத்து மிகுநவும்

உறழா குநவு மென்மனார் புலவர்.

போ - ள். அல்வழிப்புணர்ச்சியின்கண் இகரவீற்றுப்பெயரும் ஐகாரவீற்றுப்பெயரும் (நிலைமொழியாயிருக்கும்போது) இயல்பு, வல்லெழுத்து மிகுதி, உறழ்ச்சி என்ற மூவகை நிலையையுடையன என்பர் புலவர்.

உ - ம். பருத்திகுறிது, அரை சிறிது; அலிக்கொற்றன், புலைக் கொற்றன்; கிளிகுறிது, கிளிக்குறிது ; திணைகுறிது, திணைக்குறிது.

ஈண்டு பெயர்க்கிளவி என்றது அஃறிணைப்பெயரையே குறிக் கும், 154-ம் சூத்திரத்தில் உயர்திணைப்பெயர்க்குச் செய்கை கூறப்
பட்டமையின். "பெயர்க்கிளவி மூவகை நிலைய எனவே பெயர்க்கிளவி யல்லாத கிளவி மிகுதியும் இயல்பும் என இருவகைய எனக் கொள்க" என்றனர் இளம்பூரணர். அவரைப் பின்பற்றினர் நச்சினார்க் கினியர்.

இச்சூத்திரத்துள்ள முதலிரண்டு அடிகளை ஒரு சூத்திரமாக வும் பின்னருள்ள மூன்றடிகளை மற்றொரு சூத்திரமாகவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கருதியிருத்தல் கூடும்.

பா - ம்.

இளம். க. பதி. அல்வழியிடத்து ... அரைகுறிது ... புலைக் கொற்றன்..."

இளம். சி. பதி. "அல்வழியிடத்தும் ... கரைகுறிது ... புலிக்

சொற்றன்...''

முன்னருள்ள பாடமே நேரிதாகும்.

முற்சூத்திரத்திற் கூறப்பட்ட இகரஐகாரவீற்றுச்சொற்களுள் சிலவற்றிற்குச் சிறப்புவிதியை இச்சூத்திரங் கூறும். ஆகவே, இது அல்வழி.



**160.** சுட்டுமுத லாகிய விகர விறுதியும்
எகரமுதல் வினாவி னிகர விறுதியுஞ்
சுட்டுச்சினை நீடிய வையெ னிறுதியும்
யாவென் வினாவி னையெ னிறுதியும்
வல்லெழுத்து மிகுநவு முறழா குநவுஞ்
சொல்லிய மருங்கி னுளவென மொழிப.

**பொ-ள்.** முற்கூறப்பட்ட சுட்டெழுத்தை முதலாகவும் இக ரத்தை இறுதியாகவுங்கொண்ட சொற்களும் எகரத்தை முதலாக வும் இகரத்தை யிறுதியாகவுங்கொண்ட வினாச்சொற்களும், சுட்

டெழுத்தின் நெடிலை முதலாகவும் ஐகாரத்தை யிறுதியாகவுங் கொண்ட வினைச்சொற்களும் வல்லெழுத்து மிகுதியையும் உறழ்ச்சி யையுங் கொண்டன என்று கூறுவர் (புலவர்.)

முதலிரண்டடியில் ' முதல் ' என்ற சொல்லிருத்தலான், மூன்றாவது அடியிலுள்ள சினை என்றதற்கு முதலெழுத்தாகிய சினை எனவும், யாவென் வினவின் என்றதற்கு யாவென்ற முதலைக் கொண்ட வினவின் எனவும் பொருள் கொளல்வேண்டும்.

உ-ம்.
அதோளிக்கொண்டான்...ஆண்டைக்கொண்டான்,
அவ் வழி கொண்டான், அவ்வழிக்கொண்டான்...

இச்சூத்திரம் " வழாம்வேற்றுமை

இடப்பொருள் நின்ற இடைச்சொல் முடிபு கூறுகின்றது ” என உரைகாரர்கள் கூறினர். இச்சூத்திரத்தில் சொல்லிய மருங்கின் என்றும் முற்சூத் திரத்தில் “ பெயர்க்கிளவி ” என்றும் ஆசிரியர் கூறியிருக்கின்
றமையான் அதோளி, ஆண்டை முதலியவற்றை ஆசிரியர் பெயராகவே கொண்டனர் எனக் கூறுதல் சாலும். இவற்றைப் பிற்காலத்
தார் இடைச்சொல்லாகக் கொண்டனர் என்பது வெளிப்படை.
“ சொல்லிய மருங்கு என்றதனால் பிற ஐகாரவீறு மிக்கு முடிவன
கொள்க. பண்டைச் சான்றோர், ஒருதிங்களைக்குழவி ” என்றனர்
இளம்பூரணர். நச்சினார்க்கினியரும் அவரோடு உடன்பட்டனர். அவ்விருவர் கூறும்
உதாரணங்களெல்லாம் வேற்றுமைப்புணர்ச்சி

163

யாகக் கொள்ளுதல் சாலுமாகலானும்,
வேற்றுமைப்புணர்ச்சியில் வல்லெழுத்து மிகுதியை

"ஐகார விறுதிப் பெயர்நிலை முன்னர்..."
(எழுத். 280) என்ற சூத்திரத்தில் ஆசிரியர் உணர்த்தினமையானும் அவ்விருவர் தங்கொள்கையும் ஆய்தற்பாலது.

புள்ளிமயங்கியலிற் கூறவேண்டிய சில நிலைமொழியீற்றின் செயலை ஈண்டுக் கூறினர்.

**161.** நெடியதன் முன்ன ரொற்றுமெய் கெடுதலுங்
குறியதன் முன்னர்த் தன்னுரு பிரட்டலும்
அறியத் தோன்றிய நெறியிய லென்ப.

பொ - ள். (நிலைமொழியில்) நெட்டெழுத்தின் பின்னரும் ஈற்றிலுமுள்ள ஒற்றாகிய மெய்கெடுதலும், குற்றெழுத்தின் பின்னர் ஈற்றுமெய் இரட்டலும் அறியுமாறு தோன்றுந் தன்மையன என்று கூறுவர் (புலவர்). "நெடியதன் முன்னர்" என்றாரேனும் "நெட்டெழுத்தைக் கொண்ட ஈரெழுத்தொருமொழியின் நெடியதன் முன்னர்" எனவும் "ஒற்றுமெய்" என்றாரேனும் "இறுதியொற்று மெய்" எனவுங் கொள்ளல் வேண்டும்.

உ - ம். கோல்+தீது=கோல்+றீது (எழுத். 150)=கோறீது;

மண்+அகல்=மண்ணகல்.

முதல்+நிலை=முதனிலை போன்றன "குறுமையும் நெடுமையும்..." என்ற சூத்திரத்தாலும் இச்சூத்திரத்தாலுங் கொள்க.

"குறியது பின்கூறிய முறையன்றிக் கூற்றினுள் நெடியன குறுகி நின்றவழியும் குறியதன் முன்னர் ஒற்றாய் இரட்டுதலும் (தாம்+ஐ=தம்+ஐ=தம்மை) குறியது திரிந்து நெடியாயவழி அதன் முன்னர் ஒற்றாய்க் கெடுதலுங்கொள்க" என்றும், "நெறியியல் என்றதனாற் குறியதன்முன்னர் நின்ற ஒற்றின்றிப் புணர்ச்சியாற் பெற்றதும் இரட்டுமென உணர்க, அவ்வடை எனவரும்" என்றும் இளம்பூரணர் கூறினர். அக்கொள்கையைப் பின்பற்றினர் நச்சினார்க்கினியர். வாலிழந்த நரி நரியே யன்றி வேறாகாமையானும்,



ஆறும் விரல் புதிதாக முளைத்த கையை யுடையோன் வேறு மனித னாக ஆகாமையானும், இடங்களுக்குத் தக்கவாறு ஒருவனுக்குச் சில அணிகலன்கள் முதலியன அவனுடலிற் றோன்றினும் அவனுடல்

வேறுகாபையானும், தம்மை, அவ்வடை என்பனவற்றை உலகறியா யங்கனாற் கொள்ளுதற் பொருந்துமாதலான் உரைகாரர்கள் மிகை யாற்கொள்ளுதல் வேண்டுவதின்று.

"அறிய" என்ற சொல்லின் பயன் இவ்விதி எங்குஞ் செல்லாதென் பதை உணர்த்த எனக் கூறுவர் உரைகாரர்கள்.

"மேலைச்சூத்திரத்து ஆறனுருபிற் கூறியவதனன் ஒற்று இரட்டு தல் உயிர்முதன்மொழிச்சண்ணதென்று கொள்க" என இளம்பூரணரும், "மேலைச் சூத்திரத்து நான்கனுருபு பிற்கூறியவதனன் ஒற்றிரட்டுதல் உயிர்முதன்மொழிக்கண்ணதென்று உணர்க" என நச்சினார்க்கினியருங் கூறினர். ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் இம்மெய்களே நிலைமொழியிறுதியில் இருத்தல் கூடுமாகலானும், இவை இரட்டிப்பின் இவற்றின் பின்னர் மெய் வருதல் இயலாது என்பது "ய ர ழ வென்னும்..." (எழுக். 48) என்ற சூத்திரத்தான்

அறியப்படுமாகலானும், வருமொழிமுதல் உயிராயிருக்கும்போதே நிலைமொழியீற்றுமெய் இரட்டுதல் நிகழுமெனக் கொள்ளல் தகும்.

பா-ம். இளம். க. பதி "முறையன்றிய கூற்றினல்"

இளம். சி. பதி "முறையன்றி அக்கூற்றினல்." முன்னருள்ள பாடமே நேரிதாகும்.

நச். ம. பதி "கற்றீது...இடையினவகரவொற்றில் வழியும்"

நச். தா. சை. பதி. "காற்றீது.. இடைவகரவொற்றில் வழியும்" முன்னருள்ள பாடமே நேரிதாகும்.

முற்சூத்திரத்திற் கூறப்பட்ட குற்றொற்றிரட்டல் சிலவிடங்களில் இல்லையென்றும், அவ்விடத்து வேறு மாறுதல் உண்டாம் என்றும் இச்சூத்திரங் கூறும்,

**162.** ஆற னுருபினு நான்க னுருபினுங்
கூறிய குற்றொற் றிரட்ட லில்லை
ஈறாகு புள்ளி யகரமொடு நிலையும்
நெடுமுதல் குறுகு மொழிமுன் னன.

பொ-ள். நெடுமுதல்குறுகுமொழியின் பின்னர் ஆறாம்வேற்றுமை நான்காம்வேற்றுமை இவற்றின் உருபுகள் நிற்க, மூற்சூத்திரத்திற் கூறப்பட்ட குறியதன் பின்னருள்ள ஒற்று இரட்டாது. ஒற்றின் பின்னர் அகரம் வரும்.

உ-ம். தாம்+கு=தம்+கு (எழுத். 189) தம + கு = தமக்கு (எழுத். 115); தாம்+அது=தம்+அது (எழுத். 189) =தம+அது=தம+து (எழுத். 116)=தமது.

நெடுமுதல் குறுகும் மொழிகளுள் யான்,

யாம் என்பனவற்றை
யுங் கொள்ளல்வேண்டும். "கூறிய என்றதனானே
நெடுமுதல் குறு
காத மொழியும் குறுகு மொழியும்
இவ்விருவிதியுங் கொள்க; எல்லார்
தமதும் எல்லார் தமக்கும்" என்றனர்
இளம்பூரணர். அவ்வாறே
கூறினர் நச்சினார்க்கினியரும். தற்போதுள்ள
சங்கவிலக்கியங்களில்
எல்லார்தமதும், எல்லார்தமக்கும் போன்ற வழக்குக்
காணப்படாமை யானும், தொல்காப்பியனார்காலத்துக்கு
முன்னருள்ள இலக்கியங்களில் அவைவழங்கப்பட்டன
என்று திண்ணமாய்க் கூற தற்போது இயலா
மையானும், இச்சூத்திரத்துள் கூறிய என்ற சொல்
மிகையின்மை யானும், அவர்தங்கூற்று
ஆராய்தற்பாலது.

பா-ம்.

நச். ம. பதி. "தகரம் பெற்ற திரண்டற்கும்"

நச். தா. சை. பதி. ஒற்றிரட்டாமையும் அகரப்பேறு மிரண்டற்கும்"

நெடுமுதல் குறுகும் மொழிபோல் நும்மும் செய்கை பெறு மென்று உணர்த்தும் இச்சூத்திரம்.

**163.** நும்மே னிறுதியு மந்நிலை திரியாது.

பொ - ள். ஆறாம்வேற்றுமை நான்காம்வேற்றுமையுருபுகளின் முன்னர் நும் என்றசொல்லின் இறுதியும் அந்நிலையிலிருந்து திரியாது

166

உ-ம். நுமது, நுமக்கு.

ஆறனுருபினும் நான்கனுருபினும்" என்றன முற்சூத்திரத்தி னின்று ஈண்டு அதிகரித்தன.

வல்லெழுத்தும் ஞ ந ம வ என்பனவும் வருமொழி முதலாக

வருமிடத்து உகரப்பேற்றினையடையுஞ் சொற்களுக்கு வருமொழி முதலில் உயிரும் யகரமும் வரின் நிகழுஞ் செய்கையை இச்சூத்திரங் கூறும்.

**164.** உகரமோடு புணரும் புள்ளி யிறுதி
யகரமு முயிரும் வருவழி யியற்கை.

பொ - ள் உகரப்பேற்றினை யடையும் புள்ளியிறுதி தன் பின்னர் வருமொழிமுதல் யகரமாயும் உயிராயு மிருக்க இயல்பாகும்.

உ - ம். உரிஞ்யாது...

" ஞகாரை யொற்றிய..."
(எழுத். 297)

" ஞ நமவ வியையினு முகர நிலையும் "
(எழுத். 298)

என்ற சூத்திரங்களான் தொழிற்பெயரின் பின்னர் வல்லெழுத்

தும், ஞ, ந ம, வ என்பனவும் வரின் மிகுதலும்

உகரம் வருதலும்
அறியப்படுகின்றமையானும், "ஞநமயவ..."
(எழுத். 145) என்ற
சூத்திரத்தான் வருமொழிமுதல் யகரமும்
உயிருமுடாயிருக்க வரும்
புணர்ச்சி இயல்பாம் என்பது
அறியப்படுகின்றமையானும், இச்சூத்
திரம் வேண்டா ; அவ்வாறிருக்க ஆசிரியர்
இச்சூத்திரங் கூறினமை
யான் "ஞநமவய..." (எழுத். 145) என்ற
சூத்திரம் நிலைமொழி
தொழிற்பெயராயிருக்க வரும் மாறுதல்களை
விதிக்கவில்லை எனக் கூறுதல் தகும்.

இனி ஆறு சூத்திரங்கள் நிலைமொழி அளவுப்பெயராயும் நிறைப்
பெயராயும் எண்ணுப்பெயராயும் இருக்க வரும்
மாறுதல்களைக் கூறும்.

**165.** உயிரும் புள்ளியு மிறுதி யாகி
அளவு நிறையு மெண்ணுஞ் சுட்டி
உளவெனப் பட்ட வெல்லாச் சொல்லுந்
தத்தங் கிளவி தம்மகப் பட்ட
முத்தை வரூஉங் காலந் தோன்றின்
ஒத்த தென்ப வேயென் சாரியை.

போ - ள். *அளவு, நிறை, எண் இவற்றைக் குறிப்பனவும் உயிர், புள்ளி இவற்றை ஈற்றிற் கொண்டனவுமான நிலைமொழி களுக்குத் தத்தமினத்தனவாயுந் தம்மிற் குறைந்தனவாயுமுள்ள சொற்கள் வருமொழியாய் வருமிடத்து ஏ என்ற சாரியை ஒத்தது என்று கூறுவர் (புலவர்.)*

உ - ம். *படியேயுழக்கு, கலனேபதக்கு, உழக்கேயாழாக்கு, தொடியேகஃசு, காணியே முந்திரிகை.*

எல்லாச்சொல்லும் *என்றதை எழுவாயாகவும்* ஒத்தது *என்றதைப் பயனிலையாகவும்* ஏ யென்

சாரியை என்றதைச் செயப்படுபொருளாகவுங் கொண்டனர் உரைகாரர்கள். எல்லாச் சொல்லும் என்றது பன்மையாகவும் ஒத்தது என்றது ஒருமை யாகவும் இருத்தலின், எல்லாச்சொல்லும் என்றதை நான்காம் வேற் றுமையாகவும், ஏயென் சாரியை என்றதை முதல்வேற்றுமையாக வுங் கொள்ளலாம்.

"உயிரீறு புள்ளியீறென்றதனுளே ஏயென் சாரியை பெறுதன வும் உளவென் றுணர்க" என இளம்பூரணரும், "அதிகாரப்பட்ட புள்ளியீறு முற்கூறுதற்கனுளே குறுணி நானாழி ..கொள்க" என நச்சினார்க்கினியருங் கூறினர். ஒத்தது என்ற சொல்லானே அதனைக் கொள்ளல் தகும். முந்தை என்றது "வலிக்கும் வழி வலித்தலும்" (சொல். 403) என்ற சூத்திரத்தான் மூத்தை எனஆயிற்று.

இச்சூத்திரத்தில் புள்ளி என்றது மெய், குற்றியலுகரம், இவ் விரண்டனையுங் குறிக்கும்.

**166.**

**168**

அரையென வரூஉம் பால்வரை கிளவிக்குப்
புரைவ தன்றாற் சாரியை யியற்கை.

போ-ள். பகுதிக்கிளவியாகிய அரை என்ற வருமொழிக்குச்
சாரியையின் தன்மை பொருந்தாது.

உ-ம். உழக்கரை...

" இஃது ஒட்டுதற்கொழுகிய வழக்கு (எழுத். 133) அன்று
என்பதனான் விலக்குண்ணுமோவெனில் தம்மகப்பட்ட என்று வருமொழியையும் வரைந்தோதினமையின் இதற்கு அவ்விதி செல்லாதென்பது" எனக் கூறினர் இளம்பூரணர். " ஒட்டுதற்
கொழுகிய வழக்கன்மையிற் சாரியை
பெறுவாயின வென்றாமேலா
வெனின், அவை
பெற்றும் பெறாதும் வருவனவற்றிற்குக் கூறியதாக

லானும், இது தம்மகப்பட்ட என வரைந்தோதினமையானும்

விலக்கல் வேண்டிற்று" எனக் கூறினார் நச்சினார்க்கினியர்.

**167.** குறையென் கிளவி முன்வரு காலை
நிறையத் தோன்றும் வேற்றுமை யியற்கை.

போ - ள். அளவு, நிறை, எண் இவற்றைச்சுட்டும் பெயர்களின் பின்னர் குறை என்றது வருமொழியா யிருக்கும்போது வேற்றுமை யியற்கை நிரம்பத் தோன்றும்.

உ - ம். உரிக்குறை.

உரியும் குறையும் என்று விரிக்க, வேற்றுமையியற்கை என்ற

தனால் இது வேற்றுமையிலன்று என்பது விளங்கு மென்றனர்.

"முன் என்றதனான் பொருட்பெயரோடு புணரும் வழியும் வேற்றுமைமுடிபு எய்துக வென்பது. கலப்பயறு எனவரும். கலத்தளவாகிய பயறு என விரிக்க. நிறைய என்பதனால் கூறு

என்பதன்கண்ணும் வேற்றுமைமுடிபு எய்து மென்பது. நாழிக்

கூறு என வரும்" என்றனர் இளம்பூரணர்.

னர் நச்சினார்க்கினியர்.

அவரைப் பின்பற்றி

அளவு நிறையும் ..எல்லாச்சொல்லும்

என்பது அதிகரித்து வந்தது.

முற்சூத்திரத்திற்கு ஒரு புறனடை.

169

**168.** குற்றிய லுகரக் கின்னே சாரியை.

பொ-ள். குற்றியலுகரத்தை ஈற்றிற்கொண்ட அளவு, நிறை, எண் இவற்றைக் குறிக்கும் பெயருக்குப் பின் குறை என்ற கிளவி வரின், இன்னே சாரியை ஆகும்.

" குற்றியலுகரம் என்றது குற்றியலுகரத்தை ஈற்றிற் கொண்ட சொல்லைக் குறிக்கும். அஃது அளவு, நிறை, எண் இவற்றிலொன்

றைக் குறிக்குஞ் சொல் என்பது அவற்றி னதிகாரத்தான் விளங்கும்.

குறையென்கிளவி முன்வருகாலை என்றது முற்சூத்திரத் தினின்று அதிகரித்தது.

உ-ம். உழக்கின்குறை; அஃது உழக்குங் குறையும் என விரியும்.

" குற்றியலுகரத்தின்னே யென்பதூஉம் பாடம்" என்றனர் நச்சினார்க்கினியர்.

**169.** அத்திடை வரூஉங் கலமென் னளவே.

பொ - ள். கலமென்ற அளவுப்பெயரின்கண் குறை என்றது வருமொழியாய் வருமிடத்து இடையில் அத்து வரும்.

உ - ம். கலத்துக்குறை.

குறையென்கிளவி, முன்வருகாலை என்பன அதிகரித்தன.

அளவு என்றது அளவுப்பெயர் என்ற பொருளில் வந்தது. "கலமென்னளவே" என்றதை முதல்வேற்றுமையாகக்கொண்டு

புணரும்வழி என்றதை வருவித்து அதற்குப் பயனிலையாக்கினர் உரைகாரர்கள். அதனை ஏழாம்வேற்றுமையுருபு தொக்கசொல்லாய்க் கொளின் நலம்.

"மஃகான் புள்ளிமு னத்தே சாரியை" (எழுத். 185) என்ற சூத்திரத்தால் "கலம்" என்ற சொல்லின் பின்னர் அத்துச்சாரியை வரும், இச்சூத்திரம் வேண்டாமெனின் அற்றன்று. அதனால் வரும் அத்துச்சாரியை குறையென்கிளவி...(எழுத். 167) என்ற சூத்திரத்தால் தவிர்க்கப்பட்டதென்க.



170. பனையே னளவுங் காவே னிறையும்
நினையுங் காலை யின்னொடு சிவணும்.

போ-ள். குறையென்கிளவி முன்வருகாலை பனை என்ற அள வுப்பெயரும் கா என்ற நிறைப்பெயரும் ஆராயுங்காலத்து இன் ெனாடு பொருந்தும்.

உ - ம். பனையின் குறை...

இதனை உம்மைத் தொகையாக விரிக்க.

" நினையுங்காலை என்றதனன்

வல்லெழுத்துப்பேறுஞ் சிறு

பான்மை கொள்க. பனைக்குறை, காக்குறை கூறினர் உரையாளர்கள்.

எனவரும்" என்று

முற்கூறப்பட்ட அளவுப்பெயர் நிறைப்பெயர் இவை எவ் வெழுத்தில் தொடங்கு மென்பதைக் கூறும்இச்சூத்திரம்.

**171.** அளவிற்கு நிறையிற்கு மொழிமுத லாகி
உளவெனப் பட்ட வொன்பதிற் றெழுத்தே. அவைதாம்
க ச த ப வென்று ங ம வ வென்று அகர உகரமொ
டவையென மொழிப.

பொ - ள் அளவுப்பெயர், நிறைப்பெயர் இவ்விரண்டற்கும் முதலாய் உளவெனப்பட்டன ஒன்பதெழுத்து. அவைதாம் க், ச், த், ப், ங், ம், வ், அ, உ, எனக் கூறுவர் (புலவர்).

இச்சூத்திரத்துள் முதல் இரண்டடிகளையும் ஒரு சூத்திரமாகவும், ஏனை மூன்றடிகளையும் மற்றொரு சூத்திரமாகவும் ஆசிரியர் கருதியிருத்தல் கூடும்.

பா-ம்.
இளம். க. பதி.
ஓரெடை...''

" நிறைக்கும் ... அந்தை எனவும் ... இம்மி

இளம். சி. பதி. " நிறைப்பெயர்க்கும் எனவும் ... ஓரெடை .."

... அந்தை இம்மி

## 171

முன்னருள்ள பாடத்தில் நிறைக்கும் என்றது நிறைப்பெயர்க் கும் என்றிருத்தல் வேண்டும். மற்ற இடங்களெல்லாவற்றிலும் முன் பாடமே சிறக்கும்.

நச். ம. பதி. " அந்தம்...இந்நிறைக்கு...ஓரெடை "

நச். தா. சை. பதி. " அந்தை...நிறைக்கு..."

மூற்சூத்திரங்களுக்கெல்லாம் புறனடையாகும் இச்சூத்திரம்.

**172.** ஈறியன் மருங்கி னிவையிவற் றியல்பெனக்
கூறிய கிளவிப் பல்லா றெல்லாம்
மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி
ஒத்தவை யுரிய புணர்மொழி நிலையே.

போ - ள். நிலைமொழியீற்றின்கண் இவை இவை இயல்பெனக் கூறப்பட்ட சொற்களின் பலவழிகளெல்லாம் உண்மையாயுள்ள வழக் கொடு பொருந்திப் புணர்ச்சியின்கண் ஒத்தவை உரிய.

பா - ம்.

இளம். க. பதி. "மாண் கடிது."

இளம். சி. பதி. "மண்கடிது."

முன்னுள்ள பாடம் அச்சுப்பிழையாக வந்திருத்தல்கூடும்.

இவ்வியலிறுதியில் சில சொற்களின் மரூஉமுடிபு கூறப் படுகின்றன.

**173.** பலரறி சொன்முன் யாவ ரென்னும்
பெயரிடை வகரங் கெடுதலு மேனை
ஒன்றறி சொன்முன் யாதேன் வினவிடை
ஒன்றிய வகரம் வருதலு மிரண்டும்
மருவின் பாத்தியற் றிரியுமன் பயின்றே.

போ - ள். பலர்பாற்பெயரின் பின்னர் யாவரென்னும் பெய ரிடையில் வகரங் கெடுதலும்,

ஒன்றன்பாற்பெயரின் பின்னர் யாது என்ற சொல்லினிடையில் (உயிரோடு) பொருந்திய வகரம் வருதலும் மரூஉக்களது முடிபின்கண் பயின்று திரியும்.



உ - ம். அவர் யார்? ; அது யாவது?
இவர் யார்? ; இது யாவது?

இச்சூத்திரவுரையில் "அவர் யார்" என்றவிடத்து "யார்" என்றது வினைக்குறிப்பன்று என்றதற்கு நச்சினார்க்கினியர் பின்வருமாறு கூறுகின்றார்:—

" அவர் யாவரென்பது வகரங் கெட்டு அவர் யாரென நின்றவழி

" யாஅரென்னும் வினாவின் கிளவி...." என்று வினையியலுட்கூறும்

வினைக்குறிப்புச்சொல்லாம் பிறவெனின், ஆகாது ; அவ்வகரங் கெட்

டாலும் ஈண்டு யாவரென்னும்

பெயர்த்தன்மையாயே நிற்றலின்
அது பெற்றவா றென்னையெனின் ஈண்டுப் பலாறிசொன்முன் வந்த
யாவரென்பதன் வகரங் கெடுமெனவே, ஏனை அவன் அவள் என்றும்
இருபான்மூன்னும் யாவரென்பது வாராதென்றும் அது திரிந்து
மருவாய் நிற்குமென்றுங் கூறுதலானும் 'யாவரென்னும் பெயரிடை'
என்பதனானும் பெற்றாம். இதனானே அவன் யாவர், அவள் யாவர்
என்றாற் பால்வழுவா மென்பது பெற்றாம். இதனை "யாவன்
யாவள் யாவரேன்று—மாவயின் மூன்றேடு..." எனப் பெயராக
ஓதியவாற்றான் உணர்க. அன்றியும் யாரென்னும் வினாவின் கிளவி
மூப்பாற்கும் உரித்தென்று யாரென்னும் வினாவினைக் குறிப்பினை
அவன் யார், அவள் யார், அவர் யார் என மூப்பாற்கும் ஒப்ப உரிமை

கூறுதலானும் அது வேறென்பது பெற்றாம்.
அது வினையியலுள்

ஓதினமையானும் "வினவிற் கேற்றல்" எனப் பயனிலையாக ஓதினமையானும் வேறாயிற்று." இவ்வாறு கூறுதல் பொருந்துமாவென ஆராய்த்தறபாலது.

பா - ம்.

நச். ம. பதி. "வருமொழியாய் வருதல் கொள்க."

நச். தா. சை. பதி.

பாடமே பொருந்தும்.

"நிலைமொழியாய்வருதல் கொள்க." பின்

தொகைமரபு முற்றும்.

---

# 6. உருபியல்

---

பெயரும் வேற்றுமையுருபும் புணரும்போது உண்டாம் மாறுதல்களை இவ்வியலிற் கூறினர் ஆசிரியர். புணர்ச்சிமாறுதல்களைத் தொகுத்துக் கூறிய பின்னர் அவற்றை உருபியல் முதலிய நான்கியல்களிலும் விரித்துக் கூறினர்.

நிலைமொழியீறு உயிராயிருக்க நேரும் மாறுதல்களை ஒன்பது சூத்திரங்களிலும், மெய்யாயிருக்க நேருமவற்றைப் பதின்மூன்று சூத்திரங்களிலும், குற்றியலுகரமாயிருக்க நேருமவற்றை ஏழு சூத்திரங்களிலும், புறனடையை ஒன்றிலுங் கூறினர்.

**174.** அ ஆ உ ஊ ஏ ஔ வென்னும்
அப்பா லாற னிலைமொழி முன்னர்
வேற்றுமை யுருபிற் கின்னே சாரியை.

போ - ள். அ, ஆ, உ, ஊ, ஏ, ஔ என்ற அப்பகுதிப்பட்ட ஆறனையும் ஈற்றிற்கொண்ட நிலைமொழியின் பின்னர், வேற்றுமை யுருபு வரின், இடையில் வருஞ் சாரியை இன்னேயாகும்.

அப்பா லாறணிலைமொழி என்முரேனும், நிறுத்த சொல்லினீறு கெழுத்தொடு (எழுத். 109) என ஆசிரியர் கூறியிருக்கின்றமையான் அப்பாலாறனையு மீற்றிற்கொண்ட நிலைமொழி எனப் பொருள் கொள்ளல்வேண்டும்.

" வேற்றுமை யுருபிற்கின்னே சாரியை " என்று கூறிஞரேனுஞ் சாரியை பெயர், வேற்றுமையுருபு இவற்றின் இடையில் வருமென்பது "அவற்றுவழி மருங்கிற் சாரியை வருமே" (எழுத். 119) என்றதனுற் பெறப்படும்.

உ-ம். விள + ஐ = விள + இன் + ஐ = விளவினை ; மாவினும் (புறத். 21), வெருவின்கண்ணும் (கள. 20), கொண்மூவினை, சேவினை, வௌவினை.

பா-ம். இளம். "கழூஉவினை, கழூஉவினொடு" நச். "கழூஉவினை, கழூஉவினொடு"

முன்னருள்ள பாடம் அச்சுப்பிழை யாகும். கழூஉ என்பது போன்றன ஆசிரியர்கொள்கையில் உகரவீறேயாகும்.

**175.** பல்லவை நுதலிய வகர விறுபெயர்
வற்றொடு சிவணல் எச்ச மின்றே.

பொ - ள். பன்மைப் பொருளைக் குறிப்பதும் அகரத்தை இறுதியிற்கொண்டதுமான பெயர் வேற்றுமையுருபின் முன்னர் வற்றுச்சாரியை பெறுதல் நீக்கமின்று.

உ-ம். பல்ல + ஐ = பல்ல + வற்று + ஐ = பல்லவற்றை.

சில்லவற்றை...; பிறவற்றின் (புறக். 36) பயிலாதவற்றை (சொல். 297).

" எச்சமின்றே என்றதனுன் இன் சாரியையும் வரு மென்ரு யிற்று. இதனனே ஈண்டு, மூன்ருமுருபின்கட் சாரியை பெற்றே முடியும் " என இளம்பூரணரும், " பல்லவை நுதலியவற்றின்கண் மூன்ருமுருபு வற்றுப் பெற்றே முடிதல் கொள்க " என நச்சினர்க் கினியருங் கூறினர். நச்சினர்க்கினியர் கூறியது தெளிவாயுளது. அன்றியும் எச்சமின்று என்றதனுனே ' மேல் இன்பெற்றன பிறசாரியையும் பெறுதல் கொள்க'' என்றனர் உரைகாரர்கள். வற்று இன் இரண்டனையுங் கொள்ளலாம் என்பது பிறவற்றின் நிமித்த மும் (புறத். 36) என்ற ஆசிரியர் வழக்காற் கொளல் தகும்.

உடைமையு மின்மையு மொடுவயி னெக்கீதும் (எழுத். 133)

என்றவிடத்து மூன்ருமுருபு சாரியையின்றியும் வருமெனக் கூறப் படினும், பிறவொடும் (உவம. 13)

என ஆசிரியரான் வழங்கப்படினும், பல்லவை முதலிய வகர விறுபெயர் ஆங்கு வற்றுப்பெற்றே முடியு மென உரைகாரர்கள் கூறியது ஆராய்தற்பாலது.

இளம்பூரணம் நச்சினார்க்கினியம் இவ்விரண்டு உரைகளிலும்
அகரவிறுபெயர் என்றதற்குப் பெயர்களின் இறுதி அகரம், பெயர்களின் இறுதி நின்ற அகரம் எனப் பொருள் கூறப்பட்டுளது. முதலிய

175

என்றது பெயர் என்பதைத் தழுவுதலால் அவ்வாறு கூறப்பட்டது
போலும்; "அகரவிறுபெயர்" என்ற தொகைமொழியைத் தழுவுகின்றது எனக் கொள்வதே சூத்திரப்போக்கிற்குப் பொருந்தும்.

இளம். க. பதி. "ஈண்டு மூன்றுமுருபின்சட்சாரியை பெற்றே... நிலாத்தை".

இளம். சி. பதி. "ஈண்டும் உருபு இன் சாரியை பெற்றே... நிலத்தை." முன்னருள்ள பாடமே சிறக்கும்.

**176.** யாவென் வினாவு மாயிய றிரியாது.

போ - ள். யா என்ற வினாப்பெயரும் அத்தன்மையினின்றுந் திரியாது.

உ-ம். யாவற்றை.

யா என்ற பலவின்பால்வினாப்பெயரை ஆசிரியர் "யாது யா யாவை" (சொல். 167) என்றவிடத்துக் கூறியதைக் காண்க.

**177.** சுட்டுமுத லுகர மன்னொடு சிவணி
ஒட்டிய மெய்யொழித் துகரங் கெடுமே.

போ - ள் சுட்டைமுதலாகவுடைய உகரவீற்றுச்சொல் அன் சாரியையோடு பொருந்த, அவ்வுகரம் ஒட்டிய மெய்யை நீக்கித் தான் கெடும்.

உ-ம். அது + ஐ = அதனை; (சொல் 110). இதனின் (சொல். 77).

சுட்டுமுதலுகரம் என்றவிடத்து உகரம் என்றாரேனும் உகரத்தை ஈற்றிற்கொண்ட சொல்லைக் கொள்ளல் வேண்டும். கெடும் என்றதற்கு உகரம் என்றது எழுவாயாகலின், செய்தென்வாய்ப் பாட்டதாகிய சிவணி என்றதைச் சிவண எனத் திரித்தல் வேண்டும்.



**178.** சுட்டுமுத லாகிய வையெ னிறுதி
வற்றொடு சிவணி நிற்றலு முரித்தே.

பொ - ள். சுட்டை முதலாகவும் ஐகாரத்தை ஈறாகவுமுடைய சொல் வேற்றுமையுருபின் முன்னர் வற்றுச்சாரியையைப் பெறுதலு முரித்து.

உ-ம்.
அவை + ஐ = அவை + வற்று + ஐ = அவை + அற்று + ஐ

(எழுத். 123)=அவையற்றை.

சிவணி என்றதற்குச் சுட்டுமுதலாகிய வையெனிறுதி என்றதை எழுவாயாகவும், நிற்றலு முரித்தே என்றதற்கு அவ்வீற்றைகாரம் என்றதை எழுவாயாகவுங் கொண்டு "சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகாரவீற்றுச்சொல் வற்றுச்சாரியையொடு பொருந்தி அவ்வீற்றை காரம் நிற்றலு முரித்து நில்லாமையு முரித்து" எனச் சூத்திரப் பொருள் கூறினர் இளம்பூரணர். பின்னர் "ஐகாரம் கெட்டவழி நின்ற வகரத்தினை வற்றின் மிசை ஒற்றென்று கெடுத்து அவற்றை...

என ஒட்டுக; மற்று இம்முடிபு சுட்டுமுதல் வகரவீற்றோடு ஒத்த மையின் ஈண்டு இது கூறல் மிகைபடக் கூறலாம் பிற எனின், அஃது ஒக்கும்; இவ்வாறு கூறுவன மேலும் உள, இவற்றிற்கெல்லாம் ஆசிரியன் கருத்து அறிந்து கொள்ளப்படு மென்பது" என்றுங் கூறினர்.

சிவணி என்ற செய்தெனெச்சத்தினை ஐகாரவீற்றுச்சொல் லாகிய முதலின் வினையாகவும் நிற்றல்வினையைச் சினையாகிய ஐகாரத் தின் வினையாகவுங் கொள்ளுதல் பொருந்தாமையானும், அவற்றை முதலியன இளம்பூரணர் கூறியவாறே அவ் என்ற சொல்லினின்றும் பிறக்குமாகலானும், அவர் தம் உரை பொருந்தாதென்க.

இதனையுணர்ந்துதான் நச்சினார்க்கினியர் "சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகாரவீற்றுச்சொல் வற்றுச்சாரியையோடு பொருந்தி நிற்றலு முரித்து" எனப்பொருள் கூறினர். ஆயினும் "உம்மையான் வற்றொடு சில உருபின்கண் இன்சாரியை பெற்று நிற்றலு முரித்து" என்றனர். சூத்திரப்போக்கை நோக்கின் உம்மையான் வற்றுச்சாரியை பெறாது நிற்றலு முரித்து எனக்

177

கூறுதலே சாலும் எனத் தோற்றுகின்றது. அவ்வாறாயின் அவைபிற்று (பரிபா. 2, 10),

இவையிற்றுக்கு (S. I. I. Vol. III Part II P. 187) முதலியன எவ்வாறு வருமெனின், புறனடைச் சூத்திரத்தான் வரு மென்க.

**179.** யாவென் வினாவி னையே னிறுதியும்
ஆயிய றிரியா தென்மனார் புலவர்
ஆவயின் வகர மையொடுங் கெடுமே.

**பொ - ள்.** *யாவை என்ற வினாப்பெயரும்*

*அத் தன்மையினின்*

*றுங் திரியாது என்று கூறுவர் புலவர்; அவ்விடத்து வகரம்*

**தோடுங் கெடும்.**

*ஐகாரத்*

உ - ம்.

*யாவை + ஐ = யாவை + வற்று + ஐ = யாவற்றை.*

" *வகரம் வற்றின் மிசை ஒற்றென்று கெடுவதனை ஈண்டுக் கேட்டோதியவதனாற் பிற ஐகாரமும் வற்றுப் பெறுதல் கொள்க.* கரியவற்றை

செய்யவற்றை எனவரும் ” என இளம்பூரணர் கூறுவர். கரியவற்றை முதலியன ஐகாரவீற்றுப்பெயரினின்றும் பிறந்ததாக நச்சினார்க்கினியர் கொண்டனர். அவற்றைக் கரிய முதலான அகர வீற்றுப்பெயரினின்றும் பிறந்ததாகக் கொள்ளுதல் சாலும்.

இச்சூத்திரத்தில் வகரக்கேட்டினைக் கூறாது ஐகாரக்கேட்டினை மாத்திரம் ஆசிரியர் கூறியிருப்பின், வகரக்கேடு “ அத்தே வற்றே... ஒற்றுமெய்கெடுதல்....” (எழுத். 134) என்ற சூத்திரத்தாற் பெறப் படும்; அவ்வாறிருக்க ஏன் ஈண்டு வகரக்கேட்டினை ஆசிரியர் கூறினரெனின், நிலைமொழி மெய்யீறா யிருக்கும்போது அம்மெய்யின் கேட்டினை அச்சூத்திரம் உணர்த்திற்றேயன்றி, உயிரீறாயிருக்கும் போதும், அவ்வுயிர் கெட எஞ்சிநின்ற மெய்யுங் கெடும் என உணர்த் தற்கு அன்று எனக் குறித்தற்கு என்க.

பா - ம்.

நச். ம. பதி. “ அவ்விடத்து ”

நச். தா. சை. "அவ் ஈற்றிடத்து"
முற்கூறிய பாடமே சிறக்கும்.

23



**180.** நீயெ னொருபெயர் நெடுமுதல் குறுகும்
ஆவயி னகர மொற்று கும்மே.

**பொ - ள்.** (ஈகாரவீற்றுப்பெயருள்) நீ என்ற ஒரு பெய
ராகிய நெடுமுதல் குறுகும் வேற்றுமையுருபின் முன்னர். அவ்
விடத்தில் னகரவொற்று வரும்.

**உ - ம்.** நின்னொடு (புறநா. 19)

நெடுமுதல் என்பது நெடிதாகிய முதல் என விரியும். முதல் என்பதற்குத் தொடக்கம் பொருளென்பது "தொடக்கங்குறுகும்..." (எழுத். 321) என்ற விடத்துள்ள "தொடக்கம்" என்ற சொல் காட்டும்.

சூத்திரத்துள் ஒருபெயர் என்றதன் பயனை "ஒருபெயர் என்றது நின் என்பதும் வேறொரு பெயர் போறலை விலக்கிற்று" என இளம்பூரணரும், "நின்னென்று வேறொரு பெயரோ எனக் கருதுதலை விலக்குதற்கு ஒரு பெயரென்றார்" என நச்சினார்க்கினியரும் கூறினர். முன்னுள்ள சூத்திரங்களில் வேற்றுமையுருபின் முன்னர் ஈகாரவீற்றுப்பெயர்களுக்கு உண்டாம் மாறுதல்களை ஆசிரியர் கூறாமையின், இச்சூத்திரத்தில் அவற்றுள் நீ என்ற ஒரு பெயர்க்கே மாறுதல் உண்டு என உணர்த்தற்கு ஒருபெயர் எனக் கூறினர் என்னலாம்.

"நெடுமுதல் என்றது அம்மொழி முதலின் நகரம் குறுகுதலை விலக்கிற்று. ஈண்டு உயிர்மெய்யொற்றுமைபற்றி நெடியது முதலாயிற்று" என இளம்பூரணர் கூறினர். அவர்கொள்கைக்கு உடன்பட்டனர் நச்சினார்க்கினியர். நகரம் குறுகும் என்ற ஐயத்திற்கு இடமின்மையான் அவ்வாறு கூறுதல் வேண்டாம்.

**181.** ஓகார விறுதிக் கொன்னே சாரியை.

போ - ள். ஓகாரத்தை இறுதியாகக் கொண்ட சொற்கு

வேற்றுமையுருபின் முன்னர் ஒன் என்ற சாரியையே வரும்.

உ - ம்.

கோ + ஐ = கோ + ஒன் + ஐ = கோஒனை. *

* ஈண்டு ஒ என்றது அளபெடை யன்று, ஒன் சாரியையின் பகுதி

என அறிதல் வேண்டும். 179

" ஒன்னே என்ற ஏகாரத்தால் பெரும்பான்மையாக வருஞ் சாரியை ஒன்னே; சிறுபான்மை இன் சாரியை வருமென்று கொள்க. 'ஒன்றாக நின்ற கோவினையடர்க்கவந்த'...எனவும் வரும் என நச்சினார்க்கினியர் கூறினர். ஏகாரம் தேற்றேகாரமாகலின், இன்சாரியை வருதல் ஆசிரியர்க்கு உடன்பாடின்றெனவும், அது பிற்காலத்து வழக்கு எனவுங் கொள்ளுதல் சாலும்.

**182.** அஆ வென்னு மரப்பெயர்க் கிளவிக்கு
அத்தொடுஞ் சிவணு மேழ னுருபே

போ - ள். ஏழாம் வேற்றுமையுருபு அகர ஆகாரவீற்றுமரப் பெயரின்கண் வரின், அஃது அத்துச்சாரியையோடும் பொருந்தும்.

உ - ம். விள + கண் = விளவத்துக்கண்; பலா + கண் = பலா வத்துக்கண்.

உம்மை எச்சவும்மை; அதனல் 174-ஆவது சூத்திரத்துக் கூறப்பட்ட இன்சாரியையும் வரும்.

உ - ம். பலவின் பழம் (புறநா. 109).

முற்சூத்திரத்திலிருந்து இறுதி என்ற சொல்லை அதிகரித்து
அஆ வென்னு மிறுதிமரப்பெயர்க் கிளவிக்கு
எனக்கொள்ளல் வேண்
டும். " அஆ வென்று சொல்லப்படு மரத்தையுணர
நின்ற பெயரா

கிய சொற்கு ” என உரைகாரர் கூறும் பொருளின் கருத்து “ அஆ

இவற்றை ஈற்றிற் கொண்ட மரப்பெயர்க்கு”

என்பதே யாகும். பா - ம்.

இளம். க. பதி. அத்தோடு பொருந்தும்.
இளம். சி. பதி. அத்தொடும் பொருந்தும்.
பின்பாடமே நேரிதாகும்.

**183.** ஞநவென் புள்ளிக் கின்னே சாரியை.

போ - ள். ஞ், ந் இவற்றை ஈற்றிற்கொண்ட சொற்கு வேற் றுமையுருபின் முன்னர் இன்சாரியையே வரும்.

180

உ ம். உரிஞ்+ஐ=உரிஞினை ;

பொருந்+ஐ=பொருநினை.

180ஆவது சூத்திரத்திலிருந்து இறுதி என்ற

சொல அதிகரித் தது.

**184.** சுட்டுமுதல் வகர மையு மெய்யும்
கெட்ட விறுதி யியற்றிரி பின்றே.

போ - ள். சுட்டெழுத்தை முதலாகவும் வகரவொற்றை இறுதியாகவுங்கொண்ட சொல் ஐயுமெய்யுங்கெட்ட ஐகாரவீற்றுச் சொல்லின் இயல்பினின்றும் மாறுதலின்று. அஃதாவது வற்றுச் சாரியை பெறும்.

இறுதி என்றது அதிகரித்தது.

" ஐயு மெய்யுங் கெட்ட விறுதி " என்றதனுன் " யாவை " என்றதைக் கொள்ளல் வேண்டும்.

உ-ம். அவ்+ஐ = அவ்+வற்று+ஐ = அவ்+அற்று+ஐ = அவற்றை ; இவற்றை ; உவற்றை ; அவற்ளுேடு (சொல் 116).

" ஐயுமெய்யுங் கெட்ட விறுதி " என்றதனுல் அவை, இவை, உவை என்பனவற்றை இளம்பூரணர்

கொண்டது பொருந்தா தென்க.
ஐயுமெய்யுங்கெட்டவிறுதி நச்சினார்க்கினியர் கூறியவாறு யாவையே யாகலின்.

**185.** ஏனை வகர மின்னொடு சிவணும்.

**பொ-ள்.** ஏனைவகரவீற்றுப்பெயர் இன்சாரியையோடு பொருந்தும.

உ-ம். தெவ்+ஐ=தெவ்+இன்+ஐ =தெவ்வினை. "வகரக் கிளவி நான்மொழி யீற்றது" (எழுத் 81) என ஆசிரியர் கூறியிருக்கின்றமையானும், சுட்டெழுத்தை முதலாகக்கொண்ட வகரவீற்றுச்சொல் மூன்றாகலானும், ஏனை வகரவீற்றுச்சொல் ஒன்றே யாகும். அஃது உரைகாரர்கூற்றால் தெவ் என்றதேயாகும். "தெவ்வுப் பகையாகும்" (சொல். 346) என்ற ஆசிரியர் சூத்திரத் தானும் அதனைக் கொள்ளல் கூடும்.

**186.** மஃகான் புள்ளிமு னத்தே சாரியை.

போ - ள். மகரத்தை ஈற்றிற்கொண்ட சொல்லின் முன்னர் வேற்றுமையுருபு வரின் அத்துச்சாரியையே வரும்.

உ-ம். மரம் + ஐ = மரம் + அத்து + ஐ = மர + அத்து + ஐ (எழுத். 134) = மர + த்து + ஐ (எழுத். 126) = மரத்தை ; கொற் றத்தானும் (புறத். 8)

இறுதி என்றது அதிகரித்தது.

**187.** இன்னிடை வரூஉ மொழியுமா ருளவே.

போ - ள். மகரவீற்றுச்சொற்களுள், இன்சாரியை இடையில் வருகின்ற சொற்களும் உள.

உ-ம். உரும் + ஐ = உருமினை.

மஃகான்புள்ளி என்றது அதிகரித்தது.

இச்சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் மார் என்றதை அசை யாகக் கூறினர், அசைநிலைக் கிளவி.. (சொல்.

271) என்ற சூத்
திரத்துள் ஆசிரியரே ஆர் என்றதை
அசையாகக் கூறினமையானும்,
" மார் " என்றதை அசையாக அவர்
கூறுமையானும், மொழியும் ஆர்
எனப் பிரித்தலே நேரிதாகும்.
மறத்தினும் (புறத். 24) என்ற
ஆசிரியர்வழக்கான் அத்து
இன் இரண்டும் வரல்கூடும்.

**188.** நும்மே னிறுதி யியற்கை யாகும்.

போ - ள். " நும் " என்ற சொல்லின் இறுதியிலுள்ள மகரம் வேற்றுமையுருபின் முன்னர் இயற்கையாய் நிற்கும்.

உ - ம். நும்+ஐ =நும்+ம்+ஐ (எழுத். 161)= நும்மை.

நும்மை என்றவிடத்து மகரம் இரட்டித்திருக்க, சூத்திரத் துள் இயற்கை என்ற சொல் எவ்வாறு பொருந்துமெனின், அச் சொற்குச் சாரியையின்மை எனப் பொருள்கொளல் வேண்டு மென்க.

இச்சூத்திரத்து இயற்கை என்றாரேனும் நுங்கண் என்ற விடத்து மகரங்கெட்டு நகரம் மிகுதற்கு "மேலைச்சூத்திரத்து மெய்

182

என்றதனான் மகரவொற்றுக் கெடுத்து வல்லெழுத்து முதலிய என் பதனான் மெல்லொற்றுக் கொடுக்க" எனக் கூறினர் நச்சினார்க்கினியர். இதனை வல்லெழுத்து முதலிய (எழுத். 115) என்ற சூத்திரவுரையிற் காண்க.

**189.** தாம்நா மென்னு மகர விறுதியும்
யாமெ னிறுதியு மதனோ ரன்ன
ஆஎ யாகும் யாமெ னிறுதி
ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்
ஏனை யிரண்டு நெடுமுதற் குறுகும்.

பொ - ள். தாம், நாம் என்ற மகரவீற்றுச்சொற்களும், யாம் என்ற மகரவீற்றுச்சொல்லும் வேற்றுமையுருபு

பின்வரின் அத் தன்மையன. அஃதாவது சாரியை பெறுது இயற்கையாயிருக்கும்.) யாம் என்ற மகரவிறுதிச்சொல்லின்கண் உள்ள ஆகாரம் எகரமாகும்; அவ்விடத்து யகரவொற்றுக் கெடும். ஏனையிரண்டன்கண்ணுள்ள நெடுமுதல் குறுகும்.

உ - ம். தாம்+ஒடு=தம்மொடு (சொல் 115); நாம்+ஐ= நம்மை; யாம்+ஐ=எம்மை

யாமெனிறுதி என்றற்கு யாமென் மகரவிறுதி எனப் பொருள் கூறல் வேண்டும். மகரம் என்றதை முதலடியிலிருந்து ஈண்டுங் கொண்டுவரல் வேண்டும்: அதனோரன்ன என்றவிடத்துள்ள அது முற்சூத்திரத்துள்ள நும் என்றதைக் குறிக்கும்.

"ஆவயின்மெய் என்றதனால் பிறவயின் மெய்யுங் கெடுமெனக் கொள்க, தங்கண், நங்கண், எங்கண் எனவரும்" எனக் கூறினர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் அவரோடு உடன்பட்டனர் இது "வல்லெழுத்து முதலிய..." (எழுத். 116) என்ற சூத்திரவுரையிற் கூறப்பட்டது.

பா - ம்.

இளம். க. பதி. “கெடுதலே வேண்டும்”
இளம். சி. பதி. “கெடுதல் வேண்டும்.”



**190.** எல்லா மென்னு மிறுதி முன்னர்
வற்றென் சாரியை முற்றத் தோன்றும்
உம்மை நிலையு மிறுதி யான.

போ - ள். *எல்லாம் என்ற மகரவீற்றுச்சொன்முன் வேற்றுமை யுருபு வரின் இடையில் வற்றுச்சாரியை முழுதுந் தோன்றும்; இறுதிக்கண் உம்மை நிலைபெறும்.*

மகரம் *என்றது முற்சூத்திரத்திலிருந்து அதிகரித்தது*; மகரவிறுதி *எனக் கொள்ளப்பட்டது*

உ - ம் *எல்லாம்+ஐ=எல்லாம்+வற்று+ஐ+உம்=எல்லா+வற்று+ஐ+உம்* (*எழுத்*. 134)=*எல்லாவற்றையும்.*

அடுத்த சூத்திரத்தில் உயர்திணையாயின் எனக் கூறப்பட்ட மையின், ஈண்டு அஃறிணையாகிய எல்லாம் என்றதே கொள்ளப்படும்.

" முற்ற என்றதனுன் மூன்முமுருபின்கண்ணும் நான்கா முருபின்கண்ணும் ஆரு முருபின்கண்ணும் உம்மின் உகரக்கேடு கொள்க" என்றனர் இளம்பூரணர். நச்சிஞர்க்கினியர் அவ்வாறு கூறுதலோடு அதற்கு " முற்றுகரமாதலின் ஏறிமுடியா " எனக் காரணமுங் கூறினர். எல்லாவற்ருெடு, எல்லாவற்றிற்கு, எல்லாவற்றது என்ற விடங்களில் ஈற்றெழுத்தைக் குற்றியலுகரமாகக் கொள்ளின் குற்றம் யாது ? அவ்வாறு கொள்ளின் "முற்ற" என்ற சொற்குப் பயன் உரைகார்கள் கூறுமாறு கூறவேண்டுத லில்லை.

**191.** உயர்திணை யாயி னம்மிடை வருமே.

பொ - ள். எல்லாம் என்ற சொல் மிடத்து வேற்றுமையுருபின் முன்னர் நம் உயர்திணையாயிருக்கு வரும். இறுதிக்கண் உம்மை நிலைபெறும்.

உ-ம். எல்லாம் + ஐ = எல்லாநம்மையும்.

உம்மை நிலையுமிறுதியான என்பது அதிகரித்தது.

முற்சூத்திரத்தினின்று

யகரவொற்றின் பின்னர் மெய்களுள் யகரவகரங்களே வருமென ஆசிரியர் கூறியிருத்தலானும் (எழுத். 27, 28,) ஈண்டு



நம்மை விதித்திருத்தலானும், இறுதி மகரத்தின் கேட்டினைக் கொள்க. இதனை இளம்பூரணர் "நிலைமொழி யொற்றும்மேல் வற்று மிசையொற்று என்று கெட்டு நின்ற அதிகாரத்தாற் கெடுக்க; இன்னுமதனானே உம்முப்பெறுதலும் அதன்கண் உகரம் சில உருபின் கண் கெடுதலுங் கொள்க" என்றனர். அவரோடு உடன்பட்டனர் நச்சினார்க்கினியர். "உம்மை நிலையுமிறுதியான" என்பது இச்சூத்

கிரத்தில் அதிகரித்தது எனின் இவ்வாறு கூறவேண்டுதல் இன்று.

**192.** எல்லாரு மென்னும் படர்க்கை யிறுதியும்
எல்லீரு மென்னும் முன்னிலை யிறுதியும்
ஒற்று முகரமுங் கெடுமென மொழிப
நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி
உம்மை நிலையு மிறுதி யான
தம்மிடை வரூஉம் படர்க்கை மேன
நும்மிடை வரூஉம்
முன்னிலை மொழிக்கே.

பொ-ள் எல்லாரும் என்ற படர்க்கை யுணர்த்தும் மகரவீற்றுச்சொல்லின்கண்ணும், எல்லீரும் என்ற முன்னிலை யுணர்த்தும் மகரவீற்றுச்சொல்லின்கண்ணும் பின் வேற்றுமையுருபு வரின், ஈற்றி லுள்ள உம் கெட்டு ர் நிற்க, வேற்றுமையுருபின் பின்னர் இறுதியின்கண் உம் நிற்குமென்றும், பகுதிக்கும் வேற்றுமையுருபிற் கும் இடையில் படர்க்கைச்சொல்லின்கண் தம் என்பதும், முன்னிலைச்சொல்லின்கண் நும் என்பதும் வருமென்று கூறுவர் (புலவர்).

" படர்க்கை முன்னிலை

என்ற மிகுதியான் மகரவீற்றுத்தன்மைப் பெயரிடைக்கண் நம்முச்சாரியையும் ஈற்றுக்கண் உம்முச்சாரியையும் பெற்றுமுடிவன கொள்க; கரியேநம்மையும், கரியேநம்மொடும் என ஒட்டுக"

என்றனர் இளம்பூரணர். அவர்கூற்றோடு உடன்பட்டனர் நச்சினார்க்கினியர். இதனைத் தன்னினமுடித்தலாலேனும் ஒற்று மைப்போலியாலேனும் உயர்திணை யாயி னம்மிடை வருமே என்ற சூத்திரத்தின்கீழ்க் கொள்ளின் நலம்.

"படர்க்கைப்பெய முற்கூறியவதனால் ரகாரவீற்றுப்படர்க்கைப் பெயரும் முன்னிலைப்பெயரும் இறுதிக்கண் உம்மொடு தம்முச்சாரி யையும் நும்முச்சாரியையும் பெற்று முடிவன கொள்க. கரியார்தம் மையும், சான்றீர்நும்மையும் என ஒட்டுக என்றனர்

இளம் பூரணர். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறினர். அவ்வழக்கெல் லாம் ஒற்றுமைப்போலியான் பிற்காலத்து வந்தன எனக் கொள்ளல் தகும்.

"நிற்றல்வேண்டும் ரகரப்புள்ளி என் றதனுனே தமமுப்பெருமை வருமவையுங்கொள்க. எல்லார்க்குமெல்லாங்கழ்பவை எனவரும்" என்றனர் நச்சினார்க்கினியர். இவ்வழக்கு பிற்காலத்தது எனக் கூறு தலே பொருந்தும்.

.

எல்லாரும், எல்லீரும் இவ்விரண்டையும் ஆசிரியர் பெயரியலில் உயர்திணைக்கண் படித்திருக்கின்றமையான், நச்சினார்க்கினியர் ஈண் டுப் படர்க்கை, முன்னிலை என்பனவற்றிற்கு உயர்திணைப்படர்க்கை, உயர்திணைமுன்னிலை எனப் பொருள் கூறினர்.

இச்சூத்திரத்துப் படர்க்கை முன்னிலை என்பன மிகுதியெனக்

கூ றினர் இளம்பூரணர். எல்லாரு மென்னும் பெயர் நிலைக்கிளவியு—

மெல்லீரு மேன்னும் பெயர்நிலைக் கிளவியும்... (சொல் 164) என்ற

சூத்திரத்து அவற்றை முறையே படர்க்கைக்கிளவி, முன்னிலைக்

கிளவி என ஆசிரியர் கூறுமையான், ஈண்டுக் கூறுதல் இன்றியமை

யாதென்க. ஆகலின் இளம்பூரணர்கூற்றுப் பொருந்தாது.

பா-ம்.

இளம். க பதி, " தம்மொடு நும்முச்சாரியையும் பெற்று...

சான்றீர் நும்மையும்."

இளம். சி. பதி. "உம்மொடு தம்முச்சாரியையும் நும்முச்சாரி

யையும் பெற்று...சான்றீர் நும்மையும்."

பின்னருள்ள பாடமே பொருந்தும்.

**193.** தான்யா னேன்னு மாயீ ரிறுதியும்
மேன்முப் பெயரொடும் வேறுபா

டிலவே.

போ - ள். தான் யான் என்ற
அவ்விரண்டு னகரவீற்றுச்
சொற்களும் மேற்கூறப்பட்ட தாம், நாம் யாம்
என்ற பெயரோடு
வேறுபாட்டினை உடையவல்ல.

24



உ-ம். தன்னை (சொல். 448), என்னை.
ஆயீரிறுதியும் என்றவிடத்து
ஆயிரண்டுனகரவிறுதியும் எனக்
கொள்ளல் வேண்டும்.

**194.** அழனே புழனே யாயிரு மொழிக்கும்
அத்து மின்னு முறழத் தோன்றல்
ஒத்த தென்ப வுணரு மோரே.

போ . ள். அழன், புழன் என்ற இரண்டு
சொற்களுக்கும்
பின்னர் வேற்றுமையுருபு வரின் அத்து, இன்
என்ற சாரியைகள்

உறழ்ச்சியாய்த் தோன்றுதல் பொருந்து மென்று
கூறுவர் உணர்
வோர்.
உ-ம். அழன் + ஐ = அழன் +
அத்து + ஐ = அழ + அத்து + ஐ
(எழுத் 134) = அழ + த்து + ஐ (எழுத். 126)
= அழத்தை, அழ
னினை; புழத்தை, புழனினை.
"தோன்றல் என்றதனுன் எவன்
என்றும் என் என்றும்
நிறுத்தி வற்றுக் கொடுத்து வேண்டும்
செய்கைசெய்து எவற்றை,
எவற்றொடு எனவும் எற்றை எற்றொடு
எனவும் முடிக்க."
என்றனர் இளம்பூரணர். யாவன் என்றதை
யாவன் யாவள்...
(சொல் 162) என்ற சூத்திரத்திற் பெயராகவும்,
எவன் என்றதை
யாதெவன் (சொல். 31) என்ற
சூத்திரத்தில் முடிக்குஞ்சொல்லாகவும்

ஆசிரியர் படித்திருக்கின்றமையான், எவன் என்றது பிற்காலத்தே

வேற்றுமையுருபு ஏற்றது எனக் கொள்ளல் வேண்டும். யாவை

என்றதை ஆசிரியர் பெயரியலில் படித்திருக்கின்றமையின் அதற்கு

இரண்டாம் வேற்றுமை யாவற்றை என்றாகும். அஃது பிற்காலத்து

யான்—என்னை, யாம்—எம்மை என்றதை நோக்கி ஒற்றுமைப்போலி

யால் யாவை—எவற்றை என்றாயிருத்தல் வேண்டும். அவ்வாறிருக்க

"எவற்றை" என்றது எவன் என்ற ஒருமைப்பெயரின் இரண்டாம்

வேற்றுமையாக எக்காலத்து வழக்கில் வந்ததென்பது ஆராய்தற்

பாலது.

"ஒத்தது என்றதனால் எகின் என நிறுத்தி அத்தும் இன்

னும் கொடுத்துச் செய்கை செய்து எகினத்தை எகினத்தொடு என

வும், எகினினை, எகினிஞெடு எனவும் முடிக்க”
என்றனர் உரை
காரர்கள்.



195. அன்னென் சாரியை யேழ னிறுதி
முன்னர்த் தோன்று மியற்கைத் தென்ப.

பொ-ள். ஏழ் என்ற சொல்லின் இறுதியின் பின்னர் வேற்றுமையுருபு வரின் இடையில் அன்சாரியை தோன்றுமியற்கை யுடையது என்ப.

உ-ம். ஏழனை, ஏழனுருபிற்கு (எழுத். 202)

பூழனை, யாழனை என்பனவற்றை ஆசிரியர் சாரியையை முற் கூறியவதனுல் உரைகாரர்கள் கொள்ளுகின்றனர்.

“மேல் வருகின்ற அன்சாரியையைச் சேர வைத்தமையான் அவையெல்லாம் இன்சாரியை பெற்றுவருதலுங் கொள்க. ஏழினை, பூழினை, யாழினை என வரும்” என்றனர் நச்சினார்க்கினியர். அவை பிற்காலத்துவழக்கெனத் தோன்றுகின்றது.

**196.** குற்றிய லுகரத் திறுதி முன்னர்
முற்றத் தோன்று மின்னேன் சாரியை.

**பொ - ள்.** குற்றியலுகரத்தை யிறுதியாகக் கொண்ட சொற்களின் முன்னர் வேற்றுமையுருபு வரின் இன்சாரியை தோன்றும்.

உ-ம். பகட்டினனும் (புறத். 21)

முற்ற என்றதனற் பிறசாரியைகளையும் வழக்கு நோக்கி உரைகாரர்கள் கொள்ளுகின்றனர். "முன்னதற்கு" (அகத். 52), "விளி கொள்வதன்கண்" (சொல். 63) போன்ற ஆசிரியர்வழக்கினுல் அவற்றைக் கொள்ளல் தகும். "குற்றிய லுகரக் கின்னே சாரியை" (எழுத். 168) என்ற சூத்திரம் அளவுப்பெயர், நிறைப்பெயர் எண்ணுப்பெயர் இவை குற்றியலுகரவிறுதி யாயின் குறையின்முன் இன்

சாரியையே வரும் எனக் கூறிற்று இச்சூத்திரம் குற்றியலுகர விறுதிப்பெயர் வேற்றுமை யுருபின் முன்னர் இன்சாரியை பெறுமென்றது.

**197.** நெட்டெழுத் திம்ப ரொற்றுமிகத்
தோன்றும்

அப்பான் மொழிக ளல்வழி யான.

பொ - ள்.

கெட்டெழுத்தைக்கொண்ட ஈரெழுத்தொருமொழி யின் பின்னர் வேற்றுமையுருபு வரின் குற்றியலுகரத்தின்

188

பற்றுக்கோடாகிய ஒற்று மிகும், இனவொற்று மிகாச் சொற்களில்

லாத விடத்து.

உ-ம். ஆறு + ஆன் = ஆற்றான் (கற்பு. 27)

" குறுமையும்... " (எழுத். 50) என்ற சூத்திரத்தான் இவ்விதியைத் தொடர்மொழிக்குங் கொள்ளல் வேண்டும்.

உ-ம். பகட்டினும் (புறத். 21).

" அப்பான் மொழிகள் " என்றதன் பொருளை

ஒற்றிடை யினமிகா மொழியுமா ருளவே
அத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே

(எழுத். 413)

என்ற சூத்திரம் விளக்கும். அவை நாகு, காசு, போது, காபு போன் றன என்பது உரைகளான் விளங்கும்.

**198.** அவைதாம்
இயற்கைய வாகுஞ் செயற்கைய
வென்ப.

**பொ - ள்.** அவ்வொற்று மிகுஞ் சொற்கள் சாரியை பெறாது
இயல்பாய் நிற்குந் தன்மையன என்பர்.
உ-ம். பல்லாற்றானும் " (கற்பு. 27)
செயற்கைய என்றதனான் இனவொற்று மிக்கன சிறுபான்மை
இன்பெறுதலுங் கொள்க" என்றனர்
இளம்பூரணர், இவ்வாறு கூறு
தற்குக் காரணம் " பசட்டினானும் " (புறத். 21)
முதலிய ஆசிரியர் .

வழக்காயிருத்தல் கூடும். 196, 197 இரண்டு சூத்திரங்களும்

ஒன்றுக்கொன்று புறனடை யெனக் கொள்ளாவிடின், சாரியை வரு

தல் அவற்றாலே பெறப்படும்.

**199.** எண்ணி னிறுதி யன்னொடு சிவணும்.

பொ ள். எண்ணுப்பெயர்களாகிய குற்றியலுகாவீறு வேற் றுமையுருபின் முன்னர் அன்சாரியையோடு பொருந்தும்.

உ-ம். ஒன்றனை (சொல். 27), இரண்டன் (சொல். 93)



நச்சினார்க்கினியர் "முன்னர்ச் செயற்கைய என்ற இலேசானே ஒன்றினை, இரண்டினை என இன்சாரியையுங் கொடுக்க" என்றனர்.

குற்றிய லுகரத் திறுதி முன்னர்
முற்றத் தோன்று மின்னென் சாரியை

(எழுத். 196) என்றும்,

எண்ணி னிறுதி யன்னொடு சிவணும்

என்றும் ஆசிரியர் கூறியிருக்க இன் சாரியையும் வருமெனக் கூறுதல் பொருந்தாது. இன்சாரியையும் வருமெனின், இச்சூத்திரம்

எண்ணி னிறுதி யன்னொடுஞ் சிவணும்

என்றிருப்பின் நலம். அங்ஙன் கூறுமையால், ஒன்றினை என இன் வருவது பிற்கால வழக்காயிருத்தல் கூடும்.

எண்ணி னிறுதி யன்னொடு சிவணும் என்றவிடத்து குற்றியலுகரத்திறுதியாகிய எண்ணினைக் கொள்ளல் வேண்டும். குற்றிய லிகரத்திறுதி என்றது அதிகரித்து வருகின்றமையின். ஆகலி னன்றே ஏழ் என்ற எண்

அன்சாரியை பெறுமென

அன்னொன் சாரியை யேழ னிறுதி

(எழுத். 195) என்ற சூத்திரத்திற் றனிமையாகக் கூறினர் ஆசிரியர்.

**200.** ஒன்று முதலாகப் பத்தூர்ந்து வரூஉம்
எல்லா வெண்ணுஞ் சொல்லுங் காலை
ஆனிடை வரினு மான மில்லை
அஃதேன் கிளவி யாவயிற் கெடுமே
உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே.

பொ - ள். பத்தால் தொடர்ந்து வரப்படும் ஒன்று முதலாக எல்லா வெண்ணையும் வேற்றுமையுருபின் முன்னர்ச் சொல்லுங் காலத்து, ஆன்சாரியை இடையில் வரினுங் குற்றமில்லை. (அப் போது அஃது)என்ற கிளவி கெடும்; பகர வொற்று நிற்கும்.

உ-ம். ஒருபஃது + ஐ (எழுத். 438)

= ஒருபஃது + ஆன் +

ஐ = ஒருப் + ஆன் + ஐ = ஒருபானை.

"பத்தூர்ந்து வரூஉம்" என்றவிடத்து "பத்து" என்றிருக்க, உதாரணத்தில் "ஒருபஃது" என ஏன் கொள்ளல்வேண்டு மெனின், "அஃதென்கிளவி" என்ற தொடரா னென்க.

ஆனமில்லை என்றதனுன் 199ஆவது சூத்திரத்தின்படி அின் சாரியையும் வரும்.

உ-ம். இருபஃதனை.

பிற்காலத்து, ஒன்பானை என்ற வழக்கு வந்தது என உரைகளால் விளங்கும்.

இச்சூத்திரத்தில் வரினும் மானம் எனப் பதப்பிரிவு கூறுகின்றனர் சிலர். மானம் என்றதற்குக் குற்றம் என்ற பொருள் பிற்காலத்து வந்தமையானும், ஆனம் என்றதற்குக் குற்ற மென்ற பொருளே உள்ளமையானும், ஆனம் என்றே

பிரித்தல் வேண்டும்.

பா-ம். இளம். க. பதி. ஒருபாேனொடு, ஒருபஃதினை, ஒரு பஃதினொடு, இருபஃதினை.

இளம். சி. பதி. ஒருபானொடு, இருபஃதினை. முன்பாடஞ் சிறக்கும். ஒருபஃதினை முதலியன ஒருபஃதனை...என நச்சினார்க்கினியர் கூறியவாறு இருத்தல்வேண்டும்.

**201.** யாதெ னிறுதியுஞ் சுட்டுமுத லாகிய
ஆய்த விறுதியு மன்னொடு சிவணும்
ஆய்தங் கெடுத லாவயி னான.

போ - ள். யாது என்ற குற்றியலுகரவிறுதிச்சொல்லும் சுட்டை முதலிலும் ஆய்தத்தை இடையிலுங்கொண்ட குற்றியலுகர விறுதிச்சொற்களும் வேற்றுமையுருபின் முன்னர் அன்சாரியை யோடு பொருந்தும்; அவ்விடத்து ஆய்தங் கெடும்.

உ - ம். யாது + ஐ = யாது + அன் +

ஐ = யாதனை ; யாதன்
சொல் 106) அஃது + ஐ = அஃது + அன் +
110), இதனின் (சொல் 77).
ஐ = அதனை (சொல்

இறுதியும் என்றதற்கு முன்னர்,
ஒட்டுக.

அதிகரித்த குற்றியலுகரத்தை



**202.** ஏழ னுருபிற்குத் திசைப்பெயர் முன்னர்ச்
சாரியைக் கிளவி யியற்கையு மாகும்
ஆவயி னிறுதி மெய்யொடுங் கெடுமே.

**போ - ள்.** திசைப்பெயரின்

பின்னர் ஏழாம்வேற்றுமையுருபு வ்ரின் சாரியை
இயல்பாகவு மிருக்கும். அவ்விடத்து குற்றியலுகரத்
திறுதி அதன் பற்றுக்கோட்டுடன் கெடும்.

உ - ம். வடக்கு + கண் = வடக்கண்.

உம்மையான் இன்சாரியை வரும்.

உ - ம். வடக்கின்கண்.

" உருபு முற்கூறியவதனால் கீழ்சார்....வடபுடை என இவ்வாறு சாரியை பெறாது திரிந்து முடிவனவெல்லாங் கொள்க" என்றனர் உரைகாரர்கள். ஆங்கு சார், புடை முதலியவற்றைப் பெயராகக் கொள்ளுதல் குற்றமின்றாதலின், அவர் தங்கூற்று ஆராய்தற்பாலது.

"இன்பெறுவழி உகரங்கெடாதென்று உணர்க" என்றனர் நச்சினார்க்கினியர். உகரம் என்றதற்குப் பற்றுக்கோடுடனுள்ள குற்றிய லுகரம் என்பது பொருள் போலும்.

**203.** புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியும்
சொல்லிய வல்ல வேனைய வெல்லாம்
தேருங் காலை யுருபொடு சிவணிச்

சாரியை நிலையுங் கடப்பா டிலவே.

போ - ள். புள்ளியீற்றுச்சொற்களுள்ளும் உயிரீற்றுச்சொற் களுள்ளும் சொல்லப்பட்டவற்றைத் தவிர்த்து எஞ்சிய சொற்களெல் லாம் ஆராயுமிடத்து உருபொடு பொருந்தும்போது சாரியையோடு நிலைபெறவேண்டும் என்ற நியதி இல்லை.

உ-ம். மண்ணை, மண்ணினை...; கிளியை, கிளியின; எண்ணின் (சொல். 44), பெயரினும் (சொல். 50), தொழிலினும் ( சொல். 50) பொருளினும் (சொல் 101), தொகுதியின் (சொல். 33), இயற்கையின் (சொல். 407).

192

" தேருங்காலை என்றதனான் உருபுகள் நிலைமொழியாக நின்று தம் பொருளொடு புணரும்வழி முடியும் முடிபுவேற்றுமை யெல்லாங் கொள்க" என்று கூறினர் உரைகாரர்கள். வேற்றுமையுருபேற்ற பெயர்களும் பெயர்களாமாதலின், அவற்றை

உயிர்மயங்கியல் புள்ளி மயங்கியல்
குற்றியலுகரப்புணரியல் இவற்றுட் கூறப்படும்
விதிக ளாலே கொள்ளலாம்.

"இஃது உருபியலாகலான் உருபொடு சிவணி
என வேண்டா வன்றே; அதனன்
உருபுபுணர்ச்சிக்கண் சென்ற சாரியைகளெல் லாம்
ஈற்றுப்பொ துமுடிபுள்வழிப்
பொருட்புணர்ச்சிக்கண்ணுஞ் செல்லுமென்பது
கொள்க" என்றனர் உரைகாரர்கள். இடையில்
எல்லா வுருபுந் தொகும் என்பது

ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகாஅ விறுதி யான

(சொல். 105)

என்ற சூத்திரத்தாற்

பெறப்படுகின்றமையானும், உருபு
முதலில் நின்றே பின்னர்த் தொகுமாதலானும்,
நின்றவழி சாரியை
வருமாதலானும், உருபு தொக்கவழி அதுகாரணமாக
வந்த சாரியை யுங் கெடுமோ வென்ற ஐயம் வர, அது

கெடவேண்டிய நியதியில்லை என்பதை, 'உருபொடு சிவணி' என்றது குறிக்கின்றது என்பதே அதற்குப் பொருளாகும்.

இச்சூத்திரத்திலும் புள்ளி என்றது மெய்யினையுங் குற்றிய லுகரத்தினையுங் குறித்தல் நோக்கத்தக்கது.

பா - ம்.

இளம். க. பதி. "மலையொடு பொருது.. .புள்ளியீறும்."

இளம். சி. பதி. "மலையொடு பொருதது மால்யானை....மெய் யீறும்." "புள்ளியீறும்" என்ற பாடஞ் சிறக்கும்.

உருபியல் முற்றும்.

---

## 7. உயிர்மயங்கியல்.

உருபியலின் பின்னர் உயிரை ஈற்றிற்கொண்ட
பெயரும் வினை யும் நிலைமொழியாயிருக்க, நேரும்
மாறுதல்களை இவ்வியலிற் கூறினர் ஆசிரியர்.
ஆகலின் இவ்வியலை உயிர்மயங்கியல் எனப்
பெயரிட்டனர். உரைகாரர்கள் உருபியலில்
பெயருக்கும் வேற்றுமையுருபிற்கும் இடையில் வரும்
மாறுதல்களை ஆசிரியர் வெளிப்படையாகக் கூறி,
உருபேற்ற பெயர்க்கும் மேல் வருஞ் சொற்கும்
இடையில் வரும் மாறுதல்களை 203 ஆவது
சூத்திரத்துள்ள தேருங்காலை என்றதனால் உய்த்துணர
வைத்தனர் எனக் கொண்டனர். இவ்வாறு
கொண்ட

தற்குக் காரணம்

வேற்றுமையுருபு வெளிப்படையாயிருக்க, குறித்து
வருகிளவியோடு நேரும் மாறுதல்கள்
உருபியலிலே கூறப்பட்டிருத் தல் வேண்டும் என்ற
நினைவினாற் போலும். ஆகலினன்றே உயிர்மயங் கியல்,
புள்ளிமயங்கியல், குற்றியலுகரப்புணரியல் இவற்றுள்
வேற்று மைவழி கூறப்பட்ட புணர்ச்சிகளை
வேற்றுமைப்பொருட்புணர்ச்சி யெனக்கொண்டனர்.

அவ்வாறு கொள்ளாது ஆங்கெல்லாம் வேற்றுமை யுருபு நிற்கும் போதும், தொகும்போதும் வரும் புணர்ச்சிகளை ஆசிரியர் கூறினர் எனக் கொள்ளுதல் பொருந்தும். "மண்ணினைக் கொணர்ந்தான்" என்றவிடத்து வல்லெழுத்து மிகுதியை "ஐகார விறுதிப் பெயர்நிலை முன்னர்" (எழுத். 281) என்ற சூத்திரத் தானும், "கயிற்றாற் கட்டினான்" "காக்கையிற்கரிது" என்றவிடத்து னகரவொற்று றகரவொற்றாய்த் திரிந்ததை "னகார விறுதி ." (எழுத். 333) என்ற சூத்திரத்தானும், "ஊருக்குச் சென்றான்" என்றவிடத்து வல்லொற்று மிகுதியை "வன்றொடர் மொழியும்" (எழுத். 415) என்ற சூத்திரத்தானும், "அவனது கால்" என்றவிடத்து இயல்புபுணர்ச்சியை "ஒற்றிடையினமிகா..." (எழுத். 413) என்ற சூத்திரத்தானுங் கொள்ளல் தகும். மண்ணினை, கயிற்றான், ஊருக்கு அவனது என்பனவற்றுள் முதலிரண்டையும் முறையே ஐகாரவீற்றுப்பெயராகவும், னஃகானீற்றுப்பெயராகவும், பின்னைய இரண்டையுங் குற்றியலுகரவீற்றுப்பெயராகவுங் கொள்ளல் தகுமா வெனின், தகும். எவ்வாறு எனின் "சொல்லெனப் படுப — பெயரே வினையே யாயிரண் டென்ப (சொல்.158) என்றும்,

" இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு
மவற்றுவழி மருங்கிற் றோன்று மெனப " (சொல். 159)
என்றும் ஆசிரியர் கூறியிருக்கின் றமையான் என்க.

அகரம் முதல் ஔகாரம் வரை ஈற்றிற்கொண்ட நிலைமொழிச் சொற்களை முறையாகக் கொண்டு, ஆங்கு முதலில் வேற்றுமையல் வழிப்புணர்ச்சியையும், அதன்பின்னர் வேற்றுமைப்புணர்ச்சியை யுங் கூறினர்.

ஆதலின் " மேல் உருபுபுணர்ச்சி கூறி ஈண்டும் பொருட் புணர்ச்சி கூறுகின்றமையின் மேலதனோடு இயைபுடைத்தாயிற்று " என்ற இளம்பூரணர் கூற்றும், " மேற் பெயரோடு உருபு புணரு மாறு கூறிப் பெயர்வருவழி உருபு தொக்கு நின்ற பொருட்புணர்ச்சி கூறுகின்றமையின் உருபியலோடு இயைபுடைத்தாயிற்று " என்ற

நச்சினார்க்கினியர்கூற்றும் பொருந்தா. அன்றியும் " பொருட் புணர்ச்சி " என்றதற்கு வேற்றுமையுருபு நில்லாது அப்பொருள்

நிற்கு மிடத்துவரும் புணர்ச்சி எனப் பொருள்கொள்ளல் வேண்டும். அவ்வாறுயின் இவ்வியலிற் கூறப்பட்ட விதிகளில் நிலைமொழி

வினையெச்சம், பெயரெச்சம், வினைமுற்று, உரையசைக்கிளவி இவை

முதலியனவாக இருத்தல் இயலாது. ஆசிரியரோ வினையெஞ்சு

கிளவியும்....(எழுத்து. 205), சாவவென்னுஞ் செயவெ னெச்சத்

திறுதி.... (எழுத். 210), வாழியவென்னுஞ் சேயென்கிளவி

(எழுத். 212), செய்யா வென்னும் வினையெஞ்சு கிளவியும் (எழுத்.

223), தன்றொழி லுரைக்கும் வினாவின் கிளவியோடு (எழுத். 225),

வினையெஞ்சு கிளவியும் (எழுத். 237); முதலியவற்றைக் கூறினர்.

அன்றியும் உருபியலில் பகுதிக்கும் வேற்றுமையுருபிற்கும் இடை
யில் வரும் மாறுதல்களை விரிவாகக் கூறிய ஆசிரியர் "யானையை+
கண்டான்" முதலிய இடங்களிலுள்ள புணர்ச்சியை உரையிற்கோட
லாற் கொள்ளவைத்தாரென்பது நேரிதாகாது.
நிலைமொழி அகரவீறாயிருக்க அல்வழிப்புணர்ச்சியில் நேரும்
மாறுதல்களைப் பதின்மூன்று சூத்திரங்களிலும் வேற்றுமைப்புணர்ச்
சியில் நேர்வனவற்றை ஐந்து சூத்திரங்களிலும் உணர்த்தினர் ஆசிரி
யர்.

195

204 அகர விறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யல்வழிக் கசதபத் தோன்றின்
தத்த மொத்த வொற்றிடை மிகுமே

பொ - ள். அகரத்தை இறுதியிற்கொண்ட பெயர்ச்சொல்லின் பின்னர் வருமொழிமுதலில் கசதப இவை வரின், அவ்வழிக்கண் அவற்றை ஒத்த ஒற்று இடையில் மிகும்.

உ - ம். விள + குறிது = விளக்குறிது...

" ஒத்த ஒற்றென்றது தத்தம் என்றதனான் அகரவீற்று
உரிச்சொல் வல்லெழுத்து மிக்கும் மெல்லெழுத்து மிக்கும் முடியும்
முடியும் இடைச்சொற்களுள் எடுத்தோதாதவற்றின் முடியும் அகரம்
தன்னை உணரநின்றவழி முடியும் முடியுங் கொள்க. தடக்கை, தவக்
கொண்டான் என இவை உரிச்சொல் வல்லெழுத்துப்பேறு...அக்
குறிது....என்பது தன்னை உணரநின்றவழி வல்லெழுத்துமிகுதி;
அவ்யாது என்பது இடையெழுத்துமிகுதி; அவ்வழகிது என்பது
உயிர்க்கணத்து முடிபு " என்றனர் இளம்பூரணர்.

உரிச்சொல் என்
பது தாது எனத் தெய்வச்சிலையார்
வெளிப்படையாக எச்சவியலில்
முதற்சூத்திரத்தில் விளக்கியிருக்கின்றமையானும்,
தவ என்றதை
வினைப்போலி எனச் சேனாவரையர்
கூறுகின்றமையானும், தட என்
றது அவர்கூற்றில் பெயர்ப்போலி யாகு மாதலானும்
இச்சூத்திரத்தி
லுள்ள பெயர்நிலை முன்னர் என்றதனானே
தடக்கை என்றதைக்
கொள்ளவும், அடுத்த சூத்திரத்துள்ள
வினையெஞ்சுகிளவி என்றத
னானே தவக்கொண்டான் என்றதைக் கொள்ளவுஞ்
சாலுமெனத்
தோன்றுகின்றது. அக்குறிது, அவ்யாது*அவ்வழகிது
என்ற இடங்களில்
அ தன்னையே குறித்தலான், அது பெயராகுமே
யன்றி இடைச்சொல் லாகாது. ஆனதுபற்றியே
நச்சினார்க்கினியர் “ இனி இடைச்சொல்
வல்லொற்றுப்பெற்று வருவன உளவேல்

அவற்றையும் இவ்விலே

சான் முடித்துக் கொள்க " என்றனர் போலும்.

அவ்வாறாயினும்

"அகரந்தன்னை

உணரநின்றவழி வன்கணத்தோடு மிக்குமுடியும்முடி

புங்கொள்க " என ஏன் அவர் கூறினரென்பது

விளங்கவில்லை. ஆக

லின் உரைகாரர்கள்கூற்று ஆராய்தற்பாலன.

* அவ்யாது என்பது அவ்யாழ்

போலியான் வந்திருத்தல் கூடும்,

போன்றதைப் பார்த்து ஒற்றுமைப்

196

பா. - ம்.

இளம். க. பதி. " அவ்வழகிது என்பதற்கு

உயிர்க்கணத்து முடிபு "

இளம்' சி. பதி. " அவ்வழகிது என்பது

உயிர்க்கணத் து முடிபு"

பின்னருள்ள பாடஞ் சிறக்கும்.

**205.** வினையெஞ்சு கிளவியு முவமக் கிளவியும்
எனவெ னெச்சமுஞ் சுட்டி னிறுதியும்
ஆங்க வென்னு முரையசைக் கிளவியும்
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே.

பொ - ள்: அகரவீற்றுவினையெச்சமும், அகரவீற்றுவுவமவுருபும், என என்ற எச்சமும், அகரச்சுட்டும், ஆங்க என்ற உரையசைச் சொல்லும் நிலைமொழியாய் வருமிடத்து, வருமொழிமுதலில் கசதப வரின் முற்சூத்திரத்திற் கூறப்பட்ட வல்லெழுத்து மிகுதி வரும்.

உ - ம்.

உண + கொண்டான் = உணக்கொண்டான் ; புலிபோல + கொன்றான் = புலிபோலக் கொன்றான்; கொள்ளென + கொண்டான் = கொள்ளெனக் கொண்டான்; அ + கொற்றன் = அக்கொற்றன்*;

ஆங்க + கொண்டான் = ஆங்கக்கொண்டான்.

சுட்டை இடைச்சொல்லாக நச்சினார்க்கினியர் கூறுதல் பொருந்தாது. அவற்றைச் சுட்டுப்பெயரின் தாது† வாக மொழிநூல் வல்லோர்கொண்டனர்.

முற்சூத்திரத்திலிருந்து அகரவிறுதி. முன்னர், கசதபத் தோன்றின் என்பன அதிகரித்தன.

* அக்கொற்றன் என்பது தொகைச்சொல்; அதற்கு விரி "அவனும் அவனே கொற்றனும் அவனே" என்பது இளம்பூரணர்கொள்கை யென்பது "ரகானும் அதுவே ஒற்றும் அதுவே; பகாரமும் அதுவே இறுதியும் அதுவே" (தொல். 7. இளம்) என்ற அவரது தொடரால் விளங்கும்.

†Demonstrative root (M. V. G. pp. 107, 108.)

197

பா-ம் நச். ம. பதி "உரையசை யென்பதனானுணர்க"

நச். தா. சை. பதி. "என்றதனாலும் ஆங்கவுரையசை என்னும் இடையியற் சூத்திரத்தானுமுணர்க"

**206.** சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்
ஒட்டிய வொற்றிடை மிகுதல் வேண்டும்.

போ - ள். அகரச்சுட்டு நிலைமொழியாயிருக்க வருமொழிமுதலில் ஞ், ந், ம் இவை தோன்றின், அவற்றையொட்டிய ஒற்று இடையில் மிகுதல் வேண்டும்.

உ - ம். அ + ஞாலம் = அஞ்ஞாலம்; அந்நான்கு (பெயரி. 22); அம்முறை (விளி 36).

சுட்டின் என்றாரேனும் அதிகாரத்தான் அகரச்சுட்டைக் கொள்ளல் வேண்டும். "ஒட்டியவென்றதனான் அஞ்ஞெளிந்தது, அந்நன்று, அம்மாண்டது என அகரந் தன்னையுணர நின்ற வழியும் மிகுதல் கொள்க" என்றனர் நச்சினார்க்கினியர். "அ நன்று" என்றவிடத்து அ எழுவாயாகவும், நன்று பயனிலையாகவும் இருத்தலின் அவை விட்டிசைத்தலே சிறக்கும்.

**207.** யவமுன் வரினே வகர மொற்றும்.

போ - ள். அகரச்சுட்டு நிலைமொழியாயிருக்க வருமொழி முன்னர் ய், வ், இவை

வரின், இடையில் வகரவொற்று வரும்.

உ.-ம், அ+யாழ்* = அவ்யாழ்.; அ + வழி = அவ்வழி (களவு. 11) அ+வயின் = அவ்வயின் (கற்பு. 9)

**208.** உயிர்முன் வரினு மாயிய றிரியாது.

**பொ-ள்.** அகரச்சுட்டின் பின்னர் உயிர் வந்தாலும், அத் தன்மை திரியாது.

* அந்த யாழ் என்ற சொற்களைத் தொகையாக்கும்போது அவை அ+யாழ் என ஆகும். அதற்கு விதி ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும் (எழுத். 482) என்றது ஆகும்.



உ-ம். அ+அடை = அவ் + அடை = அவ்வடை (எழுத். 161); இவ்விடத்து (செய்யு. 207); அ+ஆடை = அவ்வாடை.

ஈண்டுச் அகரவிறுதி, சுட்டின் முன்னர்

என்றன அதிகரித்தன.

" நெறியியல் (எழுத். 169) என்ற இலேசினன் இரட்டுதல் கூறினமையின் அது நிலைமொழித்தொழிலென்பதுவே கூறப்பட்டது " என இளம்பூரணர் கூறினர். இவ்வாறு கொள்ளாது உலகவழக்கையொட்டி அதனைக்கொள்ளல் தகுமென அச்சூத்திர வுரையிற் கூறியது காண்க.

" திரியாது என்றதனனே மேற்சுட்டுநீண்டவழி யகரத்தோடு கொள்க " என்றனர் இளம்பூரணர். இவ்வாறு கொள்ளாது ஆயிரு திணையின் (சொல். 1) ஆயிரண்டு (எழுத். 85) முதலிய ஆசிரியர் வழக்கே அதற்கு ஞாபகமாக் கொள்ளல் கூடும்.

" வருமொழி முற்கூறியவதனன் அகரந் தன்னை யுணர நின்ற வழியும் வகரம் மிகுதல் கொள்க ; அவ்வழகிது என வரும் " என்றனர் நச்சினர்க்கினியர். தன்னை யுணர நிற்கும் அகரம்

*பெய ராகுமேயன்றிச் சுட்டாகாதென்க.*

பா - ம்.

இளம். க. பதி. “ *அகரச்சுட்டின் .. இவ்வியல்பில்...* ”
இளம். சி. பதி. “ *சுட்டின்...அவ்வியல்பில்* ”. நச். ம.
பதி. “ *கூறுதலின்... வசுரக்கேடும்* ”
நச். தா. சை. பதி. “ *கூறினமையின்...வகரக்கேடு.* ”

**209.** நீட வருதல் செய்யுளு ளுரித்தே.

பொ - ள். *அகரச்சுட்டு நீண்டு வருதல் செய்யுளின்கண் உளது.*

உ - ம். *ஆயிரண்டு* (எழுத். 85), *ஆவறுமூன்று* (சொல். 56)

*ஆங்கண்** (கற்பு 31) *ஆவகை* (களவு. 22), *ஆவயின்* (கற்பு. 8)

*“ஆங்கண்” என்னுமிடத்து “கண்” என்பது இடப்பொருளை யுணர்த்தும் பெயர்; “ஆங்கண்கண்” என்பது ஏழாம் வேற்றுமையுருபு தொக்கு ஆங்கண் என வழங்கப்பட்டது.

ஈண்டு அகரம், சுட்டு இவை அதிகரித்தன.

"வருமொழி வரையாது கூறினமையின் இம்முடிபு வன்கண மொழிந்த கணமெல்லாவற்றொடுஞ் சென்றது. உதாரணம் பெற்றவழிக் கண்டு கொள்க" என உரைகாரர்கள் கூறினர். அவ்வாறு கூறியதற்குக் காரணம் இதன் முன்னர் மென்கணம், ய, வ, உயிர் இவை வருமொழி முதலாயிருக்க அகரச்சுட்டின்பின் வரும் மாறுதல்களை ஆசிரியர் கூறியது என்னலாம். சுட்டு நீண்டவிடத்து யகரவகரங்கள் உடம்படுமெய்யாக வருதலும் வருமொழி முதல் இரட்டிக்காமல் இருத்தலும் வருமொழி முதல் வல்லினமாயிருக்க அவற்றிற்கு இனமெல்லினந் தோன்றலும் உதாரணமாகக் கூறப்பட்ட ஆசிரியர் வழக்கினுல் அறியக்கூடும்.

**210.** சாவ வென்னுஞ் செயவெ னெச்சத்
திறுதி வகரங் கெடுதலு முரித்தே.

**பொ - ள்.** சாவ என்ற செயவெனெச்சத்தின் இறுதியி லுள்ள வகரங் கெடுதலு முண்டு.

உ - ம். சாவ + புல்லற்பாற்று =

சாவப்புல்லற்பாற்று,

சாப்புல்லற்பாற்று. (குறள். 829) உம்மை எச்சவும்மையாகலான் 205-ஆம் சூத்திரத்தின்கட் கூறப்பட்ட வல்லெழுத்துமிகுதியுங் கொள்ளப்படும். 205-ஆவது சூத்திரத்திற் கூறப்பட்ட வினையெஞ்சு கிளவிகளுள் ஒரு பகுதிக்கண்ணதாகிய சாவ என்றதைப்பற்றிக் கூறுதலின், இஃது அதற்கொரு சிறப்புச்சூத்திரமாகும்.

" இதனை வினையெஞ்சுகிளவியும் என்றதன்பின் வையாத முறையன்றிய கூற்றினான் இயல்புகணத்தும் அந்நிலைமொழிக்கேடு கொள்க, சாஞான்றார் என வரும்" என்றனர் உரைகாரர்கள். அவ் வழக்கு ஒற்றுமைப்போலியான் பிற்காலத்து வந்ததெனக் கொள்ளலாகும்.

**211.** அன்ன வென்னு முவமக் கிளவியும்
அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்
செய்ம்மன வென்னுந் தொழிலிறு சொல்லும்
ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்
செய்த வென்னும் பெயரெஞ்சு கிளவியும்

செய்யிய வென்னும் வினையெஞ்சு
கிளவியும்

அம்ம வென்னு முரைப்பொருட்
கிளவியும்

பலவற் றிறுதிப் பெயர்க்கொடை
யுளப்பட

அன்றி யனைத்து மியல்பென மொழிப.

போ - ள். *அகரவீற்றுச்சொற்களாகிய அன்ன என்ற உவம*

*வுருபும், அண்மைவிளிச்சொற்களும், செய்ம்மன என்ற வினைமுற்றும், ஏவலோடு பொருந்திய வியங்கோள்வினைமுற்றும், செய்த என்ற பெயரெச்சமும், செய்யிய என்ற வினையெச்சமும், கேள் எனச் சொல்லுதற்கண் வரும் அம்ம என்ற இடைச்சொல்லும்,*

*பலவற்றைக் குறிக்கும் அகரவீற்றுப்பெயரும் உளப்பட அவ்வ*

*னைத்துச்சொற்களும் நிலைமொழியாய் நிற்க, வருமொழிமுதலில்*

*க, ச, த, ப த் தோன்ற, வரும் புணர்ச்சி இயல்பெனக் கூறுவர்(புலவர்).*

அகரவிறுதி, க ச த பத்தோன்றின் என்பன அதிகரித்தன.

உ-ம். பொன்னன்ன குதிரை ... ; ஊரகொள் .... ; உண் மன குதிரை .... ; செல்க குதிரை .... ; உண்ட குதிரை ... ; உண் ணிய கொண்டான் ... ; அம்ம கொற்ற ... ; பல குதிரை ... ;

பலவற்றிறுதிப்பெயர் என்றதற்குப் பன்மைப்பொருளை உணர்த்தும் அகரவீற்றுப்பெயர்களுள் ஐந்து எனப் பொருள் கூறினர் நச்சினார்க்கினியர். அவ்வாறு அவர் கூறியதற்குக் காரணம் "பல்ல பல சில உள்ள இல்ல" என்றவற்றைச் சொல்லதிகாரத்து 168ஆவது சூத்திரத்தில் ஆசிரியர் படித்திருத்தலே யாகும்.

இளம்பூரணர்

அதற்குப் பலவென்னும் பெயர்ச்சொல் எனப்பொருள் கூறினர்.

தன்னினமுடித்தலான் சில முதலியவற்றை அவர் கொண்டனர்.

225-ஆவது சூத்திரத்திலுள்ள பலவற்றிறுதி என்றதற்கு அஃறி

ணைப்பன்மைப்பொருளை உணர்த்தும் ஆகாரவீற்றுமுற்றுவினைச்

சொல்" எனப் பொருள் கூறிய இருவரும் ஈண்டும் அகரவீற்றுப்

பண்புப்பெயர் எனக் கூறுவதே பொருந்தும்.

"எல்லாரு மென்னும் படர்க்கை யிறுதியும்" (எழுத். 192)

என்பது போல "பலவென்னு மிறுதி" எனப் பாடமிருப்பின் அவர் கூறும்பொருள் பொருந்தும்.

ΔU1

ஏவல் கண்ணிய வியங்கோளுக்கு "யானும் நின்னோடுடன் வருக"

முதலியவற்றை உதாரணமாகவும், ஏவல் கண்ணாத வியங்கோளுக்கு

"நீ செல்க, அது செல்க" முதலியவற்றை உதாரணமாகவும் நச்

சிக்கினார்க்கினியர் கூறி, இளம்பூரணர் கூறிய "மன்னிய பெரும நீ" *

என்றதை ஏவல் கண்ணாத வியங்கோளுக்கு உதாரணமாகக் கொள்ளு

தல் பொருந்தா தெனவும் அதற்குக் காரணம், "கூறுகின்றான் அவன்

நிலைபெற்றிருத்தல் வேண்டுமென்றே கருதிக் கூறுதலின்" என்றுங்

கூறினர்.

அவற்றுள்
முன்னிலை தன்மை யாயீ ரிடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி
(சொல். 226)

என்ற சூத்திரத்தான் வியங்கோள் தன்மைமுன்னிலைகளில்

வாராமையானும் மன்னிய என்றதனால் பிறன் ஒருவன் செய்ய

வேண்டிய செய்கையை விரும்பாமையானும் அவர் தங்கூற்று

ஆராய்தற்பாலது. "செய்ம்மன வென்னுந் தொழிலிறுசொல்" என்றதற்கு "செய்ம்மன வென்று சொல்லப்படுந் தொழிற் சொற் பொருள் தருங்கால் உம் ஈற்றுன் இறுஞ்சொல்" என நச்சினார்க் கினியர் பொருள் கூறுதல் பொருந்தாததாகும். அதற்குச் "செய்ம் மனவென்னும் வினையாகிய அகரவீற்றுச்சொல் என்பதே நேர் பொருளாகும்.

"அண்மை சுட்டிய விளிநிலைக்கிளவி" அகரவீற்றுச்சொல்லா யின் அஃது "அண்மைச் சொல்லிற் ககர மாகும்" (சொல். 130) என்ற சூத்திரத்தாற் பெறப்படுமாகலானும், அச்சூத்திரம் உயர் திணையதிகாரத்து. ளிருப்பதாலும் அத்தொடர்க்கு அணியாரைக் கருதிய விளியாகிய நிலைமையையுடைய உயர்திணைப் பெயர்ச்சொல்"

என உரைகாரர்கள் பொருள் கூறினர். கிளந்த
விறுதி யஃறிணை
விரவுப் பெயர்-விளம்பிய நெறிய விளிக்குங் காலை
(சொல். 150) என்ற
சூத்திரத்தான் அஃறிணைவிரவுப்பெயரும்
அவ்வாறு வருதல்
கூடுமாகலான் அவர்தங்கூற்று
ஆராய்தற்பாலது. உரைப்
பொருள் என்றதற்கு உரையசைப்பொருள் என
இளம்பூரணரும்

* "மன்னிய பெரும நீ" முதலியன
பிற்காலத்து வழக்கெனக் கொள்
ளல் தகும்.
26



எதிர்முகமாக்கிய ... இடைச்சொல்லும் என நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர். அம்ம என்ற சொல்லைப்பற்றி இடையியலில் அம்மகேட்பிக்கும் (சொல். 276) என்ற ஒரு சூத்திரமே இருக்கின்றமையின், நச்சினார்க்கினியர் கூறும் பொருளே நேரிதாகும்.

"அன்னவென்னும் ..." என்ற முதலடி 205ஆவது சூத்திரத்திற் பொதுவாக உள்ள உவமக்கிளவியும் என்றதற்குப் புறனடை; "அண்மை சுட்டிய..." என்ற இரண்டாமடி 204ஆவது சூத்திரத்திற் பொதுவாக உள்ள பெயர் என்றதற்குப் புறனடை; "செய்ம்மன ...", "ஏவல்...." "செய்த...", "அம்ம..." என்ற நான்கடிகளும் எய்தாததை எய்துவித்தன; "செய்பிய" என்ற அடி 205ஆவது சூத்திரத்திற் பொதுவாக உள்ள வினையெஞ்சுகிளவியும் என்றதற்குப் புறனடை. "பலவற்றிறுதி ." என்ற அடியும் 204ஆவது சூத்திரத்திற் பொதுவாக உள்ள பெயர் என்றதற்குப் புறனடை.

"விளிநிலைக்கிளவியாகிய பெயரை முன் வைத்ததனால் செய்தவென்பதன் மறையன்றிச் செய்யுமென்பதற்கு மறையாகிய செய்யாத என்பதும் அவ்வியல்பு முடிபு உடைத்தெனக் கொள்க" என இளம்பூரணரும், "விளிநிலைக் கிளவியாகிய பெயர் முற் கூறுததனானே செய்யுமென்பதன் மறையாகிய செய்யாத வென்பதற்கும் இவ்வியல்பு முடிபு கொள்க" என நச்சினார்க்கினியரும் கூறினர். உவமக்கிளவிக்கு முன் பெயரை 204 205 சூத்திரங்களிற் கூறினமையான், ஈண்டும் முதலிரண் டடிகளை மாற்றி ஆசிரியர் கூறவேண்டியதே முறையாகுமாதலான், நச்சினார்க்கினியர்கூற்றே பொருந்தும். இளம்பூரணத்தில் "முன் வைத்ததனால்" என்ற

பாடம் ஏடெழுதுவோரின் பிழையால்வந் திருத்தல் கூடும். இனி ஆசிரியர் கூறிய " செய்த " என்ற பெய

ரெச்சம் அகரவீற்றுப்பெயரெச்சங்களுக்கெல்லாம் உபலக்கணம் எனக் கொள்ளின் சாலும். விதியை உணர்த்தும் பெயரெச்சம்

மறையை உணர்த்தும் பெயரெச்சத்திற்கு உபலக்கண மாகுமா

வெனின்,

பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா

(சொல். 236)

என ஆசிரியர் கூறியிருக்கின்றமையின், அவ்வா றாகலா மெனத் தோன்றுகிறது

## 203

ஏவல் கண்ணுத வியங்கோளின்கண் ணும்
இயல்புபுணர்ச்சியை இளம்பூரணர்

உரையிற்கோடலாற் கொள்ளுகின்றார். அது பிற் காலத்துவழக்காயில்லாதாயின் ஆசிரியர் " ஏவல் கண்ணிய" என்ற அடைமொழியைக் கூறுர்.

முற்றுவினையும் வினைக்குறிப்பும்
அவ்வியல்பின என்றதை

" பலவற்றிறுதி..." என்பதனை அம்ம என்பதற்கு முன் வையாத
தனல்" என இளம்பூரணரும், எல்லாவற்றினுஞ் சிறந்த பலவற்
றிறுதியை இறுதிபிற் கூறினதால் என நச்சினார்க்கினியருங் கொண்
டனர். செய்ம்மன என்பது வினைமுற்றிற்கும், வினைச்குறிப்பிற்கும்
உபலக்கண மெனக் கொள்ளலாம்.

பா-ம்
நச். ம. பதி. "அணியாரைக் கருதின முன்னின்றாரை எதிர்முக
மாக்கிக் கூறும் விளியாகிய நிலைமையினையுடைய...அக்காலம் வழங்
குதலின் ஆசிரியர் மனவேன்பதனையும் .."

நச். தா. சை. பதி. "அணியாரைக் கருதின விளியாகிய நிலைமையினையுடைய ... அக்காலம் வழங்கியதாதலின் ஆசிரியர் அதனையும்..."

**212.** வாழிய வென்னுஞ் சேயென் கிளவி
இறுதி யகரங் கெடுதலு முரித்தே.

போ - ள். வாழிய என்ற சேய்மையிலுள்ள வாழுங்காலத்தை உணர்த்துஞ் சொல் நிலைமொழியாயிருக்க, இறுதியிலுள்ள யகரங் கெடுதலுமுண்டு. உம்மையான் கெடாமையே பெரும்பான்மையாம்.

உ-ம். வாழி கொற்றா.

வாழிய என்றதை ஏவல் கண்ணாத வியங்கோள் என்றார் இளம்பூரணர். அதனை ஏவல் கண்ணிய வியங்கோள் எனக் கூறி அதற்குக் காரணம் "அல்லாக்கால் வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே என்பதற்கும் வாழ்த்தியலாகச் சான்றோர் கூறிய செய்யுட்களுக்கும் பயனின்றாம்" என்று கூறினர் நச்சினார்க்கினியர். நச்சினார்க்கினியர் கூற்றப் பொருந்து மெனத் தோன்றவில்லை.

"வாழிய யான் நீ அவன் அவள் அவர் அது அவை என இது மூன்றிடத்துஞ் சேறலின்" என நச்சினார்க்கினியருரையில் உளது. வியங்கோள் தன்மைமுன்னிலைகளில் வாராது என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியிருத்தலானும், நன்னூலார் மூன்றிடத்தும் வருமெனக் கூறியிருத்தலானும், நச்சினார்க்கினியர் நன்னூலார்சாலத்திற்குப் பிற்பட்டவர் என்பதற்கு இஃது ஒரு சான்றாகும்.

பா - ம்.

சூத்திரத்தில் இளம்பூரணப்பதிப்புக்களிலும் மகாலிங்கையர் நச்சினார்க்கியப்பதிப்பிலும் "சேயென் கிளவி" என்றுளது. அதற்கு மகாலிங்கையர் பதிப்பில் "அதுதான் வாழுங்கால நெடுங்காலமென்னும் பொருளைத் தருஞ்சொல்" என அதற்குப் பொருள் கூறப்பட்டுளது. அவ்வாறிருக்க தாமோதரம்பிள்ளை பதிப்பு, சைவசித்தாந்தக்கழகப்பதிப்பு இவ்விரண்டிலும் "செயவென் கிளவி" எனச் சூத்திரத்திலும், "வாழுங்காலம் நெடுங்காலமாகுக என்னும் பொருளைத்தரும் வாழியவென்று சொல்லப்படுஞ் செயவெனெச்சக்கிளவி" என உரையிலும் உள. செயவென்கிளவி என்ற பாடமிருப்பின் "வாழுங்காலம் நெடுங்காலமாகுக என்னும் பொருளைத் தரும்" என உரையிற் கூறுதற்கு இடனில்லை. ஆகலின் சேயென் கிளவி என்ற பாடமே பொருந்தும்.

**213.** உரைப்பொருட் கிளவி நீட்டமும்

வரையார்,

பொ - ள். அம்ம என்றதன் அகரவிறுதியின் நீட்டத்தையும்
நீக்கார் (புலவர்).

உ - ம். அம்மா கொற்றா.

அகரவிறுதி என்றது அதிகரித்தது.

" ஒன்றெனமுடித்தல் என்பதனான் அந்நீட்சி இயல்புகணத்துங்கொள்க" என்றனர் இளம்பூரணர். " வரையாது கூறினமையின் நீட்சி இயல்புகணத்துங் கொள்க" என்றனர் நச்சினார்க்கினியர்.

**214.** பலவற் றிறுதி நீடுமொழி யுளவே
செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான.

பொ - ள். பலவற்றைக் குறிக்கும் அகரவிறுதிச்சொற்களுள்
அகரம் நீளுகின்ற மொழிகளும் செய்யுட்கண் பொருந்திய தொடர்
மொழிக்கண் உள.

உ-ம். "பலசில" என்ற தொடர்மொழி நீண்டதைப் "பலாஅஞ்சிலாஅ மென்மனார் புலவர்" என்றவிடத்துக் காணலாம்.

வருஞ்சூத்திரத்தில் தொடரலிறுதி தம்முற்றும் வரின் எனக் கூறப்பட்டமையான், பலசில என்றதை இரண்டு ஈரெழுத்து மொழிகளாகக் கொள்ளாது தொடர்மொழியாகக் கொள்ளல் வேண்டும்; ஆகலான் பலவற்றிறுதி என்றதற்குப் பலவென்னுஞ் சொல்லீனிறுதி என இளம்பூரணர் கூறும் பொருள் பொருத்தமின்று.

"உண்டு என்னாது உள என்றதனால் சிலவென்னும் வருமொழியிறுதி நீடலுங் கொள்க" என இளம்பூரணரும், "உடைத்து என்னாது உள வென்ற பன்மையான் வருமொழிக்கட் சில என்பது வந்து நீடுமென்று கொள்க" என நச்சினார்க்கினியருங் கூறினர். இவ்வாறு கூறியது "உள" என்பது பன்மையாகலான் என்க. 'பலசில" என்றதை ஒரே தொடர்மொழியாகக் கொள்ளுதல் நேரிதாகலான், சில என்றதை வருமொழியாகக் கூறுதல் நேரிதன்றென்க. பலாஅஞ்சிலாஅம் என்று இரண்டிடத்தும் வரும். "அம்" சாரியையைக் கிளந்தவல்ல செய்யுளுட் டிரிநவும் (எழுத். 483) என்ற புறனடைச்சூத்திரத்தாற் கொள்ளலாம். இவ்வாறு கூறாது, செய்யுளான என்னாது செய்யுட்கண்ணிய தொடர்மொழியான என்றதனாற் பல என்னும் மொழியீறு நீண்டவழி நிலைமொழி அகரப்பேறும் வருமொழி ஞகாரமெல்லெழுத்துப் பேறும் வருமொழியீறு நீண்டவழி அகரப்பேறும் மகரமாகிய மெல்லெழுத்துப்பேறுங் கொள்க என உரைகாரர்கள் கூறினர்.

“ செய்யுள்கண்ணிய மொழி யென்றது தொடர்மொழி என்ற தனான் இப்பலவென்பது நீளும்வழி வருமொழியாவது சிலவென் பதே என்று கொள்ளப்படும் ” என இளம்பூரணர் கூறுதல் பொருத்தமின்று ; ஏனெனில் “ செய்யுள்கண்ணிய மொழி ” எனக் கூறின் “ பலசில ” என்ற தொடர்மொழியைக் கொள்ளவேண்டிய நியதியில்லை.

அகரம் அதிகரித்தது.

பா - ம். நச். ம. பதி. “பலவற்றிறுதிக்குச் செய்யுண்முடிபு... வருமொழி ஞகர மெல்லெழுத்துப்பேறும் ... மகரமெல்லெழுத்துப் பேறும் ...”

## 206

நச். தா. சை. பதி. “ பலவற்றிறுதிக்குச் செய்யுண்முடிபு ... வருமொழி ஞகரமாகிய மெல்லெழுத்துப்பேறும் மகரமாகிய மெல் லெழுத்துப்பேறும்...”

**215.** தொடர லிறுதி தம்முற் றும்வரின்
லகரம் றகரவொற் றாதலு முரித்தே.

**பொ - ள்** தொடர்மொழியல்லாதனவும்

பலவற்றைக் குறிப்

பனவுமான அசரவிறுதிச்சொற்கள் தம்முன் தாம் வரின், லகரம் றகரவொற்றாகலும் உரித்து. உம்மையான் அவ்வாறாகாமையே

பெரும்பான்மையா.

உ - ம்.

பல + பல = பற்பல; சில + சில = சிற்சில.

சூத்திரத்துள்ள லகரம் என்றதற்கு லகரவொற்று எனப்

பொருள் கொண்டு, "லகரம் றகரமாம் என்னாது லகரம் றகர வொற்றாகும் என்ற ஞாபகத்தான் அகரம் கெடுமென்றுணைக் கொள்க" என உரைகாரர்கள் கூறினர். வகரம் (எழுத். 210) யகரம் (எழுத். 212) என்ற சொற்கள் வகரவொற்று, யகரவொற்று

எனப் பொருள்படாது ய, வ எனப்

பொருள்படுகின்றமையான்,

ஈண்டும் ஆசிரியர் லகரம் என்றதனால்
லகரவொற்றைக் குறிக்காது
ல என்றதையே குறித்தனர் எனக் கொள்ளின்
சாலும். ஆகலின்
" றகரவொற்று " என்றவிடத்து " ஒற்று "
என்றது மிகை யென் றும், அது ' அகரம் கெடும் '
என்றதை ஞாபிக்கின்றது என்றும்
உரைகாரர்கள் கூறுவது பொருந்தாக் கூற்றாகும்.

" அருத்தாபத்தி முகத்தால்
தம்முற்றும்வரின் லகரம் றகர
வொற்றாமெனவே தம்முன் பிற வந்தவிடத்து
லகரம் றகரவொற்று
காது அகரங் கெடுமென்பது கொள்ளப்படும் "
என உரைகாரர்கள்
கூறினர். இது அருத்தாபத்தியாகுமா? ஆகாது ;
ஆதலால் இதனை
பல்வேறு கவர்பொருள் (கள. 23), பன்னகை
(கள. 23) பஃறாறு
(கள. 32) பல்லாற்றானும் (கற்பு. 27)
பல்குறிப்பினவே (உவம. 11)

சில்வகை (மரபு. 100) முதலிய ஆசிரியர் வழக்காற் கொள்ளலாம்.

பலவற்று என்பது அதிகரித்தது.



**216.** வல்லெழுத் தியற்கை யுறழத் தோன்றும்.

பொ - ள். பலவற்றைக் குறிக்குஞ் சொற்கள் தம்முன் தாம் வரின் வருமொழி வல்லெழுத்தின் முன்னருள்ள இயற்கை உறழும். உ - ம். பல+பல=பலப்பல, பல்பல

இச்சூத்திரம் பலவற்றிறுதிப் பெயர்க்கோடை (எழுத். 219) என்றதற்குச் சிறப்புவிதி யாகும்.

"இயற்கை என்றதனுன் முன்கூறிய பற்பல, சிற்சில என்னும் முடிபொடு பல்பல, சில்சில என்னும் முடிபுபெற்று உறழ்ச்சியாதல் கொள்க. தோன்றும் என்றதனுன் அகரங்கெட லகரம் ஆய்தமும் மெல்லெழுத்துமாய்த் திரிந்து முடிதல் கொள்க. பஃறுணை, பன்மரம், சிஃறுழிசை, சின்னூல் எனவரும்" என உரைகாரர்கள் கூறினர்.

அகரங் கெட்டவிடத்து லகரவொற்று "தகரம் வரும்வழி ஆய்த நிலையலும்" (எழுத். 370) "மெல்லெழுத் தியையி னகார மாகும்" (எழுத். 368.) என்ற சூத்திரங்களால் முறையே ஆய்தமாகவும் னகாரமாகவும் மாறுமாதலின் அகரக்கேட்டினை மாத்திரம் உரைகாரர்கள் கூறியிருப்பின் நலம்.

**217.** வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

பொ - ள். அகரவிறுதிப்பெயர் நிலைமொழியாயிருக்க, பின்னர் க, ச, த, ப த் தோன்றின், வேற்றுமைப்புணர்ச்சிக்கண் அஃது அல்வழிப்புணர்ச்சியோடு ஒரு தன்மைத்தாயிருக்கும். அஃதாவது தத்தம் ஒற்று இடைமிக்கு முடியும்.

உ - ம். இ'விளக்கொற்றன் ...

அகரவிறுதிப்பெயர், நிலை முன்னர், க ச த பத் தோன்றின் என்பன 204-வது சூத்திரத்தினின்று அதிகரித்தன.

**218.** மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து

மிகுமே.

பொ - ள் வேற்றுமைப்புணர்ச்சிக்கண் அகரவிறுதிமரப்பெயர்க் கிளவியின் பின்னர் க ச த ப த் தோன்றின், இடையில் அவற்றிற்கு இனமான மெல்லெழுத்து மிகும்.

உ - ம். விள + கோடு = விளங்கோடு (எழுத். 144) ...

வேற்றுமைக்கண், அகரவிறுதி, கசதபத் தோன்றின், என்பன அதிகரித்தன.

**219.**

மகப்பெயர்க் கிளவிக் கின்னே சாரியை.

போ - ள். வேற்றுமைப்புணர்ச்சிக்கண் மக என்ற அகரவீற்றுப் பெயர்க்குப் பின்னர் க, ச, த, ப வரின், இடையில் இன்சாரியை வரும்.

உ - ம். மகவின்கை.

" மகவின்கை " என்றது " மகவிற்கை" என ஆகாதாவெனின்,

ணஃகான் றஃகாக ஞன்க ஞருபிற்கு (எழுத். 124)
என்றமையான்,

ஆகாதென்க.

வருஞ் சூத்திரத்திலுள்ள " அவண்

என்றதனுல் மகவின்கை

என மேல் இன்சாரியை பெற்றவழி
இயைபுவல்லெழுத்து

வீழ்வை "க் கொண்டனர் உரைகாரர்கள். க ச த
பக்கள் ஈரொற்

றுக ய ர ழ இவற்றின் பின்னரே வருமென்பது

" யரழ வென்னு மூன்றுமுன் னொற்றக்
க ச த ப ங ஞ ந ம வீரொற் றதும் " (எழுத். 48)

என்ற சூத்திரத்தில் ஆசிரியர் உணர்த்தினமையின்
இன்சாரியை வரும்போது இயைபு வல்லெழுத்து
வாராதென்பது பெறப்படுமாக
வான் உரைகாரர்கள் ‥ ற்றுப் பொருததமின்று.
" சாரியைப்பேறு
வரையாது கூறியவழி நான்கு கணத்துக்கண்ணுஞ்

செல்லுமென் பதாகலின் மகவின் ஞாண் என இயல்புகணத்துச்கண்ணுங் கொள்க” என்றனர் உரைகாரர்கள்.

**220.** அத்தவண் வரினும் வரைநிலை யின்றே.

**பொ - ள்.**

அங்கு அத்துச்சாரியை வரினும் நீக்கப்படாது.

உ - ம். மக+கை=மக+அத்து+கை = மக + த்து + கை (எழுத். 126)=மகத்துக்கை (எழுத். 134)

**209**

“அவண் என்றதனல் மகப்பால்யாடு என வல்லெழுத்துப் பேறும், நிலை என்றதனல் மகம்பால்யாடு என மெல்லெழுத்துப் பேறுங் கொள்க” என்றனர் உரைகாரர்கள்.

அவற்றைக் “கிளந்த வல்ல. ..” (எழுத். 483) என்ற புறனடைச்சூத்திரத்தாற் கொள்ளின் நலம்.

பா-ம். நச். ம. பதிப்பில் மகவின்கை எனமேல் இன்சாரியை இயைபுவல்லெழுத்துவீழ்வுங் கொள்க " என்ற தொடர் இல்லை.

**221.** பலவற் றிறுதி யுருபிய னிலையும்.

போ-ள். பலவற்றைக் குறிக்கும் அகரவிறுதிச்சொல் பின்னர்க் க ச த பத் தோன்றின் உருபுபுணர்ச்சியின் தன்மையில் நிற்கும்.

உ-ம். பல + கோடு = பலவற்றுக்கோடு ; சிலவற்றுக்கோடு ;

பலவற்றிறுதி என்றதற்கு முன்போலவே பலவென்னு மகர வீற்றுச்சொல் என இளம்பூரணரும், பல்ல பல சில உள்ள இல்ல என்னும் பலவற்றை யுணர்த்தும்

அகரவீற்றுச்சொற்களினிறுதி என

நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர். பலவற்றைக் குறிக்கும் அகர வீற்றுச் சொற்களெல்லாவற்றையுங் கொள்ளல் நலம்.

அகரம், கசதபத்தோன்றின் என்பன

அதிகரித்தன.

பல என்ற சொல்லின் பின்னர்

வேற்றுமையுருபு வரின் நேரும்

மாறுதல்களை

பல்லவை நுதலிய ... (எழுத். (174)

என்ற சூத்திரத்தின்கண்ணும், அச்சொற்கள்

வேறு சொற்களோடு

தொகையாகும்போது வேற்றுமையுருபு தொக ஆங்கு நேரும் மாறுதல்களை இச்சூத்திரத்தின்கண்ணும் ஆசிரியர் கூறினர். கிளந்தவற்றியலான் (சொல். 296) முதலிய ஆசிரியர்வழக்கால், வருமொழிமுதல் உயிராயிருக்கும்போதும் வற்று என்ற சாரியை வருமெனக் கொள்க.

நிலைமொழியீறு அகரமாயிருக்க நேரும் மாறுதல்களைக் கூறி, அதன்பின்னர் அஃது ஆகாரமாயிருக்கும்போது அல்வழிப்புணர்ச்சி

யில் நேரும் மாறுதல்களை நான்கு சூத்திரங்களிலும் வேற்றுமைப் புணர்ச்சியில் நேரும் மாறுதல்களைப் பத்துச்சூத்திரங்களிலுங் கூறினர் ஆசிரியர்.

**222.** ஆகார விறுதி யகர வியற்றே.

பொ-ள். ஆகாரவிறுதிப்பெயரின் பின்னர் க ச த பத் தோன்றின் அல்வழிப்புணர்ச்சியில் அஃது அகரவிறுதிப் பெயரின் தன்மைத்தாகும். அஃதாவது ஒத்த ஒற்று இடையில் மிகும்

உ-ம். தாரா + கடிது = தாராக்கடிது...

பெயர்நிலை முன்னர் வேற்றுமையல்வழிக் க ச த ப த்தோன்றின்

என்பது அதிகரித்தது.

**223.**

செய்யா வென்னும் வினையெஞ்சு கிளவியும்
அவ்விய றிரியா தென்மனார் புலவர்.

பொ - ள். செய்யா என்ற வினையெச்சமும் ஆகாரவீற்றுப் பெயர்ச்சொல்லின் தன்மையில் திரியாது எனக் கூறுவர் புலவர்.

உ - ம்.

உண்ணா + கொண்டான் = உண்ணாக்கொண்டான்.

செய்யா என்ற வினையெச்சவாய்பாட்டினை.

செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச்
செயற்கென
அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி

(சொல். 228)

என்ற சூத்திரத்தில் ஆசிரியர் கூறாராயினும், ஈண்டுக் கூறி யிருக்கின்றமையான் அவ்வாய்பாடும் ஆசிரியர்காலத்தே வழங்கப் பட்டதெனக் கொள்ளல்வேண்டும். ஆகலினன்றே அச்சூத்திர வுரையில் "அஃது உண்ணா என ஆகாரமாயும் வரும்" எனச் சேனாவரையர் கூறினர்.

" செய்யாத " என்ற பெயரெச்சம் தகரங்குன்றிச் " செய்யா " ஆக, அதுவும் புணர்ச்சியில் அவ்வுருவங்கொண்ட வினையெச்சத்தின் செய்கை பெற, அதனை இளம்பூரணர் " திரியாது என்றதனால்

## 211

செய்யா என்னும் பெயரெச்சமும் அவ்வாறு முடியுமெனக் "கொள்க, உண்ணுக் கொற்றன் " எனவும், நச்சினார்க்கினியர் " உம்மையாற் பெயரெச்சமறையாகிய சொல்லும் " எனவுங் கூறினர். உம்மை எச்சவும்மையாகலான், அஃது ஆகாரவிறுதியைக் குறித்தல் நேரிதே யன்றி, இச்சூத்திரத்தின் முன்னரோ பின்னரோ காணப்படாத பெயரெச்சத்தைக் குறிக்குமென்றது நேரிதாகாது. அதனை அறி யாப் பொருள் (சொல் 31) வினை வேறுபடாஅப் பலபொருளொரு சொல் (சொல் 52) முதலிய ஆசிரியர் வழக்காற்கொள்ளின் நலம். "அறியாப் பொருள்" போன்றவற்றைத் தொகைமொழியாகக் கொண்டு செய்யுஞ் செய்த (எழுத். 482) என்றதனாற் செய்கை செயினும் பொருந்தும்

**224.** உம்மை யெஞ்சிய விருபெயர்த் தொகைமொழி
மெய்ம்மை யாக வகர மிகுமே.

போ - ள். இருபெயரும்மைத்தொகையின் நிலைமொழியீறு ஆகாரமாயிருக்க, வருமொழி க ச த பக்களிற் றொடங்க, ஆகாரத் தின் பின்னர் உண்மையாக அகரம் மிகும்.

உ - ம்.
உவா + பதினான்கு = உவா அப்பதினான்கு.

"மெய்ம்மையாக என்றதனால் வல்லெழுத்துக் கொடுக்க" என இளம்பூரணரும் நச்சினார்க்கினியருங் கூறினர், வல்லெழுத்து வாராமைக்குக் காரணம் "இஃதும் எழுவாயும் பயனிலையுமின்றி உம்மைத் தொகையாதலின் மாட்டேற்றான் வல்லெழுத்துப் பெறுதாயிற்று" என நச்சினார்க்கினியர் கூறினர். ஈண்டு அல்வழிப்புணர்ச்சிபற்றி ஆசிரியர் கூறுகின்றமையானும், அல்வழிப்புணர்ச்சிசொற்கள் எழுவாய் பயனிலையாயிருக்குமிடத்தேதான் என்ற நியதி இல்லாமையானும் நச்சினார்க்கினியர் கூறுங் காரணம் பொருந்தாதென்க. அன்றியும், இஃது அகரவீறுதலின், மாட்டேற்றான் வல்லெழுத்துப் பெற முடியாதென்பதும் அறிக.

“உவா” என்றது “உவாஅ” என மாறின் அஃது அகர

வீற்றுப்பெயராகலின், “அகரவிறுதிப் பெயர்நிலை முன்னர் ...” (எழுத். 204) என்ற சூத்திரத்தான் வல்லெழுத்து மிகு மெனக் கொள்ளுதல் குற்றமாகாது. “உம்மை தொக்க என்னுது எஞ்சிய



என்ற வாய்பாட்டு வேற்றுமையான் இம்முடிபு இருபெயரொட்டுப் பண்புத்தொகைக்குங் கொள்க. அராஅப்பாம்பு எனவரும்” “இன்னுமதனுன் எழுவாய்முடிபிற்கும் பெயரெச்சத்திற்கும் அகரப் பேறு கொள்க, உவாஅக்கொடிது, உவாஅக்காக்கை * எனவரும்” என இளம்பூரணரும், “உம்மை தொக்க என்னுது எஞ்சிய என்ற வாய்பாட்டு வேற்றுமையான் அராஅப்பாம்பு என பண்புத்தொகைக் கும் இராஅக்கொடிது என எழுவாய் முடிவிற்கும் இராஅக்காக்கை எனப் பெயரெச்சமறைக்கும் அகரப்பேறு கொள்க” என நச்சினார்க் கினியருங் கூறினர். பின்னர்த் “தொகைமொழி” என்றிருக்கின்ற மையின் உம்மை தொக்க என்னுது உம்மை யெஞ்சிய எனக் கூறி னர் எனின் குற்றம் யாது? அராஅப்பாம்பு உவாஅக்காக்கை இவற்றை உயிரும் புள்ளியும்... (எழுத். 482) என்ற சூத்திரத்தாற் கொள்ளல் தகும்.

பா - ம்.

இளம். க. பதி. "இராக் கொடிது, இரா அக்காக்கை."
இளம். சி. பதி "உவா அக்கொடிது, உவா அக்காக்கை"

**225.** ஆவு மாவும் விளிப்பெயர்க் கிளவியும்
யாவென் வினவும் பலவற் றிறுதியும்
ஏவல் குறித்த வுரையசை மியாவும்
தன்றொழி லுரைக்கும் வினவின் கிளவியோடு
அன்றி யனைத்து மியல்பென மொழிப.

பொ - ள். ஆ, மா என்ற சொற்களும், ஆகாரவீற்றுவிளிப் பெயரும், யா என்ற வினுப்பெயரும், பலவற்றைக் குறிக்கும் ஆகார வீற்றுச்சொற்களும், முன்னிலையசைச்சொல்லாகிய மியா என்ற இடைச்சொல்லும், கூறுவோன் றொழிலைக் குறிக்கும் வினுக்களும் ஆகிய அவ்வனைத்தும் அல்வழிக்கண் வருமொழிமுதல் க ச த பக் களாயிருக்க, இயல்புபுணர்ச்சி பெறுமெனக் கூறுவர் (புலவர்).

உயர்திணைப்பெயரே விளியில் ஆகாரத்தை ஈற்றிற் கொள்ளு மாகலின், வினுப்பெயர்க்கிளவி என்றதனுல் உயர்திணைவிளிப்பெயர்க் கிளவி என்பது பெறப்படும்.

* "பார்வைக்குப் பிரியமில்லாத காக்கை" எனப்
பொருளாகலாம். 213

பலவற்றிறுதிப்பெயர் எனக் கூறாது
பலவற்றிறுதி எனக் கூறின
வையான் பன்மையைக் குறிக்கும்
ஆகாரவீற்றுவினைமுற்றுக்களை
யும், வினையாலணையும்பெயரையுங் கொள்ளல் தகும்.

ஏவல்குறித்தவுரையசை என்றதும்
முன்னிலையசைச்சொல்
(சொல். 274) என்றதும் ஒருபொருட்கிளவியாகும்.

உ-ம். ஆகுறிது, மாகுறிது, ஊராகொள்,
யாகுறிய, உண்ணு
குதிரைகள், கேண்மியா கொற்று, உண்கா*கொற்று.

இச்சூத்திரத்துள்ள பலவற்றிறுதி
என்றதற்கு அஃறிணைப்
பன்மைப்பொருளை உணர்த்தும்
ஆகாரவீற்றுமுற்றுவினைச்சொல்லும்

என்ற பொருளைக் கூறிய இளம்பூரணர், 211; 221, ஆவது சூத்தி
ரங்களிலுள்ள பலவற்றிறுதி என்றதனுற் 'பல' என்ற ஒரு சொல்
லையே கொண்டதற்குக் காரணந் தெரியவில்லை. நச்சினார்க்கினியர் பல
வற்றிறுதி என்றதற்குப் பன்மைப்பொருளை உணர்த்தும் ஆகார ஈற்றுப்
பெயரெச்ச மறையாகிய முற்றுவினைச்சொல்" எனப் பொருள்
கூறினர். பன்மைப்பொருளைக் குறிக்கும் பெயரெச்சந் தொடக்
கத்தில் ஆகாரவீற்று வினையாலணையும்பெயராயிருத்தற்கு உரித்தாக
லின் † "பெயரெச்சம்" என்ற சொல்லை அவர் ஈண்டுக் கூறுதிருப்
பின் நலம். " செய்யாவென்னுஞ் சூத்திரத்து உம்மையாற் பெற்ற
வல்லெழுத்தினை விலக்கலின் " என்ற அவர்தங் கூற்றும் பொருத்த
மின்று.

ஆகாரம், வேற்றுமையல்வழி, க ச த

பத்தோன்றின் என்பன
அதிகரித்தன.

**226.** வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

பொ-ள். ஆகாரவிறுதிப்பெயர்

வேற்றுமைவழியும் அகரவிறு திப்பெயரோடு
ஒருதன்மைத்து.

* உண்கா = உண்கேனோ?

† "நில்லா மரங்கள்" என்பன முன்னர் நில்லாதனவான மரங்கள் என்ற பொருளில் இருந்திருத்தல் கூடும். அப்போது "நில்லா" என்பது வினையாலணையும்பெயராகும்.

214

உ-ம். மாக்கடவினன் ... (புறநா. 239)
ஆகாரவிறுதி, பெயர் என்பன அதிகரித்தன.

**227.** குறியதன் முன்னரு மோரெழுத்து மொழிக்கும்
அறியத் தோன்று மகரக் கிளவி.

போ - ள். குற்றெழுத்தின் பின்னருள்ள ஆகாரவீற்றுச்சொற்கும், ஆகாரவீற்றோரெழுத்துமொழிக்கும் பின்னர், க ச த பத் தோன்றின் இடையில் அகரம் விளங்கத் தோன்றும்.

உ-ம். பலா + கோடு = பலா அக்கோடு ; கா அக்குறை.

குற்றெழுத்திற்கும் ஆகாரத்திற்கும் இடையில் மெய் இருப்பினும் அதன் பின்னருள்ள உயிர் என்ற கருத்தினன் "குறியதன் முன்னர்" என்றனர் ஆசிரியர்.

" அறிய என்றதனால் அவ்விருவழியும் அகரம் பொருந்திய வழியே வருதலும், அவ்வீற்றுவேற்றுமையுள் எடுத்தோதாதவற்றின்

முடியும் இவ்வீற்றுள் உருபிற்குச் சென்ற சாரியை பொருட் கண் சென்ற வழி இயைபுவல்லெழுத்துவீழ்வும் இவ்வுயிரீற்றில் வரும் உருபிற்குச் செய்கையுங் கொள்க.

அண்ணஅத்துக்குளம்... யாவற்றுக்கோடு என இவை பிற முடிபு, மூங்காவின்றோல் என்பது இயைபுவல்லெழுத்துவீழ்வு, இடாவினுட் கொண்டான் என்பது உருபீற்றுச் செய்கை" எனக் கூறினர் உரைகாரர்கள்.

**228.** இராவென் கிளவிக் ககர மில்லை.

பொ - ள். (குறியதன் பின்னர் ஆகார விறுதியைக்கொண்ட) இரா என்ற சொற்கு அகரம் இல்லை.

உ - ம். இராக்கொண்டான்

ஆகாரவிறுதி, குறியதன்முன்னர் என்பன அதிகரித்தன.

பா - ம்.

நச். ம. பதி "அகரம் பெறுத லின்று"

## 229. நிலாவென் கிளவி யத்தோடு சிவணும்.

போ - ள். (குறியதன் பின்னர் ஆகாரவிறுதியைக் கொண்ட) நிலா என்ற சொல் அத்துச்சாரியையோடு பொருந்தும்.

உ — ம். நிலாத்துக் கொண்டான்.

ஆகாரவிறுதி, குறியதன்முன்னர் என்பன அதிகரித்தன.

“ நிலா அத்துக்கொண்டான் ” என்றவிடத்து அகரங் கெட்டதற்கு “ நிலைமொழித்தொழிலை ” நிலைமொழித்தொழில் விலக்குமாகலின் அத்து வகுப்ப அகரம் வீழ்ந்தது ” எனக் கன்னியப்பமுதலியார் இளம்பூரணப்பதிப்பிலும், “ நிலைமொழித்தொழில் வருமொழித்தொழிலை விலக்குமாகலின் அத்து வகுப்ப அகரம் வீழ்ந்தது ” எனச் சிதம்பரம்பிள்ளைபதிப்பிலும், “ நிலைமொழித்தொழிலை விலக்குமாதலின் அத்துவகுப்ப அகரம் வீழ்ந்தது ” என நச்சினார்க்கினியப்பதிப்புக்களிலுங் கூறப்பட்டது. “கிளந்த வல்ல...” (எழுத். 483) என்ற புறனடைச்சூத்திரத்தான் அதைக் கொள்ளின் நலம்.

**230.** யாமரக் கிளவியும் பிடாவுந் தளாவும்
ஆமுப் பெயரு மெல்லெழுத்து மிகுமே.

பொருள். யா என்ற மரத்தைக் குறிக்குஞ் சொல்லும், பிடா, தளா என்ற சொற்களுமாகிய அம்முப்பெயருக்கும் வருமொழிமுதலிற் க ச த ப த் தோன்றின், இடையில் மெல்லெழுத்து மிக்கு முடியும.

உ-ம். யா+கோடு=யாஅ+கோடு (எழுத். 227)=யாஅங்கோடு (எழுத். 144, 230); பிடாஅங்கோடு; தளாஅங்கோடு..

இச்சூத்திரம் "வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே" (எழுத். 226) என்ற சூத்திரத்திற்குப் புறனடையாகாமையின், அகரக்கிளவி ஈண்டுந் தோன்றியது.

கசதபத்தோன்றின் என்பது அதிகரித்தது.

யாவென் கிளவியும் என்னது யாமரக் கிளவியும் என்றார் யாவென்ற வினவை விலக்குதற்கு எனக.

216

பா-ம்.

நச். ம. பதி. "வல்லெழுத்து விலக்கி"

நச். தா. சை. பதி. " வருமொழிவல்லெழுத்து

விலக்கி"

**231.** வல்லெழுத்து மிகினு மான மில்லை.

பொ-ள். அம்மூப்பெயர்க்கும் க ச த ப ப் பின்னர் வரின் வல்லெழுத்து மிகினுங் குற்றமில்லை.

உ-ம். யாஅக் கோடு, பிடாஅக் கோடு, தளாஅக்கோடு...

இச்சூத்திரத்தை ஆசிரியர் கூறு திருப்பினும், முற்சூத்திரத் துள்ள "மெல்லெழுத்து மிகுமே" என்றதை "மெல்லெழுத்தும் மிகுமே" எனப் பிரிப்பின் உம்மையால் வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே (எழுத். 226) என்ற சூத்திரத்திற் கூறப்பட்ட வல்லெழுத்துமிகுதி உணர்த்தப்படுமாகலான் இச்சூத்திரத்தை ஏன் ஆசிரியர் கூறினரெனின், அவ்வாறுயின் வல்லெழுத்துமிகுதி பெரும்பான்மையென்றும், மெல்லெழுத்துமிகுதி சிறுபான்மையென்றும் ஆகும்; அஃது ஆசிரியர்க்கு

உடன்பாடின்று.

ஆழுப்பெயரும், கசதபத்தோன்றின் என்பன அதிகரித்தன.

"மானமில்லை என்றதனால் யாமுதலிய மூன்றற்கும் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபுவல்லெழுத்து வீழ்க்க; யாஅவின்கோடு...எனவரும்" என்கின்றனர் உரைகாரர்கள். "யாஅவினது கோடு" என்ற இடத்து "அது" என்ற ஆறனுருபு கெடினும், அதனால் வந்த சாரியை கெடாது நிற்குமெனக் கொள்ளுதல் நேரிதாகலான், சாரியை பெறுதலை ஈண்டும் ஒருமுறை ஆசிரியர் கூறாது விடுத்தனர் என்னலாம்.

ஆகலின் "மானமில்லை" என்றதனால் அதனைப் பெறுதல் வேண்டாம்.

"இன்னு மதனானே யாஅத்துக்கோடு எனச் சிறுபான்மை

அத்துப்பேறுண்டேனுங் கொள்க" என்றனர் உரைகாரர்கள். யாமரத்தின்கண் உள்ளகோடு என அதற்குப் பொருள் கொள்ளின், "யாஅத்துக்கண் கோடு" என்ற விடத்துள்ள கண் தொக்கு

# 217

"யாஅத்துக் கோடு" என ஆயிற்று எனலாம்.

ஆங்கு அத்துச்

சாரியை "அஆ வென்னு மரப்பெயர்க் கிளவிக்கு...." (எழுத். 182) என்ற சூத்திரத்தாற் கொளல் தகும்.

"சுதியதன் முன்னரும் என்பதன் பின் வையாதவிதனல் இராவிற்கொண்டான் நிலாவிற்கொண்டான் என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபுவல்லெழுத்து வீழ்க்க" என்றனர் உரைகாரர்கள்." "இராவின்கண் கொண்டான்" என்றது

"இராவிற்கொண்டான்" என ஆயிருக்கின்றது; ஆங்கு இன் சாரியை "அஆ ..." (எழுத். 174) என்ற சூத்திரத்தாற் வருபாக லான் உரைகாரர்கள் அவ்வாறு

கொள்ளவேண்டுவதின்று.

**232.** மாமரக் கிளவியு மாவு மாவும்

ஆமுப் பெயரு மவற்றோ ரன்ன
அகரம் வல்லெழுத் தவையவ ணிலையா
னகர மொற்று மாவு மாவும்.

பொ-ள். மா என்ற மரத்தைக் குறிக்குஞ் சொல்லும் ஆ, மா என்ற சொற்களுமாகிய அம்முப்பெயரும் யா, பிடா, தளா இவற்றோடு ஒருதன்மைப்பட்டன. அவற்றுள் ஆ, மா இவ்விரண்டன் கண்ணும் அகரமும் வல்லெழுத்தும் நிலையாதிருக்க, னகரவொற்று வரும.

அவற்றோடு ஒருதன்மைப்பட்டன என்றமையான் இம்மூன்றன்பின்னரும் பெரும்பான்மை மெல்லெழுத்துமிகுதியும், சிறுபான்மை வல்லெழுத்துமிகுதியும் வரும். அவை வரும்போது ஓரெழுத்து மொழிக்கும் ...'' (எழுத். 227) என்றதனுன் அகரமும் வரும். அவை மூன்று சொற்கும் வரத்தெரிய, ஆ, மா என்ற சொற்களுக்கு அகரமும் வல்லெழுத்தும் வாரா என்றும் னகரமாகிய மெல்லெழுத்து வருமென்றுங் கூறினமையின், மாமரக்கிளவி ஒன்றே யாமரக்கிளவி முதலிய மூன்றனையு மொக்கும்.

உ-ம். மா அங்கோடு ; மா அக்கோடு...; ஆன்கோடு, மான்கோடு; ஆன்பயம் (புறநா. 386)

அவற்றோரன்ன என்ற மாட்டேற்றுற் பெற்றுநின்றது மெல்லெழுத்தாகலின் அகரம் வல்லெழுத் தவை யவணிலையா என்று ஓதற்பாலதன்றெனின்" என ஐய மெடுப்பகின்றார் இளம்பூரணர்.



இதற்கு முன்னருள்ள சூத்திரம் "வல்லெழுத்து மிகினு மான மில்லை." (எழுத். 231) என்றிருக்கவும், மாட்டேற்றால் பெற்று நின்றது மெல்லெழுத்து எனக் கூறுதல் எவ்வாறு பொருந்தும்? அவ்வையத் தைப்போக்க மேல் " ஊவென் னொருபெய ராவொடு சிவணும்" (எழுத். 270) என்றவழி அம்மாட்டேற்றானே அதன் வல்லெழுத்து வீழ்வுங் கொளல்வேண்டித் திரிந்ததன் திரிபது என்னும் நயத்தானே மெல்லெழுத்தை வல்லெழுத்தாக ஓதினானென்க " என்ற விடையை நோக்கி, நச்சினார்க்கினியர் சூத்திரத்திலுள்ள இறுதி இரண்டடிகளை " ஆவும் மாவும் அகரம் அவண் நிலையா னகரம் ஒற்றும், அவை வல் லெழுத்து அவண் நிலையா " என அநுவபித்தனர். இது சூத்திர முறைக்கு நேரிதன்று என்பது வெளிப்படை.

"அவண் என்றதனால் காயாங்கோடு, ஆணுங்கோடு, நுணுங்கோடு என்றாற்போலப் பிறவும் மெல்லெழுத்துப் பெறுதலும் அங்காக் கொண்டான் இங்காக்கொண்டான் உங்காக்கொண்டான் எங்காக் கொண்டான் என இவ்வீற்று ஏழாம் வேற்றுமை இடத்துப் பொருளுணர நின்ற இடைச்சொற்கள் வல்லெழுத்துப் பெறுதலும், ஆவின்கோடு, மாவின்கோடு எனச் சிறுபான்மை இன்பெறுதலும் பெற்றவழி வல்லெழுத்துவீழ்வுங் கொள்க" என்றனர் உரைகாரர்கள். குறிப்புரையிற் பொருள் கூறிய வழி அவண் என்ற சொல் மிகையின் மையான், காயாங்கோடு, அங்காக்கொண்டான் முதலியவற்றைக் "கிளந்தவல்ல..." (எழுத். 483) என்ற புறனடைச்சூத்திரத்தானும், ஆவின்கோடு மாவின்கோடு என்றவிடத்தில் இன்சாரியையை "அ ஆ..." (எழுத். 174) என்ற சூத்திரத்தானும், அவ்விடத்து வல்லெழுத்துவீழ்வை "யரழவென்னும்..." (எழுத். 48) என்ற சூத்திரத்தானுங் கொள்ளல் தகும்.

நச்சினார்க்கினியத்தில் "எனவே அருத்தாபத்தியான் மாமரத்திற்கு அகரம் நிலைபெற்று ஙஞநம ஒற்றும் பெறுமாயிற்று" என்று உளது. முதலிரண்டடிகளால் மாமரத்திற்கு இவை வருமென்று விதித்தலும் சூத்திரத்தின் இறுதியிரண்டடிகளும் இவற்றைப்பெற்ற ஆ, மா, என்ற சொற்களுக்கு இவற்றை விலக்குதலுங் காண்கின்றதனால் ஈண்டு அருத்தாபத்தியான் என்றது பொருந்தாது.

## 219

"ஆவும் மாவும் அவற்றோரன்ன என்று ஞாபகமாகக் கூறிய வதனால் மாங்கோடென அகரமின்றியும் வரும்" என நச்சினார்க்கினியத்திலுள்ளது. ஆ, மா இவற்றைப்பற்றி மிகையாகக் கூறிய தன் பயன் மாமரத்தைப்பற்றிய "மாங்கோடு" என்றதற்கு எனக் கூறுதல் எவ்வாறு பொருந்தும்? அதனைக் "குறியதன்..." (எழுத். 227) என்ற சூத்திரத்துள்ள அறிய என்ற சொல்லாற் கொண்டனர் இளம்பூரணர்.

**233.** ஆனொற் றகரமொடு நிலையிட னுடைத்தே.

போ - ள். ஆவின் னகரவொற்று மிடனுடைத்து.

அகரமொடும் பொருந்து

உ - ம். ஆனநெய் தெளித்து.

" அகரமொடும் என்ற உம்மையான் அகரமின்றி வருதலே பெரும்பான்மை " எனக் கூறினர் உரைகாரர்கள். அவ்வாறே இடனுடைத்து என்றதனுன் வன்கணம் ஒழிந்த கணத்து இம்முடி பெனக் கொள்க" எனவுங் கூறினர்.

பா-ம்.
இளம். க. பதி. " ஆவென்னுஞ் சொல்லினது "

இளம். சி. பதி. "ஆனென்னுஞ் சொல்லினது." முன்பாடமே சிறக்கும்.

**234.** ஆன்முன் வரூஉ மீகார பகரம்
தான்மிகத் தோன்றிக் குறுகலு முரித்தே.

போ-ள். ஆவின் பின்னர் வரும் ஈகார மேறிய பகரம், தான் மிக்கு, குன்றலு முரித்து. உயிர்மெய் குன்றுமெனின், அதன் உயிரே குன்றுமெனக் கொள்ளல் தகும்.

உ ம். ஆ+பீ=ஆப்பி. (புறநா. 249)

ஆன்முன் என்றதற்கு உரைகாரர்கள் ஆன் என்னுஞ் சொல் முன்னர் எனப் பொருள் கூறினர். 232-ஆவது சூத்திரப்படி "ஆவினது 220 முன்" என்றது "ஆன் முன்" என ஆகுமாதலான் அவர் தங்கூற்றுப் பொருந்தாது. 232-ஆவது சூத்திரத்தில் வருமொழி வல்லெழுத்தாயிருக்க ஆவின் பின்னர் னகரம் வருமெனக் கூறியிருக்கிறதேயன்றி, மெல்லெழுத்தாயிருக்கக் கூறவில்லையே யெனின், உண்மையே; ஆயினும் 233-ஆவது சூத்திரத்து உதாரணமாகிய "ஆனெய் தெளித்து", "ஆன்மேல்" (புறநா. 259) என்ற இலக்கியங்களில மெல்லொற்றின் முன்னரும் னகரம்

வந்தமையான், மெல் லெழுத்தின் முன்னரும் னகரம் வருமென்றதற்கு "ஆன்முன்" என்றதே ஞாபகமாகும் எனக் கொள்ளல் தகும். அன்றியும் ஆன் என்பதே நிலைமொழியாயின், அதனைப் புள்ளிமயங்கியலில் ஆசிரியர் படித்திருப்பர். நச்சினார்க்கினியர் மிக என்றதற்குப் பகரத்தையும், தோன்றி என்றதற்கு னகரத்திற்குக் கேடு என்றதையும், குறுகலும் என்றதற்கு ஈகாரம் என்றதையும் எழுவாயாகக்கொண்டு, இரண்டாமடிக்கு "அப்பகரமாகிய தான் மிக்கு நிற்ப நிலைமொழி னகரத்திற்குக் கேடு தோன்றி ஈகாரம் இகரமாகக் குறுகிநிற்றலு முரித்து" எனப் பொருள் கூறினர். அவ்வாறு கூறுதல் பொருந்தாதென்பது வெளிப்படை.

"மிகத்தோன்றிக் குறுகலும்" என்ற உம்மையான் மிகாதவழி "மாமரக் கிளவியும்..." (எழுத். 232) என்ற சூத்திரத்தான் னகரம் பெற்று, ஆன்பீ என வரும்.

ஆன் என்றதை நிலைமொழியாகக் கொண்டமையான் "தோன்றி என்றதனால் நிலைமொழிப் பேறாகிய னகரவொற்றின் கேடு கொள்க" எனக் கூறினர் இளம்பூரணர். ஆ என்றதை கொள்ளின் இவ்வாறு கொள்ளவேண்டுவதின்று. நிலைமொழியாகக்

**235.** குறியத னிறுதிச் சினைகெட வுகரம்
அறிய வருதல் செய்யுளு ளுரித்தே.

பொ-ள். குற்றெழுத்தின் பின்னர் வரும் ஆகாரவிறுதியின் சினையாகிய அகரங்கெட, உகரம் விளங்க வருதல் செய்யுளின்கண் உரித்து.

உ-ம். இறவுருக்கிய (பொருந. 204)

221

" ஆ " என்பது அகரத்தின் நெட்டெழுத்தாகலின் அதன் சினை கெடுமென்றதனால் ஆகாரம் அகரமாகக் குறுகும் என்றவாறு.

ஆகாரம் அதிகரித்தது.

" அறிய என்றதனுன் உகரம் பெறுது சினை கெடுதலுங்

கொள்க. அரவணிகொடி எனவரும்" என்றனர் இளம்பூரணர்.

பா - ம்.

நச். ம. பதி. " இந்நிலைமொழித்தொழில் "

நச். தா. சை. பதி. " இனி நிலைமொழித்தொழில் "

முன் பாடமே சிறக்கும்.

நிலைமொழியீறு ஆகாரமாயிருக்க நேரும் மாறுதல்களைக் கூறிப்

பின்னர் அஃது இகரமாயிருக்கும்போது வேற்றுமைப்புணர்ச்சியில்

நேரும் மாறுதல்களை 236, 242, 243, 244, 245, 246, 247, 248, 249 சூத்திரங்களிலும், அல்வழிப்புணர்ச்சியில் நிலைமொழி சில

வினையெச்சங்களாகவும்,

சுட்டாகவும், உம்மைத்தொகையின் தொடக்

கத்திலுள்ள சில பெயராகவும் இருக்கும்போது நேரும் மாறுதல்களை

237 முதல் 241 முடிய உள்ள

சூத்திரங்களிலும் உணர்த்தினர்.

அல்வழிப்புணர்ச்சியிற் பொதுவாக வரும் மாறுதல்களை வழக்கம்

போல் ஏன் இகரவிறுதிக்குங் கூறவில்லை ஆசிரியர் எனின், அதனைத்

தொகைமரபில் 159-ஆவது சூத்திரத்தில் உணர்த்தினமையின்

என்னலாம். அவ்வாறாயின் 236-ஆவது சூத்திரத்தை அல்வழிப்

புணர்ச்சியிற் சிறப்புவிதிகளைக்கூறிய பின்னர் ஆசிரியர் கூறவேண்டியது முறை எனின், ஆம், அஃதே முறையாகும்; ஆயினும் வேற்றுமைவழிப் பொதுவிதியின் பின்னர் அல்வழிச்சிறப்பு விதி

களைக் கூறுதலும் முறையாகு மென்றெண்ணி ஆசிரியர் அவ்வாறு

கூறினர்போலும்.

**236.** இகர விறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே.

**போ - ள்.** இகரத்தை ஈற்றிற்கொண்ட பெயரின் பின்னர்

கசதபத்தோன்றின், வேற்றுமைப்புணர்ச்சியில் வல்லெழுத்துமிக்கு முடியும்.

222

உ-ம். கொடுவரிக் கோண்மா. (புறநா. 58)

கசதபத்தோன்றின் என்றது அதிகரித்தது.

"இனிக் கிளிகுறுமை கிளிச்குறுமை எனக் குணம்பற்றிவந்த உறழ்ச்சி முடிபுமேல் வல்லெழுத்து மிகினும் என்னுஞ் சூத்திரத்து ஒல்வழியறிதல் என்பதனாற் கொள்க" என்றனர் நச்சினார்க்கினியர். "கிளந்த வல்ல..." (எழுத். 483) என்ற இறுதிப்புறனடைச் சூத்திரத்தாற் கொள்ளின் நலம்.

பா. ம்.

நச். ம. பதி. "வேற்றுமை முடிபு"
நச். தா. சை. பதி. "ஈண்டு வேற்றுமை முடிபு"

பின்பாடஞ் சிறக்கும்.

**237.**

இனியணி யென்னுங் காலையு மிடனும்
வினையெஞ்சு கிளவியுஞ் சுட்டு மன்ன.

பொ-ள். காலத்தையும் இடத்தையும் முறையே காட்டும் இனி, அணி என்ற இடைச்சொற்களும், வினையெச்சமும், இகரச்சுட்டும் நிலைமொழியாயிருக்கப் பின்னர் கசதபத் தோன்றின் மேற்கூறிய வாறே யாகும். அஃதாவது வல்லெழுத்து மிகும்.

உ-ம். இனிக்கொண்டான்...; அணிக்கொண்டான்; தேடிக் கொண்டான்...; இக்கொற்றன்.

இகரவிறுதி, கசதபத்தோன்றின் என்பன அதிகரித்தன.

இச்சூத்திரம் "வினையெஞ்சு கிளவியும்..." (எழுத். 205) என்ற சூத்திரம்போல் அல்வழிப்புணர்ச்சியைக் கூறினும் நச்சினார்க்கினியர் "இவ்விடைச்சொன் மூன்றும் இப்பொழுது கொண்டான் அணிய இடத்தே கொண்டான் இவ்விடத்துக் கொற்றன் என உருபின் பொருள்பட வந்த வேற்றுமையாதலின் வேறோதி முடித்தார்" எனக் கூறினர். அவர் தங்கூற்று ஆராய்தற்பாலது.

பா-ம். இளம். க. பதி. "இவ்வீற்றுச் சுட்டாகிய"
இளம். சி. பதி. "இவ்வீற்றுச் சுட்டாகிய"
நச். ம. பதி. "இகரவீற்றுச் சுட்டாகிய"
நச். தா. சை. பதி. "இவ் ஈற்றுச்சுட்டாகிய"

**238.** இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி
நின்ற விகர முகர மாதல்
தோன்றியன் மருங்கிற் செய்யுளு
ளுரித்தே.

*பொ-ள்.* இன்றி என்ற வினையெச்சத்தின் இறுதிக்கண் நின்ற இகரம் உகரமாதல் தொன்றுதொட்டு வந்த வழக்கில் செய்யுட்கண் உளது.

உ-ம். இடையின்று குறுகி. (புறநா. 54)

வருமொழியைப்பற்றி இச்சூத்திரத்தில் ஆசிரியர் கூறாமையின், "இன்றி" என்ற சொல்லி னுள்ள இரண்டு இகரம் காதிற்கு இனிமையா யில்லாது, ஒன்று உகரமாய் மாறியதோ எனத் தோன்றுகின்றது. அவ்வாறாயின் "அன்றி" என்றதிலுள்ள இகரம் உகர மாய்த் திரியவேண்டுவதில்லை. ஆசிரியர்காலத்து அன்றி என்பதும் அன்று ஆகத் திரிந்திருப்பின் "

இன்றியன்றி என்னுமிறுதி” எனச் சூத்திரித்திருப்பர். இன்மை ஸம்ஸர்க்காபாவத்தையும், அன்மை அன்னியோன்னியாபாவத்தையுங் குறித்தலின், இன்றி இன்ருக மாறுதலைப்பார்த்து, பிற்காலத்துச்செய்யுளில் அன்றி அன்ருக வழங்கப்பட, அஃதும் இச்சூத்திரத்தாற் குறிக்கப்பட்டதெனக் கொள்வதற்கு “தொன்றியன்மருங்கு என்றதனல் அன்றி என்பதுஞ் செய்யுளுள் இம்முடிபிற்ருதல் கொள்க” என்றனர் உரை காரர்கள் எனத் தோன்றுகின்றது. “முற்றியலிகரந்திரிந்து குற்றியலுகரமாய் நின்றது” எனக் கூறினர் நச்சினர்க்கினியர். ஆசிரியர் குற்றியலுகரமெனக் கூருது உகரம் என்றே கூறினமையான், அவர்காலத்து அது முற்றியலுகரமாக ஒலிக்கப்பட்டதென்றே கொள்ளல் தகும்.

பா - ம்.
இளம். க. பதி.
இளம். சி. பதி.

"செய்யுண் முடிபிற்ருதல் கொள்க"

"செய்யுளுள் இம்முடிபிற்ருதல் கொள்க"

நச். ம. பதி. செய்யுளிடத்தில் முடிபு"

நச். தா. சை. பதி. "செய்யுளில் இம்முடிபு"

**239.** சுட்டி னியற்கை முற்கிளந் தற்றே.

போ - ள். இகரச்சுட்டின் இயற்கை முற்கிளக்கப்பட்ட தன் மையது.



முன் என்றதனுல் சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்..." (எழுத். 206) முதல் "நீட வருதல் செய்யுளு ளுரித்தே" (எழுத். 209) இறுதியாகவுள்ள சூத்திரங்களில் அகரச்சுட்டிற்குக் கூறிய தன்மையைக் கொள்ளல் வேண்டும்.

உ - ம். இஞ்ஞானம்.. ; இவ்யாழ்...; இவ்வாடை...; ஈவயினை

இகரவிறுதி என்றது அதிகரித்தது.

இச்சூத்திரத்தானே வருமொழி முதல் வல்லெழுத்தாக வரு வழி வல்லெழுத்து மிகுதியுங் கொள்ளல் தகும்; ஆதலால் இனி
யணி..." (எழுத். 237) என்ற சூத்திரத்து சுட்டு என்பது வேண்டா எனின், உண்மையே, ஆசிரியர் "வினையெஞ்சு கிளவியும் ..."
(எழுத். 205) என்ற சூத்திரத்தில் "சுட்டி னிறுதியும் எனத் தனி யாகக் கூறினமையான், ஈண்டும் அவ்வாறே கூறினர்.

**240.** பதக்குமுன் வரினே தூணிக் கிளவி
முதற்கிளந் தெடுத்த வேற்றுமை யியற்றே.

**பொ-ள்** "தூணி" என்ற சொல்லின் பின்னர் "பதக்கு" என்ற சொல் வரின், அது முன் கூறப்பட்ட வேற்றுமைப்புணர்ச் சித்தன்மையது.

உ-ம். தூணிப்பதக்கு.

இச்சூத்திரம் "உயிரும்... ஏயென் சாரியை"
(எழுத். 115)
என்ற சூத்திரத்திற்குப் புறனடை யாகும்.

"வருமொழி முற்கூறியவதனால்

இருதூணிப்பதக்கு என
அடையடுத்து வந்த வழியும் இவ்விதி கொள்க ''
என்றனர் உரை
காரர்கள். "நிறுத்த சொல்லும்..." (எழுத். 111)
என்ற சூத்திரத்
தானே அது கொள்ளல் தகும்.

" கிளந்தெடுத்த என்றதனால்

தூணிமுன்னர்ப் பிறபொருட்
பெயர் வந்தவழியும் ஆண்டு நிலைமொழியடுத்துவந்த
வழியும் தன்
மூன்னர்த்தான் வந்தவழியும் இம்முடிபு
கொள்க" என்றனர்
உரைகாரர்கள். இவற்றைக் " கிளந்தவல்ல..."
(எழுத். 483) என்ற
சூத்திரத்தாற் கொள்ளல் தகும்.

225

" இன்னு மதனுனே தன்முன்னர்த் தான்
வந்தவழி இக்குச் சாரியைப்பேறுங் கொள்க"
என்றனர் உரைகாரர்கள். இதனையும்

இறுதிப்புறனடைச்சூத்திரத்தாற் கொள்ளுதல் நலம்.

**241.** உரிவரு காலை நாழிக் கிளவி
இறுதி யிகர மெய்யொடுங் கெடுமே
டகார மொற்று மாவயி னான.

போ - ள். 'நாழி' என்றதின் பின்னர் 'உரி' என்ற சொல் வருமிடத்து ழி கெட, அவ்விடத்து ட் வரும்

உ - ம். நாழி + உரி = நாடுரி.

" இகரம் என்னாது இறுதியிகரம் என்றதனால் ஈண்டை நிலை மொழியும் வருமொழியும் நிலைமொழிகளாய் நின்று பிறபொருட் பெயரொடு வல்லெழுத்து மிக்கு முடிதலுங் கொள்க. நாழிக்காயம், உரிக்காயம் என வரும் " என்றனர் உரைகாரர்கள். இவற்றை "வேற்றுமை யல்வழி..." (எழுத். 159) என்ற சூத்திரத்தாற் கொள்ளல் தகும்.

பா - ம்.
நச். ம. பதி. " ஏகாரம் விலக்குண்டது "

நச். தா. சை. பதி. "யகாரமும் விலக்குண்டது"

## 242.

பனியென வருஉங் கால வேற்றுமைக்கு
அத்து மின்னுஞ் சாரியை யாகும்.

**பொ-ள்.** *காலவேறுபாட்டினைக் குறிக்கும் பனி என்ற சொல்லின் பின்னர் க ச த பத் தோன்றின் இடையில் அத்து, இன் என்ற சாரியைகள் வரும்.*

**உ-ம்.**

*பனி + கொண்டான் = பனியத்துக்கொண்டான், பனி யிற் கொண்டான் ...*

காலவேற்றுமைக்கு *என்றதற்குக்* காலத்தை உணர நின்ற வேற்றுமை முடிபுடைய பெயர்க்கு *எனப் பொருள் கூறினர் உரைகாரர்கள்.* காலவேறுபாட்டினை யுணர்த்துஞ் சொற்கு எனப் *பொருள் கூறலாமெனத் தோன்றுகின்றது ;* வேற்றுமை மருங்கிற்

போற்றல் வேண்டும் (சொல். 115) என்றவிடத்து வேறுபாடு என்ற பொருளில் வேற்றுமை என்றதை ஆசிரியர் வழங்கியிருத்தல் காண்க. கீழ் அல்வழியே வந்தமையின் இங்கு வேற்றுமையில்தான் எனக் கொள்ளவேண்டாமா, கொள்ளாவிடின் "பனி தோன்றிற்று" போன்றன வந்துவிடாவா, எனின், அல்வழிக்கண் வருபனவற்றை "வேற்றுமை யல்வழி ..." (எழுத். 159) என்ற சூத்திரத்தில்ஆசிரியர் கூறினமையின் அவ்வாறு வாராதென்க. "வேற்றுமை என்றதனான் இன்பெற்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க" என்றனர் உரைகாரர்கள். அதனை "ய ர ழ..." (எழுத். 48) என்ற சூத்திரத்தாற் கொள்ளலா மென முன்னரே கூறப்பட்டது. "நாண்முற்றேன்றுந் தொழினிலைக் கிளவிக்கு" (எழுத். 248) என்ற இடத்துப்போன்று இச்சூத்திரத்திலும் வருஞ் சூத்திரத்திலும் "தொழினிலைக் கிளவிக்கு" என ஆசிரியர் கூறாராயினும், உரைகாரர்கள் அதனைக்கொண்டே உதாரணங் கூறியுள்ளார்.

**243.** வளியென வரூஉம் பூதக் கிளவியும்
அவ்விய னிலையல் செவ்வி தென்ப.

பொ-ள். "வளி" என்ற பூதத்தை யுணர்த்துஞ் சொல்லும் அத்தன்மை பெறுதல் நேரிதெனக் கூறுவர் (புலவர்).

உ-ம்.

வளி + கொண்டான், = வளியத்துக்கொண்டான், வளி

யிற்கொண்டான்.

"செவ்வித என்றதனால் இன்பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க" என்று உரைகாரர்கள் கூறியது பொருத்தமின்று என்பது முன்னரே கூறப்பட்டது.

பா - ம்.
இளம். க. பதி. 'முன்னைக்கூறிய"
இளம். சி. பதி. "மேற்கூறிய"

**244.** உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே.

பொருள் 'உதி' என்ற மரத்தை யுணர்த்துஞ் சொற்குப் பின்னர் க ச த ப வரின் வேற்றுமைவழி அவற்றிற்குரிய மெல்லெழுத்து மிகும்.

உதி + கோடு = உதிங்கோடு.



"வேற்றுமைவழி" என்பது அதிகாரத்தாற் பெறப்பட்டது. "உதியங்கோடு" * என்றது பிற்காலத்துவழக்கெனத் தோன்று

நின்றது.

**245.** புளிமரக் கிளவிக் கம்மே சாரியை.

போ - ள். 'புளி' என்ற மரத்தை உணர்த்துஞ் சொற்கு வேற்றுமைவழி 'அம்' சாரியையே வரும் பின்னர் கசதபத் தோன்றின்.

உ - ம். புளி + கோடு = புளியங்கோடு (எழுத். 130)

கசதபத் தோன்றின் என்பது அதிகரித்தது.

"யரழ..." (எழுத். 48) என்ற சூத்திரத்தான் பின்னர் வல்லெழுத்துமிகுதி வாராதென்க.

அம்மின்

**246.** ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே.

போ - ள். மரப்பெயரல்லாபுளிப்பெயரின் பின்னர் கசதபத் தோன்றின் மெல்லெழுத்து மிகும்.

உ - ம். புளி + சோறு = புளிஞ்சோறு.

கசதபத்தோன்றின் என்பது அதிகரித்தது.

" புளியஞ்சோறு " முதலியன

பிற்காலத்துவழக்காகும்.

**247.** வல்லெழுத்து மிகினு மான மில்லை

ஒல்வழி யறிதல் வழக்கத் தான.

பொ - ள். ஏனைப்புளிப்பெயரின் பின்னர் கசதபத் தோன்றின் வல்லெழுத்து மிகினுங் குற்றமில்லை. அது பொருந்தும்வழி வழக்கத்தின்கண் அறிதல்வேண்டும்.

உ - ம். புளிச்சோறு.

" வழக்கத்தான என்றதனான் இவ்விற்றுள் எடுத்தோத்தும் இலேசும் இல்லாதனவற்றின் முடிபுவேற்றுமை யெல்லாங் கொள்க "

புளியங்கோடு என்றதுடன் ஒற்றுமைப்போலியான்

அதுவந்ததென்க,



என்றனர் உரைகாரர்கள். அவற்றைக் " கிளந்தவல்ல... " (எழுத். 483) என்ற புறனடைச்சூத்திரத்தான் கொள்ளின் வரும் இழுக்கு

யாது ?

**248.** நாண்முற் றேன்றுந் தொழினிலைக்
கிளவிக்கு
ஆனிடை வருதலை யமின்றே.

போ. ள். இகரவீற்றுநாட்பெயர்களின் பின்னர் கசதப இவற்றை முதலாகக்கொண்ட தொழிலையுணர்த்துஞ் சொல் வரின் இடையில் "ஆன்" வருதல் ஐயமில்லை.

உ-ம். பரணி + கொண்டான் = பரணியாற்கொண்டான் (எழுத். 125).

இகரவிறுதி, கசதப இவை அதிகரித்தன.

**249.** திங்கண் முன்வரி னிக்கே சாரியை.

போ. ள். இகரவீற்றுத்திங்கட்பெயரின் பின்னர்த் தொழி- னிலைக்கிளவி வரின், இடையில் தோன்றுஞ் சாரியை இக்கே யாகும்.

உ-ம். ஆடி + கொண்டான் = ஆடி + இக்கு + கொண்டான் = ஆடி + க்கு + கொண்டான் (எழுத். 127) = ஆடிக்குக்கொண்டான்.

இகரவிறுதி, தோழினிலைக்கிளவி, கசதப இவை அதிகரித்தன.

நிலைமொழியீறு இகரமாயிருக்க நேரும் மாறுதல்களைக் கூறிப் பின்னர், அஃது ஈகாரமாயிருக்க அல்வழிப்புணர்ச்சியில் நேரும் மாறுதல்களை முதல் மூன்று சூத்திரத்தானும், வேற்றுமைப்புணர்ச் சியில் நேர்வனவற்றை இறுதியிரண்டுசூத்திரத்தானு மாசிரியர் உணர்த்தினர்.

**250.** ஈகார விறுதி யாகார வியற்றே.

**பொ-ள்.** ஈகாரத்தை இறுதியாகவுடைய சொல் நிலைமொழியா யிருக்கப் பின்னர்க் கசதபத் தோன்றின், அல்வழியில் வரும் புணர்ச்சி ஆகாரத்தின் தன்மையதாகும். அஃதாவது வல்லெழுத்து மிக்கு முடியும.

உ-ம். முத்தீச்செல்வத்து (சிலப். 23,68.)

ஆகாரவீற்றையுடைய சொல் அல்வழிப்புணர்ச்சியில் அகர வீற்றையுடைய சொல்லை ஒத்திருத்தலால் அகரவியற்றே என்னாது ஆகார வியற்றே என ஏன் ஆசிரியர் கூறினரெனின், இயைபுபட்ட சூத்திரங்களைப் படிப்போனுக்கு நினைவு மூட்டுவதற்காகப் பலவிடங்களிலும் அம்முறையையே அவர் ஆள்வர்.

**251.** நீயென் பெயரு மிடக்கர்ப் பெயரும்
மீயென மரீஇய விடம்வரை கிளவியும்
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.

பொ-ள். "நீ" என்ற பெயருக்கும் "பீ" என்ற இடக்கர்ப்பெயருக்கும் "மீ" என்ற இடத்தை யுணர்த்தும் மரூஉச்சொற்கும் அவ்விடத்து வரும் வல்லெழுத்து இயற்கையாகும்.

உ-ம். நீ பட்ட (புறநா. 17) ; பீ தீது ; மீகண்.

“ நீ குறியை ” என்றது “ அஃறிணை விரவுப்பெய ரியல்புமா ருளவே” (எழுத் 156) என்ற சூத்திரத்தாற் பெறப்படும்; ஈண்டு நீயென்பெயரும் என்றதைக் கூறல்வேண்டாமெனின், அச்சூத்திரத்து இயல்பும் என்ற உம்மையான் இயல்பின்மையுங் குறிக்கப்படுதலான், இச்சூத்திரத்திலுள்ள நீயென்பெயரும் இயல்பினையே நியமிக்கின்ற தாகலின், ஈண்டு அது வேண்டுமென்க. “ நீ குறியை ” என்பது மேல் “ அஃறிணை விரவுப்பெய ரியல்புமாருளவே ” என்றவழி அடங்காதோவெனின், மேல் வேற்றுமைக்கண் நின்கை எனத்திரிந்து முடிதலின் அடங்காதாயிற் றென்க” என்றனர் உரைகாரர்கள். “ மீகண் என்பது அல்வழி முடிபன்றெனினும் இயல்பாதல் நோக்கி உடன் கூறப்பட்டது ” எனக் கூறினர் உரைகாரர்கள். கண் என் றதற்கு மேலிடத்துக்கண் எனப் பொருள்கூறினர். நச்சினார்க் கினியர் கண் என்றதும் இடப்பெயருணர்த்தும் பெயராயும் வழங்கு தலின் மீகண் என்றதற்கு மேலிடம் எனப்பொருள்கொண்டு, அதற் குச் சாரைப்பாம்பு

என்பதற்குப் போன்று " மீ ஆகிய கண்" எனத் தொகைவிரி கூறின் வருங் குற்றம் யாது ? அல்வழியில் வேற் றுமையினையுங் கூறினரென்றல் எவ்வாறு பொருந்தும்?

230

**252.** இடம்வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉம்
உடனிலை மொழியு முளவென மொழிப.

**பொ - ள்.** இடம்வரைகிளவியாகிய "மீ" என்றதன் பின்னர் வல்லெழுத்து மிகுமாறு வரும் வருமொழியும் உளவெனக் கூறு
வர் (புலவர்).

·

**உ-ம்.** மீப்பாய் (புறநா. 30)

" உடனிலை என்றதனால் மீங்குழி, மீங்தோல் என மெல் லெழுத்துப் பெற்று முடிவனவுங் கொள்க" என்றனர் உரைகாரர்கள்.

பா - ம். நச். ம. பதி. " மீப்பா "

நச். தா. சை. பதி. " மீப்பல் "

**253.** வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

பொ - ள். ஈகாரவீற்றுப்பெயர் வேற்றுமைப்புணர்ச்சிக்கண்ணும் ஆகாரவீற்றுப்பெயரோடு ஒருதன்மைத்து. வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்கு முடியும். அஃதாவது

உ-ம். முத்தீப்புரைய (புறநா. 367)

இச்சூத்திரத்தில் " அதனோரற்றே " "ஆகாரவீற்றுப்பெயரோடு ஒருதன்மைத்து " எனக் கூறுது ஆகாரவீற்றல்வழியோடு ஒருதன்மைத்து என உரைகாரர்கள் பொருள் கூறுவதற்குக் காரணந் தெரியவில்லை. அல்வழியினும் வேற்றுமைப்புணர்ச்சியினுஞ் செய்கை ஒன்றுயிருப்பினும், வேற்றுமைப்புணர்ச்சியில் ஈகாரவிறுதி ஆகாரவிறுதியை ஒத்தது எனக் கூறுவதே நேரிதாகு மெனத் தோன்றுகின்றது.

பா-ம். நச். ம. பதி. " வல்லெழுத்து மிக்கு முடியும் "

நச். தா. சை. பதி. " அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் "

**254.** நீயே னொருபெய ருருபிய னிலையும்
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.

போ - ள். ஈகாரவீற்றுப்பெயருள் நீ என்ற ஒரு பெயரின் பின்னர் கசதப வரின், அஃது பின்னர் வேற்றுமையுருபு வரும்

231

போதுள்ள செய்கையைப்பெறும். அப்போது இடைவரும் வல் லெழுத் து இயற்கையாகும்.

உ - ம். நின் சென்னி (புறநா. 6)

"நீ + அது" என்றிருக்க " நீயேனொருபெயர் ... " (எழுத்- 180) என்ற சூத்திரத்தானே " நின் + அது " என ஆகுமாகலான் நினது கை என்றவிடத்து " அது " என்ற உருபு கெடினும் " நின் " என்பது நிற்குமாகலான், நின்கை என்ற உருவம்

நிலைச்சுமாகலானும், " நின் " பின்னர் வல்லெழுத்து மிகாது என்பது " யரழ... " (எழுத். 48) என்ற சூத்திரத்தாற் பெறப்படுமாகலானும் இச்சூத்திரம் வேண்டாமெனின், அற்றன்று. " நினது கை " என்ற இரண்டு சொற்களும் தொகையாம்போது " நீ கை " என்றிருக்க, ஈண்டு வேற் றுமையுருபின்மையான் " நீக்கை " என ஆகுமோ வென்ற ஐயத் தைப் போக்கி " நின்கை " என ஆகும் என்பதை உணர்த்தற்கு இச் சூத்திரம் வேண்டுமென்க.

நிலைமொழியிறு ஈகாரமாயிருக்க நேரும் மாறுதல்களைக் கூறிப் பின்னர் அஃது உகரமாயிருக்கும்போது அல்வழிப்புணர்ச்சியில் வரும் மாறுதல்களை ஐந்து சூத்திரங்களிலும், வேற்றுமைப்புணர்ச்சி யில் வருவனவற்றை ஐந்து சூத்திரங்களிலும் ஆசிரியர் உணர்த் தினர்.

**255**. உகர விறுதி யகர வியற்றே.

பொ-ள். உகரவிறுதிப்பெயர் அல்வழிப்புணர்ச்சியில், கசதப பின்வரின் அகரத்தின் தன்மையையுடைத்து. அஃதாவது வல் லெழுத்து மிகும்.

உ-ம். கடு+குறிது=கடுக்குறிது.

பெயர், வேற்றுமையல்வழி, கசதபத்தோன்றின் என்பன அதிகரித்தன.

**256.** சுட்டின் முன்னரு மத்தொழிற் றுகும்.

போ - ள். உகரச்சுட்டின் பின்னர் கசதப வரின் வல்லெழுத்து மிகும்.

உ - ம். உக்கொற்றன்.

232

**257.** ஏனவை வரினே மேனிலை யியல்பே.

போ - ள். வல்லெழுத்தல்லாத ஞ, ந, ம, ய, வ, உயிர்கள் பினவரின் உகரம் மேற்கூறப்பட்ட அகரச்சுட்டின் தன்மை பெறும்.

உ - ம். உஞ்ஞாண்...., உவ்யாழ் ...உவ்வாடை ...ஊவயினை° - உகரம், சுட்டின் முன்னர், வல்லெழுத்து இவை அதிகரித்தன.

"சுட்டின் முன்னருமத்தொழிற்றுகும்" என்ற ஒரு சூத்திரத்தானே, இவ்விரண்டு சூத்திரப்பொருளையுங் கொள்ளலா மெனினுட், அகரச்சுட்டின் பின்னர் வல்லெழுத்து வரும்போது வருஞ் செய்கையைப் பிரித்து ஆசிரியர் கூறினமையான் மாணுக்கர் ஐயமின்றி யறிய ஈண்டும் பிரித்துக் கூறின ரென்க.

**258.** சுட்டுமுத லிறுதி யியல்பா கும்மே.

போ - ள். சுட்டினை முதலாகவும் உகரத்தை இறுதியாகவு முடைய சொல்லின் பின்னர் கசதப வரின், அஃது

இயல்பாகும்.

உ - ம். அது குறிது....

உகரம், கசதபத்தோன்றின் என்றன அதிகரித்தன.

முன்னிரண்டு சூத்திரங்களிலும் உக்கொற்றன், உஞ்ஞாண் முத லிய தொகை மொழிகளில் உ என்றதின் பின்னருள்ள மாறுதல்களை யும், ஈண்டு அது, இது, உது என்ற தனிமொழிகளின் பின்னர் வரும் புணர்ச்சிகளையுங் கூறினர்.

**259.** அன்றுவரு காலை யாவா குதலும்
ஐவரு காலை மெய்வரைந்து கெடுதலும்
செய்யுண் மருங்கி னுரித்தென மொழிப.

பொ - ள். சுட்டுமுதலுகரவிறுதியின் பின்னர் "அன்று" வருமொழியாய் வர, இறுதியுகரம் ஆகாரமாய்த்திரிதலும், ஐ வரும் போது மெய்யை நீக்கி இறுதியுகரமாத்திரங் கெடுதலும் செய்யுளின் கண் உரித்தெனக் கூறுவர்.

உ - ம். அதா அன்று (திருமுரு. 77)

" பல்லவை " (எழுத். 178) போன்ற விடங்களில் ஐகாரத்தை ஆசிரியர் வழங்கினமையின் " அது " என்றதன் பின்னரும் ஐகாரம் வருதல் கூடும்.

பா - ம்.

இளம். க. பதி. " அதிகாரத்து நின்ற சுட்டு முதலுகரவீற் றுப் பெயர் ".

இளம். சி. பதி. " அதிகாரத்தான் நின்ற சுட்டுமுதலுகர வீற்றுப்பெயர்".

நச். ம. பதி. " அதான்றம்ம, இதான்றம்ம, உதான்றம்ம. "

நச் தா. சை. பதி. " அதா அன்றம்ம, இதா அன்றம்ம, உதா அன்றம்ம." பின்னருள்ள பாடமே பொருந்தும்.

" மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின்

முடியாததனை முட்டின்றி முடித்தலென்பதனல் அதன்று, இதன்று, உதன்று என உகரங் கெட்டுத் தகரவொற்று நிற்றல் கொள்க ” என்றனர் நச்சிஞர்க்கினியர். இவை பிற்காலத்துவழக்காய் இருக்கலாம்.

**260.** வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

பொ-ள். வேற்றுமைப்புணர்ச்சிக்கண்ணும் உகரவிறுதிப்பெயர் அகரவிறுதிப்பெயரோடு ஒருதன்மைத்து. அஃதாவது கசதப வந்த வழி அவ்வெழுத்து மிகும்.

உ-ம். கடு + காய் = கடுக்காய்...

உகரவிறுதி, பெயர் என்பன அதிகரித்தன.

**261.** எருவுஞ் செருவு மம்மொடு சிவணித்
திரிபிட னுடைய தெரியுங் காலை
அம்மின் மகரஞ் செருவயிற் கெடுமே
தம்மொற்று மிகூஉம் வல்லெழுத் தியற்கை.

பொ - ள். எரு, செரு இவற்றின் பின்னர்

கசதபத் தோன்றின், அவை அம்முச்சாரியையோடு பொருந்தி பொதுவிதியினின்

30

234

றும் வேறுபட்டு நிற்கு மாராயுங்காலத்து ; செரு என்ற சொல்லின் பின்னர் வந்த அம்முச்சாரியையின் மகரங் கெடும். பின்வரும் வல்லெழுத்தின் இயற்கை தம்மொற்று மிகுதலைக் கொள்ளும்.

உ-ம். எருவங்குழி... ; செருவக்களம்.

" தெரியுங்காலை என்றதனால் எரு என்பதற்குப் பெரும் பான்மை மெல்லெழுத்துப்பேறும், செரு என்பதற்குச் சிறுபான்மை வல்லெழுத்துப்பேறுங் கொள்க. எருங்குழி, எருக்குழி, செருக் களம் எனவரும்...இன்னுமதனானே 'அம்மொடு சிவணித் திரிபிட

னுடைய ' என வல்லெழுத்தின்கண்ணதாக வரைந்து கூறினமை.

யின் அம்முச்சாரியை இயல்புகணத்துக்கண் பெறுவன கொள்க.

எருவனாற்சி, செருவனாற்சி எனவரும்" எனக் கூறினர் இளம்

பூரணா.

" தம்மொற்றுமிகூஉம் என உடம்பொடு புணர்த்துச் சூத்திரஞ் செய்தலின் உகரம் நீடவருதலுங் கொள்க. வரூஉம் ... என வரும்" என்றனர் நச்சினார்க்கினியர்.

பா-ம்.

நச். ம. பதி. " செருவக்களமென முடிக்க ; ஏனையவுமன்ன"

நச். தா. சை. பதி.

"செருவக்களம் சேனை தானை பறையென முடிக்க."

**262.** ழகர வுகர நீடிட னுடைத்தே
உகரம் வருத லாவயி னான.

பொ-ள். நிலைமொழியிறுதியிலுள்ள ழு நீளும் இடனுடைத்து, அவ்விடத்து அதன்பின்னர் உகரம் வருதல்வேண்டும்.

உ-ம். பழு+பல்=பழூஉப்பல்.

இச்சூத்திரம் வல்லெழுத்துமிகுதியை உணர்த்துஞ் சூத்திரத்திற்குப் புறனடையின்மையான் வல்லெழுத்து மிகுதியும் ஈண்டு வரும்.

“ இடனுடைத்து என்றதனான் இது செய்யுளிடத்தெனக் கொள்க ” என இளம்பூரணரும், “நீடிடனுடைத்து” என்றதனான்

235

நீளாதும் உகரம் பெறுதும் வருமாயிற்று ” என நச்சினார்க்கினியருங் கூறினர்.

“ இன்னுமிதனாற் பழுக்காயென அல்வழிக்கண்ணும் இவ்விதியன்றி வருதல் கொள்க ” என நச்சினார்க்கினியத்திலுள்ளது. இஃது “உகரவிறுதி யகர வியற்றே” (எழுத். 255)

என்ற சூத்திரத்தாற் கொள்ளப்படும்.

"ஆவயினுன என்பதனுற் பெரும்பான்மை செய்யுட்கண் நீண்டு உகரம் பெற்று...வருதல் கொள்க" என்றனர் நச்சினர்க்கினியர்.

**263.** ஒடுமரக் கிளவி யுதிமர வியற்றே.

பொ-ள். மரத்தை யுணர்த்தும் 'ஓடு' என்ற சொல் 'உதி' என்ற சொல்லின் தன்மைத்து. அஃதாவது பின்னர்க் கசதப வரின் மெல்லெழுத்து மிக்கு முடியும்.

உ-ம். ஓடுங்கோடு...

"முன்னர் உதிமரத்தின் பின்னர் அம்முப் பெறுகின்ற புளிமரம் வைத்த இயைபான் இதற்கு அம்முப்பேறுங் கொள்க. ஓடுவங்கோடு எனவரும்" என்றனர் நச்சினர்க்கினியர். ஓடுவங் கோடு என்றது பிற்காலத்துவழக்கென்றும் அது புளியங்கோட்டின் ஒற்றுமைப்போலியான் வந்ததென்றுங் கொள்ளுதல் தகும்.

**264.** சுட்டுமுத லிறுதி யுருபிய னிலையும்

ஒற்றிடை மிகாஅ வல்லெழுத் தியற்கை.

போ - ள் சுட்டினை முதலாகவும் உகரத்தையிறுதியாகவு முள்ள சொற்கள் பின்னர் வேற்றுமையுருபு வரும்போதுள்ள தன்மையைப் பெறும். அப்போது வல்லெழுத்தின் இயற்கை இடையில் ஒற்று மிகாது இருக்கும்.

உ-ம். அது + கோடு = அதன்கோடு *

இச்சூத்திரத்தாற் கூறப்பட்டது "சுட்டுமுதலுகரம் ......" (எழுத். 177) என்ற சூத்திரத்தாற் பெறப்படாதோ வெனின் அதற்கு விடை எழுத். 254 ஆவது சூத்திரத்திற் கூறியவாறு கூறுக.

* "அதன்கோடு" என்றது அதனது கோடு தொகை. என்ற சொற்களின்

## 236

உகரவிறுதியின் டமாறுதல்களைக் கூறிப் பின்னர் ஊகாரவிறுதி நிலைமொழியாயிருக்க

அல்வழிப்புணர்ச்சியில் நேரும் மாறுதல்களை இரண்டு சூத்திரங்களிலும், வேற்றுமைப்புணர்ச்சியில் நேர்வன வற்றை ஆறு சூத்திரங்களிலும், ஆசிரியர் உணர்த்தினர்.

**265.** ஊகார விறுதி யாகார வியற்றே.

போ - ள். ஊகாரவிறுதிப்பெயர் நிலைமொழியாயிருக்க, பின் வர்க் கசதப வரின், அல்வழிப்புணர்ச்சியில் அஃது ஆகாரவீற்றுப் பெயரின் தன்மைத்து.

உ - ம்.

கொண்மூ + கடிது = கொண்மூக்கடிது....

பெயர், வேற்றுமையல்வழி, கசதபத்தோன்றின் என்பன அதி கரித்தன.

பா - ம்.

நச். ம. பதி. "வல்லெழுத்து மிக்கு முடியும்"

நச். தா. சை. பதி. "அவ்வல்லெழுத்து மிக்கு

முடியும் ”

**266.** வினையெஞ்சு கிளவிக்கு முன்னிலை மொழிக்கும்
நினையுங் காலை யவ்வகை வரையார்.

பொ ள் ஊகாரவிறுதிவினையெச்சத்திற்கும், ஊகாரவிறுதி முன்னிலைவினைச்சொற்கும் ஆராயுங்காலத்து அவ்வகையை நீக்கார்.

உ - ம். உண்ணூக்கொண்டான்....; கைதூக்கொற்றா....

ஊகாரவிறுதி என்பது அதிகரித்தது.
“ நினையுங்காலை என்றதனான் இவ்வீற்றுஉயர்திணைப்பெயர் அவ்வழிக்கண் வல்லெழுத்து மிக்கு முடிவன கொள்க ; ஆடூஉக்குறியன், மகடூஉக்குறியன் எனவரும் ” என்றனர் உரைகாரர்கள். இவற்றை “ ஊகார விறுதி யாகார வியற்றே ” (எழுத். 265) என்ற தனாற் சொல்லலாகாதா வெனின், “ உயிர்மகிய வுயர்திணைப் பெய

ரும் .. " (எழுத். 154) என்ற சூத்திரத்தான் உயர்திணைப்பெயர்க்குச் செய்கை கூறினமையின் அச்சூத்திரம் அஃறிணைப்பெயர்க்கேயா மெனக் கொள்க. அவ்வாறாயின் இயல்பில்லாத இவ்விடத்து நினை யுங்காலை என்றதனாற் பெறப்பட்டதாகக் கொள்ளலாமா வெனின், பின்னர் வரும் "ஆடூஉ மகடூஉ..." (எழுத். 272) என்ற சூத்திரம் வல்லெழுத்துமிகுதிக்குப் புறனடையாக ஆசிரியர் கூறியதாக உரைகாரர்கள் கொண்டமையின் அவ்வாறு கூறினர். " உயிரீறாகிய வுயர் திணைப் பெயரும் " (எழுத். 154) என்றதற்கு' ஆடூஉ மகடூஉ.... " (எழுத். 272) என்றதனை புறனடையாகக் கொள்ளின், வல்லெழுத் துமிகுதியைப் பிற்காலத்துவழக்காகக் கொள்ளல்தகும். பண்டைய வழக்கெனக் கொள்ளச் சான்று இருப்பின் " கிளந்தவல்ல..." (எழுத். 483) என்ற அதிகாரப்புறனடையாற் கொள்ளலாம்.

இளம். க. பதி. "இவ்வீற்றுவினைச்சொற்கு முடிபு கூறுதல்"

இளம். சி. பதி. "இவ்வீற்றுவினைச்சொல் முடியுமாறு கூறல்"

நச். ம. பதி. "உயர்திணைப்பெயர்க்கல்வழிக்கண் ...முடித்தார்"

நச். தா சை. பதி. "உயர்திணைப்பெயர்க்குமல்வழிக்கண்... முடித்தாம்." உயர்திணைப்பெயர்க்கும், முடித்தார் என்ற பாடங்கள் சிறக்கும்.

**267.** வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

பொருள். ஊகாரவிறுதிப்பெயர் வேற்றுமைப்புணர்ச்சிக்கண்ணும் ஆகாரவிறுதிப்பெயரோடு ஒருதன்மைத்து.

உ-ம். கொண்மூ + குழாம் = கொண்மூக்குழாம்.

ஊகாரவிறுதிப்பெயர் என்பது அதிகரித்தது.

"அகரேரற்று" என்றதற்கு அவ்வாகாரவீற்று அல்வழியோடு ஒத்த இயல்பிற்று எனப் பொருள் கூறினர் உரைகாரர்கள்;

238

"அவ்வாகாரவீற்று வேற்றுமையோடு ஒத்த இயல்பிற்று" எனக் கூறலாமெனத் தோன்றுகின்றது.

**258.** குற்றெழுத் திம்பரு மோரெழுத்து மொழிக்கும்

நிற்றல் வேண்டு முகரக் கிளவி.*

பொ - ள். குற்றெழுத்தின் பின்னர் ஊகாரத்தைக் கொண்ட ஈரெழுத்தொருமொழிக்கும், ஊகாரவிறுநிலைக்கொண்ட ஓரெழுத்தொருமொழிக்கும் பின் கசதப வரின், ஊகாரத்தின் பின்னர் உகரம் நிற்றலே வேண்டும் (ஆசிரியர்).

உ - ம். உடூஉக்குறை ; தூஉக்குறை...

இச்சூத்திரம் வல்லெழுத்துமிகுதி புணர்த்துஞ் சூத்திரத்திற்குப் புறனடையின்மையின் உகரத்தின் பின்னர் வல்லெழுத்து மிகுதி கொள்ளப்படும்.

ஊகாரவிறுதி, கசதபத்தோன்றின் என்பன அதிகரித்தன.

" நிற்றல் என்றதனால் இவ்வீறு உயர்திணைப்பெயர் வேற்றுமைக்கண் வல்லெழுத்து மிக்கு முடிவன வென்பது ; ஆடூஉக்கை...

என வரும்" என இளம்பூரணரும், "நிற்றல் என்றதனுன் உயர் திணைப் பெயர்க்கும் வல்லெழுத்தும் உகரமுங் கொடுக்க" என நச்சி னார்க்கினியருங் கூறினர். இளம்பூரணர்கொள்கையை நோக்கின் " ஆடூஉ,மகடூஉ " என்பனவே அப்பெயர்களின் இயற்கையுருவமெனத் தோன்றுகின்றது. அதற்குச் சான்றாக "ஆடூஉ மகடூஉ .."

(எழுத். 272) என்ற சூத்திரமு மிருக்கலாம். நச்சினார்க்

கினியர்கொள்கைப்படி அவற்றின் உருவம் "ஆடூ" "மகடூ"

எனத் தோன்றுகின்றது. அதற்குச் சான்று ஊகாரவிறுதிப்

பெயர்களின் புணர்ச்சியைப்பற்றிக் கூறும் இவ்விடத்து "ஆடூஉ

மகடூஉ...." (எழுத். 272) என்ற சூத்திரத்தைப் படித்தல் ஆகும்.

அங்கு "ஆடூஉ, மகடூஉ" என இருக்கின்றனவே எனின், அங்குள்ள

இறுதி உகரம் நீடூஉ நின்ற (சொல்.173) என்றவிடத்துப்போன்று

அளபெடையாயிருத்தல் கூடும். பிற்காலத்து ஆடூஉ, மகடூஉ

* "நீளல் வேண்டு மூகாரக் கிளவி" என்னாது "நிற்றல் வேண்டு

மூகாரக் கிளவி" என்றமையான் உகரம் அளபெடையன்று.

இவையே இயற்சொல்லெனக் கருதி யிருத்தல் கூடும்* ; "ஆடூஉக் கை" முதலியவற்றைக் "கிளந்த வல்ல..." (எழுத். 483) என்றதனுற் கொள்ளின் நலம். "ஆடு மகடு வாயிரு பெயரும்" போன்று 272 ஆவது சூத்திரத்தின்கண் "ஆடு மகடு வாயிரு பெயர்க்கும்" என்ற பாடமு மிருத்தல் கூடும்.

**269.** பூவெ னொருபெய ராயியல் பின்றே
ஆவயின் வல்லெழுத்து மிகுதலு
முரித்தே.

பொ - ள். பூ என்ற ஒருபெயர்மாத்திரம் அத்தன்மைத் தன்று பின்னர் கசதப வரின் ; அவ்விடத்து வல்லெழுத்துமிகுத லும் உரித்து ; உம்மையான் மெல்லெழுத்துமிகுதலும் உரித்து.

உ - ம். பூக்கோள் (புறநா. 341), பூஞ்சோலை (புறநா. 116), பூந்தொடலை (புறநா. 341).

கசதபத் தோன்றின் என்றது அதிகரித்தது.

மெல்லெழுத்து மிகும் என்றதை இளம்பூரணர் உரையிற்கோடலாற் கொள்ளப்பட்டதென்றும் நச்சினார்க்கினியர் உம்மையாற் பெறப்பட்டதென்றுங் கூறினர். நச்சினார்க்கினியர்கூற்றே பொருத்தமானது. "மிகுதலும்" என்ற உம்மையான் வல்லெழுத்துமிகுதல் சிறுபான்மையெனக் குறிக்கப்படுகின்றது.

ஊகாரவிறுதியோரெழுத்தொருமொழியுள்

பூ என்றதே

உகரக்கிளவி பெறுது என்றதை உணர்த்த "ஒரு பெயர்" என்றதைச் சூத்திரத்தில் ஆசிரியர் கூறினும் "பூவென்பது பொலிவென்னும் வினைக்குறிப்பை உணர்த்தாது நிற்றற்கு ஒரு பெயரென்றார்" என நச்சினார்க்கினியர் கூறுதல் பொருத்தமின்று. அவ்வாறாயின் "பெயர்" ஒன்றே கூறியிருப்பர் ஆசிரியர். "வல்லெழுத்து மிகுதலும்" என்ற உம்மையான் மெல்லெழுத்துமிகுதல் எவ்வாறு பெறப்பட்டதெனின், வேற்றுமைக்கண் ஊகாரவிறுதி ஆகாரவியற்றே எனவும், ஆகாரவிறுதியைப்பற்றிய சூத்திரங்களில் "அகரக்கிளவி தோன்றும்" எனவுங் கூறிய சூத்திரங்களின் பின்னர் "மேல் லெழுத்து மிகுமே" (எழுத். 230) என்றும் "வல்லெழுத்து மிகினு மான மில்லை" (எழுத். 231) என்றுங் கூறினமையின் என்னலாம். *

* ஆங்கும் மயக்கம் உளது என்பது சொல். 163 ஆவது சூத்திரத்தில் "ஆடு மகடு வாயிரு பெயரும்" எனச் சேனாவரையர்பதிப்பிலும் "ஆடூஉ மகடூஉ வாயிரு பெயரும்" எனத் தெய்வச்சிலையார்பதிப்பிலு முள்ளதினு லறியப்படும்.

**270.** ஊவே ஞருபெய ராவோடு சிவணும்.

போ - ள். (ஊகாரவிறுதிப்பெயர்களுள்) ஊ என்ற ஒரு பெயர் மாத்திரம் ஆ என்ற பெயரோடு பொருந்தும் அஃதாவது உகரம் பெற்று வல்லெழுத்து மிகாது னகரவொற்று மிகும்.

உ-ம். ஊ + தடி = ஊன்றடி * (புறநா. 74)

பா-ம் இளம். க. பதி. "வல்லெழுத்துப் பெறாது"

இளம். சி. பதி. "உகரமும் வல்லெழுத்தும் பெறாது"

பின்பாடஞ் சிறக்கும்.

**271.** அக்கென் சாரியை பெறுதலு முரித்தே
தக்கவழி யறிதல் வழக்கத் தான.

போ - ள் ஊவென்னும் பெயர், பின் கசதப வரின் "அக்கு"

என்ற சாரியையைப் பெறுதலும் உரித்து

; அதனை வழக்கத்தின்கண்

தக்க வழியால் அறிதல்வேண்டும்.

உ-ம். ஊ + குறை = ஊ + ன் + குறை (270) = ஊ + ன் +

அக்கு + குறை = ஊ + ன் + அ + குறை (எழுத். 129) = ஊனக்குறை

(எழுத். 267)

வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே (எழுத் 267) என்ற சூத்திரத்தான் ஊ என்ற நிலைமொழியின் பின்னர் வல்லெழுத்து மிகும் என்று இருக்கின்றமையானும், னகரம் அக்குச்சாரியையும் பெற்றது" 'ஊ" என்ற பெயரேயாதலின் "ஊன்" என்பது அப்பெயரின், விகாரமெனக் கொள்ளுதல் பொருந்துமாகலானும், அச்சூத்திரத்தானே வல்லெழுத்து மிகுதிகொள்ளலாமெனத் தோன்றுகின்றது.

* ஊன்குறை முதலிய தொகைமொழிகள் ஊ, குறை என்ற சொற்களால் ஆயின என்றதை அறியாது, ஊன், குறை என்ற சொற்களால் ஆயின என மாறுபட்டு உணர்ந்து. ஊன் என்றதைத் தனியாக வழங்கினர் எனத் தோன்றுகின்றது. உ-ம். ஊனுமூனும் (புறநா 381). இதனை நச்சினார்க்கினியர் "ஊ வென்பது தசையை உணர்த்தி நின்றவழக்கு ஆசிரியர் நூல் செய்தகாலத்து வழக்கு அன்றித் தேயவழக்கேனு முணர்க" என்ற தொடராற் குறிக்கின்றனர்.

உரைகாரர்கள் " தக்கவழி யறிதல் என்றதனால் சாரியை பெற்றவழி நிலைமொழினகரம் விலக்குண்ணாது நிற்றலும் முன் மாட்டேற்றால் விலக்குண்ட வல்லெழுத்துக் கெடாது நிற்றலுங் கொள்க' என்றனர்.

" வழக்கத்தான என்றதனான் இவ்வீற்றுவுருபிற்குச் சென்ற

சாரியை பொருட்கண் சென்றவழி இயைபுவல்லெழுத்து வீழ்க்க; கொண்மூவின் குழாம் எனவரும்" என்றனர். இவ்வாறு கூறவேண்டு வதில்லை யென முன்னரே கூறப்பட்டது.

ஊவென்பெயர், கசதபத்தோன்றின் என்பன அதிகரித்தன.

**272.** ஆடூஉ மகடூஉ வாயிரு பெயர்க்கும்
இன்னிடை வரினு மான மில்லை.

போ - ள். ஆடூ, மகடூ என்ற இரண்டு

பெயர்களுக்கும் பின் னர்க் கசதபத் தோன்றின் இடையில் ‘ இன் ’ வரினுங் குற்றமில்லை.

உ-ம். ஆடுஉவின் கை, மகடூஉவின்கை.
கசதபத் தோன்றின் என்பது அதிகாரித்தது.

“ வரினுமான மில்லை ” என்றதனன் இன்சாரியை வாராம விருத்தலே பெரும்பான்மையாகும். இச்சூத்திரம் “ குற்றெழுத் திம்பரும்...” (எழுத். 268) என்ற சூத்திரத்துள்ள “ நிற்றல் ” என்றதனல் உரைகாரர்களாற் கொள்ளப்பட்ட வல்லெழுத்துமிகு திக்குப் புறனடையென்பது அவர் தங்கொள்கை. “ உயிரீறுகிய வுயர்திணைப் பெயரும்...” (எழுத். 154) என்ற சூத்திரத்தாற் கூறப்பட்ட இயல்பிற்கு இச்சூத்திரம் புறனடையாகக் கொள்ள லாம். அவ்வாறுயின் வரினும் என்ற

உம்மையான் கொள்ளப் படுவது வல்லெழுத்துமிகுதி யாகாது, இயல்பே யாகும். அவ்வாறு கொள்ளின் வல்லெழுத்துமிகுதி எதனாற் கொள்ளப்படுமெனின் " கிளந்த வல்ல..." (எழுத். 483) என்ற சூத்திரத்தா னென்க.

இச்சூத்திரத்தில் " ஆடூஉ மகடூஉ " என்பது பாடமா, " ஆடூ மகடூ " என்பது பாடமா என ஆராய்தற்பாலது. ஊகாரவதிகாரத்தில் இச்சூத்திரம் படிக்கப்பட்டமையானும் ஆடூ, மகடூ என்ற

--

பாடமே சொல்லதிகாரத்துப்பெயரியலிற் சேனாவரையராற் கொள்ளப்பட்டமையானும், ஆடூஉ, மகடூஉ என்பன ஆசிரியர்கொள்கையில் உகரவீறுகுமே யன்றி ஊகாரவீறுகாமையானும், இவை குற்றெழுத்தின் பின்னர் ஊகாரத்தைக்கொண்ட ஈரெழுத்தொருமொழியாக இல்லாமையான் "குற்றெழுத் திம்பரும் ..." (எழுத். 268) என்ற சூத்திரத்தான் உகரம் பெற்றன எனக் கூறலாகாமையானும் "ஆடூ, மகடூ" என்பதே பாடமோ வெனத் தோன்றுகின்றது. ஆடூஉ மகடூஉ என்பதே பாடமாயின், ஆங்கு உகரம் "நிகழூஉ நின்ற" (சொல். 173) என்றவிடத்துப்போல அளபெடையாகும். அவ்வாறாயின் "ஆடூஉ வறிசொல்..." (சொல். 2) போன்றவிடங்களிலும் உகரம் செய்யுளில் வந்த அளபெடையாகக் கொள்ளல் தகும்.

இளம்பூரணத்தில் "முன் எய்திய வல்லெழுத்தேயன்றி" என்றதற்கு முன் "நிற்றல்" என்ற சொல்லாற் கொள்ளப்பட்ட வல்லெழுத்தேயன்றி எனப் பொருள் கொள்ளல் வேண்டும்.

இனி எகரஒகரவிறுதியின் புணர்ச்சியைப்பற்றி இரண்டு சூத் திரங்களில் ஆசிரியர் கூறினர்.

**273.** எகர வொகரம் பெயர்க்கீ றாகா
முன்னிலை மொழிய வென்மனார் புலவர்
தேற்றமுஞ் சிறப்பு மல்வழி யான.

**போ - ள்.** எ ஒ இவை பெயர்க்கு

ஈருகாது முன்னிலை

வினைக்கே ஈருகு மென்பர் புலவர், தேற்றஞ் சிறப்பு இப்பொருள்

களில் வாராதவிடத்து.

தேற்றஞ் சிறப்பு இப்பொருள்களில் பெயரின் பின்னர் எகர

ஓகாங்கள், "தெளிவி னேயும் ..." (சொல் 261) என்ற சூத்திரத்தான்

வரு மென்க. தேற்றப்பொருளில் ஏகாரமும், சிறப்புப்பொருளில்

ஓகாரமுமே இடையியலிற் கூறப்பட்டனவேயன்றி எகாரஒகாரங்கள்

கூறப்படவில்லை யெனின், இச்சூத்திரத்தானே அவற்றின் பின்னர்

எகர ஒகாரங்கள் அளபெடையாய் வருமெனக் கொள்க. அவ்வாறு

பின் ஏஎ, ஓஒ என்பன மூன்று மாத்திரை பெற்ற எழுத்தல்

லவோ எனின், "மூவள பிசைத்த லோரெழுத் தின்றே" (எழுத். 5)

என ஆசிரியர் கூறினமையான், அவை

இரண்டெழுத்துக்களால் ஆக் கப்பட்டன என்பதும், ஆகலின் அவை எகரஒகரவீருகக் கொள்ளப் பட்டன என்பதும் விளங்கும்.

பா-ம்.

நச். ம. பதி. "தெளிவுப்பொருளும்.... தெளிவுப்பொருளி னும்.... பெயர்க்கீருயிடைச்சொல்லாகிய எகர ஒகரம்"

நச். தா. சை. பதி. "தெளிவு பொருளும்... தெளிவுபொரு ளினும்... பெயர்க்கீரு மிடைச்சொல்லாகிய எகர ஒகரம்"

**274.** தேற்ற வெகரமுஞ் சிறப்பி ேைவ்வும்
மேற்கூ றியற்கை வல்லெழுத் துமிகா.

போ -ள். தேற்றப்பொருளில் வரும் எகரமும், சிறப்புப்

பொருளில் வரும் ஒகரமும் மேற்கூறப்பட்ட வல்லெழுத்துமிகுதி யைக் கொள்ளா, பின் கசதப வரின். இதனால் முன்னிலைவினைக் கண் வருவது வல்லெழுத்துமிகுதியைக் கொள்ளும் என்பது பெறப் பட்டது.

உ-ம். யானேஎ கொண்டேன். அவனோஒ கொண்டான் ; ஏஎக் கொற்றா, ஓஒக் கொற்றா.

“ மேற்கூறியற்கை” என்றதற்கு “ மேலை முன்னிலைவினைச் சொற் கூறப்படும் இயல்பு ” என்ற இளம்பூரணர்பொருளும், “ மூன்றிடத்து வருமென்ற இலக்கணத்தனவாம்’ என்ற நச்சினார்க் கினியர்பொருளும் பொருந்துவனவாகத் தோன்றவில்லை. முன்னிலை வினைக்கண் வல்லெழுத்துமிகுதியை எகரமும் ஒகரமும் வல்லெழுத்து மிகா என்பதனாற் கொள்ளப்படவேண்டுவதாதலானும், “ கூறிய வல்லெழுத் தியற்கை யாகும்.” (எழுத். 276) என்றவிடத்து நச்சி னார்க்கினியரே முற்கூறிய வல்லெழுத்துப் பெறாது இயல்பாய் முடியும் ” எனப் பொருள் கொள்ளுதலானும் என்க.

எகரவிறுதியைப்பற்றிய சூத்திரங்களில் ஒகரவிறுதியைப்பற் றியும் உடன் கூறியதற்குக் காரணம் இரண்டும் ஒரே தன்மையனவா யிருத்தலே

யாகும்.



பின்னர் ஏகாரவிறுதியுள் அல்வழிப்புணர்ச்சியைப்பற்றி இரண்டு சூத்திரங்களிலும், வேற்றுமைப்புணர்ச்சியைப்பற்றி நான்கு சூத்திரங்களிலும் ஆசிரியர் உணர்த்தினர்.

**275.** ஏகார விறுதி யூகார வியற்றே.

பொ - ள். ஏகாரவிறுதிப்பெயர்

அல்வழிக்கண் ஊகாரவிறுதி

யின் தன்மைத்து, பின்னர்க் கசதப வரின்.

உ-ம். சேக்கடிது ..

பெயர், கசதபத்தோன்றின்,

வேற்றுமையல்வழி என்பன அதி

கரித்தன.

**276.** மாறுகோ ளெச்சமும்

வினவு மெண்ணுங்

கூறிய வல்லெழுத் தியற்கை யாகும்.

போ - ள். மாறுபாட்டினை எச்சமாகக் கொண்டதும், வினா,

எண் இப்பொருள்களில் வரும் ஏகாரமும் பின்னர் வல்லெழுத்து

வரின் இயல்பாகும்.

உ-ம். யானே கொண்டேன்..., நீயே கொண்டாய்..., கொற்

றனே சாத்தனே...

ஏகாரத்திற்கு மாறுகொளெச்சப்பொருள்"தேற்றம் வினவே..."

(சொல். 257) என்ற சூத்திரத்திற் கூறப்படாவிடினும், ஈண்டு அது

கூறப்பட்டமையின் அப்பொருளையும் ஏகாரத்திற்குக் கொள்க.

கூறிய என்றதனாற் பிரிநிலைப்பொருண்மைக்கண்ணும் ஈற்ற

சைக்கண்ணும் வரும் ஏகாரங்களின் இயல்புமுடிபு கொள்க

என்றனர் உரைகாரர்கள். "வினா, எண்" எனப் பிரித்து ஆசிரியர்

கூறினமையான், அவ்வழக்குக்கள் பிற்காலத்தில்

ஒற்றுமைப்போலி

யான் வந்தன வெனக் கொள்ளலாம்.

பா-ம். இளம். "மாறுகொ ளெச்சம்"

நச். "மாறுகோ ளெச்சம்"

இளம். க. பதி. "மாறுகோடலையுடைய"

இளம். சி. பதி. "மாறுபாடுகோடலையுடைய"

நச். ம. பதி. "கூறிய என்பதனால்"

நச். தா. சை. பதி. "கூறிய என்றதனால்"



**277.** வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

பொ - ள். ஏகாரவிறுதிப்பெயர் வேற்றுமைக்கண்ணும் பின் னர்க் கசதப வரின் ஊகாரவிறுதிப்பெயரின் தன்மைத்து.

உ-ம். வேக்குடம்....

பெயர், கசதபத் தோன்றின் என்பன அதிகரித்தன.

**278.** ஏயெ னிறுதிக் கெகரம் வருமே.

பொ-ள். ஏ என்ற இறுதிக்கு எகரம் வரும் கசதப பின்னர் வரின்.

உ-ம். எஎக்கொட்டில்.

கசதபத் தோன்றின் என்றது அதிகரித்தது. "உரையிற்கோடல் என்பதற்கு அவ்வகரப்பேறு பொருந்தினவழிக் கொள்க" என்றனர் இளம்பூரணர்.

**279.** சேவென் மரப்பெய ரொடுமர வியற்றே.

பொ-ள். சே என்ற மரத்தை யுணரும் பெயர் ஒடு என்ற மரத்தை யுணரும் பெயரோடு ஒருதன்மைத்து. அஃதாவது மெல் லெழுத்து மிகும்.

உ-ம். சேங்கோடு.

**280.** பெற்ற மாயின் முற்றவின் வேண்டும்.

**பொ-ள்.** சே என்பதற்குப் பெற்றம் என்ற பொருளா யின் வருகிற வல்லெழுத்தின் முன்னர் இன்சாரியை வரும்.

**உ-ம்.** சேவின்கோடு.

*பிற்காலத்து ஏனைய பொருள்களில் வரினும் அச்சொல் இன் சாரியை பெற்றதைக் காண்க.*

246

*ஏகாரவிறுதியின் பின்னர் ஐகாரவிறுதி வேற்றுமைப்புணர்ச்சி*

*யில் நேரும் மாறுதல்களை ஒன்பது சூத்திரங்களில் ஆசிரியர் உணர்த்தினர். அல்வழிப்புணர்ச்சியில் நேரும் மாறுதல்களை "வேற்றுமை யல்வழி...." (எழுத். 159) என்ற தொகைமரபுச்சூத்திரத்தில் ஆசிரியர் கூறியது காண்க.*

**281.** ஐகார விறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே.

போ-ள். ஐகாரவிறுதிப்பெயரின் பின்னர்க் கசதப வரின் வேற்றுமைப்புணர்ச்சியில் வல்லெழுத்து மிகும்.

உ-ம். பனைக்கொடி (புறநா. 58) ; யானையைக் கண்டான் *

கசதபத்தோன்றின் என்றது அதிகரித்தது.

**282.** சுட்டுமுத லிறுதி யுருபிய னிலையும்.

போ-ள். சுட்டை முதலாகவும் ஐகாரத்தை இறுதியாகவு முடைய சொற்கள் வேற்றுமைப்புணர்ச்சியில் உருபியலிற் கூறிய தன்மை பெறும் பின்னர்க் கசதப வரின்.

உ-ம். அவையற்றுக்கோடு.

அவற்றுக்கோடு முதலியவற்றை வகரவீற்றுச்சொற்களைப்பற்றிக் கூறும் "சுட்டுமுதலாகிய வகர விறுதி..." (எழுத். 380) என்ற சூத்திரத்தில் ஆசிரியர் உணர்த்தினமையான் ஈண்டு அவற்றை உரைகாரர்கள் கொள்ளுதல் வேண்டா.

ஐகாரம், வேற்றுமையாயின், கசதபத் தோன்றின் என்பன அதிகரித்தன.

* இதுபோன்றதையும் உருபுதொக்கதொகைமொழியிலுள்ள இரண்டு சொற்களுக்கு முன்னதையும், தொகையாகாதவிடத்து உருபு தொகு மிடங்களில் வருவனவற்றையும் வேற்றுமைப்புணர்ச்சியால் ஆசிரியர் கொண்டனர் எனக் கொள்வதே நேரிதாகும். நச்சினார்க்கினியர் யானையைக் கொணர்ந் தான் என்றதை உருபுபுணர்ச்சி எனக் கொண்டது நேரிதாகாது.

247

**283.** விசைமரக் கிளவியு ஞெமையு நமையும்
அவைமுப் பெயருஞ் சேமர வியல.

போ - ள். விசை, ஞெமை, நமை ஆகிய மரத்தை யுணர்த்தும் மூப்பெயரும் மரமுணர்த்துஞ் சேயின் தன்மையன ;

அஃதாவது மெல்லெழுத்து மிகும்.

உ-ம். விசைங்கோடு ... ஞெமைங்கோடு ...; நமைங்கோடு ... **284.** பனையு மரையு மாவிரைக் கிளவியும்

நினையுங் காலை யம்மோடு சிவணும்
ஐயே னிறுதி யரைவரைந்து கெடுமே
மெய்யவ ணொழிய வென்மனார் புலவர்.

பொ - ள். பனை, அரை ஆவிரை என்ற சொற்கள் வேற்றுமைப்புணர்ச்சியில் கசதப பின்னர் வரின், ஆராயுங்காலத்து அம் சாரியையோடு பொருந்தும். "அரை" என்ற சொல்லைத் தவிர்த்து ஏனைச்சொற்களில் மெய்யைவிட்டு ஐகாரங் கெடு மென்பர் புலவர்.

உ-ம். பனை + காய் = பனை + அம் + காய் = பன் + அம் + காய் = பனங்காய்; பனங்குடை (புறநா. 177) ஆவிரங் காய; அரையங்காய.

வேற்றுமையாயின், கசதபத் தோன்றின் எனபன அதிகரித்தன.

" நினையுங்காலை என்றதனாற் பிறவும் தூதுணை, வழுதுணை, தில்லை, ஓலை என வருவனவற்றிற்கும் அம்முக்கொடுத்து ஐகாரங்கெடுத்து தூதுணங்காய், வழுதுணங்காய், தில்லங்காய், ஓலம்போழ் என்று முடிக்க " என்றனர் உரைகாரர்கள். " கோடிமுன் வரினே..." (எழுத். 285) என்ற சூத்திரத்திலுள்ள அவண் என்றதனால் இளம்பூரணர் பனைத்திரள் என்ற வல்லெழுத்துப்பேற்றினைக் கொண்டனர். அதனை ஈண்டு நினையுங்காலை என்றதனாலும் வழுதுணங்காய் முதலியவற்றைக் "கிளந்தவல்ல. .." (எழுத். 483) என்ற புறனடைச் சூத்திரத்தானுங் கொள்ளலாகும்.

பா-ம்.

இளம். க. பதி. "மேற்கூறிய வல்லெழுத்து மிகா ஆராயுங் காலத்து ..."

இளம். சி. பதி. "ஆராயுங்காலத்து மேற்கூறிய வல்லெழுத்து மிகாது ...."

285\. பனையின் முன்ன ரட்டுவரு காலை
நிலையின் றாகு மையெ னுயிரே
ஆகாரம் வருத லாவயி னான.

போ - ள். பனை நிலைமொழியாயிருக்க, அட்டு வருமொழியாய் வரும்போது, ஐ என்ற உயிர்கெட்டு, அவ்விடத்து ஆகாரம் வரல் வேண்டும்.

உ-ம். பனை + அட்டு = பனாஅட்டு.

இச்சூத்திரவுரையில் "ஆவயின் என்றதனால் விச்சாவாதி என்றாற்போல்வனவற்றது வேற்றுமைமுடிபு கொள்க" என இளம்பூரண

ருரையிலுளது. அதனைச் "செய்யுண் மருங்கின்..." (எழுத். 289) என்ற சூத்திரத்தில் இளம்பூரணர் கூறியதாலும், நச்சினார்க்கினியர் அதனை ஆங்குக் கூறாது இச்சூத்திரத்துட் கூறினமையாலும், இத்தொடர் இளம்பூரணருரையில் இடைச்செருகல் என்பது விளங்கும்.

**286.** கோடிமுன் வரினே யையவ ணிற்பக்
கடிநிலை யின்றே வல்லெழுத்து மிகுதி.

**போ - ள்.** பனை என்றதின் பின்னர் கோடி என்ற சொல் வரின், அங்கு ஐ கெடாதுநிற்க, வல்லெழுத்து மிகுதி நீக்கப்படாது.

உ-ம் பனை + கோடி = பனைக்கோடி - (புறநா. 56).

"பனைத்திரள், பனைந்திரள் என்னும் உறழ்ச்சிமுடிவு தொகைமரபினுட் புறனடையாற்கொள்க அல்வழியுமாதலின்" என்றனர் நச்சினார்க்கினியர் "அவண் என்றதனல் பனைத்திரள் என வல்லெழுத்துப் பேறுங்கொள்க" என்றனர் இளம்பூரணர். உம்மையால் மெல்லெழுத்துப்பேறுங் குறிக்கப்பட்டதெனத் தோன்றுகின்றது, ஏனெனின், "அன்றி ஈண்டு அவணென்றதனுற் கொள்வாருமுளர்"

என நச்சினார்க்கினியர் கூறுகின்றனர்.

"பனைத்திரள்" என்றது எவ்வாறு அல்வழியாகும் என்பது ஆராய்தற்குரியது

• "கடிநிலை இலேசினானும் என்றதனான் இவ்வீற்றுள் எடுத்தோத்தானும் அம்முச்சாரியையும் பிறசாரியையும் பெற்றவழி இடைபுவல்லெழுத்து வீழ்க்க..." என்றனர் உரைகாரர்கள்.

பா-ம். இளம். க. பதி. "மேற்கெடுக்க எனப்பட்ட "

இளம். சி. பதி. "மேற்கெடு மெனப்பட்ட"

நச். ம. பதி. "மேலதைகாரங் கெடுத்து"

நச். தா. சை. பதி. 'மேல் ஐகாரங்கெடுத்து "

**287.** திங்களு நாளு முந்துகிளந் தன்ன.

போ - ள். திங்கள், நாள் இவற்றைக் குறிக்கும் ஐகாரவீற்றுப் பெயர் முன்னர்க் கூறப்பட்டனபோலாகும். அஃதாவது அவற்றைக் குறிக்கும் இகரவீற்றுப்பெயர்கள்போல முறையே "இக்கு" "ஆன்" என்ற சாரியைகளைப் பெறும்.

உ-ம். சித்திரை + கொண்டான் = சித்திரை + இக்கு + கொண் டான் = சித்திரைக்குக் கொண்டான் ; கேட்டை + கொண்டான் = கேட்டையாற்கொண்டான்.

ஐகாரவிறுதிப்பெயர் என்பது அதிகரித்தது.

"நாள் முற்கூறாது திங்கள் முற்கூறியவதனுல் கரியவற்றுக்கோடு எனவும், அவையத்துக்கொண்டான் எனவும், வழைங்கோடு, வழைக் கோடு எனவும், கலைங்கோடு கலைக்கோடு எனவும் இவ்வீற்று முடியாதனவெல்லாங் கொள்க" எனறனர் இளம்பூரணர். நச்சினார்க்கினிய ரும் அவரோடு உடன்பட்டனர்.

இவற்றைக் " கிளந்தவல்ல...." (எழுத். 483) என்ற புறநடைச் சூத்திரத்தாற் கொள்ளல் தகும்.

" ஐகாரவீறு இன்சாரியை பெறுதல் தொகைமரபினுட் கூறு மையின் ஈண்டுக்கொண்டாம் " என நச்சினார்க்கினியத்தி லுள்ளது.

வேற்றுமையல்வழியின்கண் ஐகாரவீற்றுப்பெயர்களின் செய்கைகள்

32

250

தொகைமரபினுட் கூறப்பட்டனவேயன்றி, வேற்றுமைப்புணர்ச்சியின் செய்கைகள் ஆங்குக் கூறப்படாமையின் இத்தொடர் இடைச்செருக லாயிருக்கலா மென்று தோன்றுகின்றது.

பா - ம்.

இளம். க. பதி. " அவ்வீற்று நாளுணர நின்ற பெயரும் "

இளம். சி. பதி. " அவ்வீற்று நாளை உணர நின்ற பெயரும் "

நச். ம. பதி. " ஒற்றுக்கெடுத்துச் செய்கை செய்தும் "

நச். தா. சை.பதி. " ஒற்றுக்கெடுத்தும் "

**288.** மழையென் கிளவி வளியிய னிலையும்.

போ - ள். *மழை என்ற சொல்லின் பின்னர் கசதப வரின், வளி என்ற சொல்லின் தன்மையைப் பெறும். அஃதாவது அத்து, இன்-இச்சாரியைகளைப் பெறும்.*

உ - ம். *மழையத்துக்கொண்டான், மழையிற் கொண்டான்,*

கசதபத்தோன்றின் என்பது *அதிகரித்தது.*

பா - ம். "இளம். க. பதி. "*எய்தியது விலக்கிப் பிறிதும்*"
இளம். சி. பதி. "*எய்தியது விலக்கிப் பிறிது விதியும்*"

**289.** செய்யுண் மருங்கின் வேட்கை யென்னும்
ஐயே னிறுதி யவாமுன் வரினே
மெய்யொடுங் கெடுதே லென்மனார் புலவர்
டகார ணகார மாதல் வேண்டும்.

போ-ள். *செய்யுளில் " வேட்கை " என்ற ஐகாரவிறுதிப்பெயரின் பின்னர் " அவா " என்றது வரின், ஐகாரம் அதன் முன்னருள்ள மெய்யொடுங் கெட, டகரவொற்று ணகரவொற்றும் எனக் கூறுவர்*

புலவர்.

உ - ம். வேணவா நலிய வெய்ய வுயிரா.

"வேணவா" என்றதை வேற்றுமைத்தொகையாக நச்சினார்க் கினியரும், உம்மைத்தொகையாக இளம்பூரணருங் கொண்டனர்.

251

வேற்றுமைத்தொகையதிகாரத்தில் இதனை ஆசிரியர் கூறினமையானும், அவ்வாறு கொள்ளுதல் பொருளுக்குப் பொருந்துதலானும் நச்சினார்க்கினியர்கொள்கையே சிறக்கும்.

"இவ்வல்வழியை வேற்றுமைமுடிபிற்கு முன் கூறுதலால் விச்சாவாதி என்றாற்போலவரும் உம்மைத்தொகையல்வழிமுடிபும், பாறங்கல் என இருபெயரொட்டல்வழி முடிபுங் கொள்க" என்றனர் இளம்பூரணர். "விச்சாவாதி" என்பது எவ்வாறு உம்மைத்தொகையாகும்? இவற்றைத் தொகைமரபி னிறுதியிற் கூறப்பட்ட புறனடைச்சூத்திரத்தாற் கொளல் தகும்.

பா-ம். இளம். க. பதி. "தனக்கு முன் வரின்

"

இளம். சி. பதி. " தனக்கு முன்னர் வரின் "

நச். ம. பதி. " ஒன்றாக "

நச். தா. சை. பதி. " ஒன்றாய் "

இனி நிலைமொழி ஒகாரமாயிருக்க நேரும் அல்வழிப்புணர்ச்சி மாறுதல்களை மூன்று சூத்திரங்களிலும் வேற்றுமைப்புணர்ச்சி மாறுதல்களை மூன்று சூத்திரங்களிலு மாசிரியர் கூறினர்.

**290.** ஓகார விறுதி யேகார வியற்றே.

பொ-ள். ஓகாரவிறுதிப்பெயர், பின்னர்க் கசதப வரின், அல்வழிக்கண் ஏகாரவிறுதிப்பெயரின் தன்மைத்து. அஃதாவது வல்லெழுத்து மிகும்.

உ-ம். ஓ + கடிது = ஓக்கடிது.

பெயர், வேற்றுமையல்வழி, கசதபத் தோன்றின் என்பன அதிகரித்தன.

பா-ம். இளம். க. பதி. " ஓகாரவீற்றுப்பெயர்ச்சொல்."

இளம். சி. பதி. "ஓகாரவீற்று அல்வழிப் பெயர்ச்சொல்"

பின்னருள்ள பாடத்தில் " அல்வழி " என்பது தவறாகும்.

நச். ம. பதி. "வல்லெழுத்து"

நச். தா. சை. பதி. "அவ்வல்லெழுத்து"

252

**291.** மாறுகோ ளெச்சமும் வினாவு மையமும்
கூறிய வல்லெழுத் தியற்கை யாகும்.

பொ - ள். மாறுபாட்டினை எச்சப்பொருளாகக் கொண்டதும், வினா, ஐயம் இப்பொருளில் வந்ததுமான ஓகாரவீற்றினைக் கொண்ட பெயர் நிலைமொழியாயிருக்கப் பின்னர்க் கசதபவரின், முற்கூறப் பட்ட வல்லெழுத்து இயற்கையாகும்.

உ - ம். யானோ கொண்டேன்? நீயோ கொண்டாய்? பத்தோ பதினொன்றோ?

ஓகாரவிறுதிப்பெயர் என்றது அதிகரித்தது.

"கூறிய என்றதனால் பிரிநிலை, தெரிநிலை முதலிய பொருளில் வரும் ஓகாரத்தை இறுதியாகக்

கொண்ட பெயரின்கண்ணும் இயற்

கைப் புணர்ச்சியாம்'' எனக் கூறினர் உரைகாரர்கள். அவை பிற்கா லத்து வழக்காகலின் அவற்றைக் கூறாது விடுத்தனர் ஆசிரியர் என்ன லாம்.

பா-ம். இளம். க. பதி. "தெரிநிலையும், எண்ணும்"

இளம். சி. பதி. "தெரிநிலையும், சிறப்பும், எண்ணும்"

நச். ம. பதி. "முடிபு கூறி"

நச். தா. சை. பதி. "முடிபு கூறலின்"

**292.** ஒழிந்தத னிலையு மொழிந்தவற் றியற்றே.

போ - ள். ஒழியிசைஒகாரத்தின் நிலையும் மேற்சொல்லி யொழிந்தவற்றின் தன்மையது.

உ - ம். கொளலோ கொண்டான்.

**293.** வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே
ஒகரம் வருத லாவயி னான.

போ - ள். ஓகாரவிறுதிப்பெயர் வேற்றுமைக்கண்ணும் அவ் வோகாரவிறுதிப்பெயரோடு ஒரு தன்மைத்தாம்; அவ்விடத்து ஒகரம் வருதல் வேண்டும்.

உ - ம். ஓஒக்கடுமை.

ஓகாரவிறுதிப்பெயர் என்றது அதிகரித்தது.

• பா - ம்.

. இளம். க. பதி. " அவ்வேகாரவீற்றல்வழியோடு
"

இளம். சி. பதி. "
அவ்வோகாரவீற்றல்வழியோடு" பின்னருள்ள பாடம்
அச்சுப்பிழை யாகும்.

**294.** இல்லொடு கிளப்பி னியற்கை யாகும்.
போ - ள். ஓகாரவிறுதிச்சொல்லை " இல்" என்ற
சொல்லோடு
கூறின் வேற்றுமைக்கண் புணர்ச்சி இயல்பாகும்.

உ-ம் கோ + இல் = கோஇல், கோயில், கோவில்.

" இல்லொடு " வருஞ்சொல் " கோ " என்ற சொல்லாதலின் உரையில் கோ என்ற சொல்லைக் கொண்டனர்.

பா-ம். இளம். க. பதி. " என்பது பெற்றும் "

இளம். சி. பதி. " என்பதனுற் பெற்றும் "

**295.** உருபிய னிலையு மொழியுமா ருளவே
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.

பொ ள். ஓகாரவிறுதிப்பெயருள் உருபிய னிலையி னுள்ள சொற்களு முள ; அவ்விடத்து வல்லெழுத்து மிகாது இயற்கையாகும். அஃதாவது ஒன்சாரியை பெறும்.

உ-ம். கோ+கை=கோஒன்கை

ஓகாரவிறுதிப்பெயர் என்றது அதிகரித்தது.

இச்சூத்திரம் எற்றுக்கு? இதனுற் கூறப்பட்டது " ஓகார விறுதிக் கோன்னே சாரியை (எழுத். 181) என்ற சூத்திரத்தாற்

பெறப்படாதா வெனின், பெறப்படா தென்க.
கோ என்றதின்,

பின்னர் வேற்றுமையுருபு வரும்போது,
இடையில் ஒன்சாரியை

* சூத்திரத்தில் எடுத்துக் கூறுதனவற்றை
உரையாற்கொள்ளல்

தகும். cf வ்யாவ்யாநதோ

விஶேஷப்ரதிபத்தி:, ந ஹி ஸந்தேஹாத் 254
அலக்ஷணம் (உ. ஸா 1, 1,1)

வருமென்றது அச்சூத்திரம். கோவினது கை என்ற சொற்கள் தொகையாம்போது கோ கை என்றிருக்க இடையில் இன்சாரியை வரும் என்றது இச்சூத்திரம். ஆகலின் இச்சூத்திரம் வேண்டுமென்க.

பா-ம். இளம். க. பதி. "இயல்பாம்"

இளம். சி. பதி. "இயல்பாய் முடியும்"

ஔகாரவிறுதிப்பெயர் நிலைமொழியாயிருக்க
நேரும் மாறுதல் களை ஒரே சூத்திரத்திற் கூறி
இவ்வியலை ஆசிரியர் முடித்தனர்.

**296.** ஔகார விறுதிப் பெயர்நிலை முன்னர்
அல்வழி யானும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத்து மிகுதல் வரைநிலை யின்றே
அவ்விரு வீற்றும் உகரம் வருதல்
செவ்வி தென்ப சிறந்திசி னோரே.

பொ - ள். ஔகாரவீற்றுப்பெயரின் பின்னர் கசதபவரின் அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் வல்லெழுத்து மிகுதல் நீக்கப்படாது. அவ்விரண்டு கூறுபாட்டின்கண்ணும் இடையில் உகரம் வருதல் செவ்விதெனப் புலவர் கூறுவர்.

உ - ம். கௌவுக்கடிது...கௌவுக்கடுமை.

"செவ்விது என்றதனுன் மென்கணத்துக்கண்ணும் இடைக் கணத்துக்கண்ணும் இருவழியும் உகரப்பேறு கொள்க..." என்றனர் உரைகாரர்கள்.

உயிர்மயங்கியல் முற்றும்.

# 8. புள்ளிமயங்கியல்.

எழுத்ததிகாரமுதற்சூத்திரத்தில்
உயிர்களை முன்னரும்
மெய்களைப் பின்னரும் ஆசிரியர் கூறினமையான்,
நிலைமொழி உயிரீ
றாக விருக்க நேரும் மாறுதல்களை
உயிர்மயங்கியலின் கண் கூறி, அதன்
பின்னர் நிலைமொழி மெய்யீறாக விருக்க
அம்மெய்க்கு நேரும் மாறு
தல்களைப் புள்ளிமயங்கியலின்கண்
உணர்த்தினர். புள்ளி என்
றது மெய், சார்பெழுத்துக்கள் இவற்றிற்குப்
பொதுப்பெயராக
வழங்கலாமாயினும், சார்பெழுத்துக்களுள்
குற்றியலுகரமே மொழி
யின் இறுதியில் வருதலானும், நிலைமொழியீறு
குற்றியலுகரமா
யிருக்க நேரும் மாறுதல்களைத் தனியாகக்
குற்றியலுகரப்புணரிய

லின்கண் ஆசிரியர் கூறினமையானும்,
புள்ளிமயங்கியல் என்ற
விடத்துள்ள புள்ளி என்றதற்கு மெய்
என்பதே பொருளாகும்.
வல்லெழுத்துக்கள் மொழியினிறுதியில் வாரா
என்பது
ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள
வென்னும் —
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி
(எழுத். 78)
என்ற சூத்திரத்தான் விளங்கும். ஆகலின்
நிலைமொழியீறுகள்
அப்பதினொன்றாயிருக்க நேரும் மாறுதல்களை
ஈண்டுக் கூறும்போது,
ஞ், ந், ண், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் இவை
நிலைமொழியீறா யிருக்க
நேரும் மாறுதல்களை 2, 4, 8, 22, 24, 5, 4, 12,
6, 13, 10 சூத்தி
ரங்களில் முறையே உணர்த்தினர்.
ஞகாரவிறுதிக்கு அல்வழிக்கண்ணும்

வேற்றுமைக்கண்ணும் வரும்
மாறுதல்களை இரண்டு சூத்திரங்களில் ஆசிரியர் கூறினர்.

**297.** ஞகாரை யொற்றிய தொழிற்பெயர் முன்னர்
அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத் தியையி னவ்வெழுத்து மிகுமே
உகரம் வருத லாவயி னான.

போ - ள். ஞகாரவிறுதித்தொழிற்பெயரின் பின்னர் வல்லெழுத்து வரின் அல்வழிப்புணர்ச்சிக்கண்ணும் வேற்றுமைப் புணர்ச்சிக்கண்ணும் அவ்வல்லெழுத்து மிகும். அவ்விடத்து உகரம் வருதல்வேண்டும்.

உ - ம். உரிஞ்+கடிது=உரிஞுக்கடிது; உரிஞுக்கடுமை...

ட, ற இவை மொழிமுதலாகாமையின் வல்லெழுத்து என்றுரேனும் கசதபக்களே கொள்ளல் வேண்டும்.

பா - ம்.

இளம். க. பதி.

" அல்வழிக்கண்ணும்...வருமொழியாயின் "

இளம். சி. பதி. " அல்வழியைச் சொல்லுமிடத்தும்...வருமொழியாயினையின் ".

**298.** ஞநமவ வியையினு முகர நிலையும்.

போ - ள். ஞகாரவீற்றுத்தொழிற்பெயரின் பின்னர் ஞ், ந், ம், வ் இவை வரினும் இருவழிக்கண்ணும் உகரம் நிலைபெறும்.

உ - ம். உரிஞு ஞான்றது...,உரிஞு ஞாற்சி...

ஞகாரை யொற்றிய தொழிற்பெயர் முன்னர்,

அல்லது கிளப் பினும், வேற்றுமைக்கண்ணும் என்பன அதிகரித்தன.

வருமொழிமுதலில் யகரமும் உயிரும் வருவழி இயல்பு புணர்ச் சியாகு மென்பது " உகரமோடே... " (எழுத். 164) என்ற சூத் திரத்திற் கூறப்பட்டது.

இனி நகரவிறுதிக்கு அல்வழியில் நேரும் மாறுதல்களை ஒரு சூத் திரத்தின்கண்ணும், வேற்றுமைவழியில் நேர்வனவற்றை மூன்று சூத்திரங்களின்கண்ணும் உணர்த்தினர் ஆசிரியர்.

**299** நகர விறுதியு மதனோ ரற்றே.

போ - ள். நகரவீற்றுப்பெயரும் வருமொழிமுதலில் வல்லெழுத்தும் ஞநமவ இவையும் வருமிடத்து இருவழிக்கண்ணும் ஞகரவீற்றுப்பெயரின் தன்மைத்து.

உ - ம்.
பொருநுக்கடிது...;பொருநு ஞான்றது... ; பொருநு வலிது.

அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்,
வல்லெழுத்து, ஞ ந ம வ இயையின் என்பன
அதிகாரிக்கண.

257

ஈண்டு வேற்றுமை மொழித்து மாட்டேறு சென்றதென் றுணர்க " என்று நச்சினார்க்கினியத்திலுளது. அவ்வாறாயின் வருஞ் சூத்திரத்தில் " உக்கெட" என்று வருதலின் அத்தொடர் தவறாக எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.

ஞகரவிறுதியின் பின்னர் ணகரவிறுதியைக் கூறாது ஏன் நகர விறுதியைக் கூறின ரெனின், ஞகரவிறுதிநகரவிறுதிகளின் செய்கைகள் பெரும்பாலும் ஒத்திருக்கின்றமையான் எனக் கூறினர் உரை காரர்கள்.

பா - ம்.
நச். ம. பதி. " வல்லெழுத்து "
நச். தா. சை. பதி. " அவ்வல்லெழுத்து "
**300.** வேற்றுமைக் குக்கெட வகர நிலையும்.

போ - ள். நகரவிறுதிப்பெயரின் பின்னர் வல்லெழுத்தும் ஞ ந ம வ இவையும் வரின் வேற்றுமைக்கண், உகரங்கெட அகரம் வரும்.

உ - ம்.

பொருநக்கடுமை..., பொருநஞாற்சி...பொருநவன்மை.

நகரவிறுதி, வல்லெழுத்து, ஞ ந ம வ இவை அதிகரித்தன.

முற்சூத்திரத்தால் வேற்றுமைவழி விதிக்கப்பட்ட உகரம் கெடுமென்றும் அவ்விடத்து அகரம் வருமென்றும் இச்சூத்திரத்திற் கூறினர் ஆசிரியர்.

" அகரம் நிலையும் என்னாது உகரங்கெட என்றதனுன் அவ்விரு வீற்றின் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்வுஞ் சிறுபான்மை உகரப்பேறுங் கொள்க"

என்றனர் உரைகாரர்கள்.

இவ்வாறு அவர் கூறியதற்குக் காரணம் "

நகரவிறுதியும்...'' (எழுத். 299) என்ற சூத்திரம் அல்வழியைப்பற்றி மாத்திரங் கூறு கிறதெனக் கொண்டதே யாகும். அச்சூத்திரம் இருவழியைப் பற்றிக் கூறுகின்றதென்றும், இச்சூத்திரம் வேற்றுமைவழிக்கண்

33



ணுள்ள சிறப்பினைக் கூறுகின்றதென்றுங் கொள்ளின் உக்கெட என்றது சூத்திரத்துள் இருத்தல் வேண்டும். அவ்வாறாயின் இயைபு வல்லெழுத்தின் வீழ்வு எதனாற் பெறப்படுமெனின் "யரழ..." (எழுத். 48) என்ற சூத்திரத்தாற் கொள்ளப்படுமென்று பலமுறை யுங் கூறப்பட்டது. "பொருநச் சென்ற" (அகம். 65) என்ற விடத்து உகரச்சாரியை எவ்வாறு

வருமெனின், அது பிற்கால்
வழக்கெனக் கொள்க. ஆசிரியர்காலத்தே அவ்வழக்கு இருந்திருப்
பின் "அகர நிலையும்" என்றவிடத்து "உம்மை" தொக்கது
எனக் கொள்க. இச்சூத்திரத்தில் வேற்றுமைக்கு என்றது வேற்று
மைக்கண் என்ற பொருளில் வந்தது.

பா-ம்.

நச். ம. பதி.

"அகரம் நிலைபெற்றுப் புணரும் ... போருதுதல்"

நச். தா. சை. பதி. "அகரத்தோடு நிலைபெற்றுப் புணரும் ...
போருந்துதல்." முன்னுள்ள பாடமே சிறக்கும்.

**301.** வேரிநே னிறுதி முழுதுங் கெடுவழி
வருமிட னுடைத்தே மெல்லெழுத் தியற்கை.

போ - ள். வெரிந் என்ற சொல்லின் இறுதி முழுவதுங் கெடும் போது, மெல்லெழுத்து வருமிடனை உடைத்து.

உ-ம். வெரிந் + குறை = வெரிங்குறை...

முழுதும் என்றது வேண்டாமெனின், அற்றன்று. நகரவிறுதி யைப்பற்றிப் பொதுவாக முன்னருள்ள சூத்திரங்களிற் கூறப்பட்ட மையான், வெரிந் என்ற சொற்குப் பின்னர் உகரம் வரும். அப் போது "வெரிநெனிறுதி" என்ற சொல்லான் உகரம் மாத்திரங்
கெடும் என்றது பெறப்படலாகும். நகரமும்
உகரமுங் கெடும் என்
பதை உணர்த்தவே ஆசிரியர் முழுதும் என்ற சொல்லைக் கூறினரெனக.

இச்சூத்திரத்தான் சிலவிடங்களில் "வெரிநு" என்றதின் ஈற்றெழுத்து கெடுமென்பதும், அவ்விடத்து வருமொழிமுதலிற் கேற்ற மெல்லெழுத்து வருமென்பதும் உணர்த்தப்பட்டன.

பா-ம். இளம். க. பதி. "சொல்லப்பட்ட"
இளம். சி. பதி. "சொல்லப்படும்"
நச். ம. பதி. "பசுங்கோடை"
நச். தா. சை. பதி. "பசுங்குடை"

**302.** ஆவயின் வல்லெழுத்து மிகுதலு முரித்தே.

பொ-ள். அவ்விடத்து வல்லெழுத்து மிகுதலும் உரித்தானது.

உ-ம். வெரிக்குறை ..

இனி ணகரவிறுதிக்கு வேற்றுமைக்கண் நேரும் மாறுதல்களை 303, 304, 305, 306, 308-ஆவது சூத்திரங்களிலும் இருவழிக் கண்ணுமுள்ளவற்றை 307, 310-ஆவது சூத்திரங்களிலும், அல்வழிக்கண்ணுள்ளவற்றை 309-வது சூத்திரங்களிலுங் கூறினர்.

ஏனைய விடங்களிற் கூறியவாறு அல்வழியின்கண்ணுள்ளவற்றை ஏன் தொடக்கத்தில் ஆசிரியர் கூறிற்றிலரெனின்,

அவற்றை "மொழி

முதலாகும்..." (எழுத். 148) என்ற சூத்திரத்திற் கூறினமையா னென்க. வேற்றுமைக்கண் மெல்லெழுத்து வருமொழிமுதலில்

வந்தவழி உள்ள மாறுதல்களை ஏன் ஈண்டுக்

கூறிற்றிலரெனின்,

அவற்றை "வேற்றுமைக்கண்ணும்..." (எழுத். 149)

என்ற சூத்திரத்திற் கூறினமையா னென்க.

**303.** ணகார விறுதி வல்லெழுத் தியையின்
டகார மாகும் வேற்றுமைப் பொருட்கே.

பொ - ள். ணகாரவீற்றுப்பெயரின் பின்னர்

வல்லெழுத்து வரின்,

வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கண், ணகரம்

டகரமாகும்.

உ - ம். முக்கட் செல்வர் (புறநா. 6)

பெயர், முன்னர் என்பன அதிகரித்தன.

அன்மொழித்தொகையாகிய ணகாரவீறுதி டகாரமாகும் என்றுரேனும், ஈற்றெழுத்தாகிய ணகரமே டகரமாகு மென்க.

260

**304.** ஆணும் பெண்ணு மஃறிணை யியற்கை.

போ - ள். ஆண், பெண் இவை அஃறிணையாயிருப்பின், பின்னர் வல்லெழுத்துவரின் வேற்றுமைவழி புணர்ச்சி இயல்பாகும்.

உ - ம். ஆண்கை....

முன்னர், வல்லெழுத்தியையின், வேற்றுமைப்பொருட்கு என்பன அதிகரித்தன.

அஃறிணையியற்கை என்றதற்கு அஃறிணைப்பெயர் முடிந்த இயல்புபோல் இயல்பாய் முடியும் என உரைகாரர்கள் பொருள் கூறினர் "மொழிமுதலாகும்..." (எழுத். 148) என்ற சூத்திரத்தில் அல்வழிக்கண் திரிபில்லை எனக் கூறப்பட்டதேயன்றி வேற்றுமைக்

கண் கூறப்படாமையானும், அங்கு அஃறிணை எனச் சிறப்பித்துக் கூறப்படாமையானும், "அஃறிணை விரவுப்பெயர்..." (எழுத். 156) என்ற சூத்திரத்தில் இயல்பிணை உறழ்ச்சியாய்க் கூறப்பட்டமையா னும், ணகரவிறுதிப்பெயர்களாகிய ஆண், பெண் என்பன அஃறிணை யாயின் இயல்பே புணர்ச்சியாம் என ஆசிரியர் கருதினமையானும், அவர் கூறும் பொருள் பொருத்தமின்று. ஈண்டு "அஃறிணை" எனக் கூறினமையான் உயர்திணையாயிருக்குமிடத்து வேற்றுமை வழி திரிபு உளது என்னலாம். அதற்கு "ஆண்டலைக் கொடியொடு" (திருமுரு. 227, பா-ம்) என்பது உதாரணமாகும். ஆகலின் "மற்றிது தொகைமரபினுள் அஃறிணைவிரவுப்பெயர் என்பதனுள் இயல் பாய் முடிந்ததன்றே எனின்" என்று ஐயமெழுப்பியதும்பொருந்தா தென்க.

**305.** ஆண்மரக் கிளவி யரைமர வியற்றே.

பொ - ள். ஆண் என்ற மரத்தை யுணர்த்துஞ் சொல், பின்னர் வல்லெழுத்து வரின், வேற்றுமைவழி அரை என்ற மரத்தை

யுணர்த்துஞ் சொல்லோடு ஒருதன்மைத்து. அஃதாவது "அம்" சாரியை பெறும்,

உ-ம். ஆணங்கோடு.

முன்னர், வல்லெழுத்து, வேற்றுமைப்பொருட்கு கரித்தன.

என்பன அதி

261

"ஒன்றென முடித்தலான் இயல்பு கணத்துங் கொள்க, ஆணார், இலை எனவரும்" என்றனர் நச்சினார்க்கினியர்.

பா-ம். நச். ம. பதி. "ஆணென்னு மரத்தினை."

நச். தா. சை. பதி. "ஆண்பாலை யுணர்த்தாது ஆணென்னும் மரத்தினை"

**306.** விண்ணென வரூஉங் காயப் பெயர்வயின்

உண்மையு முரித்தே யத்தேன் சாரியை
செய்யுண் மருங்கிற் றேழில்வரு காலை.

போ - ள். ஆகாயம் என்ற பொருள்கொண்ட விண் என்ற சொல்லின் பின்னர் வல்லெழுத்து முதலாகிய வினைச்சொல் வருங் காலத்துச் செய்யுளின்கண் அத்துச்சாரியை உளது முண்டு.

உ-ம். விண்ணத்துக் கொட்கும்.

ஆகாயம் என்றது காயம் எனத் திரிந்தது.

"விண்வத்துக் கொட்கும் என உடம்படுமெய் புணர்ந்து நிற்ற லுங் கொள்க" என்றனர் நச்சினார்க்கினியர். விண், அத்து, கொட் கும் என நிற்கும்போது ணகரவொற்றிற்கும் அகரத்திற்கும் இடை யில் வகரம் வருதற்கு இடமின்மையான், ணகரத்திற்குப் பிரதியாக
வகரம் பிற்காலத்து வந்திருத்தல் வேண்டும். ஆகலின் அதனை நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்திற் கொள்ளாது "உணரக் கூறிய..." எழுத். 406) என்ற சூத்திரத்திற் கொண்டிருப்பின் நலம்.

உம்மையால் சாரியை வாராமையே பெரும்பான்மை.

உ-ம். விண்பொருபுகழ் (புறநா. 1). பா-ம்

இளம். க. பதி. "விண்ணத்து நீள்வரை".

இளம். சி. பதி. "விண்குத்து நீள்வரை"

நச். ம. பதி. "விண்ணத்து நீள்வரை"

நச். தா. சை. பதி, "விண்குத்து நீள்வரை"

## 262

**307.** தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல

போ-ள். ணகரவீற்றுத்தொழிற்பெயரெல்லாம் இருவழிக்கண்ணும் பின்னர் வல்லெழுத்து வரின் ஞகரவீற்றுத்தொழிற்பெயரின் தன்மையன.

உ - ம். மண்ணுக்கடிது. ..,

டண்ணுக்கடுமை..., என்னு

முறை (சொல் 44)

ணகாரவிறுதி, அல்லது கிளப்பினும் வேற்றுமைக்கண்ணும்,

முன்னர், வல்லெழுத்தியையின் டகாரை யொற்றிய தொழிற்பெயர்

என்பன அதிகரித்தன.

"எல்லாம் என்றதனுன்

தொழிற்பெயரல்லனவும் உகரமும்

வல்லெழுத்தும் பெறுவன கொள்க" என்றனர் உரைகாரர்கள்

அவற்றை "ஒத்தவெண்ணு முன்வருகாலை" (எழுத். 317) என்ற

ஆசிரியர்வழக்காற் கொள்ளல் தகும்.

**308.** கிளப்பெய ரெல்லாங் கொளத்திரி பிலவே.

பொ-ள்.

ணகரவீற்றினப்பெயரெல்லாம் வேற்றுமைவழி கொள்ளக்கூடிய திரிபை உடையனவல்ல

உ-ம். உமண்குடி....

ணகாரவிறுதி என்பது அதிகரித்தது.

" எல்லாம் என்றதனுன் இவ்வீற்றுச்சாரியை பெற்று முடிவன வும் இயல்பாய் முடிவனவுங் கொள்க. மண்ணக்கடி...எனவும் வரும்" என்றனர் உரைகாரர்கள். இவற்றை இறுதிப்புறனடைச்சூத்திரத் தாற் கொள்ளின் நலம்.

" கொள என்றதனுன் இவ்வீற்று ஏழாம் வேற்றுமைப் பொருண்மை உணர நின்ற இடைச்சொல் திரிந்து முடிவன கொள்க. அங்கட் கொண்டான்..." என்றனர் உரைகாரர்கள். " கண்" என்ற சொல் இடத்தை யுணர்த்தும் பெயராகவு மிருத்த லானும், அகரம் முதலிய சுட்டு பெயரோடுதான் புணருமாகலா

னும், "அங்கண்" முதலியவற்றை "அங்கண் கண்" என்ற பொருளில் வந்த ஏழாம்வேற்றுமையுருபுதொக்க பெயர் எனக் கொளின், அங்கட் கொண்டான் முதலியன "ணகார விறுதி..." (எழுத். 303) என்ற சூத்திரத்தானே பெறப்படும்.

இச்சூத்திரம் வேற்றுமைப்புணர்ச்சியில் நேரும் மாறுதலைக் கூறுகின்றமையானும், "தொழிற்பெயரெல்லாம்..." என்ற முற்சூத்திரம் இருவழியின்கண்ணும் நேரும் மாறுதலைக் கூறுகின்றமையானும் "வேற்றுமை யல்வழி..." (எழுத். 309) என்ற வருஞ் சூத்திரம் அல்வழியைப்பற்றிக் கூறுகின்றமையானும் இச்சூத்திரத்திற்குப் பின்னும், "வேற்றுமை யல்வழி..." என்ற சூத்திரத்திற்கு முன்னும் "தொழிற்பெய ரெல்லாம் .." என்ற சூத்திரத்தை ஆசிரியர் கூறியிருப்பாரோ என்ற ஐய முண்டாகின்றது.

**309.** வேற்றுமை யல்வழி யெண்ணே
ணுணவுப்பெயர்
வேற்றுமை யியற்கை நிலையலு முரித்தே.

போ - ள். எண் என்ற உணவை யுணர்த்தும் பெயர் பின்னர் வல்லெழுத்து வரின், வேற்றுமையல்வழிக்கண் வேற்றுமைவழிக்கண்ணுள்ள தன்மையைப் பெறுதலு முரித்து. உம்மையான் இயல்பு புணர்ச்சியே பெரும்பான்மை

யாகும்.

உ-ம். எட்கடிது....

முன்னர், வல்லெழுத்தியையின் என்பன அதிகரித்தன.

எட்கடிது என்றதை எண் கடிது எனப் பிரிக்காது, எள் கடிது எனப் பிரித்தமையான் எள் என்ற சொல் பிற்காலத்து வந்ததோ என்ற ஐயமுண்டாகின்றது.

**310.** முரணேன் றொழிற்பெயர் முதலிய னிலையும்.

பொ - ள், " முரண் " என்ற தொழிற்பெயரின் பின்னர் வல் லெழுத்து வரின் அது முதலிற் கூறப்பட்ட தன்மையில் நிலைக்கும்.

முதல் என்றதனுன் "மொழி முதலாகும்... " (எழுத். 1[illegible]8) என் றதும் "ணகார விறுதி..." (எழுத். 303) என்றதுங் கொள்ளப்படும்.

ஆகலின் அல்வழிக்கண் இயல்பும், வேற்றுமைவழி ணகரம் டகரமாய் மாறுதலுங் கொள்ளப்படும்.

உ-ம். முரண் சடிது...; முரட் கடுமை...

" இதனைத் தொழிற்பெயரெல்லாம் ....என்பதன் பின் வையாத முறையன்றிய கூற்றினான் முரண்கடுமை என்னு மியல்பும் அரண் கடுமை அரட் கடுமை என்னும் உறழ்ச்சியுங் கொள்க" என்றனர் உரைகாரர்கள். அவை பிற்காலத்துவழக்குப் போலும்.

இனி, நிலைமொழி மகரவீறாயிருக்க வேற்றுமைவழி நேரும் மாறுதல்களை 311, 312 313, 314, 321 325, 326 330, 332 ஆகிய ஒன்பது சூத்திரங்களிலும், அல்வழியில் நேரும் மாறுதல்களை 315, 316, 317, 318, 319, 320, 322, 327, 329, 331 ஆகிய பத்து சூத்திரங்களிலும், இருவழியும் நேரும் மாறுதல்களை

323, 324, 328 ஆகிய மூன்று சூத்திரங்களிலும் ஆசிரியர் உணர்த்தினர்.

**311.** மகர விறுதி வேற்றுமை யாயின்
துவரக் கெட்டு வல் லெழுத்து மிகுமே.

போ - ள். வேற்றுமைவழி, மகரவிறுதிப்பெயரின் பின்னர் வல்லெழுத்து வரின், அவ்விற்றுமகரம் முழுமையுங் கெட வல் லெழுத்து மிகும்.

உ - ம். வாரணக்கொடியொடு (திருமுரு. 219) குன்றகச் சிறுகுடி (திருமுரு. 196); மகரப்பகுவாய் (திருமுரு. 25)

பெயர், வல்லெழுத்தியையின் என்பன அதிகரித்தன.

" துவர என்றதனான் இயல்புகணத்துக்கண்ணும் உயர்திணைப் பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் மகரக்கேடு

கொள்க. டமர ஞாண், நூல், டணி..., நங்கை, எங்கை..., நுங்கை, தங்கை எனவும் வரும்" என்றனர் உரைகாரர்கள்.

உரையசைக் கிளவியு ஞாங்கர்க்கிளந்த (எழுத். 205)

அதன்குண நுதலி
குறிப்பினு மெய்ம்மையான்
(எழுத். 416)
(சொல். 427)

265

முதலிய விடங்களில் ஆசிரியர் மகரக்கேடு கொண்டிருக்கின்றமையான் அவற்றாலே இயல்புகணத்துக்கண் மகரக்கேட்டினைக் கொள்ளல் தகும். "படர்க்கைப் பெயரும்..." (எழுத். 321). "நும்மெ னொருபெயர்..." (எழுத். 326) என்ற சூத்திரங்களில் உயர்திணைப்பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் மெல்லெழுத்துமிகுதி கூறியிருக்கின்றமையான், அம்மெல்லெழுத்துமிகுதி மகரக்கேடின்றி இயலாமையான், அச்சூத்திரங்களால் மகரக்கேடு பெறப்படும் எனக் கொள்ளலுந் தகும். அவ்வாறாயின் இச்சூத்திரத்தின்கண் "துவர" என்ற சொல்

எற்றுக்கு எனின், வகரத்தின் முன்னர் மகரம் குறுகுமோ, அவ்வாறின்றி முழுமையுங் கெடுமோ என்ற ஐயம் நீக்குதற்கு என்னலாம்.

312. அகர ஆகாரம் வரூஉங் காலை
ஈற்றுமிசை யகர நீடலு முரித்தே.

பொ - ள். வருமொழிமுதலில் அ, ஆ இவை வருமிடத்து மகரவீற்றின் முன்னருள்ள அகரம் நீடலு முரித்து. உம்மையான் நீளாதிருத்தலே பெரும்பான்மையாகும்.

உ - ம். மரம் + அடி = மராஅடி; மரவடி,
குளம் + ஆம்பல் = குளாஅம்பல், குளவாம்பல்.

குளாஆம்பல் என்றது குளாஅம்பல் எனத் திரிந்தது. " வருமொழி முற்கூறியவதனான் இவ்வீற்றுட் பிறவும் வேறுபாட்டின் முடிபு

கொள்க, கோணகோணம், கோணவட்டம் எனவரும்; முன்னர்ச் செல்வழியறிதல் என்பதனால் குளாஅம்பல் என்புழி வருமொழி ஆகாரக்குறுக்கமும், கோணகோணம் என்புழி வருமொழிவல் லெழுத்துக்கேடுங் கொள்க” என்றனர் உரைகாரர்கள். இவற்றை இறுதிப்புறனடைச்சூத்திரத்தாற் கொள்ளலாம்.

பா - ம். நச். ம. பதி. “இவ்வீற்றுட்பிறவும்”
நச். தா. சை. பதி. “இவ்வீற்றுப்பிறவும்”

**313.** மெல்லெழுத் துறழு மொழியுமா ருளவே
செல்வழி யறிதல் வழக்கத் தான.

**266**

போ - ள். மகரவீற்றுச்சொற்களுள், அவற்றின் பின்னர் வல்லெழுத்து வந்துழி, மகரங்கெட்டு மெல்லெழுத்து உறழ்ச்சியாக மிகும் மொழிகளும் உள. அவற்றை வழக்கத்தின்கண் வருகின்ற விடத்து அறிதல்வேண்டும்.

உ - ம். குளம் + கரை = குளங்கரை, குளக்கரை...

மகரவிறுதி, வல்லெழுத்தியையின் என்பன அதிகரித்தன. "செல்வழியறிகல் என்றதனுல் குளங்கரை, குளக்கரை என்றது போல வல்லன ஒத்த உறழ்ச்சியல்ல வென்பது கொள்க" என்றனர் உரைகாரர்கள்

"வழக்கத்தான என்றதனுன் இவ்வீற்றுவேற்றுமைக்கண் முடியாதனவெல்லாம் முடித்துக்கொள்க" என்றனர் இளம்பூரணர். இதனை இறுதிப்புறனடைச்சூத்திரத்தாற் கொளல் தகும். "வழக்கத்தான என்றதனுன் குளத்துக்கொண்டான், ஈழத்துச்சென்றான், குடத்துவாய், பிலத்துவாய் என்றாற்போல்வன மகரங்கெட்டு அத்துப் பெற்றன. இவை அத்தேவற்றே என்பதனுன் ஒற்றுக்கெடாதாயிற்று, அஃது அல்வழிக்குக் கூறுதலின்" என நச்சினர்க்கினியர் கூறினர். அத்து, வற்று முதலிய சாரியைகள் பெயர்க்கும் வேற்றுமையுருபிற்கும் இடையில் வருமாகலானும், குளத்துக்கோண்டான் ஈழத்துச் சேன்றான் என்பன குளத்துக்கண் கோண்டான், ஈழத்துக்கண் சேன்றான் என்பனவற்றின் திரிபெனக் கூறலாமாகலானும் குடத்துவாய், பிலத்துவாய் என்பன குடத்தினதுவாய்,பிலத்தினதுவாய் என்பனவற்றின் திரிபெனக் கூறலாமாகலானும், அவர் அவ்வாறு கூறவேண்டுவதின்று.

நிலத்துக்கடந்தான் முதலியவற்றை "மருதத்துப்புறனே" (புறத். 9) "அங்காத்தெழுகிய" (கற்பியல். 5) முதலிய ஆசிரியர் வழக்காற் கொள்க.

பா-ம். நச். ம. பதி. "சிறப்பு விதி"

நச். தா. சை. பதி. "சிறப்பு விதி கூறுகின்றது"

**314.** இல்ல மரப்பெயர் விசைமர வியற்றே.

பொ. ள். இல்லம் என்ற மரத்தினை யுணர்த்தும் பெயர், பின்னர் வல்லெழுத்து வரின் விசைமரத் தன்மையது. அஃதாவது மெல்லெழுத்து மிகும்.



உ-ம். இல்லங்கோடு.

ஈண்டு மகரக்கேட்டினை "அல்வழி யெல்லாம்..." (எழுத். 315) என்றவிடத்துள்ள எல்லாம் என்றதனான் இளம்பூரணரும் "மெல் லெழுத் துறழு. . ." என்ற சூத்திரத்துள்ள வழக்கத்தான் என்றதனான் நச்சினார்க்கினியருங் கொண்டனர்.

மகரத்தின் பின்னர் மெல்லெழுத்து வாராதென்பது ஙஞண நமன வெனும்... (எழுத்.

25) முதலிய நான்கு சூத்திரங்களாற் பெறப்படுகின்றமையானும், இச்சூத்திரத்துள் மெல்லெழுத்து மிகும் என்பது கூறப்படுகின்றமையானும், மகரக்கேடு பெறப்படுகின்றது எனக் கொள்ளுதல் சாலும்.

**315.** அல்வழி யெல்லா மெல்லெழுத் தாகும்.

போ-ள். அல்வழிக்கண் மகரவீறெல்லாம், பின்னர் மெல் லெழுத்து வரின் இனமெல்லெழுத் தாகும்.

உ-ம். மணங்கமழ் தெய்வத்திள நலம் (திருமுரு. 2:0) ; தெய்வஞ் சான்ற (திருமுரு. 287).

ஈண்டு மெல்லெழுத்து எனப் பொதுப்படக் கூறப்படினும்' சகரத்தின் முன்னர் ஙகரம் வருமென்பது "கசதப முதலிய... , (எழுத். 144) என்ற சூத்திரத்தாற் பெறப்படும்.

" எல்லாம் என்றதனான் இவ்வீற்று அல்வழி

முடிவில் முடியா தனவெல்லாங் கொள்க. மரஞான்றது, நீண்டது மாண்டது எனவும், வட்டத்தழை, வட்டப்பலகை எனவும், கலக்கொள், கலநெல் எனவும், நீலக்கண், பவளவாய் எனவும், நீலநீர் எனவும், கொல்லுங் கொற்றன், பறக்குநாரை எனவும், வரும்" எனக் கூறினர் இளம் பூரணர். கொல்லுங்கொற்றன் என்பது இச்சூத்திரத்தானும் மரதி ஞான்றது முதலியன " சகார ஞகாரம் " (எழுத். 90), அளவு நிறை யும் (எழுத். 320), " எல்லா மேல்லெழுத்தாகும்." (எழுத். 305) முதலிய ஆசிரியர்வழக்குக்களாலும், வட்டத்தழை சலக்சொள் கொல்லுங்கொற்றன் முதலியன " ஐம்பா லறியும் பண்புதொகு மொழியும்—செய்யுஞ் செய்தவென்னுங் கிளவியின் " (எழுத். 482) என்ற சூத்திரத்தானும், நீலக்கண், பவளவாய், நீலநீர் முதலியன

'கிளந்த வல்ல...' (எழுத். 483) என்ற புறனடைச்சூத்திரத்தானுங் கொள்ளுதல் தகும். நச்சினார்க்கினியத்தில், "எல்லாருங் குறியர் நாங்குறியேயர் இவை உயர்திணைப்பெயர் மகரந்திரிந்து மெல்லெழுத்தாய் முடிந்தன" என்று உளது. இஃதே "அல்லது கிளப்பின்..." (எழுத். 322) என்ற சூத்திரத்திலும் உளது. இங்கு அஃது இடைச்செருகலா யிருத்தல் கூடும்.

**316.** அகமேன் கிளவிக்குக் கைமுன் வரினே
முதனிலை யொழிய முன்னவை
கெடுதலும்
வரைநிலை யின்றே யாசிரி யர்க்க
மெல்லெழுத்து மிகுத லாவயி னான.

**பொ - ள்.** "அகம்" என்ற நிலைமொழிக்குப் பின்னர் கை வரின், அகரத்தைத் தவிர்த்து கம் கெடுதலும், அவ்விடத்து மெல்லெழுத்து மிகுதலும் ஆசிரியர்க்கு நீக்குதலின்று.

உ-ம். அகம் + கை = அங்கை, அகங்கை.
"குஐ ஆனென ..." (சொல். 108)
என்ற சூத்திரத் தான் ஆசிரியர்க்கு என்றது ஆசிரியர்க்க என்றாயிற்று.

முன்னவை என்றதற்கு அதன் முன்னின்ற அகரமும் அகரத்
தாற் பற்றப்பட்ட ககரமெய்யும் என இளம்பூரணரும், அதன் முன் னின்ற ககரமும் மகரவோற்றும் என நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர். நச்சினார்க்கினியர் கூறியதே பொருத்தமானது.

பா-ம். நச். ம. பதி. "இவை பண்புத்தொகை"
நச். தா. சை. பதி. "இது பண்புத்தொகை"

**317.** இலமேன் கிளவிக்குப் படுவரு காலை
நிலையலு முரித்தே செய்யு ளான.

**போ - ள்.** இலம் என்ற கிளவியின் பின்னர் "படு" என்றது வருமொழியாய் வருமிடத்து, செய்யுளின்கண் மகரங் கெடாது நிற்றலு முரித்து.

உ-ம். இலம்படு புலவ ரேற்றகை (மலைபடு. 576)

இலம்படுபுலவர் என்றதை வேற்றுமைமுடிபெனக் கொண்ட இளம்பூரணரை, "பற்றப்பட்ட புலவரென்பது பெயரெச்ச மாதலிற் பற்றவென்னுந் தொழில் தோற்றுவிக்கின்ற முதனிலைச்சொல்லைச் சூத்திரத்து ஆசிரியர் எடுத்தோதிற்றிலராதலானும் படுவென்பது தானும் புலவரென்னும் பெயரோடு முடியுங்கால் இரண்டு காலமுங் காட்டும் ஈறுகள் தொக்க முதனிலைச்சொல் லறிய நிற்றலின் அதனை எடுத்தோதினாதலானும் ஆசிரியர்க்கு அங்ஙனங் கூறுதல் கருத்தன்மை உணர்க. அன்றியும் பற்றப்பட்ட என்புழி இரண்டு முதனிலை கூடி ஒன்றாய் நின்று பற்றுதலைச் செய்யப்பட்ட எனப் பொருள் தாராமையானும் அல்வழியதிகார மாதலானும் அது பொருளன்மை உணர்க" என நச்சினார்க்கினியர் மறுத்தனர்.

" இலம் " என்பது " இலம்படுபுலவர் மண்டை " (புறநா. 155), இலம்படு புலவ ரேற்றகை (மலைபடு. 576. பரிபா. 10, 126) என்ற விடங்களில் வந்துளது. ஆங்கு "வறுமையுற்ற யாழ்ப்

புலவரது ஏற்கு மண்டை " எனப் புறநானூற்றுரைகாரரும், " இன்மையாற்பற்றப் பட்ட புலவர் " எனப் பரிபாடலுரைகாரரும், இல்லாமையுண்டான புலவர் ஏற்றகை " என மலைபடுகடாமுரைகாரராகிய நச்சினார்க்கினி யரும் பொருள் கூறினர். இலம் என்பதை நலம் என்பதைப் போன்று பெயராகப் புறநானூற்றுரைகாரரும் பரிபாடலுரைகாரருங்கொண்டு இலம்படுபுலவர் என்பதை வேற்றுமைத்தொகையாகக் கொண்டனர் என்பது வெளிப்படை. ஆகலின் "இலம்" என்பது உரிச்சொல் என்ற இளம்பூரணர்கூற்றும் "இலம்படுபுலவர்" என்றவிடத்து "இலம்படு" என்பது அல்வழிப்புணர்ச்சியாகும் என்ற நச்சினார்க்கினியர்கூற்றும் ஆராய்தற்குரியன. " அல்வழி யதிகாரமாதலானும் " என்ற ஒரு காரணமுங் கூறினர் நச்சினார்க்கினியர். இஃது அல்வழியாயின்,

"அல்வழி யெல்லா மெல்லெழுத் தாகும்" என்ற முற்சூத்திரத்தால் இச்செய்கையும் பெறப்படுமாதலான், இச்சூத்திரம் வெற்றெனத் தொடுத்ததாகும். அன்றியும் "படர்க்கைப் பெயரும் "(எழுத். 321)

"உயர்திணை யாயி னுருபிய னிலையும்" (எழுத். 325) என்ற சூத்திரங்கள் வேற்றுமைப்புணர்ச்சியைக் கூறுகின்றமையான் "அல்வழி யெல்லா மெல்லெழுத் தாகும்" (எழுத். 315) என்ற சூத்திரத்திற்குப் பின்னர் வந்த சூத்திரங்களெல்லாம் அல்வழியைப்பற்றின



எனக் கூறுதல் இயையாது. இலம்படு என்ற பகுதி வேற்றுமைப்புணர்ச்சியாகுமென இளம்பூரணர் கூறினரே யன்றி "படுபுலவர்" என்ற பகுதி வேற்றுமைப்புணர்ச்சியாகுமெனக் கூறிற்றிலர். ஆகலின் "இலம்படு" என்பது இளம்பூரணர் கூறியவாறே வேற்றுமைப்புணர்ச்சி யாகு மெனக் கொள்ளுதலே பொருந்தும்.

பா-ம்.

நச். ம. பதி. "உரித்து...முதனிலைச் சொல்லறிய நிற்றலின்"

நச். தா சை. பதி. "உரித்தெனக் கொள்க .... முதனிலைச் சொல்லாய் நிற்றலின்".

முன்னருள்ள பாடமே சிறக்கும்.

**318.** அத்தொடு சிவணு மாயிரத் திறுதி
ஒத்த வெண்ணு முன்வரு காலை.

பொ - ள். ஆயிரமாகிய மகரவிறுதி, தன் பின்னர் பொருந்திய எண் வருமொழியாய் வருங்காலத்து, அத்துச்சாரியையோடு பொருந்தும்.

உ-ம். ஆயிரம் + ஒன்று =
ஆயிரம் + அத்து + ஒன்று = ஆயி ரத்தொன்று
(எழுத். 134).

ஆயிரத்திறுதி என்றதற்கு ஆயிரமென்னு மெண்ணுப் பெயரின் மகரம் " எனப் பொருள் கூறினர். பலவற்றிறுதி (எழுத். 221) என்ற இடத்தில் பலவென்னும் அகரவீற்றுச்சொல் எனப் பொருள் கூறியதுபோல, ஈண்டும் ஆயிரமென்னும் மகரவீற்றுச்சொல் எனப் பொருள் கூறியிருப்பின் பொருந்தும்.

நிலைமொழியை மூற் கூறுமையான் ஆயிரத்துக்குறை போன்ற வற்றைக் கொள்ளல்வேண்டுமென உரைகாரர்கள் கூறினர். " ஆயிரத் திறுதி " என ஆசிரியர்வழக்கானே அவற்றைக் கொள்ளல் தகும்.

இச்சூத்திரம் "உயிரும்...ஏயென் சாரியை" (எழுத். 165) என்ற சூத்திரத்தின் புறனடையாகும்.

பா-ம். இளம். க. பதி. "மகரம்"
இளம். சி. பதி. "மகரமெய்"

## 271

**319.** அடையொடு தோன்றினு மதனோ ரற்றே.

பொ-ள். ஆயிரம் என்ற மகரவிறுதி அடைமொழியோடு தோன்றினும், அதன் தன்மைத்து.

• உ-ம். பதினாயிரத்தொன்று.

ஆயிரத்திறுதி என்றது அதிகாரத்தது.

"மேல் இலேசினான் வந்தனவும் அடைபடுத்து ஒட்டுக. பதினா யிரத்துச்குறை...என வரும்" என்று கூறினர் உரைகாரர்கள்.

**320.** அளவு நிறையும் வேற்றுமை யியல.

போ - ள். ஆயிரம், அடையடுத்த ஆயிரம் என்ற சொற்களின் பின்னர் அளவுப்பெயரும், நிறைப்பெயரும் வரின், அவை வேற்றுமைப்புணர்ச்சியின் தன்மையன வாகும்.

உ-ம். ஆயிரம் + கலம் = ஆயிரக்கலம் ; பதினாயிரக்கலம்...; ஆயிரக்கழஞ்சு ; ஆயிரநாழி...;

வேற்றுமையியல என்றது பன்மையாகலான் ஆயிரம், அடை-
யொடு தோன்றும் ஆயிரம் என்ற இரண்டும் அதிகரித்தன எனக்

கொள்ளல் வேண்டும்.

**321.** படர்க்கைப் பெயரு முன்னிலைப் பெயருந்
தொடக்கங் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்
வேற்றுமை யாயி னுருபிய னிலையும்
மெல்லெழுத்து மிகுத லாவயி னான.

போ - ள். எல்லாரும், எல்லீரும், தாம், நாம், யாம் என்ற பெயர்களும் வேற்றுமைப்புணர்ச்சியில் உருபுபுணர்ச்சியின் தன்மையைப் பெறும் ; அவ்விடத்து மெல்லெழுத்து மிகுதல் வேண்டும்.

உ-ம். எல்லார் தங்கையும், எல்லீர் நுங்கையும்...; தங்குறிப் பின் (சொல். 400) தங்கை...; நங்கை...; எங்கை.

ஈண்டுப் படர்க்கைப்பெயர், முன்னிலைப்பெயர், தொடக்கங்குறுகும்பெயர் இவை அதிகாரத்தான் மகரவிறுதியாயிருத்தலானும், உருபியலில் "எல்லாரு மென்னும் படர்க்கை யிறுதியும் எல்லீரு மென்னு முன்னிலை யிறுதியும்" (எழுத். 192.) "தாம்நா மென்னு மகர விறுதியும் யாமே னிறுதியு மதனோ ரன்ன..." எனை யிரண்டு நெடு-

272

முதல் குறுகும் (எழுத். 189) எனக் கூறப்பட்டிருக்கின்றமையானும், அச்சொற்களால் எல்லாரும் எல்லீரும், தாம், நாம், யாம் என்பன குறிக்கப்பட்டனவாகும். தொடக்கம் என்றதற்கு நெடுமுதல் எனப் பொருள் கூறினர் உரைகாரர்கள்; அவ்வாறாயின் தொடக்கங்குறுகும் பெயர்நிலைக்கிளவி என்றதனால் தாம், நாம் என்பன கொள்ளப்படுமே யன்றி, யாம் என்பது கொள்ளப்படாததாகும். ஆகலின் தொடக்கம் என்பதற்கு ஆரம்பம் எனப் பொருள் கொளல் சாலும். "அம்மினிறுதி என்னுஞ் சூத்திரத்துள் தன்மெய் என்றதனாற் பிற சாரியைக்கண் மகரவொற்றுக் கெடுதலுங் கொள்க வாகும் எனச் செய்கை

செய்து முடிக்க" என்றனர் நச்சினார்க்கினியர். எல்லார் தங்கையும் போன்றவிடத்து "தம்" முதலியன சாரியையாகக் கொள்ளப்படுதலானும் அச்சூத்திரத்தில் (எழுத். 130) மெய் திரிந்து எனக் கூறப்பட்டமையானும் இச்சூத்திரத்தில் மெல்லெழுத்து மிகும் எனக் கூறப்பட்டமையானும் அவர் தங்கூற்றுப் பொருந்தாதென்க. அவ்வாறு

யின் மகரக்கேடு எதனாற் பெறப்படுமெனின்,

மகரத்தின் பின்னர்

ங ஞ ந இவை வாராமையான், மெல்லெழுத்து மிகும் என்றதனாற் பெறப்படுமென்க.

"உருபியல் நிலையும் என்பதனான்

வேற்றுமையாதல் பெறு திற் கவும் பின்னும் வேற்றுமையாயினென்ற மிகையானே படர்க்கைப் பெயரும் முன்னிலைப்பெயரும்

இயல்புகணத்துஞகாரமும் நகார மும் வந்துழித் தம்முச்சாரியையும் நும்முச்சாரியையும் பெறுதலும் மகரங் கெட்டு உம்முப் பெறுதலும்...கொள்க" என்றனர் நச்சினார்க் கினியர். அவ்வாறு கூறியதற்குக் காரணம் உருபுபுணர்ச்சியை வேற்றுமைப்புணர்ச்சியாக அவர் கொண்டதே

யாகும். உருபு

புணர்ச்சியை ஓரிடத்தும் ஆசிரியர் வேற்றுமைப்புணர்ச்சி யெனக் கூறுமையான் உருபிய னிலையும் என்றதனுன் வேற்றுமை யாதல் பெறுதலின்றென்க. இவ்வதிகாரம் அல்வழிப்புணர்ச்சிய தாகையான், "வேற்றுமையாயின்" எனக் கூறல்வேண்டும். அவ்வாறாயின் படர்க்கைப்பெயர்க்கும் முன்னிலைப்பெயர்க்கும் இயல்பு கணத்துக்கண் ஞகரமும் நகரமும் வந்தவழி தம்முச்சாரியையும் நும்முச்சாரியையும் ஈறு கெடுதலும் எவ்வாறு பெறப்படுமெனின், ஈற்றுப்புறனடைச்சூத்திரத்தானேனும் ஈண்டு வருமொழிமுதற் கூறுமையானேனுங் கொள்ளல் தகும்.

273

" உருபியனிலையும் என்றதற்கு உருபுவந்தால் வரும் இயல்பைப் பொருந்தும் என்பது பொருள்; ஆகவே உருபு வரவில்லை, உருபின் பொருள் உள்ளது என்பது பெறப்படும்; படவே வேற்றுமையாதல்

பெறப்படும்" எனக் கூறலாமெனின், அற்றன்று; அவ்வாறாயின் "உருபியனிலையும்" என்பதற்கு "வேற்றுமைப்புணர்ச்சியில் வருஞ் செய்கை பெறும்" எனப் பொருளாகுமேயன்றி, பின்னர் வேற்றுமையுருபு வரும்போது பெறும் புணர்ச்சியைப் பெறுமென்றாகாது.

"ஆவயினான் என்றதனாற் படர்க்கைப்பெயரும் முன்னிலைப் பெயரும் சாரியை பெறாது இறுதி உம்முப் பெறுதலுங் கொள்க; எல்லார்கையும். எல்லீர்கையும்..." என்றனர் உரைகாரர்கள் இவை பிற்காலத்துவழக்கு என்னலாம்.

"இன்னு மிதனானே உருபீற்றுச்செய்கையெல்லாங் கொள்க, தமகாணம்.. .எனவரும்" என்றனர். இஃதும் பிற்காலத்துவழக் கெனத் தோன்றுகின்றது. இன்றேல் தம என்றதைத் தனி, மொழியாய்த் தம்முடையவாவன என்ற பொருளில் வந்த குறிப்பு வினையாலணையும்பெயராய்க் கொள்ளல் தகும். "இன்னும் ஆவயினானை என்றதனானே எல்லார்தம் எல்லீர்நும் என

நின்றவற்றின் முன்னர் ஏனை மணி, யாழ், வட்டு அடை என்பன வந்துழி மகரங் கெடாமையும் உம்முப் பெறுதலுங் கொள்க.'' "இன்னுமிதனானே தொடக்கங் குறுகுவனவற்றிற்குந் தம்மணி யாழ் வட்டு அடை என மகரங்கெடாமையுங் கொள்க'' என்றனர் நச்சினார்க்கினியர். "ஙஞண நமன வெனும்... " (எழுத். 25), " ஞநமவ...'' (எழுத். 27) "மஃகான்....'' (எழுத். 28) என்ற சூத்திரங்களில் மகரவொற்றின் பின்னர் ம ய வ இவை வருமெனக் கூறப்பட்டமையாலும், மெய் யின் பின்னர் உயிர் வருதற்குத் தடையொன்று மின்மையாலும் நச்சினார்க்கினியர் இவ்வாறு கூறுதல் வேண்டுவதின்று. நச்சினார்க் கினியத்தில் " இன்னும் இதனானே நும் என்பதற்கு மகரத்தை மெல்லொற்றாக்கி நுங்கை, செவி, தலை, புறம் என வருதலும், நுஞ் ஞாண் என ஒற்றிரட்டுதலும் நும்வலி என மகரங் கெடாது நிற்ற லுங் கொள்க '' என உளது. இதனை நும்மெ ஞெருபெயர் மெல்லெ ழுத்து மிகுமே (எழுத். 326) என்ற சூத்திரத்தில் நச்சினார்க்கினியர்

கூறியிருக்கின்றனையான், ஈண்டு அஃது இடைச்செருகலென் பது திண்ணம்.

பா - ம்.

இளம். க. பதி. "உருபியலுண் முடிந்தவாறே ஈண்டுப் பொருட்புணர்ச்சிக்கண்ணு முடியுமெனக் கூறுதனுதலிற்று...நெடுமுதல்..."

இளம். சி. பதி. "வேற்றுமைக்கண் உருபுபுணர்ச்சிமுடிபெய்தி முடிந்தவாறே பொருட்புணர்ச்சிக்கண் முடிதலு முடையவென்பது உணர்த்துதல் நுதலிற்று... அந்நெடுமுதல்..."

**322.** அல்லது கிளப்பி னியற்கை யாகும்.

பொ - ள். எல்லாரும் முதலிய சொற்கள் அல்வழியில் இயற்கையாகும். இயற்கையாகுமென்றாரேனும் அல்வழி யெல்லா மெல்லெழுத் தாகும் (எழுத். 315) என்ற சூத்திரத்தான் மகரம் மெல்லெழுத்தாகத் திரியும். இதனை "அல்வழியெல்லாம் என்றதனுள் எல்லார் என்ற இலேசினுற்கொள்க" என உரைகாரர்கள் கூறுவது பொருத்தமின்று.

உ - ம். எல்லாருங் குறியர்...;
எல்லீருங்குறியீர்...; தாங் குறியர்...; காங் குறியம்...;
யாங்குறியேம்...;

படர்க்கைப்பெயரும் முன்னிலைப்பெயரும் தொடக்கங் குறுகும் பெயர்நிலைக்கிளவியும் என்பது அதிகரித்தது.

"இன்னும் எல்லாம்" (எழுத். 315) என்னும் இலேசினானே இவ்வீற்றுக்கண் மென்கணத்து மகரம் ஒழிந்தன வந்தவழி மகரம் அவ்வொற்றாய்த் திரிதலுங்கொள்க,

எல்லாருஞ்ஞான்றார் " எனக்

கூறினர் உரைகாரர்கள். அச்சூத்திரத்துள்ள எல்லாம் என்ற இலேசான் ஈண்டு இதனைக் கொள்ளுதல் பொருத்தமின்று. இவற்றை இறுதிப்புறனடைச்சூத்திரத்தாற் கொள்ளல் தகும்.

323. அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா மேனும்பெய ருருபிய னிலையும்
வேற்றுமை யல்வழிச் சாரியை நிலையாது.

போ - ள். "எல்லாம்" என்ற சொல் இருவழிக்கண்ணும் உருபுபுணர்ச்சியின் தன்மையைப் பெறும்; அல்வழிக்கண் சாரியை நில்லாது. "எல்லாம்" என்றது உயர்திணை, அஃறிணை இரண்டற்கும் பொதுவாயினும் "உயர்திணையாயின்..." (எழுத். 325) என்ற சூத்திரத்தில் உயர்திணயின் செய்கையை ஆசிரியர் கூறினமையான், ஈண்டு அஃறிணையாக வழங்கும் எல்லாம் என்பதே கொள்ளல் வேண்டும்.

உ - ம். எல்லாக்குறியவும்...; எல்லாப்பெயரும் (சொல். 151) எல்லாவற்றுக்கோடும்...

எல்லாவற்றுக்கோடும் என்றவிடத்து
மகரக்கேடும் வல்லெழுத்து
மிகுதியும் "அத்தேவற்றே..." (எழுத். 134) என்ற
சூத்திரத்தாற்
கொள்ளலாம். எல்லாம் குறியவும் என்றன
எல்லாம்நம்குறியவும்
என்றாகி, அங்கு மகரங்கெட்டுப் பின்னர் நம்
கெட, வருஞ் சூத் திரத்து உம்மையான்
வல்லெழுத்து மிகுதிபெற்று எல்லாக்குறியவும்

என்றுயின.

மாட்டேறு ஏலாத அல்வழியினையும் உருபியலோடு மாட்டெறிந்து விலக்கிய மிகுதியான் அல்வழிக்கண் வன்கணத்திறுதி

உம்முப்பேறும் நிலைமொழிமகரக்கேடும் வருமொழிவல்லெழுத்துப் பேறும்...கொள்க" என்றனர் இளம்பூரணர். அதனானே நிலைமொழி மகரக்கேடும் வருமொழிவல்லெழுத்துப்பேறுங் கொண்டனர் நச்சினார்க்கினியர். "உம்மை நிலையு மிறுதி யான" (எழுத். 190) என்ற சூத்திரத்தான் உம்முப்பேறும் "மெல்லெழுத்து மிகினும்..." (எழுத். 324) என்றவிடத்துள்ள உம்மையான் வல்லெழுத்துப்பேறுங் கொள்ளல் கூடுமாயிருக்க இவ்வாறு உரைகாரர்கள் ஏன் கொண்டனரோ?

" எல்லாக் குறியரும்...என உயர்திணைக்கண்ணும் ஒட்டுக"

என்றுளது. எல்லாம் என்றது உயர்திணையாயின் தன்னுருபுத்த

பன்மைக்கல்லது உயர்திணை மருங்கினுக்கமில்லை* என்றவாறு தன்மைப்பன்மையில் வருதலானும், படர்க்கையில் "எல்லாரும்" என வருதலானும், இது பிற்காலத்துவழக்கென்பது திண்ணம்.

**324.** மெல்லெழுத்து மிகினு மான மில்லை.

* தொல். சொல் 187.



**பொ - ள்.** "எல்லாம்" என்ற சொல்லின்மேல் அல்வழிக்கண் **மெல்லெழுத்து மிகினுங்** குற்றமில்லை.

**உ - ம்.** எல்லாங் குறியவும்...

**எல்லாம், அல்லது கிளப்பின்** என்பன அதிகரித்தன.

முற்சூத்திர வுதாரணங்களில் வல்லெழுத்துமிகுதியை இலே சாற்கொள்ளவைத்தாரென்றும், அதற்குப் பிரதியாக

மெல்லெழுத்து மிகுதியை ஈண்டுக் கூறினர் என்றுங் கொண்டனர் உரைகாரர்கள். இங்குள்ள உம்மையான் வல்லெழுத்துமிகுதியை உணரவைத்தா ரெனின் குற்றம் யாது?

இளம்பூரணத்தில் " இனி உரையிற்கோடல் என்பதனால் ... எல்லாருங்குறியர் எனவும் வரும் " என்றுளது. அஃது ' அல்லது கிளப்பின்..." (எழுத். 323) என்ற சூத்திரத்திற் கூறப்பட்ட மையின் ஈண்டு வேண்டுவதின்று. " எல்லாங்குறியர் " என்றது ஏட்டில் தவறி " எல்லாருங்குறியர் '' என எழுதப்பட்டது போலும்.

இளம்பூரணர் நச்சினார்க்கினியர் இவ்விருவரும் " மானமில்லே என்றதனான் உயர்திணைக்கண் வன்கணத்து மகரங்கெட்டு வல் லெழுத்து மிக்கு இறுதி உடம்புப்பெற்று முடிதலும் இயல்புகணத் துக்கண் மகரங்கெட்டு

உய்முப்பெற்று முடிதலுங் கொள்க. எல்லாக் கொல்லரும்...எனவும் வரும் " என்றனர்.

ஆசிரியர்கொள்கையில் எல்லாம் என்ற சொல் உயர்திணையாயின் அது தன்மையில்தான் வருமாகையாலும், எல்லாக்கொல்லரும் போன்ற இடங்களில் அது படர்க்கையாயிருத்தலாலும், அங்கு எல்லார் என்பதனோடு கொல்லர் புணர்ந்ததாகக் கொள்ளுதலே முறையாதலாலும் அவை பிற்காலத்தோரால் எழுதப்பட்டவையாயிருத்தல் கூடும்.

பா - ம்.

நச். ம. பதி. "நாயகரும்...குறியிர் குறியம்..."

நச் தா சை. பதி. "நாய்கரும்...சிறியர் தீயர் பெரியர் எனவும் குறியீர் குறியம்..."

277

**325.** உயர்திணை யாயி னுருபிய னிலையும்.

போ - ள். எல்லாம் என்றது

உயர்திணையாயின் வேற்றுமை வழி உருபுபுணர்ச்சியின் தன்மையைப் பெறும்

உ - ம். எல்லாநங்கையும்.

எல்லாம், வேற்றுமைக்கண் என்பன அதிகரித்தன.

பா - ம். நச். ம. பதி. "இயல்பிலே நின்று"
நச். தா. சை. பதி. "இயல்பிற்றாய்"

**326.** நும்மெ னொருபெயர் மெல்லெழுத்து மிகுமே.

போ - ள். "நும்" என்ற ஒரு பெயரின் பின்னர் வேற்றுமை வழி வல்லெழுத்துவரின், மெல்லெழுத்து மிகும். மெல்லெழுத்து மிகும் என்றதனுன் நும்மின் மகரங்கெடும்.

உ - ம. நுஙகை.

"ஒன்றின முடித்தல் என்பதனுல் உங்கை என உம் என்பதன் முடிபும் இவ்விற்றாகக் கொள்க" என்றனர் உரைகாரர்கள். உ-ம் என்றவழக்கு புறநானூறு முதலிய நூல்களில் இன்மையானும்

பிற்காலத்து நூல்களிலே இருக்கின்றமையானும், அதனை ஆசிரியர் கூறவேண்டுவதின்றாகலானும், "ஒரு பெயர்" எனக் கூறினராகலானும் "உங்கை"* முதலியன இச் சூத்திரத்தாற் பெறப்படுமென உரைகாரர்கள் கொள்வதற்குக் காரணம் மொழி வரவர வளர்கின்றது என்றதை உணராததும் பிற்காலத்து வரப்போகின்ற மாறுதல் களனைத்திற்கும் இலக்கணம் ஆசிரியர் கூறினர் எனக் கொண்டதுமே யாகும்.

பா-ம். நச். ம. பதி. "ஒன்றின முடித்தல்"
நச். தா. சை. பதி. "ஒன்றென முடித்தல்"

முன்னருள்ள பாடமே சிறக்கும்.

**327.** அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை
உக்கெட நின்ற மெய்வயி னீவர
இஇடை நிலைஇ யீறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே
அப்பான் மொழிவயி னியற்கை யாகும்.

* நும் என்பது உம் என் எவ்வாற மாறிற்று என்பதைத் தமிழ்மொழி நூல் 76-ஆம் பக்கத்திற் காண்க.

போ - ள். நும் என்ற சொல் அல்வழிக்கண், நகரத்தின் மேனின்ற உகரங்கெட, அவ்விடத்து ஈ வர, ஈகாரமகரங் கெட்டு இடையில் இ வர, மகரவீறு கெட, அவ்விடத்து ரகரப்புள்ளி நிற்கும். அப்பகுதிப்பட்ட மொழிகளினிடையில் புணர்ச்சி இயல்பே யாகும். அஃதாவது நீ இர் என்ற நிலைமொழிக்கும் வரு மொழிக்கும் இடையில் புணர்ச்சி இயல்பேயாகும்.

உ - ம். நீஇர் குறியீர்...; நீஇர் சான்றீர்...

நும் என்றது அதிகரித்தது.

அப்பான்மொழிவயின் என்றதற்கு வருமொழியிடத்து அம்மொழி தான் என இளம்பூரணரும், அக்கூற்றினையுடைய நிலைமொழி. யிடத்து வருஞ்சொல் என நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர். அப்பகுதிப்பட்ட மொழிகளிடத்து எனப் பொருள் கொள்ளின் பொருந்தும். " அப்பான் மொழிவயினியற்கையாகும்" என்ற அடி

இல்லா திருப்பின் வருங் குற்றம் யாதெனின், "அல்வழி யெல் லாம் .. " (எழுத். 315) என்ற சூத்திரத்தான் மெல்லெழுத்து மிகு மெனக.

இச்சூத்திரத்தை அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை – நும் மேன் பதுவே நீஇ ராகும் எனக் கூறுது இவ்வாறு ஆசிரியர் கூறிய தற்குக் காரணம் ஒன்றும் புலப்படவில்லை.

பெயரியலில் "நீஇர் நீயென வரூஉங் கிளவி" (சொல் 188) என் விடத்து நீஇர் என்ற சொல்லைப் படித் திருக்கின்றமையான், அதனை நும்மின் றிரிபெயர் (சொல். 143) என்று கூறினமையானும், இச் சூத்திரத்தைப் படித்தமையானும் டாது பயனெனின், வேற்றுமை யுருபேற்ற நும்மை, நும்மான் முதலிய சொற்கள் முதல்வேற்றுமை யாகிய நீஇர் என்ற சொல்லின் முன்னரே வழக்கி லிருந்தன என அறிவித்தற்கு என்னலாம்.

இர், ஈர், மின் இவற்றை
முன்னிலைப்பன்மைவிகுதியாக "இர் ஈர் மின்னென ..."( சொல். 224) என ஆசிரியர் கூறியிருக்கின்றமையான் நீஇர் என்றது நீ என்ற ஒருமைக்கு அவ்விற்றினைச் சேர்த்தமையான்

வந்ததாக இருக்கலாம். இர் ஈர் என்பன வினைவிகுதியல்லவோ வெனின், எல்லீரும் என்றவிடத்து ஈர் இருக்கின்றமையான் பெயர் வினைகட்குப் பொதுவே என்னலாம்.

**328.** தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.

போ - ள் மகரவீற்றுத்தொழிற்பெயரெல்லாம் இருவழிக் கண்ணும் ஞகாரவீற்றுத்தொழிற்பெயரின் தன்மையன.

உ - ம். செம்முக்கடிது...; செம்முக்கடுமை...; செம்முஞான்றது...; செம்முஞாட்சி.

மகரவிறுதி அல்லது கிளப்பினும் வேற்றுமைக்கண்ணும் ஞாகாரை யொற்றிய என்பன அதிகரித்தன.

307 ஆவது சூத்திரத்திற்போல " எல்லாம் என்றதனுன் உகரம் பெறுது அல்வழிக்கண் நாட்டங்கடிது என மெல்லெழுத் தாய்த் திரிவனவும் வேற்றுமைக்கண் நாட்டக்கடுமை என மகரங் கெட்டு வல்லெழுத்து மிக்கு வருவனவுங் கொள்க" என்றனர் உரை காரர்கள். அவற்றைத் " தரவினுங் கோடையினும் " (சொல். 28)
" நடுக்கஞ் செய்யும் "
கொள்ளல் தகும்.
(சொல். 316) முதலிய ஆசிரியர் வழக்காற்

பா - ம்.

நச். ம. பதி. " இரட்டும்... மெல்லெழுத்தா
வல்வழிக்கண்வழி

நச். தா. சை. பதி. " இரட்டல்...
மெல்லெழுத்தாயல்..."க் கண்..."

பின்னருள்ள பாடஞ் சிறக்கும்.

**329.** ஈமுங் கம்மு முருமென் கிளவியும்
ஆமுப் பெயரு மவற்றோ ரன்ன.

பொ - ள். ஈம், கம், உரும் என்ற அம்மூன்று சொற்களும் தொழிற்பெயரோடு ஒருதன்மையன.



உ - ம். ஈமுக்கடிது...; ஈமுக்கடுமை...; கம்முக்கடிது...; கம்முக்கடுமை...; உருமுக்கடிது...; உருமுக்கடுமை...

**330.** வேற்றுமை யாயி னேனை யிரண்டும்
தோற்றம் வேண்டு மக்கென் சாரியை.

பொ - ள். ஏனையிரண்டற்கும் வேற்றுமைவழி அக்கு என்ற சாரியையைத் தோற்றத்தின்கண் வேண்டும் ஆசிரியன்.

உ - ம். ஈமக்குடம் ; ஈமவிளக்கு (புற நா. 635)
"ஏனையிரண்டு என்றதற்கு உரையிற்கோடலான் "உரும்"
என்றதை ஒழித்து ஈம், கம் என்பனவற்றைக் கொள்க. தோற்றம்
என்பது தோற்றந் தாமே வினையொடு வருமே (சொல். 10) என்ற
விடத்தில் உரைகாரர்களெல்லாம் ஏழாம்வேற்றுமையுருபு தொக்க
சொல்லாகக் கொண்டது போன்று ஈண்டுங் கொள்வது நலம்.
இச்சூத்திரம் முற்சூத்திரத்திற்குச் சிறப்புவிதியாகலான், ஈம் கம் என்பன
அல்வழிக்கண் மாத்திரம் தொழிற்பெயரியல எனக்
கொள்ளல் வேண்டும்.
"தோற்றம் என்றதனுன் உகரம் நீக்குதல் வேண்டுமென்க"
என இளம்பூரணரும், "அக்கு வருப்பமேவ நிலைமொழித்தொழி
லாகிய உகரங்கெட்டு முற்கூறிய வல்லெழுத்து

விலக்கப்படாமையின்
நின்று முடிந்தது " என நச்சினார்க்கினியருங்
கூறினர். உகரம்
வந்தபின் அக்குச்சாரியை வரினும் சொல்லுருவத்தில்
மாறுபாடின்
மையானும், உகரமும் வல்லெழுத்துமிகுதியும்
ஒருங்கு கூறப்பட்ட
மையானும் இச்சூத்திரம் முற்சூத்திரத்திற்குப்
புறனடையாகும்.
ஆகலின் " அக்கு " என்றதை விதித்தமையான்
முற்சூத்திரத்திற்
கூறப்பட்ட உகரத்தையும்
வல்லெழுத்துமிகுதியையும் நீக்கினர்
ஆசிரியர் என்றே கொள்ளல் தகும். அவ்வாறாயின்
" ஈமக்குடம் "
என்ற விடத்து வல்லெழுத்து மிகுதி எவ்வாறு
பெறப்படுமெனின்
" ஈம " என்பது அகரவீறுதலின்
"வேற்றுமைக்கண்ணு மதனோ
ரற்றே (எழுத் 216) என்ற சூத்திரத்தா னென்க."

பா - ம் நச். ம. பதி. " இரண்டற்கும் "

நச். தா. சை. பதி. "இரண்டற்கு"
முன்னருள்ள பாடஞ்சிறக்கும்.

281

**331.** வகார மிசையு மகாரங் குறுகும்.

போ - ள். *வகாரத்தின் முன்னருள்ள மகாரம் தன் அரை மாத்திரையினின்று குறுகும்.*

உ - ம். *நிலம் வலிது. உம்மையான்* னகாரை முன்னர் மகாரங் குறுகும் (*எழுத்.* 50) *என்றவிடத்துள்ள னகாரங் கொள்ளப்படும்.*

**332.** நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன
அத்து மான்மிசை வரைநிலை யின்றே
ஒற்றுமெய் கெடுத லென்மனார் புலவர்.

போ - ள். *நாளையுணர்த்தும் மகரவீற்றுப்பெயர் முன் இகர வீற்றுநாட்பெயர்க்கிளவிக்குக் கூறிய தன்மையன (அஃதாவது ஆன் சாரியை பெறும்). ஆங்கு ஆனின் முன்னர் அத்துச்சாரியையும் நீக்கார். மகரவொற்று கெடும் என்பர் புலவர்.*

உ - ம். மகம் + கொண்டான் = மகம் + அத்து + ஆன் + கொண்டான் = மகத்தாற்கொண்டான்.

மகரவிறுதி என்றது அதிகரித்தது.

அத்தும் என்றவிடத்துள்ள உம்மையை ஆன்மிசையும் என மாற்றிப் "பிறசாரியைமேலும்" எனப்பொருள்கூறி "மகத்து ஞான்று கொண்டான்" என்ற உதாரணத்தைக் கூறினர் உரைகாரர்கள்.

"ஒற்று என்னுது மெய் என்றதனுன் நாட்பெயரல்லாத பொருட்பெயர்க்கண்ணும் அம்முடிபுகொள்க; மரத்தாற் கொண்டான். . ." எனக் கூறினர் இளம்பூரணர். அவை பிற்காலத்து வழக்கெனக் கொள்ளின் பொருந்தும்; பண்டைய வழக்காயின் இறுதிப் புறனடைச்சூத்திரத்தான் பெறுதல் நலம்.

பா - ம் நச். ம. பதி. "என்றேனை நாட்களோடும்"
நச். தா. சை. பதி. "என்க. ஏனை நாட்களோடும்"

இனி நிலைமொழி னகரவீறாயிருக்க வேற்றுமைவழி நேரும் மாறுதல்களை 333 - 345, 347 - 353, 355 - 7 ஆகிய 22 சூத்திரங் களிலும், அல்வழியின்கண் வரும் மாறுதல்களை ஒரு சூத்திரத்திலும்,



இருவழியின்கண்ணும் வருவனவற்றை 346-ஆவது சூத்திரத்திலும் ஆசிரியர் கூறினர்.
அல்வழியின்கண்நேரும் மாறுதல்களைப் பொதுவாக, தொல். எழுத். 148 ஆஞ்சூத்திரத்திற் காண்க.

**333.** னகார விறுதி வல்லெழுத் தியையின்
றகார மாகும் வேற்றுமைப் பொருட்கே.

பொ - ள். னகாரவீற்றுப்பெயரின் பின்னர் வல்லெழுத்து வரின் வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கண், னகரம் றகரமாகும்.

உ - ம். பொன் + கோடு =

பொற்கோடு (புறநா. 2)

பெயர் என்றது அதிகரித்தது.

ணகாரவிறுதி அன்மொழித்தொகையாய் னகரவீற்றுச்சொல் எனப் பொருள்படினும் ணகாரவிறுதி றகாரமாகும் என்றவிடத்து ணகாரவிறுதி என்றதனால் ணகாரவிறுதியின் இறுதியாகிய ணகரமே கொள்ளப்படும்.

**334.** மன்னுஞ் சின்னு மானு மீனும்
பின்னு முன்னும் வினையெஞ்சு கிளவியும்
அன்ன வியல வென்மனார் புலவர்.

பொ - ள். மன், சின், ஆன், ஈன், பின், முன், இவையும் வினை யெச்சமும் பின்னர் வல்லெழுத்து வரின் அத்தன்மையன எனக் கூறுவர் புலவர்.

உ - ம். நன்றுமற்றகுதியுமதுவே (புறநா. 238), நடத்தி சிற் சிறிதே (புறநா. 255), ஆற்கொண்டான், ஈற்கொண்டான், பிற்பட (புறநா. 370), முற்கொண்டான்...

வல்லெழுத்தியையின் என்றது அதிகரித்தது.

" இயல என்றதனான் ஊன் என்னுஞ் சுட்டு

ஊன்கொண்டான்

என இயல்பாய் முடிதல் கொள்க" என்றனர் உரைகாரர்கள். இதனை "மெய்பிறி தாகிடத் தியற்கை யாகலும்" (எழுத் 157) என்றதனாற் கொள்ளலே முறையாகும்.

பா - ம்.

இளம். க. பதி. "அதனை." இளம். சி. பதி. "அப்பெயரை." நச். ம. பதி. "அப்பெயர்." நச். தா. சை. பதி. "அப்பெயரை."



**335.** சுட்டுமுதல் வயினு மெகரமுதல் வயினும்

அப்பண்பு நிலையு மியற்கைய வென்ப.

• பொ - ள். சுட்டு எகரம் இவற்றின் பின்னர் வரும் "வயின்" என்றதும் பின்னர் வல்லெழுத்துவரின் அப்பண்பினைக்கொள்ளுந் தன்மையன எனக் கூறுவர் (புலவர்).

உ - ம், அவ்வயிற்கொண்டான்.... ; எவ்வயிற்

கொண்டான்.

வல்லெழுத்தியையின் என்பது அதிகரித்தது. நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்திற்குப் பொருள் கூறுமிடத்து "எகாரமாகிய முதல்வினாவினையுடைய" எனக் கூறினர். எகரத்தை வினாவெழுத்தென ஆசிரியர் தொல்காப்பியனார் கூறாமையானும், நன்னூலார் அவ்வாறு கூறினமையானும் நச்சினார்க்கினியர் நன்னூலார்க்குப் பிற்பட்டவர் என்பதற்கு இஃதொரு சான்றாகும்.

" கான்கோழி " என்றது இச்சூத்திரத்தின் இயற்கைய என்றதனான் இளம்பூரணத்திலும், நச். ம. பதிப்பிலும் அடுத்தசூத்திரத்து இயற்கை என்றதனான் நச். தா. சை. பதிப்பிலுங் கொள்ளப் பட்டது.

**336.** குயினென் கிளவி யியற்கை யாகும்.

பொ - ள். குயின் என்ற சொல்லின் பின்னர்

வல்லெழுத்து வரின் அஃது இயற்கையாகும்.

உ - ம். குயின் + குழாம் = குயின்குழாம்.

வல்லெழுத்தியையின் என்றது அதிகரித்தது.

**337.** எகின்மர மாயி னாண்மர வியற்றே.

போ - ள். "எகின்" என்றது மரத்தைக் குறிப்பின், அஃது ஆண்மரத்தன்மைத்து. அஃதாவது அம் சாரியை பெறும்.

உ - ம். எகினங்கோடு...



**338.** ஏனை யெகினே யகரம் வருமே
வல்லெழுத் தியற்கை மிகுதல் வேண்டும்.

போ - ள் மரத்தை யுணர்த்தாத எகின் என்றசொல் நிலைமொழியாய் வருமிடத்து, அதன்கண் அகரம் வர, வல்லெழுத்து மிகுதல் வேண்டும்.

உ - ம். எகினக்கால்...

" இயற்கை என்றதனுன் அகரப்பேற்ருேடு மெல்லெழுத்துப் பேறுங் கொள்க, எகினங்கால்... எனவரும்" என்றனர் உரைகாரர்கள். அகரப்பேறும் மெல்லெழுத்துப்பேறும் அம்சாரியையோடு ஒத்தலானும், மரத்தைக்குறிக்கும் எகினே அம்சாரியை பெறுமெனஆசிரியர் கூறினமையானும், ஏனையவற்றைக் குறிக்கும் எகின் என்றது அம்சாரியை பெற்றது பிற்காலத்ததே யாகும். அதனை இயற்கை என்றதனுன் உரைகாரர்கள் கொண்டனர். எகினங்கோடு என்றதைப் பார்த்து எகினங்கால் என்றது ஒற்றுமைப்போலியான் வந்திருத்தல் வேண்டும்.

" மேலைச்சூத்திரத்தோடு இதனை ஒன்ருக ஓதாததனுன் இயல்புகணத்துக்கண்ணும் அகரப்பேறுகொள்க, எகினஞாற்சி,...என வரும்" என உரைகாரர்கள் கூறினர். மேலைச்சூத்திரத்தில் அம் சாரியை வருமெனக் கூறியிருக்கின்றமையானும் இச்சூத்திரத்தில் அகரப்பேறும் வல்லெழுத்துமிகுதியுங் கூறியிருக்கின்றமையானும், இரண்டனையும் ஒரு சூத்திரத்திற் கூறுதல் பொருந்தாக்கூற்ருகும். அவ்வாருயின் எகினஞாற்சி முதலியன எவ்வாறு பெறப்படுமெனின், இச்சூத்திரத்தை ஒன்ருகக்

கொள்ளாது ஏனை யெகினே யகரம் வருமே என்றதை ஒன்றாகவும் வல்லெழுத் தியற்கை மிகுதல் வேண்டும் என்றதை ஒன்றாகவுங் கொள்ளின், முன்னடி பொதுவாய் வருமொழியில் வல்லெழுத்து மெல்லெழுத்து முதலியன வந்தபோது செய்கை கூறுகின்றது என்றும், பின்னடி வருமொழியில் வல்லெழுத்து வரும்போதே செய்கை கூறுகின்றது என்றுங் கூறு மெனக் கொள்ளலாம்.

**339.** கிளைப்பெய ரெல்லாங் கிளைப்பெய ரியல.

**பொ - ள்.** ணகரவீற்றுக்கிளைப்பெயரெல்லாம் ணகரவீற்றுக் கிளைப்பெயரின் தன்மையன.

285

உ - ம். எயின்குடி,...; மான்கணம் (புறநா. 90)

பண்ணன் சிறுகுடி (புறநா. 70)

என்றது னகரவிறுதி அதிகரித்தது.

கிளைப்பெயரெல்லா மியல்பென மொழிப

எனச் சூத்திரிக்காது

இவ்வாறு ஆசிரியர் கூறியதற்குக் காரணம் முற்சென்றதையும் நினைப்

பூட்டுதற் கென்னலாம்.

" எல்லாம் என்றதனுன் அக்குச்சாரியையும் வல்லெழுத்தும்

பெற்று எயினக்கன்னி என முடிதலும் பார்ப்பனக்கன்னி என நிலை

மொழியீறு திரிந்து அக்கும் வல்லெழுத்தும் பெறுதலும் இனிச்

சாரியை பெருது ஈறுதிரிந்து வேளாண்குமரி, வேளாண்வாழ்க்கை

என முடிதலுங் கொள்க " என்றனர் உரைகாரர்கள். இவற்றை

இறுதிப் புறனடைச்சூத்திரத்தாற் கொள்ளல் தகும்.

பா - ம். இளம். க. பதி.
இளம் சி பதி.

" இவ்வீற்றிற்கு "
" இவ்வீற்றிற் சிலவற்றிற்கு "

நச். ம. பதி. "பிள்ளை, குமரி, சேரி ....வேளாளன்..."

நச். தா. சை. பதி. "குமரி சேரி பிள்ளை வேளாண்..."

**340** மீனென் கிளவி வல்லெழுத் துறழ்வே.

**போ - ள்.** மீன் என்ற சொல் நிலைமொழியாயிருக்க வல் லெழுத்து உறழும்.

உ - ம். *மீன்கண் (புறநா. 109), மீற்கண்.*

பா - ம். இளம். க. பதி. "சொல் திரிபு."

இளம். சி. பதி. "சொல்தன் திரிபு."

**341.** தேனென் கிளவி வல்லெழுத் தியையின்
மேனிலை யொத்தலும் வல்லெழுத்து
மிகுதலும்
ஆமுறை யிரண்டு முரிமையு முடைத்தே
வல்லெழுத்து மிகுவழி யிறுதி யில்லை.

**போ - ள்.** தேன் என்ற சொல் நிலைமொழியாயிருக்க வரு மொழிமுதலில் வல்லெழுத்து வரின், அது முற்கூறிய நிலையை ஒத்து உறழ்தலும் வல்லெழுத்து மிகுதலும் ஆகிய இருமுறையும் உடைத்து; வல்லெழுத்து மிகும்போது னகாவிறுதி கெடும்.

உ - ம். தேன் + குடம் = தேன்குடம், தேற்குடம், தேக்குடம்.

உரிமையும் என்றவும்மை மெல்லெழுத்து மிகினும் என மேல்வருகின்ற முடிவினை நோக்கி நின்றது" என்றனர் உரைகாரர்கள்.

**342.** மெல்லெழுத்து மிகினு மான மில்லை.

**பொ - ள்.** தேன் என்ற சொற்குப் பின்னர் வல்லெழுத்தி யையின் மெல்லெழுத்து மிகினுங் குற்றமில்லை.

உ - ம். தேங்கமழ் திருநுதல் (திருமுரு. 34) தேம்பாய் புன்னை (புறநா. 24)

தேனென்கிளவி வல்லெழுத்தியையின் என்பது அதிகரித்தது.

முற்சூத்திரத்தில் வல்லெழுத்து மிகுதலும்...வல்லெழுத்து மிகுவழி யிறுதி யில்லை எனக் கூறப்பட்டதுபோல் இச்சூத்திரத்தில் மேல்லெழுத்து மிகுதலும்...மெல்லெழுத்து மிகுவழி யிறுதியில்லை எனக் கூறவேண்டியிருக்க, ஆசிரியர் இவ்வாறு ஏன் கூறினரெனின், ணனஃகான் முன்னர்க்-கசஞப மயவவ் வேழு முரிய (எழுத். 26) என்ற சூத்திரத்து னஃகான் முன்னர் ஏனை மெல்லெழுத்து வருவதாகக் கூறுமையானும், மெல்லெழுத்து மிகுமென்றதனுன் வருமொழிமுதலிற் கினமாகிய மெல்லெழுத்து வருமாதலானும், வருமொழிமுதல் றகரமாக இருத்தற்குத் தகுதியில்லாமையானும் ஈற்று னகரங் கெடுமென எண்ணி அவ்வாறு கூறினரெனக.

அவ்வாருயின் முற்சூத்திரத்தில் வல்லெழுத்து மிகுவழி னகரவொற்றின் பின்னர் கசதப இவை ஈரொற்ருகா என "யரழவென்னும்..." (எழுத். 48) என்ற சூத்திரத்தாற் பெறப்படுகின்றமையான் வல்லெழுத்து மிகுவழி யிறுதி யில்லை என்றது வேண்டாமெனின், வேண்டாமென்க.

"னகரக்கேடு அதிகாரத்தாற்

கொள்க" என்றனர் உரைகாரர்கள்.

பா - ம். இளம். க. பதி. "மேற்கூறிய

தேனென்கிளவி"

## 287

**343.** மேல்லெழுத் தியையி னிறுதியோ டுறழும்.

போ - ள். தேன் என்ற சொல்லின் பின்னர் மெல்லெழுத்து வரின், அஃது இறுதினகரத்தோடுஉறழும்.

உ - ம். தேன் + ஞெரி = தேன்ஞெரி, தேஞெரி.
தேனென் கிளவி என்றது அதிகரித்தது.

“ தேனென் கிளவி.... ” (எழுத். 349) என்ற சூத்திரத் துள்ள “ஆமுறை என்றதனுன் சிறுபான்மை ஈறு கெட்டுத் தேஞ் ஞெரி, நுனி, முரி என மெல்லெழுத்து மிகுதலுங்கொள்க” என்ற னர் இளம்பூரணர். “ மேல் ஆமுறை என்றதனுல் தேன்ஞெரி தேஞ்ஞெரி, தேநுனி தேந்நுனி, தேமொழி தேம்மொழி என னகரங்கெட்டுத் தத்தம் மெல்லெழுத்து மிக்கும் மிகாதும் முடிந்தன வுங் கொள்க” என்றனர்

நச்சினார்க்கினியர். தேஞெரி, தேநுனி, தேமொழி என்பன சூத்திரத்தானே பெறப்படுகின்றமையான் இளம்பூரணர் கூறும் முறையே சிறந்ததாகும். ஆயினும் "ஆமுறை" என்றதால் அதைக் கொள்ளாது, இச்சூத்திரத்தின்கண்ணே முற் சூத்திரத்துள்ள மெல்லெழுத்து மிகினு மானமில்லை என்றதை வருவித்து அதனைக் கொள்ளலாமா என்பது ஆராய்தற்பாலது.

"மேல் மானமில்லை என்றதனுன் இறுதியோடு உறழும் என்ற ஈறுகெட்டு வருமொழி மெல்லெழுத்து மிக்கும் மிகாதும் உறழ் தற்கும் வருமொழி மிகாது இறுதிகெட்டும் கெடாதும் உறழ்தற்கும் அவ்விரண்டற்கும் உரித்தாய்ச் சென்றதனை விலக்கி வருமொழி மிகாதே நிற்ப அவ்வீறே கெட்டும் கெடாதும் நின்று உறழுமென்பது கொள்ளப்பட்டது." என்றனர் இளம்பூரணர். இதனை " இனி மேல் மானமில்லை என்றதனுன் ஈறுகெட்டு மெல்லெழுத்து மிகாது இயல்பாய் முடிவனவுங் கொண்டு தேஞெரி, தேநுனி தேமொழி என்பன காட்டின் அவை

முற்கூறியவற்றுள் அடங்குமென்க ”
என்ற தொடரால் நச்சினார்க்கினியர் மறுத்தனர்.

பா - ம். இளம். க. பதி. “ உறழுமென்ற ஈறுகெட்டு ”

இளம். சி. பதி. “ உறழுமென்றது ஈறுகெட்டு ”

நச். ம. பதி. “ கொள்க ”
நச். தா. சை. பதி. “ கொண்டு ”

288

**344.** இருஅற் றோற்ற மியற்கை யாகும்.

போ - ள். தேன் என்றதின் பின்னர் இறால் என்பது வரின் தோற்றத்துக்கண் புணர்ச்சி இயல்பாகும்.

உ - ம். தேனிறால்.

தேனேன் கிளவி என்றது அதிகரித்தது.

இச்சூத்திரத்தாற் கூறப்பட்டது வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத் தல்வழி... (எழுத். 149) என்ற சூத்திரத்தாற் பெறப்பட்டமையான், இச்சூத்திரம் எற்றுக்கு என்ற ஐயம் உண்டாகின்றது இது ஒரு தனிச்சூத்திரமாகக் கொள்ளின் கூறியதுகூறல் என்ற குற்றத்திற்கு ஆசிரியர் ஆளாவர். ஆகலின்.

> " இருஅற் றேற்ற மியற்கை யாகும்
> ஒற்றுமிகு தகரமோடு நிற்றலு முரித்தே "

என்பதை ஒரு சூத்திரமாகக் கொண்டு அதற்குத் " தோற்றத்தின்கண் இயற்கையாகும் இறால் பின்வரின் தேன் என்ற சொல் ஒற்றமிகு தகரமொடு நிற்றலு முரித்து " என்ற பொருளைக் கொள்ளின் பொருந்தும். இஃது அறிஞர்களால் ஆராய்தற்பாலது.

**345.** ஒற்றுமிகு தகரமோடு நிற்றலு முரித்தே.

போ - ள். தேன் என்ற சொற்கு இறால் என்ற சொல் பின்வரின் தேன் என்றது த்த் என்றதோடு நிற்றலு முரித்து.

னகரத்தின் பின்னர் ஈரொற்றாகிய த்த் வாராமையின், னகரங் கெடுமெனக் கொள்க.

உ - ம். தேத்திறால்.

தேனேன்கிளவி, இறால் என்பன அதிகரித்தன.

"வல்லெழுத்து மிகுவழி யிறுதி யில்லை"

(எழுத். 340) என்றதனால் னகரக்கேட்டைக் கொள்ளுகின்றனர் உரைகாரர்கள். உம்மை யால் இயற்கையாகலு முரித்து என்பது கூறப்பட்டது.

289

பா - ம்.

நச். ம. பதி. "தகரமென்னுது...தேனினிறால்."

நச். தா. சை. பதி. "தகரமிகுமென்னுது....தேன்னிறால்". முன் பாடஞ் சிறக்கும்.

"தோற்றம் என்றதனால் தேனடை, தேனீ என்னும் இயல்புங் கொள்க" என்றனர் உரைகாரர்கள் இது "வேற்றுமைக்கண்ணும்..."

(எழுத். 149) என்ற சூத்திரத்தாற் பெறப்பட்டமையான், அவர் தங்கூற்று ஆராயத்தறபாலது.

" மேலைச் சூத்திரத்தோடு இதனை ஒன்றாக ஓதாததனால் பிற வருமொழிக்கண்ணும் இம்முடிவு கொள்க " என்றனர் உரைகாரர்கள்.

இரண்டையும் ஒன்றாகவே ஆசிரியர் கூறியிருத்தல் கூடுமென முன்னர்க் கூறப்பட்டமையான் இக்கூற்றும் ஆராய்தற்பாலது. தேத்தடை தேத்தீ முதலியன பண்டைய வழக்காயின் "உணரக்கூறிய" (எழுத். 406) என்றதனற் கொள்ளலாம்.

**346.** மின்னும் பின்னும் பன்னுங் கன்னும்
அந்நாற் சொல்லுந் தொழிற்பெய ரியல.

போ - ள். மின், பின், பன், கன் என்ற நான்கு சொல்லும் இருவழிக்கண் தொழிற்பெயரின் தன்மையன.

உ - ம். மின்னுக்கடிது, பின்னுக்கடிது, பன்னுக்கடிது, கன்னுக்கடிது; மின்னுக்கடுமை, பின்னுக்கடுமை, பன்னுக்கடுமை, பின்னு ஞான்றது...

" தொழிற்பெயரெல்லாந் தொழிற்பெயரியல என்று ஓதாது இவ்வாறு எடுத்தோதியவதனால் இம்முடிபினைத் தொழிற்பெயர்க்கும் பொருட்பெயர்க்கும் உடன்கொள்க " என்றனர் இளம்பூரணர். நச்சினார்க்கினியரும் அவரோடு உடன்பட்டனர்.

பா-ம். இளம். க. பதி. "வல்லெழுத்தும்"

இளம். சி. பதி. "வல்லெழுத்தும் பெறும்"

நச். ம. பதி. "தொழினிலைக்கணன்றி"

நச். தா. சை. பதி.

37

"தொழினிலைக்கண்ணன்றி." 290

**347.** வேற்றுமை யாயி னேனை யெகினொடு

தோற்ற மொக்குங் கன்னென் கிளவி.

பொ-ள். கன் என்னுஞ் சொல் வேற்றுமைவழி தோற்றத்தின்கண் மரமுணர்க்காக எகின் என்ற சொல்லொடு ஒக்கும். அஃதாவது அகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும்.

உ-ம். கன்னக்குடம்...

முற்சூத்திரத்தில் இருவழிக்கும் பொதுவாகக் கூறி ஈண்டு வேற்றுமைவழி சிறப்பித்துக் கூறினமையான், கன் என்ற சொற்கு முற்சூத்திரத்தில் அல்வழியே விதி கூறப்பட்டதெனக் கொள்க. அவ்வாறாயின் முற்சூத்திரத்துரையில் உரைகாரர்கள் கூறிய கன்னுக் கடுமை என்ற உதாரணம் பொருந்தாதென்க.

" இக்கன் என்பது வேற்றுமைமுடிபிற்கு

மேற் கூறியது
குணவேற்றுமைக்கு எனவும் ஈண்டுக்கூறியது பொருட்பெயர்க்கு எனவுங் கொள்க" என்ற இளம்பூரணர்கொள்கைக்குத் தக்க சான்று இல்லை.

"தோற்றம் என்றதனுல் அல்வழிக்கண் அகரமும் வன்கணத்துக்கண் மெல்லெழுத்துங் கொள்க. கன்னங்கடிது ... எனவரும் இன்னும் தோற்றம் என்றதனுற் சிறுபான்மை கன்னங்கடுமை .. என்ற குணவேற்றுமைக்கண்ணும் அகரமும் மெல்லெழுத்துங் கொள்க" என்றனர் உரைகாரர்கள். இவற்றைப்பற்றி ஆசிரியர் கூருமையானும், அவர்காலத்து அவ்வாறு வழங்கியதாகப் புலப்படாமையானும், இவை பிற்காலவழக்கெனக் கொள்க. பண்டைக்கால வழக்காயின் இறுதிப்புறனடைச்சூத்திரத்தாற் கொள்க.

பா - ம். இளம். க. பதி. "வலுமை"

இளம். சி. பதி. "வலிமை"

348. இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்
முதற்கண் மெய்கெட வகர நிலையும்
மெய்யொழித் தன்கெடு மவ்வியற் பெயரே.

பொ - ள். னகரவிறுதியியற்பெயரின் பின்னர் தந்தை என்ற முறைப்பெயர் வரின், வருமொழி முதலின்கண்ணுள்ள மெய் கெட, அகரம் நிலைபெறும்; அவ்வியற்பெயரின்கண் மெய்யைத் தவிர்த்து இறுதி அன் கெடும்.

291

உ - ம். சாத்தன் + தந்தை = சாத்த் + அந்தை = சாத்தந்தை.

னகாரவிறுதி என்றது அதிகரித்தது.

முறை என்றது எற்றுக்கு எனின் தமப்பன் முதலிய சொற்களையுங் கொள்ளுதற்கு என்னலாம்.

இச்சூத்திரம் "அஃறிணை விரவுப்பெயர்..." (எழுத். 156) என்ற சூத்திரத்திற்குத் திரிபு கூறுகின்றதெனக் கொண்டனர் நச்சினார்க்கினியர். இங்கு உயர்திணை அஃறிணை இரண்டற்கும் விதி கூறப் படுகின்றமையான், அவ்வாறு கொள்ளுதல் பொருந்தாதெனத் தோற்றுகின்றது.

முதற்கண் என்ற சொல் இல்லாதிருப்பின், எங்கு மெய்கெட அகரநிலையும் என்ற ஐயம் நிகழ,

அவ்வியற்பெயரோ என்ற சொல் லான் நிலைமொழியின்கண் எனக் கொள்ளல்வேண்டும். அவ்வாறு ஐயம் நிகழ்ந்து அதனைப் போக்க வையாது வெளிப்படையாக "முதற் கண்" என ஆசிரியர் கூறினர். அஃது இன்றியமையாததன்று எனக் கருதி "முதற்கண்மெய் என்றதனால் சாத்தன்றந்தை கொற் றன்றந்தை என்னும் இயல்புமுடிபுங் கொள்க" என்றனர் உரைகாரர் கள். அஃது ஆசிரியர்க்கு உடன்பாடாயின் ஓர் உம்மையை இச் சூத்திரத்திற் கூறியிருப்பர். ஆகலின் அது பிற்காலத்துவழக் கென்க.

**349,** ஆதனும் பூதனுங் கூறிய வியல்பொடு
பெயரொற் றகரந் துவரக் கெடுமே.

போ - ள். ஆதன், பூதன், என்ற இயற்பெயர்களின் பின்னர் தந்தை வரின், ஆங்கு முற்கூறிய தன்மையோடு இயற்பெயரின் ஒற்றும், வருமொழியின் அகரமுந் துவரக் கெடும்.

உ - ம். ஆதன் + தந்தை = ஆத் + அந்தை = ஆ + ந்தை = ஆந்தை ; பூந்தை.

இயற்பெயர், தந்தைவரின் என்பன அதிகரித்தன.

பெயர் என்றது இயற்பெயரைக் குறித்தது.
ஒற்றும் அகரமும் என்றவிடத்துள்ள உம்மை தொக்கன. அகரம் என்றது நிலைமொழிக்கண் இல்லாது வருமொழிக்கண்ணே இருத்தலின், அகரம் என்றதற்கு வருமொழியகரம் எனப் பொருள் கொள்ளப்பட்டது.

## 292

"இயல்பு என்றதனால் பெயரொற்றும் அகரமுங் கெடாது நின்று முடிந்தவாறே முடிதலுங் கொள்க. ஆதந்தை, பூதந்தை எனவரும்" என்றனர் உரைகாரர்கள். "இயல்பொடும்" என்றவிடத்துள்ள உம்மை தொக்கு இயல்பொடு என நின்றதெனின்

பொருந்தும் அவ்வழக்குப் பண்டையவாயிருப்பின்; தனவாயின் அவ்வாறு கூறவேண்டுவதின்று.

பிற்காலத்

"இவை என்றதனால் அழான் புழான் என நிறுத்திப் பொருந் தினை செய்கை செய்து அழாந்தை புழாந்தை என முடிக்க" என்றனர் உரைகாரர்கள். அச்சொற்களுள் இறுதியாய் அன் இல்லாமையான் ஆசிரியர்க்கு அஃது உடன்பாடெனக் கொள்ளுதல் பொருந் தாது. அவை பண்டைவழக்காயின் ஈற்றுப்புறனடைச்சூத்திரத் தாற் கொள்ளல்வேண்டும்.

பா-ம். இளம். க. பதி.
"இயல்பென்றவதனால்...முடிந்தாலும்"
இளம். சி. பதி. "இயல்பு என்றதனால்...முடிதலும்"

**350.** சிறப்போடு வருவழி யியற்கை யாகும்.

பொ - ள். இயற்பெயர் சிறப்புப்பெயராய் வருமிடத்து, பின் னர்த் தந்தை வரின், இயல்பு ஆகும்.

உ-ம். பெருஞ்சாத் தன்றந்தை, பெருங்கொற்றன்றந்தை.

இயற்பெயர், தந்தைவரின் என்பன அதிகரித்தன.

" சிறப்பொடு" என்பதற்குப் " பண்படுத்து" எனப் பொருள் கூறினர். பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என்றவிடத்துப் பெருமை என்ற பண்பு, கொற்றன், சாத்தன் இவரிடம் இருக்க அவ் வழக்கு நிகழவில்லை என்றும், தனித்து யாதானும் ஒருவனை அச் சொற்கள் ஒவ்வொன்றுங் குறிக்கின்றது என்றும் " பெருங்கொற் றன் பெருஞ்சாத்தன் என இல்குணமடுத்து வழக்கின்கண்ணும் இனஞ்சுட்டாது வருதலின்" (சொல். 18 சேனா. என்ற தொடராற் சேனாவரையர் குறிக்கின்றமையான் சிறப்போடு என்றதற்குச் சிறப்புப்பெயராய் எனப் பொருள் கூறலா மெனத் தோற்றுகின்றது. ஆங்குச் " சிறப்புப்பெயர் " என்றதற்கு இனஞ்சுட்டாத் தனிப்பெயர் எனப் பொருள் ஆகும்.

# 293

**351.** அப்பெயர் மெய்யொழித் தன்கெடு வழியே
நிற்றலு முரித்தே யம்மென் சாரியை
மக்கண் முறைதாகூஉ மருங்கி னான.

போ - ள். அவ்வியற்பெயர் மெய்யைத் தவிர்த்து அன்கெடும் வழி அம் என்ற சாரியை நிற்றலு முரித்து "மக்கள்" என்ற முறையைக் காட்டுஞ் சொல்லோடு தொகையாமிடத்து.

உ - ம். சாத்தங்கொற்றன்,...; சாத்தங்குடி.

உம்மையால் அம்சாரியை வாராமை கொள்க. "உம்மையாற் கொற்றங்குடி சாத்தங்குடி எனப் பிறபெயர் தொக்கனவுங் கொள்க" என்றனர் நச்சினார்க்கினியர். இது முறை என்ற சொல் லாற் பெறப்படுமாகலான், அவர் தங்கூற்று

ஆராய்தற்பாலது.

பா - ம்.

நச். ம. பதி.
கெடுமிடத்து..."

"அன்கெடுவழியே; தோன்றிய மெய்நிற்க அன்

நச். தா. சை. பதி. "அன்கெடுவழியும்
தானேறிய மெய் நிற்க அன்கெட்டு..."

352. தானும் பேனுங் கோனு மென்னும்
ஆமுறை யியற்பெயர் திரிபிட னிலவே.

போ - ள். *தான், பேன், கோன்* என்பதற்குப் பின் அம் முறையியற்பெயர் வரின் முற்கூறிய திரிபிற்கு இடம் இல.

உ - ம். *தான்றந்தை, பேன்றந்தை, கோன்றந்தை; தான் கொற்றன், பேன்கொற்றன், கோன்கொற்றன்...*

பா - ம்.
இளம். க. பதி. *"தந்தை...மேற்றிரிபுகளின்றி"*
இளம். சி. பதி.
*"தந்தைகள்...மேற்கூறிய திரிபுகளின்றி"* நச். ம பதி.
*"இயல்பாயினும்"*
நச். தா. சை. பதி. *"இயல்பாயினவேனும்"*

294

353. தான்யா னெனும்பெய ருருபிய னிலையும்.

போ - ள். தான், யான் என்ற பெயர்கள் வேற்றுமைவழி

உருபியலிற் கூறிய தன்மை பெறும்.

•

உ - ம். தன்கை, என்கை. (எழுத். 193)

இச்சூத்திரம் “புள்ளியிறுதி யுயர்திணைப் பெயரும்...”

(எழுத். 154), “அஃறிணை விரவுப்பெய ரியல்புமா ருளவே” (எழுத். 156) என்ற சூத்திரங்களுக்குப் புறனடை எனக் கொண்

டனர் உரைகாரர்கள்.

“தன்மெய்” (எழுத். 130), “தன்னுருபு” (எழுத். 169)

முதலிய வழக்குக்களால் வருமொழிமுதலில் மெல்லினம் உயிர்

இவை வரினும் இச்சூத்திரத்திற் கூறிய செய்கையைக் கொள்ளல்

தகும். நச்சினார்க்கினியர் “வருமொழி வரையாது கூறினமையின்

இயல்புகணத் துக்கண்ணும் தன்ஞாண்...ஆடை
என வரும்”
என்றனர்.

**354** வேற்றுமை யல்வழிக் குறுகலுந் திரிதலும்
தோற்ற மில்லை யென்மனார் புலவர்.

போ - ள். தான், யான் என்பன அல்வழிக்கண் தோன்று மிடத்து முறையே குறுகலும் திரிதலு மில்லை என்றனர் புலவர்.

உ - ம். தான்குறியன், யான்குறியன்...
தான், யான் என்பன அதிகரித்தன.

தோற்றம் என்றதனுன் வேற்றுமைக்கண் அவ்வாறன்றித் திரித லுங் கொள்க, தற்புகழ், தற்பகை எனவும், எற்பறை, எற்பாடி, எனவும் வரும்” என்றனர் உரைகாரர்கள்.

வேற்றுமைவழியில் உருபியலிற் கூறியதுபோல் தான் என்பது தன் என்றும் யான் என்பது என் என்றும் முற்சூத்திரத்திற் கூறப்பட்டதேயன்றி ஆங்குள்ள னகரம்

அதன் பின்னர் "வல்லெழுத்தியையின் "னகரவிறுதி..." (எழுத். 333) என்ற சூத்திரத்தாற் பெறும் றகரத்திரிபேற்கு மென்றதை விலக்கியதாகத் தோற்றவில்லை. ஆகலின் அல்வழிப்புணர்ச்சிச் செய்கையைக்கூறும் இச்சூத்திரத்துள்ள "தோற்றம்" என்றதனால் அதைக் கொள்ளுதல் பொருந்தாதென்க. அவ்வாறாயின் கன்கை என்றது

295

தற்கை என ஏன் ஆகவில்லையெனின் தன்குறி, தன்பிழை (கள. 20) தன்சீர் (செய்யு. 46) முதலிய ஆசிரியர்வழக்கான் அவ்வாறாகா தென்க.

இச்சூத்திரத்துள்ள திரிதல் யான் என்றதைப்பற்றியது எனக் கொள்க, ஆங்கே யா என்றது எ எனத் திரிதலின்.

**355.** அழனென் னிறுதிகெட வல்லெழுத்து மிகுமே.

போ-ள். அழன் என்ற சொல்லின் பின்னர் வல்லெழுத்து வரின், அதன் இறுதி னகரங்கெட, வல்லெழுத்து மிகும்.

உ-ம். அழன்+குடம்=அழக்குடம்...

வல்லெழுத்தியையின் என்றது அதிகரித்தது.

இச்சூத்திரம் அழனேன் கிளவியின் னகரங் கெடுமே என ஆசிரியர் கூறியிருப்பின், வல்லெழுத்து மிகுதி "வேற்றுமைக்கண்ணு மதனோ ரற்றே" (எழுத் 217) என்றதனாற் கிடைக்கும். அவ்வா றிருக்க "வல்லெழுத்து மிகுமே" என ஏன் ஆசிரியர் கூறினரென விளங்கவில்லை.

**356.** முன்னேன் கிளவி முன்னர்த் தோன்றும்
இல்லென் கிளவிமிசை றகர மொற்றல்
தொல்லியன் மருங்கின் மரீஇய மரபே.

**போ - ள்.** முன் என்ற சொல்லின் பின்னர் வரும் இல் என்ற சொல்லின் முன்னர் றகரவொற்று வருதல் பண்டைக்காலத்து மரபாகும்.

**உ-ம்.** முன் + இல் = முன் + ற் + இல் = முன்றில் (புறநா. 129)

இல்லின் முன்னிடம் என்ற பொருள் பட, இல் முன் என்ற இரண்டு சொற்களும் வேற்றுமைத்தொகையாம்போது, "மருவின் தொகுதி .." (எழுத்.112) என்ற சூத்திரத்தால்

முன் இல் என மாற, ஆங்கு னகாம் இரட்டித்து முன்னில் எனத் தொகைச்சொல்லா காது முன்றில் என ஆகும் என்று இச்சூத்திரம் உணர்த்தும்.

296

**357.** பான்னென் கிளவி யீறுகெட முறையின்
முன்னர்த் தோன்றும் லகார மகாரம்
செய்யுண் மருங்கிற் றொடரிய லான.

**பொ-ள்.** செய்யுளில், தொடராய் வருமிடத்து, பொன் என்ற சொல்லின் பின்னர் வல்லெழுத்து வரின், ன் கெட, லம் வரும்.

**உ-ம்.** பொலங்கலத் தேந்தி (புறநா. 361), பொலந்தாமரைப் பூம்பாணரொடு (புறநா. 361), பொலம்புரியாடை (பரிபா. 3, 88).

வல்லெழுத்தியையின் என்பது அதிகரித்தது.

இளம்பூரணர் சூத்திரத்திற்கு உரை கூறுமிடத்து "பகர முதன்மொழி வந்தவிடத்து'' என வருவித்துக்கொண்டு உரை கூறினர். அன்றியும் தொடரியலான் என்றதனுன் பகரமல்லாத வன்கணத்துக்கண்ணுஞ் சிறுபான்மை ஈறுகெட்டு லகரமும் வல்லெழுத்திற்கேற்ற மெல்லெழுத்தும் மிக்கு முடிதலுங் கொள்க, பொலங்கலம், பொலஞ்சுடர், பொலந்தேர் எனவரும்" என்றனர். நச்சினார்க்கினியரும் அக்கருத்திற்கு உடன்பட்டனர். பகரம் என்பது அதிகரித்து வாராமையாலும், வல்லெழுத்து என்பது அதிகரித்து வருதலானும், ஆங்கு வருகின்ற லம் என்றதின் மகரம், அம் என்ற சாரியையின் மகரம் போன்று பின்னருள்ள வல்லெழுத்துக் கேற்பத் திரிதல் குற்றமாகாதாகலானும், சொல்லுருவத்தில் இரண்டு கொள்கைகளிலும் மாறுபாடின்மையானும் அவ்விருவர் தங்கொள் கைகளும் பொருந்தா வென்க.

அன்றியும் "முறையின் என்றதனுல் லகரம் உயிர்மெய்யாகவும் மகரம் தனிமெய்யாகவுங் கோள்க'' என்றனர் இளம்பூரணர். "முறையின் என்றதனுன் மகரம் ஒற்றுதல் கொள்க" என்றனர் நச்சினார்க்கினியர். ஒற்றுமிகுதகரமோடு (எழுத் 345) போன்ற விடங்களில் தகரம் போன்றது தகரப்புள்ளியைக்

குறித்தலா

ஹும், இறுதியகரம் (எழுத். 212) போன்ற விடங்களில் யகரம்

போன்றது யகரவுயிர்மெய்யினைக் குறித்தலானும், ஈண்டு லகார

மும் மகாரமும் ஒற்றுக்களைக் குறிக்கின்றனவா உயிர்மெய்களைக் குறிக்கின்றனவா என்ற ஐயம் நிகழ்வது இயற்கையே யாகும்.

ஆயினும் லகரப்புள்ளியின் பின்னர் மகரந்தோன்றுமென டறலள (எழுத். 23), லளஃகான் (எழுத். 24) என்ற சூத்திரங்களிற் கூறுமையான் லகரம் என்றது லகரஉயிர்மெய்யைத் தான் குறித்தல் தகும். பின்வரும் வல்லெழுத்தின் முன்னருள்ளது புள்ளியாக இருத்தல் வேண்டுமாகலான், மகரம் என்றது மகரவொற்றினைக் குறித்தல் தகும். "ணகார விறுதி..." (எழுத். 333) என்ற சூத்திரத்து றகாரம் என்றது றகரப்புள்ளியைக் குறித்தலுங் காணலாம். ஆகலின் "முறையின்" என்ற சொல்லான் அவ்வையப்போக்கினைக் கொள்ளுதல் வேண்டா வென்க.

"ஒன்றினமுடித்தல் என்பதனால்
பொலங்குறுந்தெரியல் பொலமலராவிரை

என்றாற்போலவரும் பிறகணத்துமுடிபுங் கொள்க” என இளம்பூரணரும், “இன்னுமிதனானே பொலங்குந்தெரியல் பொலமலராவிரை என்றாற்போல மகரங்கெட்டுப் பிறகணத்து முடிதலுங் கொள்க” என நச்சினார்க்கினியருங் கூறினர்.

பா - ம்.

இளம். க. பதி. “மிக்கு முடிதலுங்கொள்க...ஒன்றின முடித்த லென்பதனால்...”

இளம். சி. பதி. “மிக்குமுடிதல் கொள்க ஒன்றெனமுடித்த லென்பதனால் ..”

முன்னருள்ள பாடஞ் சிறக்கும்.

நச். ம. பதி. “இவ்வீற்றிற்குச் செய்யுண்முடிபு... ”

நச். தா. சை. பதி. “அவ்வீற்றுப்பெயரொன்றற்குச் செய்யுண் முடிபு...”

இனி நிலைமொழி யகரவீறாயிருக்க வேற்றுமைவழி நிகழும் மாறுதல்களை நான்கு சூத்திரங்களிலும் அல்வழி நிகழும் மாறுதல் களை ஒரு சூத்திரத்திலும் ஆசிரியர் உணர்த்தினர்.

**358.** யகர ஃவிறுதி வேற்றுமைப் பொருள்வயின்
வல்லெழுத் தியையி னவ்வெழுத்து
மிகுமே.

**பொ - ள்.** *யகரவிறுதிப்பெயரின் பின்னர் வல்லெழுத்துவரின் வேற்றுமைப்பொருட்புணர்ச்சியில் அவ்வல்லெழுத்து மிகும்.*

**உ - ம்.** *நாய் + கால் = நாய்க்கால்.*

38



பா - ம்.

நச். ம பதி. " *அவ்வெழுத்து* "
நச். தா. சை. பதி. " *அவ்வல்லெழுத்து* "

**359.** தாயென் கிளவி யியற்கை யாகும்.

பொ - ள் தாய் என்றது நிலைமொழியாயிருக்க வேற்றுமைப் புணர்ச்சியில் இயல்பு ஆகும்.

உ-ம். தாய்கை...

வெற்றுமைப்பொருள்வயின் என்றது அதிகரித்தது.

இஃது "அஃறிணை விரவுப்பெய ரியல்புமா ருளவே" (எழுத். 156) என்ற சூத்திரத்திற் கூறப்பட்டதாகலின், கூறியதுகூற லாகாதோ வெனின், ஆங்கு உம்மை கூறப்பட்டமையாலும் இங்கு இயல்பே கூறப்பட்டமையாலும், அதற்கு இது நியமவிதி எனக் கொள்ளலாமாகலின் கூறியதுகூறலன்று.

**360.** மகன்வினை கிளப்பின் முதனிலை யியற்றே

பொ - ள். தாய் என்ற சொல் மகனது வினையைக் கூறின் அஃது முதற்கட்கூறப்பட்ட தன்மையது. அஃதாவது வல்லெழுத்து மிகும்.

உ - ம். மகன்றாய்க்கலாம். ...

தாய் என்றது அதிகரித்தது.

“ வினை ஈண்டுப பகைமேற்று ” என்றனர் நச்சினார்க்கினியர்.

இச்சூத்திரம் முற்சூத்திரத்தின் புறனடையாகும்.

**361.** மெல்லெழுத் துறழு மொழியுமா ருளவே.

பொ - ள். யகரவிறுதிப்பெயருள் வல்லெழுத்து வருவழி மெல் லெழுத்து உறழும் மொழியு முள.

உ-ம். வேய் + குறை = வேய்ங்குறை, வேய்க்குறை...

யகரவிறுதி, பெயர், வல்லெழுத்தியையின் என்பன அதி கரித்தன.



**362.** அல்வழி யெல்லா மியல்பென மொழிப.

பொ - ள். யகரவிறுதிப்பெயர், பின்னர் வல்லெழுத்து வரின் அல்வழியின்கண் இயல்பாகு மென்று கூறுவர்.

உ-ம். நாய்கடிது...

"எல்லாம் என்றதனால் இவ்வீற்று உருபு வாராது உருபின் பொருள்பட வந்த இடைச்சொல்முடியும், வினையெச்சமுடியும், இரு பெயரொட்டுப்பண்புத்தொகைமுடியும் அல்வழியுறழ்ச்சிமுடியுங் கொள்க. அவ்வாய்க் கொண்டான்...எனவும், தாய்க்கொண்டான்... எனவும், பொய்ச்சொல் மெய்ச்சொல் எனவும், வேய்கடிது வேய்க் கடிது...எனவும் வரும்" எனக் கூறினர் இளம்பூரணர். அவரோடு உடன்பட்டனர் நச்சினார்க்கினியர். வாய் என்றது இடப்பொருளை யுணர்த்துஞ் சொல் லாகலான், அவ்வாய் என்றது ஆசிரியர்காலத்து ஏழாம்வேற்றுமையுருபு தொக்க பெயராய்க் கருதப்பட்டிருத்தலான், அவ்வாய்க்கொண்டான் முதலியவற்றை வேற்றுமைவழியதாகக் கொள் ளலாமாகலானும், "வேய்கடிது வேய்க்கடிது" என்ற உறழ்ச்சியைப் புறனடைச்சூத்திரத்தாற் கொள்ளல் தகுமாதலானும், அவ்விரண் டைத் தவிர்த்து ஏனையவற்றைக் கொள்ளுதல் பொருந்து மென்க.

இனி ரகரவிறுதிப்பெயர் நிலைமொழியாயிருக்க வேற்றுமைப் புணர்ச்சியில் நிகழும் மாறுதல்களை நான்கு சூத்திரங்களிற் கூறினர்.

**363.** ரகார விறுதி யகார வியற்றே.

போ - ள். ரகரவிறுதிப்பெயர்

இருவழியும் யகரத்தின் தன்மைத்து.

உ - ம். போர்க்களம் (புறநா. 84); பகைவர் கடிமதி லெறிந்து (பெரும்பாண. 451,2)

வேற்றுமைப்பொருள்வயின், அல்வழியெல்லாம் கரித்தன.

என்பன அதி

" இம்மாட்டேற்றினை யகரவீற்று வேற்றுமையல்வழி யென்னும் இரண்டையுங் கருதி மாட்டெறிந்தாரென்பார் அல்வழிமுடிபும் ஈண்டுக் காட்டுவர். யாம் இவ்வோத்தின்புறனடையாற் காட்டுதும்" என நச்சினார்க்கினியர் கூறினர். அவ்வாறு கூறுவர் யாவரென்பது தெரியவில்லை. ஆகலின் நச்சினார்க்கினியருக்கு முன்னர் இளம்

பூரணத்தைத் தவிர்த்து வேறு உரையும் இருந்ததோ என்ற ஐய
முண்டாகின்றது. "மாட்டேற்றான் உறழ்ச்சியுங் கொள்க. வேர்ங் குறை, வேர்க்குறை என வரும்" என்றனர் நச்சினார்க்கினியர்.

**364.** ஆரும் வெதிருஞ் சாரும் பீரும்
மெல்லெழுத்து மிகுதன் மெய்பெறத்
தோன்றும்.

**பொ - ள்.** ஆர், வெதிர், சார், பீர், என்பனவற்றின் பின்னர் **வல்லெழுத்து** வரின் வேற்றுமைவழி மெல்லெழுத்து மிக்கு முடிதல் உண்மையாகத் தோன்றும்.

**உ-ம்.**
ஆர்ங்கோடு, வெதிர்ங்கோடு, சார்ங்கோடு, பீர்ங்கோடு ... வல்லெழுத்தியையின், வேற்றுமைப்பொருள்வயின் என்பன அதிகரித்தன.

"மெய்பெற என்றதனால் பிறவும் மெல்லெழுத்துமிகுதல் கொள்க, குதிர்ங்கோடு...என வரும்; இன்னும் அதனானே பீர் என்பது மேல் அம்முப் பெற்றவழி இயைபுவல்லெழுத்துவீழ்வுங் கொள்க" என்றனர் இளம்பூரணர்.

நச்சினார்க்கினியர் அவரோடு

உடன்படினும், "இதனை அதிகாரப்புறனடையான் முடிப்பாரு முளர்" என்றனர். அஃதே சிறந்த தென்னலாம்.

**365.** சாரேன் கிளவி காழ்வயின் வலிக்கும்.

பொ - ள் சார் என்ற சொல், நிலைமொழியாகவும், காழ் என்ற சொல் வருமொழியாயு மிருப்பின், இடையில் வல்லெழுத்து மிகும்.

உ - ம். சார்க்காழ்.

**366.** பீரேன் கிளவி யம்மொடுஞ் சிவணும்.

பொ - ள். பீர்

அம்சாரியையோடும்

என்ற சொல் பின்னர் வல்லெழுத்து வரின்

பொருந்தும்.

உ - ம். பீரங்கோடு ..

"பீரமொடு புதற்புதன் மலர" (நெடுநல். 14) என்றவிடத்து அம்சாரியை "புள்ளியிறுதியுமுயிரிறு கிளவியும்..." (எழுத். 203) என்ற சூத்திரத்தாற் கொள்ளல்வேண்டும்.

இனி லகரவிறுதிப்பெயர் நிலைமொழியாயிருக்க வேற்றுமை வழி நிகழும் மாறுதல்களை 367, 368, 376, 378 ஆகிய நான்கு சூத்

திரங்களிலும், அல்வழி நிகழும் மாறுதல்களை 369, 370, 371, 372, 373, 375, ஆகிய ஆறு சூத்திரங்களிலும் இருவழியும் நிகழும் மாறுதல்களை 374, 377 ஆகிய இரண்டு சூத்திரங்களிலும் ஆசிரியர் உணர்த்தினர்.

**367.** லகார விறுதி னகார வியற்றே.

போ - ள். லகாரவிறுதிப்பெயர் வேற்றுமைவழி னகார விறுதிப்பெயரின் தன்மைத்து. அஃதாவது லகரம் றகரமாய்த் திரியும்.

உ -ம். பைங்கால் கொக்கின் (நெடுநல். 15), மருங்கிற் காலமொடு (சொல். 250), கடற் பிறந்த (புறநா. 2).

வேற்றுமைப்பொருள்வயின் என்பது அதிகரித்தது, பின்னர் அல்வழியைப்பற்றி ஆசிரியர் கூறினமையின்.

பா - ம். இளம். க. பதி. "வந்தால்"
இளம். சி. பதி. "வரின்"

**368.** மெல்லெழுத் தியையி னகார மாகும்.

போ - ள். லகாவிறுதிப்பெயரின் பின்னர் மெல்லெழுத்து வரின், லகரம் னகரமாகும்.

உ - ம். எண்ணியன்மருங்கு (சொல் 209), வெயின்புனை யில் (புறநா. 24)

இச்சூத்திரத்தினை வேற்றுமையது ஈற்றுக்கண் அல்வழியது எடுத்துக்கோடற்கண் சிங்கநோக்காக வைத்தமையான் அல்வழிக் கும் இம்முடிபு கொள்க. கன்ஞெரிந்தது... என வரும்." என்றனர் உரைகாரர்கள். மேல்வருஞ் சூத்திரத்தின்கண் "அல்வழி யெல்லா முறழ்பென மொழிப" எனக் கூறியிருக்கின்றமையான், ஆங்குள்ள உறழ்ச்சி வல்லெழுத்து மெல்லெழுத்து இவ்விரண்டற்குங் கொள் ளின் இங்கு இவ்வாறு கூறுதல் வேண்டாமெனத் தோற்றுகின்றது.

**369.** அல்வழி யெல்லா முறழெ(ன) மொழிப.

போ - ள். லகாரவிறுதி நிலைமொழியா யிருக்க, வருமொழி முதல் வல்லினமெல்லினங்களாயிருக்க அல்வழி யெல்லாம் உறழ்ச்சி யென மொழிப.

உ - ம். பனிக்கடல் கலங்க (திருமுரு. 45) வரிமணன்ஞெமர (புறநா. 90)

" எல்லாம் என்றதனால் கல்குறுமை, கற்குறுமை எனக் குணம் பற்றி வந்த வேற்றுமைக்கு இவ்வுறழ்ச்சி கொள்க " என்றனர் உரைகாரர்கள் இச்சூத்திரம் அல்வழியைப்பற்றிக் கூறுகின்றமையான் இதனை ஈற்றுப்புறனடையாற் கொள்ளுதல் தகும்.

" இன்னூடதனுமேன இவ்வீற்று வினைச்சொல்லீறு திரிந்தனவுங் கொள்க, வந்தானும் கொற்றன் " என்றனர் இளம்பூரணர். " உருபு திரிந்தனவுங் கொள்க.. .அத்தாற்கொண்டான் ....எனவும் வரும் " என்றுங் கூறினர் நச்சினார்க்கினியர். இவையெல்லாம் அல்வழிப் புணர்ச்சியாகலானும் லகாரவிறுதிப்பெயர் என்றதை நிலைமொழியாகக் கொள்ளாது லகாரவிறுதிச்சொல்லைக் கொள்ளலாமாகலானும் இவ்வாறு அவர் எல்லாம் என்றதனாற்

கொள்ளவேண்டுதலின்று.

370. தகரம் வரும்வழி யாய்த நிலையிலும்
புகரின் றென்மனார் புலமை யோரே.

போ - ள். வருமொழிமுதல் தகரமாயிருக்க லகரமாகிய இறுதி ஆய்தமாக மாறுதலுங் குற்றமின்று என்பர் புலவர்.

உ - ம். பல் + துளி = பஃறுளி (புறநா. 9)

லகரவிறுதி என்பது அதிகரித்தது.

"புகரின்று என்றதனால் நெடியதனிறுதி...என்பதனுள் வேறீது, வேற்றீது என்னும் உறழ்ச்சிமுடிபு கொள்க" என்றனர் உரைகாரர்கள். ஈற்றுப்புறனடையாற் கொள்ளின் நலம்.

பா - ம். நச். ம. பதி. " தகரமுதன்மொழி "

நச். தா. சை. பதி.
பாடஞ் சிறக்கும்.

" தகர முதலாகிய மொழி". பின்னருள்ள

**371.** நெடியத னிறுதி யியல்புமா ருளவே.

பொ - ள். நெட்டெழுத்தைக் கொண்ட லகரவிறுதி வல்லெழுத்து வருவழி இயல்பா யிருப்பனவும் உள.

உ - ம். பால் கடிது.

303

**372.** நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்
அல்லது கிளப்பினும் வேற்றுமை யியல.

பொ - ள். நெல், செல், கொல், சொல் இவை நான்கும் அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணுள்ள தன்மையன.

உ - ம். நெற்கடிது, செற்கடிது, கொற்கடிது, சொற்கடிது.

இஃது அல்வழி யெல்லா முறனென மொழிய விதியாகும்.

என்றதற்குச் சிறப்பு

373. இல்லென் கிளவி யின்மை செப்பின்
வல்லெழுத்து மிகுதலு மையிடை வருதலும்
இயற்கை யாதலு மாகாரம் வருதலும்
கொளத்தகு மரபி னுகிட னுடைத்தே.

பொ - ள். இல் என்ற சொல் பொருளின்மையைக் குறிப்பின், பின்னர் வல்லெழுத்து வந்துழி வல்லெழுத்து மிகுதலும், இடையில் "ஐ" வருதலும், இயல்பாய் நிற்றலும், இடையில் "ஆ" வருதலும், கொள்ளக்கூடிய மரபாகிய இடத்தை யுடைத்து.

உ - ம். இல் + கல் = இல்லைக்கல் ; இல்லைகல்; இல்கல் ; இல் லாக்கல்.

வல்லெழுத்தியையின் என்பது அதிகரித்தது.

"கொளத்தகு மரபு என்றதனான்
வல்லெழுத்து மிக்க வழி

ஐகாரம் வருதலும், ஆகாரம் மிக்கவழி வல்லெழுத்து மிகுதலுங் கொள்க. இயல்பு முற்கூறுது ஒழிந்ததனுல் வல்லெழுத்துமிகுதி ஆகாரம் வந்தவழி மிக்கே முடிதலின் சிறப்புடைத்தாதலும், ஐகாரம் வந்தவழி மிகுதலும் மிகாமையு முடைமையின் சிறப்பின்றுதலுங் கொள்க" என்றனர் இளம்பூரணர். நச்சினுர்க்கினியரும் அவரோடு உடன்பட்டனர்.

இல்லைக்கல் இல்லைகல் என்பன இல்லை என்னும் ஐகாரவீற்றுச்சொல் முடிபன்றே வென்றும், இல்லாக்கல் என்பது உள்ள என்னும் பெயரெச்சத்து எதிர்மறையாகிய ஆகாரவீற்றுச்சொல்லது முடிபன்றே வென்றும் இல்கல் என்பது பண்புத்தொகைமுடி

304

பன்றே வென்றுங் கூறின் அம்முடிபுகளோடு இம்முடிபுகள் எழுத் தொப்புமை யன்றி இவை இசை வேற்றுமையுடைய வென்பதுபோ லுங் கருத்து" என இளம்பூரணத்திலுள்ளது. ஐகாரவீற்றுப்

பெயர்ச்சொல்லைப் பற்றியே "வேற்றுமை யல்வழி ..." (எழுத். 159) என்ற சூத்திரத்திலும், ஆகாரவீற்றுவினையெச்சத்தைப்பற்றியே "செய்யா வென்னும் வினையெஞ்சு கிளவியும்..." (எழுத். 223) என்ற சூத்திரத்திலும் ஆசிரியர் கூறினமையானும், இன்று இல முதலிய சொற்களை வினைக்குறிப்பாக ஆசிரியர் வினையியலிற் கூறினமையான்

இல்கல் என்பது அஃறிணைபோன்று வினைத்தொகையாகுமேயன்றி, பண்புத்தொகை யாகாமையானும் இக்கடா பொருந்தாதென்க. ஆக

உள் இத்தொடரும் இதற்கு விடையாயுள்ள தொடரும் இடைச் செருகலெனத் தோன்றுகின்றது. இது நச்சினார்க்கினியரது உரையானும் விளங்கும்.

பாம் - .

இளம். க. பதி. "

ஆகிடன்...திரண்மையாகாது...லகரத்தில் ஒவியூன்றியும்..."

இளம். சி. பதி. "ஆகும் இடன்...திரண்மையாக ஒலியாது.... லகரத்து மேல் ஒலி யூன்றியும்."

நச். ம. பதி. "வல்லெழுத்து மிக்கு...இதன் முடிபாம்....ஐகா ரமும்...மிகாமையும்...அன்மை..."

நச். தா. சை. பதி. அவ்வல்லெழுத்து மிக்கு....தன்முடிபாம். ஐகாரம் வருதலும்...மிகுதலும் மிகாமையும்....இன்மை ...". பின்ன ருள்ள பாடம் பொருந்தும்.

**374.** வல்லேன் கிளவி தோழிற்பேய ரியற்றே.

போ - ள். வல் என்ற சொல் ஞகாரவீற்றுத்தொழிற்பெய ரின் தன்மைத்து.

உ - ம். வல்லுக்கடிது...வல்லுக்கடுமை.... வல்லுஞாற்சி ...

ஞகாரவிறுதி என்றது அதிகரித்தது.

**375.** நாயும் பலகையும் வருஉங் காலை
ஆவயி னுகரங் கெடுதலு முரித்தே
உகரங் கெடுவழி யகர நிலையும்.

**போ - ள்.** வல் என்ற சொல்லின் பின்னர் நாய், பலகை, என்பன வருமிடத்து உகரங் கெடுதலு முண்டு; அப்போது அகரம் வரும்.

**உ-ம்.** வல்லநாய், வல்லுநாய்; வல்லப்பலகை, வல்லுப்பலகை.

"அகரம் நிலையும் என்னாது உகரங் கெடும் என்றதனால் பிற வருமொழிக்கண்ணும் அவ்வகரப்பேறு கொள்க, வல்லக்கடிமை...என வரும்" என்றனர் உரைகாரர்கள். "ஆவயி னகர நிலையலு முரித்தே" என ஆசிரியர் கூறியிருப்பின், உகரத்தின் பின்னர் அகரம் வருமா, உகரத்தினிடத்து அகரம் வருமா என்ற ஐயம் நிகழுமாதலான் "உகரங் கெடும்" எனக் கூறவேண்டுவது இன்றியமையாததாகும். அவ்வாறாயின் வல்லக்கடிமை முதலியவற்றை எற்றாற் பெறுதுமெனின், அதிகாரப்புறனடையா னென்க.

**376** பூல்வே லென்றா வாலென் கிளவியோ

டாமுப் பெயரு மம்மிடை வருமே.

போ - ன். பூல், வேல், ஆல், இடையில் வரும்.

என்ற முப்பெயர்க்கும் அம்

உ-ம்: பூலங்கோடு, வேலங்கோடு, ஆலங்கோடு.

இச்சூத்திரம் வேற்றுமைப்புணர்ச்சியைப்பற்றிக் கூறுகின்றது என்பது உரைகாரர்கள்கொள்கை. அதிகாரம் அல்வழியதிகாரமா யிருக்கின்றமையானும், வருஞ்சூத்திரம் இருவழியைப்பற்றிக் கூறு கின்றமையானும், இஃதும் இருவழியைப்பற்றிக் கூறுகின்றது எனக் கொள்ளலாமா வென்பது ஆராய்தற்குரியது.

நச்சினார்க்கினியர் "வருமொழி வரையாது

கூ றினைமையின் இயல்புகணத்தும் ஒட்டுக.
பூலனெரி ... எனவரும். என்று என
எண்ணிடையிட்டமையாற் பூலாங்கோடு பூலாங்கழி என ஆகாரம் பூலுக்குக் கொள்க" என்றனர்.

39

## 306

பா-ம். இளம். க. பதி. "எய்தியது விலக்கி"

இளம். சி. பதி. "அவற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கி"

**377.** தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.

போ-ள். லகரவீற்றுத்தொழிற்பெயரெல்லாம் இருவழிக்கண் உம் ஞகாரவீற்றுத் தொழிற்பெயரின் தன்மைய.

உ-ம். புல்லுக்கடிது...,
புல்லுக்கடுமை...புல்லுஞாற்சி...

" எல்லாம் என்றதனுல் இவ்வாறு முடியாது

பிறவாறு முடிவனவுஞ் சொல்க. பின்னல் சடிது... என வரும். இன்னும் அதனானே மெல்கணம் வந்தவழி பின்னன்ஞான்றது, பின்னன்ஞாற்சி என மெல்லெழுத்தாய்த் திரிந்து முடிவனவுங் கொள்க" என்றனர் இளம்பூரணர். இவற்றையெல்லாம் ஈற்றுப் புறனடையாற் கொள்ளல் தகும்.

**378.** வெயிலென் கிளவி மழையிய னிலையும்.

**பொ-ள்.** வெயில் என்ற சொல் மழை என்ற சொல்லின் தன்மைத்தாகும். அஃதாவது அத்து, இன் சாரியைகள் பெறும்.

**உ-ம்.** வெயிலத்துக்கொண்டான், வெயிலிற் கொண்டான்...

**பா-ம்** நச். ம. பதி. "வளியுடனும்...பனியுடனும்"

நச். தா. சை. பதி. "வளியென வரூஉம் என்பதனுடனும்... பனியென வரூஉம் என்பதனுடனும்"

இனி வகரவிறுதி வேற்றுமைப்புணர்ச்சியில் அடையும் மாறுதல்களை ஒரு சூத்திரத்திலும், அல்வழியில் அடைவனவற்றை நான்கு சூத்திரங்களிலும் ஆசிரியர் உணர்த்தினர். ஆங்கு நான்கு சூத்திரங்களில் அவ், இவ், உவ் என்ற நிலைமொழிகளைப்பற்றியும், ஒரு சூத்திரத்தில் தெவ் என்ற நிலைமொழிப்பற்றியும் உணர்த்தப் பட்டன.

## 307

**379.** சுட்டுமுத லாகிய வகர விறுதி
முற்படக் கிளந்த வுருபிய னிலையும்.

போ - ள். சுட்டினை முதலாகவும் வகரவொற்றை இறுதியாகவு முடைய சொற்கள் நிலைமொழியாயிருக்க வேற்றுமைவழி அவை, முற்கூறப்பட்ட உருபுபுணர்ச்சியின் தன்மையைப் பெறும். அஃதாவது வற்றுச்சாரியை பெறும்.

உ - ம். அவற்றுக்கோடு, இவற்றுக்கோடு, உவற்றுக்கோடு, அவற்றுவழி மருங்கின் (சொல். பெய.

5).

வேற்றுமைப்பொருள்வயின் என்றது அதிகரித்தது.

"முற்படக் கிளந்த என்றதனுன் வற்றினோடு இன்னும் பெறுதல் கொள்க, அவற்றின்கோடு...என வரும்" என்றனர் உரைகாரர்கள்.

**380.** வேற்றுமை யல்வழி யாய்த மாகும்.

பொ - ள். அவ், இவ், உவ், இவற்றின் இறுதி, பின்னர் வல்லெழுத்து வரின், அல்வழியில் ஆய்தம் ஆகும்.

உ - ம். அவ்+கடிய=அஃகடிய...

சுட்டுமுதலாகிய வகரவிறுதி என்றது அதிகரித்தது.
"இவ்வழக்கு இக்காலத்து அரிது" என்றனர் நச்சினார்க்கினியர்.

பா - ம். நச். ம. பதி. "ஆய்தமாக"
நச். தா. சை. பதி. "ஆய்தமாய்"

**381.** மெல்லெழுத் தியையி னவ்வெழுத்

தாகும்.

போ - ள்.

அவ், இவ், உவ், இவற்றின் பின்னர் மெல்லெழுத்து வரின், அல்வழியில் வகரம் அம்மெல்லெழுத்தாகும்.

உ - ம். அஞ்ஞாண்...

சுட்டுமுதலாகிய வகரவிறுதி, வேற்றுமையல்வழி என்பன அதி கரித்தன.

308

பா - ம். இளம். க. பதி. "அவ்வமெல்லெழுத்தாய்"

இளம். சி. பதி. "அம்மேல்லெழுத்தாய்"

**382.** ஏனவை புணரி னியல்பென மொழிப

பொ - ள். சுட்டு முதலாகிய வகரவிறுதிக்குப் பின்னர் வல்லெழுத்துமெல்லெழுத்தல்லாதனவரின் அல்வழியில் இயல்பே புணர்ச்சி என்ப.

உ - ம். அவ்யாழ்..., அவ்வட்டு...

சுட்டுமுதலாகியவகரவிறுதி,
கரித்தன.

வேற்றுமையல்வழி என்பன அதி

"ஈண்டுக் கூறியது நிலைமொழிக்கென்றும் ஆண்டு "நின்ற சொன் முனியல் பாகும்" (எழுத். 145) என்றது வருமொழிக் கென்று முணர்க" என நச்சினார்க்கினியத்தில் உளது. இதனைப் பற்றி ஐயமுண்டாதற்கு இடனின்மையானும், இரண்டு சூத்திரங் களின் செய்கை முழுதும் மாறுபட்டனவானும் இத்தொடர் இடைச் செருகலாயிருத்தல் கூடும்.

**383.** ஏனை வகரந் தொழிற்பெய ரியற்றே.

பொ - ள். தெவ் என்றது இருவழிக்கண்ணும் வல்லெழுத்து மெல்லெழுத்து வருவழி ஞகாரவீற்றுத்தொழிற்பெயரின் தன்மைத்து.

உ - ம், தெவ்வுக்கடிது... தெவ்வுக்கடுமை...

வகரக் கிளவி நான்மொழி யீற்றது (எழுத் 81) எனவும், அ இ உ அம் மூன்றுஞ் சுட்டு (எழுத் 31), தெவ்வுப் பகையாகும் (சொல் 346) எனவுங் கூறப்பட்டமையான், ஏனைவகரம் என்றதனுன் தெவ் என்ற சொல் கொள்ளப்பட்டது.

“உரையிற்கோடலென்பதனுல் தெம்முனை என வகரவொற்று மகரவொற்ருகத் திரிதல் கொள்க” எனக் கூறினர் நச்சினர்க்கினியர். அம்முனை போன்ற சொற்களைக் கண்டு ஒற்றுமைப்போலியான் பிற்காலத்து தெம்முனை என வந்திருத்தல் வேண்டும். ஆக



லின் அதனை ஈண்டு உரையிற்கோடலாற் கொள்ளல் வேண்டா எனத் தோன்றுகின்றது.

இனி ழகரவிறுதிப்பெயர்கள் நிலைமொழியாயிருக்க இருவழியும் நேரும் மாறுதல்களை 384-வது சூத்திரத்திலும், வேற்றுமைவழி நேரும் மாறுதல்களை 385, 386, 387, 388, 389, 396 ஆகிய ஆறு சூத்திரங்களிலும், அல்வழியிலுள்ளனவற்றை 390, 391, 392, 393, 394, 395, ஆகிய ஆறு சூத்திரங்களிலும் ஆசிரியர்

உணர்த்தினர்.

**384.** ழகார விறுதி ரகார வியற்றே.

போ - ள் ழகரவிறுதிப்பெயர் நிலைமொழியாயிருக்க இருவழி யினும் ரகரவிறுதிப்பெயரின் தன்மைத்து.

உ - ம். பூழ்க்கால்,...; பூழ்கடிது...

வேற்றுமைவழியுள்ள மாறுதல்களை மாத்திரம் இச்சூத்திரம் உணர்த்துகின்றதெென உரைகாரர்கள் கூறினர். அல்வழியின்கண் ணுள்ள மாறுதல்களை வேறெங்குங் கூறாமையானும், "அல்லது கிளப் பினும் வேற்றுமைக் கண்ணும் " (எழுத். 297) என இருவழியும் ஒரே சூத்திரத்தில் ஆசிரியர் கூறினமையானும், ஒவ்வொரு புள்ளி யீற்றைப்பற்றிக் கூறிய சூத்திரங்களுள் முதலில் அவ்விருவழியுள் ஒன்றனைமாத்திரங் கூறவேண்டின், அதனை வெளிப்படையாக வேற்றுமைப் பொருட்கே (எழுத்.

303), மகர விறுதி வேற்றுமை யாயின் (எழுத் 311), னகார விறுதி...வேற்றுமைப் பொருட்கே (எழுத். 333) யகர விறுதி வேற்றுமைப்பொருள்வயின் (எழுத். 358), எனக் கூறுகின்றமையானும் "ரகார விறுதி யகார வியற்றே" (எழுத். 362) ழகார விறுதி ரகார வியற்றே என்ற இச்சூத்திரம் இவை இருவழியைப்பற்றியுங் கூறுகின்றன எனக் கூறுதல் சாலும். அவ்வாறாயின் ளகார விறுதி ணகார வியற்றே (எழுத். 397)

என்றதும் பொதுப்படக் கூறப்பட்டமையான் இருவழியுங் கூறுகின்றது எனக் கொள்ளலாமெனின், "அல்வழி யெல்லா முறழென மொழிப" (எழுத். 399) என அதன் பின்னர் ஆசிரியர் கூறுகின்றமையான், அச்சூத்திரத்தை அவ்வாறு கொள்ளுதல் பொருந்தாது.

385. தாழென் கிளவி கோலொடு புணரின்
அக்கிடை வருத லுரித்து மாகும்.



**பொ-ள்** தாழ் என்றதன் பின்னர் கோல் என்றது வரின்,

இடையில் அக்கு வருதல் உரித்துமாகும்.

உ-ம். தாழ்+கோல்=தாழ்+அக்கு+கோல் = தாழக்கோல்

(எழுத். 129).

உரித்தும் என்ற உம்மையான் பெரும்பான்மையாகும்.

அக்குச்சாரியை வாராமையே

**386.** தமிழென் கிளவியு மதனோ ரற்றே.

பொ-ள். தமிழ் என்ற சொல்லும் அத்தன்மையது. அஃதா வது அக்குச்சாரியை பெறும்.

உ-ம். தமிழக்கூத்து...

**387.** தமிழென் கிளவி மரப்பெய ராயின் பீரென் கிளவியோ டோரியற் றாகும்,

பொ-ள் தமிழ் என்றது மரத்தை உணர்த்தின் பீர் என்றத

ளொடு ஒருதன்மைத்தாகும். அஃதாவது மெல்லெழுத்தும் அம்

முச்சாரியையும் பெறும்.

உ - ம். குமிழ்ங்கோடு, குமிழங்கோடு.

" ஓரியற்று என்றதனாற் பிறவற்றிற்கும் இம்முடிவு கொள்க, மகிழங்கோடு எனவரும்" என்றனர் உரைகாரர்கள். அவ்வழக்கு பிற்காலத்ததாகும்.

இளம்பூரணத்தில் " மெல்லெழுத்தும் அம்முச்சாரியையும் பெற்று முடியும் " என உரையிருப்பினும், உதாரணத்தில் குமிழங் கோடு... என்பனவே இருக்கின்றன ; குமிழ்ங்கோடு.. . என்பன ஏட்டில் விடப்பட்டனபோலும்.

**388.** பாழென் கிளவி மெல்லெழுத் துறழ்வே.

பொ - ள் பாழ் என்ற சொல்லின் பின்னர் வல்லெழுத்து வரின் வல்லெழுத்தோடு மெல்லெழுத்து உறழ்ந்து முடியும்.

உ - ம். பாழ்க்கிணறு, பாழ்ங்கிணறு...
வல்லெழுத்தியையின் என்பது அதிகரித்தது.



**389.** ஏழென் கிளவி யுருபிய னிலையும்

போ - ள். ஏழ்*என்ற சொல் வேற்றுமைப்புணர்ச்சிக்கண் உருபு புணர்ச்சியின் தன்மையைப் பெறும். அஃதாவது அன்சாரியை பெறும்.

உ - ம். ஏழன் காயம்...

" இயல்புவல்லெழுத்து இவ்வோத்தின் புறனடையான்வீழ்க்க" என்றனர் உரைகாரர்கள். அதற்கு விடை முன்னரே கூறப்பட்டது காண்க.

**390.** அளவு நிறையு மெண்ணும் வருவழி
நெடுமுதல் குறுகலு முகரம் வருதலும்
கடிநிலை யின்றே யாசிரி யர்க்க.

போ - ள். ஏழ் என்றதின் பின்னர் அளவுப்பெயர், நிறைப் பெயர், எண்ணுப்பெயர் இவை வரின், அதன் நெடுமுதல் குறுகி, இறுதியில் உகரம் வருதல் ஆசிரியர் கொள்கையில் நீக்குதலின்று.

உ - ம். ஏழ் + கலம் = எழுகலம்...

ஏழென்கிளவி என்றது அதிகரித்தது.

"நிலையின்று என்றதனான் வன்கணத்துப் பொருட்பெயர்க் கும் இம்முடிபு கொள்க, எழுகடல்...எனவரும்" என்றனர் உரை காரர்கள். எழுமூன்றுதுறைத்து (புறத். 5), எழுவகையின் (புறத்-20) எழுநிலத்தெழுந்த (செய்யு. 164) முதலிய ஆசிரியர்வழக் கான் ஏனைக்கணத்து அளவு முதலிய பெயர்க்கும் ஏனைப்பெயர்க்குங் கொள்ளலாம்.

**391.** பத்தென் கிளவி யொற்றிடை கெடுவழி
நிற்றல் வேண்டு மாய்தப் புள்ளி.

போ - ள். ஏழ் என்ற சொல்லின் பின்னர் பத்து என்ற சொல் வரின், அங்குள்ள இடையொற்று கெட, ஆய்தம் வரும்.

உ - ம். ஏழ் + பத்து = எழுபஃது.

* இக்காலத்து எழு என வழங்குகின்றது.

முற்றூத்திரத்தால் ஏழ் என்றது எழு என ஆயிற்று.

ஏழென்கிளவி என்றது அதிகரித்தது.

நிற்றல் வேண்டு மாய்தப்புள்ளி என ஈண்டு ஆசிரியர் கூறி யிருக்க, எழுபது (செய்யு 50) எனப் படித்திருப்பாரா?

**392.** ஆயிரம் வருவழி யுகரங் கெடுமே.

**போ - ள்** ஏழ் என்றதன் பின்னர் ஆயிரம் வரின், இறுதியில் வந்த உகரங் கெடும்.

உ - ம். எழாயிரம்.

ஏழென்கிளவி என்றது அதிகரித்தது.

**393.** நூறூர்ந்து வரூஉ மாயிரக் கிளவிக்குக்
கூறிய நெடுமுதல் குறுக்க மின்றே.

**போ - ள்.** ஏழ் என்றதன் பின்னர் நூறாயிரம் என்பது வரின், கூறப்பட்ட நெடுமுதற்குறுக்கம் இல்லை.

உ - ம். ஏழ்நூறூயிரம்.

ஏழென்கிளவி என்றது அதிகரித்தது.

"கூறிய என்றதனுன் நெடுமுதல் குறுகி உகரம் பெற்று எழுநூறாயிரம் என்றுமாம்" எனக் கூறினர் உரைகாரர்கள். இவ்வாறு

வாராது என ஆசிரியர் கூறியிருக்க, அதனைக் கூறிய என்றதனுற் கொள்ளுதல் பொருந்தாது. ஆகலின் அது பிற்காலத்துவழக்கென்க.

இவ்விலேசினுனே "எழாயிரம்" என்றுமாம் என இளம்பூரணத்திலுள்ளது. எழாயிரம் என்பது முற்சூத்திரத்தாற் பெறப்படுதலின் "ஏழாயிரம்" என்று அஃது இருத்தல்வேண்டும். அவ்வாறே நச்சினுர்க்கினியத்தில் உள்ளது காண்க.

பா - ம். நச். ம. பதி. "முதனிலை நீடலும்"

நச். தா. சை. பதி. "முதனிலை குறுகாமையும்". பின் பாடஞ் சிறக்கும்.

**394.** ஐயம் பல்லென வரூஉ மிறுதி
அல்பெய ரெண்ணு மாயிய னிலையும்,

போ-ள். ஏழ் என்றதன் பின்னர், ஐ, அம், பல் என்பன வற்றை ஈற்றிற் கொண்ட பொருட்பெயரல்லாத எண்ணுப்பெயர்கள் வரின் அத்தன்மை நிலையும்.

உ-ம். ஏழ்தாமரை, ஏழ்வெள்ளம், ஏழாம்பல்.

ஏழெண்கிளவி என்றது அதிகரித்தது.

பா-ம். நச். ம. பதி. "இறுதிகிளையுடைய பெயர்..."

நச். தா. சை. பதி.

"இறுதிகிளையுடைய..."

பின்னருள்ள பாடஞ் சிறக்கும்.

**395.** உயிர்முன் வரினு மாயிய றிரியாது.

போ-ள். ஏழ் என்றதின் பின்னர் உயிர் வரினும் அத்தன்மை யினின்றும் அது திரியாது. அஃதாவது நெடுமுதலுங் குறுகாது, உம்மும் பெறாது.

உ - ம். ஏழுகல்...

ஏழென்கிளவி என்றது அதிகாரித்தது.

**396.** கீழென் கிளவி யுறழத் தோன்றும்.

போ - ள். கீழ் என்ற சொல்லின் பின்னர் வல்லெழுத்து வரின் அவ்வல்லெழுத்து உறழும்.

உ - ம். கீழ்குளம், கீழ்க்குளம்...

"தோன்றும் என்றதனான் நெடுமுதல் குறுகாது உகரம் வருதலுங் கொள்க" என இளம்பூரணரும், "தோன்றுமென்றதனான் நெடுமுதல் குறுகாது வல்லெழுத்துப் பெற்றும் பெறாதும் வருமென்ற இரண்டும் உறழ்ச்சியாய் வருமென்று கொள்க" என நச்சினார்க்கினியருங் கூறினர். நச்சினார்க்கினியர் அச்சொல்லாற் குறிக்





கும் பொருள் சூத்திரத்திலே கூறப்பட்டமையான் இளம்பூரணர் கூறுவதே பொருந்தும்.

இனி ளகாவீற்றுச்சொல் நிலைமொழியாயிருக்க வேற்றுமை வழி நேரும் மாறுதல்களை 396, 397, 402, 404 ஆகிய நான்குசூத் திரங்களிலும், அல்வழி நேரும் மாறுதல்களை 398, 399, 400 ஆகிய மூன்று சூத்திரங்களிலும், இருவழியும் நேரும் மாறுதல்களை 401, 403 ஆகிய இரண்டு சூத்திரங்களிலும் ஆசிரியர் உணர்த்தினர்.

**397.** ளகார விறுதி ணகார வியற்றே.

பொ - ள். ளகாரவிறுதிப்பெயர் வேற்றுமைவழிப் பின்னர் வல்லெழுத்து வரின் ணகாரவிறுதியின் தன்மைத்து. அஃதாவது ணகரம் டகரமாய்த் திரியும்.

உ-ம். முட்டாட்டாமரை (திருமுரு. 73), தாடோய் தடக்கை (புறநா. 14).

வேற்றுமைப்பொருள்வயின்,

அதிகரித்தன.

வல்லெழுத்தியையின் என்பன

398 மெல்லெழுத் தியையின் ணகார மாகும்.

போ - ள். ளகாரவிறுதிப்பெயரின் பின்னர்
வரின் வேற்றுமைவழி ளகரம் ணகரமாகும்.

மெல்லெழுத்து

உ - ம். பொருணிலை... (சொல். 250)
தோண்முறையான் (மதுரைக் 54.)

ளகாரவிறுதி, வேற்றுமைப்பொருள்வயின்
என்பன அதிகரித்தன.

"இதனை வேற்றுமையிறுதிக்கண் அல்வழியது எடுத்துக்கோடற்
கண் சிங்கநோக்காக வைத்தலின் அல்வழிக்கும் இம்முடிபு கொள்க,
புண்ணெரிந்தது ..என வரும்" என்றனர் உரைகாரர்கள். மேல்
வருஞ் சூத்திரத்தின்கண் " அல்வழி யெல்லா
முறனென மொழிப" எனக் கூறியிருக்கின்றமையான்
ஆங்குள்ள உறழ்ச்சி வருமொழி

முதனில் வல்லெழுத்து மெல்லெழுத்து இவ்விரண்டும் வரும்போது கொள்ளின், இங்கு இவ்வாறு அவர் கூறவேண்டுவதின்று.

**399.** அல்வழி யெல்லா முறழென மொழிப.

பொ - ள் ளகாரவிறுதி அல்வழிக்கண் உறழுமென்ப.

உ - ம். முள்கடிது, முட்கடிது, முள்ஞெரிந்தது, முண்ஞெரிந்தது...; பொருடெரியின் (சொல். 391), தாட்சுழல் (புறநா. 7) தெண்கடல் (புறநா. 24), நீண்முளை (புறநா. 73).

ளகாரவிறுதி என்றது அதிகாரித்தது.

"எல்லாம் என்றதனால் குணவேற்றுமைக்கண்ணும் இவ்வுறழ்ச்சி கொள்க, முள்குறுமை, முட்குறுமை...எனவும் வரும்; இன்னும் மகனேனே உருபு வாராது உருபின் பொருள்பட வந்தவற்றின் முடிபுங் கொள்க, அதோட்கொண்டான்...எனவரும்" என்றனர் உரைகாரர்கள். அல்வழிக்கண் செய்கையுணர்த்துஞ் சூத்திரத்துள்ள

எல்லாம் என்ற சொல்லால் இவற்றைக் கொள்ளுதலினும் ஈற்றுப் புறனடையாற் கொள்ளுதல் நலமாகும்.

**400.** ஆய்த நிலையலும் வரைநிலை யின்றே
தகரம் வரூஉங் காலை யான.

போ - ள். ளகரவிறுதிப்பெயரின் பின்னர் தகரம் வரும்போது ளகரத்திற்குப் பிரதியாக ஆய்தம் நிற்றலும் நீக்கப்படாது.

உ - ம். முள் + தீது = முஃடீது., முட்டீது.

ளகாரவிறுதி என்றது அதிகரித்தது.

இச்சூத்திரத்தில் தகரம்வருமொழிமுதலாயிருக்க நிலைமொழி

யீற்றிலுள்ள ளகரம் ஆய்தமாகவும் மாறும் எனவும் ணளவேன் புள்ளிமுன் டணவெனத் தோன்றும் (எழுத். 151) என்றவிடத்து நிலைமொழியீற்றிலுள்ள ளகரவொற்றின் பின்னர் வருமொழி முதலாகிய தகரம் டகரமாக மாறும் எனக் கூறப்பட்டது. இவற்றுள்

ஒரு சூத்திரம் முதலில் செய்கை செய்யப்படின், மற்றொரு சூத்திரம் செய்கை செய்யப்படுதற்கு இடனில்லாதுபோம். ஆகலின்

316

இரண்டு சூத்திரமும் ஒரு காலத்தே செய்கைசெய்யப்பட்டு, தகரத்தைப் பார்த்து ணகரம் ஆய்தமாகவும், ஆய்தமாக மாறும் ளகரத்தைப் பார்த்து தகரம் டகரமாகவும் மாறுகின்றன எனக் கொள்ளல் வேண்டும். ஸ்தானிவற்பாவங் கொண்டு, மாறியவிடத்தும் அவ்வெழுத்தே யிருப்பதுபோலக்கொண்டு செய்கைசெய்தலும் ஆசிரியர்க்கு உடன்பாடு என்றலும் ஒன்று.

இச்சூத்திரத்தான் டகரத்தின் முன்னருள்ள ஆய்தத்தின் ஒலி நன்கு உணரப்படும்.

**401.** நெடியத னிறுதி யியல்பா குநவும்
வேற்றுமை யல்வழி வேற்றுமை நிலையலும்
போற்றல் வேண்டு மொழியு மாருளவே.

போ - ள். நெடிலைக்கொண்ட ளகாரவீற்று ஈரெழுத்தொரு மொழியுள் இயல்பாயிருக்கின்றனவும், அவ்வழிக்கண் வேற்றுமை வழிச் செய்கை பெறுவனவு முள்ள சொற்களும் உள ; அவற்றைப் போற்றல்வேண்டும்.

உ - ம். நாள்சோள் (புறத். 13), கோட்பதம் (புறநா. 120) ளகாரம் என்றது அதிகரித்தது.

"போற்றல்வேண்டும் என்றதனான் உதளங்காய்...என அம்முப் பெற்று முடிவன கொள்க" என்றனர் உரைகாரர்கள்.

**402.** தொழிற்பெய ரெல்லாந் தொழிற் பெயரியல.

போ - ள். ளகரவீற்றுத்தொழிற்பெயரெல்லாம் ஞகாரவீற்றுத் தொழிற்பெயரின் தன்மையன.

உ - ம். துள்ளுக்கடிது..., துள்ளுக்கடுமை ; துள்ளுஞான்றது..., துள்ளுஞாற்சி... ;

ளகாரவிறுதி, ஞகாரவிறுதி என்பன அதிகரித்தன.

“ எல்லாம் என்றதனால் தொழிற்பெயர்கள் இருவழியும் இவ்வா றன்றிப் பிறவாறு முடிவனவுங் கொள்க ” என்றனர் உரைகாரர்கள். அவற்றை ஏற்றுப்புறனடையாற் கொள்ளல் தகும்.



**403.** இருளென் கிளவி வெயிலிய னிலையும்.

பொ - ள். இருள் என்ற சொல் வெயிலின் தன்மையில் நிற்கும். அஃதாவது அத்தும் இன்னும் பெறும்

உ - ம். இருளத்துக்கொண்டான், இருளிற்கொண்டான்.

**404.** புள்ளும் வள்ளுந் தொழிற்பெய ரியல.

பொ - ள். புள், வள் என்பன இருவழியும்

ளகரவீற்றுத் தொழிற்பெயரின் தன்மையன.

உ - ம். புள்ளுக்கடிது, வள்ளுக்கடிது ; புள்ளுக்கடுமை, வள் ளுக்கடுமை ; புள்ளுஞான்றது, வள்ளுஞான்றது ; புள்ளுஞாற்சி, வள்ளுஞாற்சி.

" இதனைத்தொழிற்பெய ரெல்லாம் என்றதன்பின் வையாத முறையன்றிய கூற்றினான் இருவழியும் வேற்றுமைத்திரிபு எய்தி முடிவனவுங் கொள்க..." என்றனர் உரைகாரர்கள்.

" இன்னுமதனானே பள் என்பதன்கண்ணும் கள் என்ப தன்கண்ணும் இருவழியு ம் இவ்விருமுடிபு பெற்றவழிக் கொள்க" என்றனர் இளம்பூரணர்.

**405.** மக்க ளென்னும் பெயர்நிலைக் கிளவி
தக்கவழி யறிந்து வலித்தலு முரித்தே.

பொ - ள். மக்கள் என்ற பெயர்ச்சொல்லின் ளகரம் தக்க விடத்து ஆராயப்பட்டு, டகரமாதலு முரித்து.

உ - ம். மக்கட் செவி, மக்கட் சுட்டே (சொல்.

1)

" மக்கட்செவி, மக்கட்கை" முதலியவிடத்து மக்கள் என்ற சொல் உயிரிலுடம்பைக் குறிக்கின்றதென்றனர்.

பா - ம்.

நச். ம. பதி. "இம்முடிபென்றற்கு.. .உயிருண்மை பெற்றது..."

நச். தா. சை. பதி. "இம்முடிபு பெறும் என்றற்கு ... உயிருண்மை பெற்று..."

## 318

**406.** **உணரக் கூறிய புணரியன் மருங்கின்**
**கண்டுசெயற் குரியவை கண்ணினர் கோளலே.**

**பொ-ள்.** இவ்வியலுள் அறியுமாறு கூறப்பட்ட புணர்ச்சிகளிற் கூறப்படாது, இலக்கியத்தில் வழங்கப்பட்டவற்றைக் காணின் அவற்றைக் கொள்ளல்வேண்டும்

ஈண்டு ஆசிரியர் தொல்காப்பியனார்காலத்து வழங்கு மிலக்கியங் களிற் காணின் அவற்றைக் கொள்ளல்வேண்டுமேயன்றிப் பின்ன ருள்ள இலக்கியங்களிற் கண்டனவற்றையெல்லாம் இச்சூத்திரத்தாற் கொள்ளவேண்டிய நியதி இல்லை.

புள்ளிமயங்கியல் முற்றும்.

# 9. குற்றியலுகரப்புணரியல்.

---

உயிர், மெய் ஆகிய முதலெழுத்துக்களுக்கு எழுத்து எனக் குறியிட்டதின் பின்னர், குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆய்தம் என்பனவற்றிற்கும் அக்குறியிட்டதுபோல, உயிர்மயங்கியல் புள்ளி மயங்கியல் இவற்றிற்குப் பின் குற்றியலுகரப்புணரியலைக் கூறினர் ஆசிரியர். குற்றியலுகரம் நிலைமொழியீறாயிருக்க புணர்ச்சியில் நிகழும் மாறுதல்களைக் குற்றியலுகரப்புணரியல்

கூறும்.

குற்றியலுகரம் வருஞ் சொற்களின் வகையை இரண்டு சூத்திரங்களிலும், நிலைமொழி எண்ணுப்பெயராயல்லாதவிடத்து நிகழும் மாறுதல்களை 25 சூத்திரங்களிலும், நிலைமொழி எண்ணுப்பெயரா யிருக்க வருமொழி எண்ணுப்பெயர், அளவுப்பெயர் முதலியனவா யிருக்க நிகழும் மாறுதல்களை 47 சூத்திரங்களிலும், உருபியல் முதலிய புணர்ச்சி கூறுமியல்களுக்குப் புறனடையை மூன்று சூத்திரங்களிலும் ஆசிரியர் உணர்த்தினர்.

**407.** ஈரெழுத் தொருமொழி யுயிர்த்தொட ரிடைத்தொடர்
ஆய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொடர்
ஆயிரு மூன்றே யுகரங் குறுகிடன்.

பொ - ள். குற்றியலுகரம் குறுகுமிடன் ஈரெழுத்தொரு மொழி, உயிர்த்தொடர்மொழி, இடைத்தொடர்மொழி, ஆய்தத் தொடர்மொழி, வன்றொடர்மொழி, மென்றொடர்மொழி ஆகிய ஆறு

கும். ஈரெழுத்தொருமொழி எனப் பொதுவாகக் கூறினாரேனும்

நெட்டெழுத்திம்பரும் (எழுத். 36) எனக் கூறியிருக்கின்றமையான், நெட்டெழுத்தினைக்கொண்ட ஈரெழுத்தொருமொழியையே ஈண்டு ஆசிரியர் கருதின ரென்றும், வல்லாறூர்ந்தே என்றமையால் அவ்வுகரம் வல்லெழுத்தை யூர்ந்தே வரவேண்டுமென்றனரென்றுங் கொள்ளவேண்டும். "இடைப்படிற் குறுகு மிடனுமாருண்டே" (எழுத். 37) என்றவிடத்துக் கூறப்பட்ட இடன் இத்துணைவகைப் படுமென்பது ஈண்டுக் கூறப்பட்டது. உகரம் என்பது குற்றியலுக ரத்தைக் குறிக்கும். நச்சினார்க்கினியர் அவ்வாறே கொண்டனர்.



அவர் கொள்கைக்கே "வல்லொற்றுத் தொடர்மொழி..." (எழுத். 410) என்றவிடத்து "தொல்லை யியற்கை நிலையலு முரித்தே" என்ற தொடர் பொருந்தும். இளம்பூரணர் இவ்வாறு கொள்ளாதது ஆராய்தற்பாலது.

நச்சினார்க்கினியர் வரகு என்றதை இச்சூத்திரவுரையிலும், கெட்டெழுத்தியபும் (எழுத். 36) என்ற சூத்திரத்தின் உரையிலும் உயிர்த்தொடர்மொழியாகவும், "ஓரெழுத்தொருமொழி..." (எழுத். 45) என்ற சூத்திரத்தின் உரையில் ஈரெழுத்தொருமொழியாகவும் கூறியிருத்தல் பொருந்தாததாகும்.

"இதனை ஏழென்று கொள்வார்க்குப் பிண்ணாக்கு, சுண்ணாம்பு, ஆமணக்கு முதலியன முடியாமை உணர்க" என நச்சினார்க்கினியத்தில் உளது.

இதனைப்பற்றிப் பின்வருமாறு யாப்பருங்கலவிருத்தியில் உளது. "எழுவகையிடத்துங் குற்றியலுகரம், வழுவின்றி வரூஉம் வல்லாறூர்ந்தே" என்றார், பல்காயனாராகலின்; எழுவகை யிடமாவன:—நெடிற்கீழும், நெடிலொற்றுக்கீழும், குறிலிணைக்கீழும் குறிலிணையொற்றின்கீழும், குறிநெடிற்கீழும், குறிநெடிலொற்றின் கீழும், குற்றொற்றின் கீழும் என இவை: என்னை? நெடிலே குறிலிணை குறுநெடிலென்றிவையொற்றொடு வருதலொடு குற்றொற்றிறுதி யென்றே ஏழ் குற்றுகரக் கிடனென மொழிப" என்றாராகலின். அவை வருமாறு:—நாகு...சற்று எனக் குற்றொற்றின் கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

பா - ம்.

நச். ம. பதி. " மெய்யுயிரே ...
இருவழிக்கண்ணும் ... இரு வகைத்து.. ஆண்டுக் கூறியதனை..."

நச். தா. சை. பதி. மெய்யே யுயிரென்று யீரியல..
.இருமொழிக் கண்ணும், இருவழிய...ஆண்டுக் கூறியவதனை..."

" மெய்யே யுயிரென்று யீரியல (எழுத். 104)
ஆண்டுக் கூறிய வதனை..."
இருவகைத்து...ஆண்டுக்கூறியதனை" என்ற பாடம் பொருந்தும்.

321

**408.** அவற்றுள்

ஈரோற்றுத் தொடர்மொழி யிடைத்தொட ராகா.

போ - ள். முற் கூறியவற்றுள் ஈரொற்றுத்தொடர்மொழி இடைத்தொடராகக் கருதப்படா. அவை " இடையொற்றுத் தொட ரும் " (எழுத். 414) போன்ற சூத்திரங்களிற் கூறப்பட்ட இடைத் தொடரின் செய்கையைப் பெறு என்க.

உ - ம். ஈர்க்கு...

நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்திற்கு "அவ்வாறனுள் இரண்டொற்று இடைக்கட் டொடர்ந்து நிற்குஞ் சொல்லிற்கு இடையின வொற்றுமுதல் நின்றால் மேலிடையினந் தொடர்ந்து நில்லா வல்லின மும் மெல்லினமுந் தொடர்ந்து நிற்கும்" எனப் பொருள் கூறினர். இப்பொருள் "யரழ வென்னு மூன்றுமுன் னொற்றக்—கசதப ஙஞநம வீரொற் றாகும்" (எழுத். 48) என்ற சூத்திரத்தான் உணர்த்தப் பட்டமையான், இவ்வாறு அவர் கூறுதல் பொருந்தாது.

ஈர்க்கு போன்றன இடைத்தொடராகக் கருதப்படுமா வன்றொடராகக் கருதப்படுமா என்ற ஐயமும், மோய்ம்பு போன்றன இடைத்தொடராகக் கருதப்படுமா மென்றொடராகக் கருதப் படுமா என்ற ஐயமும் நிகழ்தலின், அவ்வையத்தைப் போக்க இச் சூத்திரங் கூறின ரென்க.

இளம். சி. பதிப்பில் " அவற்றுள் ஈரொற்றுத்தொடர்மொழி களில் இடைத்தொடராகா " என்றவிடத்து [ களில் ] என்பது பதிப்போராற் சேர்க்கப்பட்டது. அது சூத்திரப்போக்கிற்கு மாறுபட்ட தென்க. அன்றியும் " இரண்டு ஒற்றெழுத்துக்கள் தொடர்ந்து வரும் [மூவகை] மொழிகளில் இடைத்தொடர் மொழிகள் உகரம் குறுகும் இடன் ஆகா என்பதே நேர்உரை " என உளது. இப்பொருள் " அல்லது கிளப்பினும், .." என்ற சூத்திரத்தில் இளம்பூரணர் கூறுகின்றமையான் இவ்வுரை பொருந்தா தென்க.

322

409. அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா விறுதியு முகர நிறையும்.

போ - ள். அல்வழி வேற்றுமைவழி இரண்டிலுமுள்ள அறுவகைப்

பட்ட இறுதிக்கண்ணும் குற்றியலுகரங் குறுகாது அரை மாத்திரை பெற்று நிறைந்து நிற்கும்.

இயல்பாகிய

இச்சூத்திரவுரையில் உகரம் என்றதைக்

குற்றியலுகரமாகவும்

ஈரெழுத்தொருமொழி... (எழுத். 407) என்ற

சூத்திரத்தில் அதனை

முற்றியலுகரமாகவும் இளம்பூரணர் கருதியது

பொருத்தமின்று.

அன்றியும் முற்றியலுகரமும் குற்றியலுகரமும்

மாத்திரையின் மாத்

திரம் வேறுபட்டனவல்ல; பிறப்பிடத்திலும் வேறுபட்டன வென்பதைப் பிறப்பியற்சூத்திரங்களில் ஆசிரியர் உணர்த்தியது நோக்கத் தக்கது.

இச்சூத்திரம் எற்றுக்கு எனின்,

"இடைப்படிற் குறுகு மிட

னுமா ருண்டே—கடப்பா டறிந்த புணரிய லான"

(எழுத். 37) என்ற

விடத்துப் புணர்ச்சியின்கண் குறுகுமென்றும், அவ்விடங்கள் ஆறு

என "ஈரெழுத்தொருமொழி..." (எழுத் 407) என்ற சூத்திரத்தின்

கண்ணுங் கூறியிருக்கின்றமையான், எல்லாவிடங்களிலுங் குற்றிய

லுகரங் குறுகுமோவென்ற ஐயம் வர, எல்லாவழியும் நிறையுமென

ஈண்டுப் பொதுவாகக் கூறிப் பின்னர்க் குறுகுமிடங்களை யுணர்த்

தற்கு என்க.

இளம்பூரணர்கூற்றை " அன்றி இருமொழிப்புணர்ச்சிக்கண்

ஒரு மாத்திரை பெறுமென்றார்க்குப் பன்மொழிப்புணர்ச்சியாகிய

செய்யுளிலக்கணங் குற்றுகரத்தான் நேர்பசை நிரைபசை கோட

லும்... இன்றாய் முற்றியலுகரமாகவே கொள்ளவேண்டுதலின் மாறு

கொளக்கூறலென்னுங் குற்றந் தங்குமென்று உணர்க" என நச்சி

னார்க்கினியர் மறுத்தனர்.

பா - ம். இளம். நச். ம. பதி. "நிறையும்"
நச். தா. சை. பதி. "நிலையும்"

**410.**

வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழி
தொல்லை யியற்கை நிலையலு முரித்தே.

**323**

போ - ள். வல்லொற்றுத்தொடர்மொழியின் இறுதிக்குற்றிய லுகரம் வல்லெழுத்துமுதன்மொழி வருமொழியாய் வருமிடத்து இயல்பின்கண் நிற்றலுமுரித்து.

• அவ்வியற்கை " இடைப்படிற் குறுகு மிடனு

மாருண்டே— கடப்பா டறிந்த புணரிய லான" (எழுத். 37) என்றவிடத்து கூறப் பட்டதே யாகும்.

உ - ம். கொக்கு + கடிது =கொக்குக்கடிது ; கொக்குக்கடுமை. ஈண்டு குகரத்திற்குக் கால் மாத்திரை யெனக் கொள்ளல் வேண்டும். உகரம் என்பது அதிகரித்தது.

இளம்பூரணர் இச்சூத்திரத்திற்குப் பொருள் இவ்வாறு கொள்ளாது " அவ்விய னிலையு மேனை மூன்றே " (எழுத். 12) என்ற சூத்திரத்திற் கூறப்பட்ட அரை மாத்திரை பெறுங் குற்றியலுகரம் எனப் பொருள் கொண்டனர். அவ்வாறு கொண்டதற்குக் காரணம் மூற்சூத்திரத்தில் " உகர நிறையும் " என்றதற்குக் குற்றியலுகரம் முற்றுகரமாகும் எனப் பொருள் கொண்டதே யாம். இச்சூத்திரத் திற்கு நச்சினார்க்கினியர் கொண்ட பொருளே சிறக்கும்.

நிலையலும் என்ற உம்மையான் குற்றியலுகரம் கால் மாத் திரை பெறுதல் சிறுபான்மை யென்க.

நச்சினார்க்கினியத்தில் "முன்னின்ற சூத்திரத்து உகர நிறையு மென்று பாடமோதி அதற்கு உகரம் அரை மாத்திரையிற் சிறிது மிக்கு நிற்குமென்று பொருள் கூறி இச்சூத்திரத்திற்குப் பழைய அரை மாத்திரை பெற்று நிற்குமென்று கூறுவாரும் உளர்" என்ற தொடர் உள்ளது. இவ்வாறு கூறுபவர் யார் என விளங்கவில்லை. அவ்வாறு கொள்ளின் குற்றியலுகரம் அரை மாத்திரை பெற்று நிற்றல் சிறுபான்மையாகும். அது பொருந்ா தென்க.

இளம். சி. பதிப்பில் முற்சூத்திரத்தின் கீழ் "நிலையும் என்ற பாடங்கொண்டு அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் ஒற்றுக்கள் இரண்டு தொடர்ந்துவரும் இடைத்தொடர்மொழிகளல்லாத அறுவகை மொழிகளின் இறுதிக்கண்ணுங் குற்றியலுகரம் நிற்கும் என்று உரைத்தலே பொருத்தமுடைத்து" என்ற குறிப்பும், இச்

சூத்திரத்தின்கீழ் "தொல்லை இயற்கை என்பதற்கு ஈண்டுக் கூறும் உகரம் (அதாவது குற்றியலுகரம்) தனது முந்திய தன்மையில் (அதாவது முற்றுகரமாக) நிற்றலுமுரித்து

நில்லாமையு முரித்து

என்று உரைத்தலே பொருத்தமுடைத்து" என்ற

குறிப்பும் உள்

ளன. இப்பொருளின் பொருத்தமின்மை காண்க.

பா - ம்.

இளம். க. பதி. "

அவ்வாறீற்றுள்ளும்...முன் கூறுகின்ற..."

இளம். சி. பதி. "அவ் ஈற்றுள்ளும்...முற்கூறிய..."

நச். ம. பதி. "உகர நிறையுமென்றற்கு"

நச். தா. சை. பதி. "உகர நிறையுமென்று

பாடம் ஓதி அதற்கு"

**411.** யகரம் வருவழி யிகரங் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்றாது.

பொ - ள்

வருமொழிமுதல் யகரமாயிருக்க, நிலைமொழியிறுதி யாகிய உகரம் முற்றிலுங் கெட, அவ்விடத்திற் குற்றியலிகரம் வந்து குறுகும்:

உ - ம். நாகு + யாது = நாகியாது...மென்மையோடியாப்புற (மெய்ப். 6)

இச்சூத்திரத்தில் இகரங் குறுகும் என்றதற்கு ஓர் இகரம் வந்து குறுகும்" என இளம்பூரணரும், "ஆண்டு ஓர் இகரம் வந்து அரை மாத்திரை பெற்று நிற்கும்" என நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர். "புணரிய னிலையிடைக் குறுகலு முரித்தே" (எழுத். 35) என்றவிடத்து "அக்குற்றிய லிகரம்....குறுகுதலு முரித்து" எனக் கூறிய நச்சினார்க்கினியர் ஈண்டு ஓர் இகரம் வந்து அரை மாத்திரை

பெற்று நிற்குமெனக் கூறுதல் பொருந்ாததெனத் தோற்றுகின்றது. அச்சூத்திரத்துள்ள "குறுகலுமுரித்து" என்றதையும் இச்சூத்திரத்துள்ள "குறுகும்" என்றதையும் நோக்கின், குற்றியலிகரஞ் சிறுபான்மை கால் மாத்திரை பெறும் என நச்சினார்க்கினியர் கூறியிருப்பின் நலம்,

325

இச்சூத்திரம் எற்றுக்கு எனின் "புணரிய னிலையிடைக் குறு
கலு முரித்தே - உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்" (எழுத். 35)
என்றவிடத்து கூறப்பட்ட இடம் யாது என்ற ஐயத்தைப் போக்க
என்க.

இச்சூத்திரம் குற்றியலுகரம் குற்றியலிகரமாய் மாறி தன் மாத்திரையிற் குறுகுமென்பதைக் கூறுகின்றது. ஆகலின் "இது குற்றியலிகரம் புணர்மொழியுள் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று"

என்பதைமாத்திரம் உரைகாரர்கள் கூறுதலும் " இது குற்றியலுகாரம் குற்றியலிகரமாம் இடம் உணர்த்துதல் நுதலிற்று என்று கூறுதல் மிகப் பொருத்தமுடைத்து " என்பதை மாத்திரம் சிதம்பரம் பிள்ளை கூறுதலும் இச்சூத்திரத்தின் கருத்தை முற்றிலும் உணர்த்த வில்லை யென்க.

**412.** ஈரெழுத்து மொழியு முயிர்த்தொடர் மொழியும்
வேற்றுமை யாயி னொற்றிடை யினமிகத்
தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி.

பொ - ள். ஈரெழுத்துமொழியும், உயிர்த்தொடர்மொழியும் நிலைமொழியாயிருக்க, வேற்றுமைக்கண், அவற்றின் இறுதிக்குற்றிய லுகரத்தின் பற்றுக்கோட்டின் இனவொற்று இடையில் மிக, நிலைமொழியின் பின்னர் வல்லெழுத்துமிகுதியைத் தோற்றத்தின்கண் வேண்டும் (ஆசிரியன்).

உ - ம். ஆறு + இடை = ஆற்றிடை (கற்பு. 29)

ஆறு + கவலை = ஆற்றுக்கவலை (புறநா. 219)
களிறு + கோடு = களிற்றுக்கோடு (புறநா. 171)

வல்லெழுத்துவருவழி என்றது அதிகரித்தது.

"வல்லெழுத்து மிகுதி தோற்றம் வேண்டும்" என்றதற்கு "வல்லெழுத்துமிகுதி தோற்றி முடிதல் வேண்டும்" எனப் பொருள் கூறினர் உரைகாரர்கள். தோற்றம் என்றதை "இருதிணை மருங்கின்..." (சொல். 10) என்றவிடத்திற்போல ஏழாம்வேற்றுமையா கவும் "வல்லெழுத்துமிகுதி" என்றதை இரண்டாம் வேற்றுமை யாகவுங் கொள்ளல் கூடும்.

320

"தோற்றம் என்றதனால் இவ்விரண்டற்கும் ஏனைக்கணத் தும் இம்முடிபு கொள்க" என்றனர் நச்சினார்க்கினியர். இவற்றைச் சோற்றுநிலை (புறத். 8) முதலிய ஆசிரியர்வழக்கான் கொள்ளல்

தரும்.

யாட்டின்கால் என்றவிடத்து இடையில் இனவொற்று மிகுதி எவ்வாறெனின், இன் என்ற ஐந்தாம்வேற்றுமையுருபு யாடு என்ற தன்பின்னர் வரும்போது "நெட்டெழுத் திம்பர்..." (எழுத். 197) என்ற சூத்திரத்தான் வரும் இனவொற்றுமிகுதியைப் பார்த்து, இன் என்றது ஆறும்வேற்றுமையுருபின் முன்னர் வந்த சாரியையா யிருக்கும்போதும், அம்மிகுதி வந்த தென்க. ஆங்கு வல்லெழுத்து மிகுதி வாராமையை வருஞ் சூத்திரத்துள்ள அத்திறம் என்ற தனற் கொள்ளுகின்றனர் உரைகாரர்கள். யாட்டின்கண்ணே (மரபு. 47), ஊடலிற்றணித்தல் (கற்பு. 27) முதலிய ஆசிரியர்வழக் காற் கொளல் தரும்.

## 413.

ஒற்றிடை யினமிகா மொழியுமா ருளவே
அத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே.

போ - ள். முற்சூத்திரத்திற் கூறப்பட்ட இடையில் இன வொற்று மிகுதியில்லா மொழிகளும் உள; அப்போது வல் லெழுத்து மிகுதியு மில்லை.

உ - ம். நாகு+கால்=நாகுகால், வேறு புலம் (புறநா. 22), வேற்றுப்புலம் (புறநா. 31)

பா - ம். நச். ம. பதி. " அக்கூற்றில் ... எய்தியவழி "

நச். தா. சை. பதி. " அக்கூற்றுள் ... சென்றவழி "

**414.** இடையொற்றுத் தொடரு மாய்தத் தொடரும்

நடையா யியல வென்மனார் புலவர்.

பொ - ள். இடையொற்றுத்தொடரும் ஆய்தத்தொடரும் வல்லெழுத்து வருவழி, நடையின்கண் அத்தன்மையன என்று கூறு வர் புலவர். அஃதாவது இனவொற்று இடையில் மிகாதும், வல்லெழுத்து மிகுதி பெறாதும் நிற்கும்.

உ - ம். தெள்குகால், எஃகுகால்...

வல்லெழுத்துவருவழி என்றது அதிகரித்தது.

பா - ம். இளம். க. பதி. "இயல்பு முடியினையுடைய"

இளம். சி. பதி. "இயல்பு முடியினையுடைய என்று
சொல்லுவர் புலவர்"

**415.** வன்றொடர் மொழியு மென்றொடர் மொழியும்
வந்த வல்லெழுத் தொற்றிடை மிகுமே
மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற் றெல்லாம்
வல்லொற் றிறுதி கிளையொற் றாகும்.

போ - ள். குற்றியலுகரவிறுதியாகிய வன்றொடர்மொழிக்கண்ணும் மென்றொடர்மொழிக்கண்ணும், பின்னர் வல்லெழுத்து வர, அவ்வல்லெழுத்தொற்று இடையில் மிகும். மென்றொடர் மொழி வல்லொற்றை இறுதியிற்கொண்ட கிளைப்பெயராயின், அவற்றின் மெல்லொற்றெல்லாம் கிளைவல்லொற்றாகும்.

உ - ம். கொக்கு + கால் = கொக்குக்கால்; குரங்கு + கால் = குரங்குக்கால் ; எண்கு + குட்டி = எட்குக்குட்டி.

கிளை என்றது இரட்டிக்கப்பட ஒன்றற்குச் சினை பொருளாகவும் மற்றதற்கு இனம் பொருளாகவுங் கொள்ளப்பட்டது.

ஈண்டு கிளை என்பதற்குக் கிளைப்பெயர் எனக் கொண்டதற்குக் காரணம் " ஒற்றுநிலைதிரியாது... " (எழுத். 419) என்ற

சூத்திரத்தில் "அக்கிளைமொழியும்" என்ற தொடராகும். கிளைப்பெயர் என்ற சொல்லை கிளைப்பெயரெல்லாம்...." (எழுத். 308),

கிளைப்பெய ரெல்லாங் கிளைப்பெய ரியல (எழுத். 339) என்ற சூத்தி

ரங்களில் ஆசிரியர் வழங்கியதைக் காணலாம்.

கிளையோற்று என்றவிடத்து கிளைவல்லொற்று எனக் கூறல் வேண்டாவோ வெனின், வேண்டா, வல்லொற்றைத் தவிர்த்து வேறொன்றும் மெல்லொற்றுக்கு இனமாகாமையின். "எல்லாம் என்ற

தனால் பறம்பிற்பாரி என்றாற்போல்வன

மெல்லொற்றுத் திரியாமை

யுங் கொள்க" என்றனர் இளம்பூரணர்.

அவரோடு உடன்பட்ட

னர் நச்சினார்க்கினியர். இச்சூத்திரம்

வருமொழிமுதலில் வல்லெ

ழுத்து வந்து, இடையிற் சாரியை வாராத

விடத்தே மெல்லொற்

றின் திரிபைக் கூறுகின்றமையானும்,

பறம்பிற்பாரி போன்ற இடங் 328

களில் இடையில் இன் சாரியை வந்திருத்தலானும் அவர் தங்கொள்கை ஆராய்தற்பாலது.

" ஒற்று என்ற மிகுதியான் இயல்புகணத்துக்கண்ணும் குரக்கு ஞாற்சி ... என மெல்லொற்றுத் திரிதலுங் கொள்க" என்றனர் உரைகாரர்கள். இவற்றை ஆசிரியர்வழக்கானும் " மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற் றெல்லாம்—வல்லொற் றிறுதி கிளையொற் றாகும்" என்ற பகுதியைத் தனிச்சூத்திரமாகக் கொள்ளுதலானும் பெறுதல் கூடும்.

பா - ம். இளம். சி. பதிப்பில் " குரக்குக்கால், செவி, தலை, புறம் எனவும்" என்பது விடப்பட்டுளது. அன்றியும் "எட்குக் குட்டி என்றது அச்சுப்பிழையால் " எட்டுக்குட்டி" என்றுளது.

**416.** மரப்பெயர்க் கிளவிக் கம்மே சாரியை.

போ - ள் குற்றியலுகாவிறுதிமரப்பெயர்கள் வன்றொடர், மென்றொடராக இருப்பின், பின்னர் வல்லெழுத்து வருவழி, அம் சாரியை இடையில் வரும்.

உ - ம். தேக்கு + கோடு = தேக்கங்கோடு ;

வேம்பு + கோடு = வேப்பங்கோடு....

உகரம், வல்லெழுத்துவருவழி என்பன

அதிகரித்தன.

ஈண்டு மரம் என்றது புல்லிற்கும் உபலக்கண மென்க. இதனை

நச்சினார்க்கினியர் "கமுகங்காய் தெங்கங்காய், சிழ்கம்புல், கம்பம் புலம் பயற்றங்காய் என்றாற்போலும் புல்லினையும் மரமென அடக்கி மாறுகொளக்கூறலெனத் தழீஇக்கொண்ட * சிதைவென்ப தாம் இச்சூத்திரமென்றுணர்க" என்ற தொடரான் உணர்த்தினர்.

இச்சூத்திரம் வன்றொடர்மென்றொடராயிருக்கும் மரக்கிளவி

யைப்பற்றிக் கூறுமென்பது இளம்பூரணர்கொள்கை. எவ்வகைப்

பட்ட தொடரைப்பற்றியுங் கூறுமென்பது நச்சினார்க்கினியர்

கொள்கை.

* மரம், புல் இவற்றை புணர்த்தும் பெயர்க்குப் பொதுவாய் இலக்கணங் கூறாது மரப்பெயர்க்கு மாத்திரங் கூறியது சிதை வென்ற வகைக் குற்றத்தன் மாறுகொளக் கூறலின்கண் வரும். (*cf.* மரபு. 108)



இச்சூத்திரத்தில் அம்முச்சாரியை

விதிக்கப்படினும், அத னோடு முற்சூத்திரத்திற்

கூறப்பட்ட மெல்லொற்று வல்லொற்றாதலு முண்டு என்பது வருஞ்சூத்திரத்தில் "மெல்லொற்று வலியா மரப்
பெயரு முளவே" எனபதனல் விளங்கும்.

பா - ம். இளம். க. பதி. "தேக்கங்கோடு, செதிள், தோல், பூ."

இளம். சி. பதி. "குருந்த ங்கோடு, செதிள், தோல், பூ."

குருந்தங்கோடு முதலியன வருஞ்சூத்திரத்திற்கு உதாரணமாக வின், ஈண்டு அஃது அச்சுப்பிழையாகும்.

**417.** மெல்லொற்று வலியா மரப்பெயரு முளவே.

போ - ள் மர முணர்த்தும்

பெண்றொடர்மொழியுள் மெல் லொற்று வல்லொற்று ஆகாத சொற்களும் உள.

உ - ம். குருந்தங்கோடு...; புன்கங்கோடு...

இச்சூத்திரத்தின்கண் " வலியா
மரப்பெயருமுள எனவே
வலிக்கும் மரப்பெயரும் உளவென்று கொள்க, வேப்பங்கோடு, கடப்பங்காய், ஈச்சங்குலை என வரும்" என்றனர் நச்சினார்க்கினியர்.
மரப்பெயர்க் கிளவிக் கம்மே சாரியை"
என்ற சூத்திரமும் அதற்கு முன்னுள்ள
சூத்திரமும் ஒன்றுக்கொன்று மாறுகாணமயின்
இவ்வுதாரணங்களையும் அச்சூத்திரத்தின்கண்ணே
இளம்பூரணரைப் போற் கூறியிருத்தல்வேண்டும்.

பா - ம். நச். ம. பதி. "ஈச்சங்காய்"
நச். தா. சை. பதி. "ஈச்சங்குலை"

**418.** ஈரெழுத்து மொழியும் வல்லொற்றுத்
தொடரும்
அம்மிடை வரற்கு முரியவை யுளவே
அம்மர பொழுகு மொழிவயி னான.

போ - ள். குற்றியலுகரத்திறுதியாகிய ஈரெழுத்தொருமொழியும் வன்றொடரும் நிலைமொழியாயிருக்க, வல்லெழுத்துமுதன் மொழி வருமொழியாய் வர, அவற்றுள் இடையில் அம்முச்சாரியை

42



வருதற்கு உரிய சொற்களும் உள. அவை அவ்விலக்கணத்தோடு ஒழுகும் மொழிகளிடத்துக் காணப்படும்.

உ - ம். ஏறு + கோள் = ஏறங்கோள் ; வட்டு + போர் = வட்டம் போர். (வட்டு = சூதாடு கருவி).

உம்மை எதிர்மறையாகலான் அம்முச்சாரியை பெறுதனவே பெரும்பான்மை யென்க.

"உள என்றதனால் தெங்கங்காய், பயிற்றங்காய் என வன்றொட ரல்லனவற்றிற்கு அம்முப்பேறு கொள்க" என

இளம்பூரணர் கூறி னர். "மரப்பெயர்க் கிளவிக்கு ..." (எழுத். 416.) என் ற சூத்திரத் தில் மரம் என்றதைப் புல்லிற்கும் உபலக்கணமாகக் கொண்டு இவற்றை நச்சினார்க்கினியர்போல் அச்சூத்திரத்தின்கீழ்க் கொள்ளு தல் நலம்.

" அம்மரபொழுகும் என்றதனால் அரசக்கன்னி, முரசக்கடிப்பு என அக்குப்பேறுங் கொள்க; இன்னு மதனானே இருட்டத்துக் கொண்டான் என்னும் அத்துப்பேறுங் கொள்க; இன்னுமதனானே மயிலாப்பிற்கொற்றன் பறம்பிற்பாரி என இன்பேறுங் கொள்க; இன்னுமதனானே கரியதன்கோடு என அன்பேறுங் கொள்க" என் றனர் இளம்பூரணர். அவரோடு உடன்பட்டனர் நச்சினார்க்கினியர். இவற்றை அதிகாரப்புறனடையாற் கொள்ளுதல் சிறக்கும்.

**419.** ஒற்றுநிலை திரியா தக்கொடு வருஉம்
அக்கிளை மொழியு முளவென மொழிப.

போ - ள். அம்மென்றொடர்மொழியுள் வல்லெழுத்து வரு வழி மெல்லொற்று வல்லொற்றாகாது அக்குச்சாரியை பெற்ற வருவனவு முள.

உ-ம். குன்று + கூகை = குன்றக்கூகை; மன்றப்பலவின் புறநா. 128)

வல்லெழுத்து வருவழி என்பது அதிகரித்தது.

கிளைமொழி என்றதற்குக் கிளையெழுத்துமொழி என இளம்பூரணரும், கிளையான சொற்கள் என நச்சினார்க்கினியரும் பொருள்

331

கூறினர். கிளைப்பெயர் என ஆசிரியர் முன்னர் வழங்கினமையான்,

ஈண்டுக் கிளைமொழி என்பதற்குக் கிளைப்பெயர் என்றே பொருள் கொளல்வேண்டும் கிளைப்பெயர் என்பதற்கு ஓரினத்தை உணர நின்ற பெயர் என உரைகாரர்கள் பொருள் கூறியதைக் காண்க.

" அக்கிளைமொழி என்றதனால் * பார்ப்பு + கன்னி = பார்ப்

பனக் கன்னி, பார்ப்பு + சேரி = பார்ப்பனச் சேரி

என அன்னும்

அச்சும் வந்தன கொள்க " என்றனர்

உரைகாரர்கள். உம்மை

யால் கொங்கத்துழவு, வங்கத்துவாணிகம் என

அத்துப் பெற்றன ''

என்றனர் இளம்பூரணர். இவற்றை அதிகாரப்புறனடையாற் கொள்ளுதல் பொருந்தும். "இதற்கு உம்மையை முன்னர் மாறுக"

எனக் கூறி, அக்கொடு என்றதற்கு

அக்குச்சாரியையோடும்

பிறசாரியைகளோடும் எனப் பொருள்

கூறினர் நச்சினார்க்கினியர்.

அப்பொருளையே கூறினர் இளம்பூரணரும்.

அம்முச்சாரியை

பெறாது அக்குச்சாரியை பெறும் அக்கிளைமொழிகளுமுள எனக் கொள்ளுதல் நேரிதாயிருக்க, அவர்கள் அவ்வாறு கொண்டது

பொருந்தாதென்க.

பா - ம்.

நச். ம. பதி. " பார்ப்பிடைக்

குழவி....பார்ப்பாரச் சாதி..."

நச். தா. சை. பதி. " பார்ப்பினுட்

குழவி....பார்ப்பான் சாதி"

" வருமொழி வரையாது கூறினமையின் இயல்புகணத்துக்

கண்ணுங் கொள்க" என்றனர் நச்சினார்க்கினியர். "ஏழனுருபிற்கு" (எழுத். 202), "ஏழனிறுதி" (எழுத். 195) இரண்டன்மருங்கின் (சொல். 93) முதலிய ஆசிரியர்வழக்கால் அவற்றைக் கொள்ள லாம்.

* ஶ்ராஹ்மண: என்பது

" பார்ப்பனன் " எனத் திரிய, அதிலிருந்து

"பார்ப்பு" என்ற சொல் ஆசிரியர்காலத்திற்கு முன்னமே வந்திருத்தல் காண்க. cf. லோக:—உலகம்—உலகு; கல்ப:—கற்பம்—கற்பு. ஆயினும் சிலர் பார்ப்பனன் என்றதைப் பார்த்தல் என்ற வினையிலிருந்து வந்ததாகக் கருதுகின்றனர். அதற்கு ஆதாரம் ஊஷி உபாத்யாக என்பது ஆகும். அதனைக் கொள்ளின் பார்ப்பனன் என்ற சொற்கு இருடி என்ற பொருளே தக்கதாமெனக.

332

**420.** எண்ணுப் பெயர்க்கிளவி யுருபிய னிலையும்.

பொ-ள். குற்றியலுகர இறுதியாகிய எண்ணுப்பெயர்கள் நிலைமொழியாயிருக்க, வல்லெழுத்து வருவழி உருபியலிற் கூறிய தன்மையைப் பெறும். அஃதாவது அன்சாரியை பெறும்.

உ-ம். ஒன்று + காயம் = ஒன்றன்காயம்.

வல்லெழுத்துவருவழி என்பது அதிகரித்தது.

**421.** வண்டும் பெண்டு மின்னொடு சிவணும்.

பொ-ள். வண்டு, பெண்டு என்ற சொற்களின் பின்னர் வல்லெழுத்து வருவழி அவை இன்சாரியையோடு பொருந்தும்.

உ-ம். வண்டு + கால் = வண்டின்கால்; பெண்டின்கால்.

வல்லெழுத்துவருவழி என்றது அதிகரித்தது.

**422.** பெண்டென் கிளவிக் கன்னும் வரையார்.

பொ-ள். பெண்டு என்ற சொற்கு அன்சாரியையும் நீக்கார்.

உ-ம். பெண்டன்கை.

**423.** யாதெ னிறுதியுஞ் சுட்டு முதலாகிய
ஆய்த விறுதியு முருபிய னிலையும்.

போ - ள். யாது, அஃது, இஃது, உஃது ஆகிய குற்றியலுகர வீற்றுச்சொற்கள் வல்லெழுத்து வருவழி உருபியலிற் கூறிய தன்மை பெறும். அஃதாவது முன்னையது அன் பெறும், ஏனை மூன்றும் அன்பெற்று ஆய்தக்கேட்டினைக் கொள்ளும்.

உ - ம். யாதன்கோடு, அதன் பயன் (புறநா. 35).

பா - ம்.
இளம். க பதி. " அன்பெற்று,
தங் கெட்டும் முடியும்"
சுட்டுமுதன்மொழிகள் ஆய்

இளம். சி. பதி. "
சுட்டுமுதன்மொழிகள் அன்பெற்றும் ஆய்தம் கெட்டும் முடியும்."
முன்னருள்ள பாடமே பொருந்தும்.

கச். ம. பதி.

" ஆய்தத்தொடர்மொழிக்குற்றுகரவீறும் "

நச். தா. சை. பதி.

வீறும் "

" ஆய்தத்தொடர்மொழிக்குற்றியலுகர

**424.** முன்னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி
மன்னல் வேண்டு மல்வழி யான.

பொ - ள். சுட்டு முதலாகிய ஆய்தத்தொடர்மொழியின் பின்னர் உயிர் வருமிடத்து அல்வழிக்கண் ஆய்தம் நிலைபெறல் வேண்டும்.

உ - ம். அஃதடை, இஃதடை, உஃதடை...
சுட்டுமுதலாகியவாய்தவிறுதி என்றது

அதிகரித்தது.

"முன் என்றதனுன் வேற்றுமைக்கண்ணும் இவ்விதி கொள்க" என்றனர் உரைகாரர்கள். அல்வழியான என வெளிப்படையாகக் கூறப்பட்டமையின் வேற்றுமைக்கண் அவ்வாறு வருதல் பிற்காலத்து வழக்கென்க.

**425.** ஏனைமுன் வரினே தானிலை யின்றே.

போ - ள்.

சுட்டுமுதலாகிய ஆய்தத்தொடர்மொழியின் பின் உயிரல்லாத வெழுத்து வரின் அல்வழிக்கண் ஆய்தம் நிலையாது.

உ - ம். அது கடிது, இது கடிது, உது கடிது...அது நான் றது இது நீ கண்ணியதாயின் (புறநா. 52).

சுட்டுமுதலாகியவாய்தவிறுதி, அல்வழியான என்பன அதிகரித்தன.

**426.** அல்லது கிளப்பி னெல்லா மொழியும்
சொல்லிய பண்பி னியற்கை யாகும்.

பொ - ள்.

குற்றியலுகாவீற்றெல்லாமொழியும் பின்னர் வல்லெழுத்து வருவழி அல்வழிக்கண் சொல்லப்பட்ட தன்மையவாய் இயற்கையாகும்.

உ - ம். நாகு கடிது.

334

"எல்லா மொழியும் என்றதனால் வினைச்சொல்லும் வினைக்குறிப்புச்சொல்லும் இயல்பாய் முடிந்தன கொள்க. கிடந்தது குதிரை, கரிது குதிரை, என வரும்" என்றனர் உரைகாரர்கள்.

"ஈரெழுத் தொருமொழி..." என்ற சூத்திரத்தில் பெயர்வினை இரண்டனையுங் கொள்ளுதல் பொருந்துமாகலான்

இவ்வாறு அவர்கள்

தனியாகக் கூறவேண்டுவதின்று.

"சொல்லிய என்றதனான் இருபெயரொட்டுப்பண்புத்தொகை முடிபு கொள்க" என்றனர் உரைகாரர்கள். இஃது "உயிரும்..." (எழுத். 482) என்ற சூத்திரத்து "ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும்" என்றதனாற் பெறப்படுதலின், ஈண்டு இதனை அவர்கள் கொள்ளவேண்டுவதின்று. "பண்பின் என்றதனான் ஐ என்னுஞ் சாரியை பெற்றுவரும் அல்வழி முடிபுங் கொள்க" என்றனர்

உரைகாரர்கள். இதனை அதிகாரப்புறனடையாற்

கொள்ளல் தகும்.

பா - ம். இளம். "காட்டுக்கானம்"

நச். ம. பதி. "கரட்டுக்கானம்";

நச். தா. சை. பதி.

"காட்டுக்காணம்"

**427**. வல்லொற்றுத் தொடர்மொழி

வல்லெழுத்து மிகுமே.

போ - ள். குற்றியலுகரவிறுதியாகிய

வல்லொற்றுத்தொடரின் பின்னர் வல்லெழுத்து வரின் அல்வழிக்கண் அவ்வல்லெழுத்து மிகும்.

உ - ம். கொக்குக் கடிது ..

உகரம், வல்லெழுத்துவருவழி, அதிகரித்தன.

அல்லதுகிளப்பின் என்பன

**428.** சுட்டுச்சினை நீடிய மென்றொடர் மொழியும்
யாவினா முதலிய மென்றொடர் மொழியும்
ஆயியல் திரியா வல்லெழுத் தியற்கை.

பொ - ள். சுட்டாகிய பகுதி நீண்ட மென்றொடர்க் குற்றிய லுகாவிறுதியும், வினாப்பொருளை யுணர்த்தும் யாவினா முதலாகக் கொண்ட மென்றொடர்க் குற்றியலுகரவிறுதியும் பின்னர் வல்லெழுத்து இயற்கையாக வருமிடத்து அல்வழிக்கண் அத்தன்மையில் திரியா.

உ-ம். ஆங்குக்கொண்டான், ஈங்குக்கொண்டான், ஊங்குக் கொண்டான், யாங்குப் பெரிதாயினும் (புறநா. 425)

அல்லதுகிளப்பின் என்றது அதிகரித்தது.

"இயற்கை என்றதனன் அக்குற்றுகரவீற்றுவினையெச்ச முடிபு கொள்க. செத்துக் கிடந்தான்...எனவரும் என்றனர் உரைகாரர்கள். இதனை "வல்லோற்றுத் தொடர்மொழி ...." (எழுத். 427) என்ற சூத்திரத்தாற் கொள்ளின் குற்றம் யாது?

பா-ம். நச். ம. பதி. "ஆகார முதன்மொழி மென்றொடர்க் குற்றுகரவீறும்.. என வல்லெழுத்துக் கொடுக்க...குற்றிய லுகர வீற்று வினையெச்ச மியல்பாயு மிக்கு முடிவனவுங் கொள்க"

நச். தா. சை. பதி. "மென்றொடர்க் குற்றுகரவீறும்...என வரும் ... மென்றொடர் மொழிக்குற்றியலுகரவீற்றுவினையெச்சம் இயல்பாயும் வன்றொடர்மொழிக்குற்றியலுகரவீற்று மிக்கும் முடிவன கொள்க."

வினையெச்சம்

**429.** யாவினு மொழியே யியல்பு மாகும்.

போ-ள். யா என்ற வினுவினை முதலாகக்கொண்ட மென் றொடர் மொழி, பின்னர் வல்லெழுத்து வருவழி, இயற்கையுமாகும்.

உ - ம். யாங்கு கொண்டான்.

இளம் சி. பதிப்பில் யாங்குக் கொண்டான் என்ற உதாரணம் தவறு.

பா - ம். நச் ம. பதி. "முற்கூறியவற்றுள்"

நச். தா. சை. பதி. "அவற்றுள்."

**430.** அங்கான் மொழியும் தந்நிலை திரியா.

போ - ள். ஆங்கு, ஈங்கு, ஊங்கு, யாங்கு, என்ற நான்கு மொழிகளும் தந்நிலையினின்றுந் திரியா வல்லெழுத்து வருவழி. அஃதாவது மெல்லொற்று வல்லொற்றாகா.

மேல்லோற்யத் தொடர்மொழி மெல்லோற் றெல்லாம்—வல் லோற் றிறுதி கிளையோற் றாகும்" (எழுத். 415) என்ற சூத்திரத் தாற் கூறப்பட்ட மெல்லொற்றுத் திரிதலே இச்சூத்திரம் விலக்கிற்று.

அந்நான்மொழியும் என்றதற்குச் சுட்டுமுதன் மூன்றும் யா முதன் மொழியுமாகிய அந்நான்கு மொழியும் என உரைகாரர்கள் பொருள் கூறினும், சுட்டுமுதன் மூன்று என்றதனால் சுட்டுச்சினை நீடிய மென்றொடர் மொழி மூன்றும் என்றே பொருள் கொண்டனர் என்பது அவர் பின் கூறும் உரையினால் விளங்கும்.

" தந்நிலை என்றதனால் மெல்லொற்றுத் திரியாது மிக்கு முடிவன

பிறவுங் கொள்க.

உ - ம். அங்குக் கொண்டான்...என வரும்" என்றும் யாமொழி என்றது வினா என்றதனால் பிற இயல்பாய் முடிவனவுங் கொள்க. முந்துகொண்டான்...என வரும்" என்றுங் கூறினர் உரைகாரர்கள். இவற்றை அதிகாரப்புறனடையாற் கொள்ளின் நலம்.

பா - ம். நச். ம. பதி. " தன் மெல்லொற்றுய "

நச். தா. சை. பதி. " தம் மெல்லொற்றுய " பின்னருள்ள பாடமே சூத்திரப்பாடத் 'ற்கு ஒக்கும்.

**431.** உண்டென் கிளவி யுண்மை செப்பின்
முந்தை யிறுதி மெய்யொடுங் கெடுதலும்
மேனிலை யொற்றே ளகார மாதலும்

ஆமுறை யிரண்டு முரிமையு முடைத்தே
வல்லெழுத்து வருஉங் காலை யான.

**பொ - ள்.** உண்மை என்ற பொருளில் வரும் உண்டு என்ற சொல்லின் பின்னர் வல்லெழுத்து வரின் டு கெட்டு ண்கரம் **ளகரமாய்த் திரிதற்கு** உரிமையுமுண்டு.

**உ - ம்.** உள்பொருள், உண் ் பொருள்.

"வல்லெழுத்திகாரம் வாரா நிற்ப வல்லெழுத்து வருஉங் காலை என்றதனுன் இவ்விருமுடிபும் உள்ளது பகரமுதல் மொழி வந்தால்; மற்றை மூன்று எழுத்தின்கண்ணும் ஈறு கெடாதே நின்று முடியுமென்று கொள்க" என்றனர் உரைகாரர்கள். அஃது ஆசிரியர்க்கு உடன்பாடாயின் வல்லெழுத்து என்பதற்குப் பிரதியாக பகரம் என அவர் கூறியிரார் என்பது ஆராய்தற்குரியது.

## 337

" உள்பொருள் என்பது

பண்புத்தொகைமுடிபன்றோ வெனின் அஃது ஓசை ஒற்றுமைபடச் சொல்லும் வழியது ; இஃது ஓசை இடையறவுபடச் சொல்லும் வழியதுபோலும்" என உரை

களில் உளது. "உரிமையும்" என்றவிடத்துள்ள உம்மையால் இத் திரிபு சிறுபான்மையெனக் கொண்டு உண்மையைக் கூறும் உண்டு என்ற சொல்லோடு வல்லெழுத்தினை முதலிற்கொண்ட சொல் தொகையாம்போது உண்டு என்றது "உள்" என மாறாது உண்டு என்றும் இருத்தல் கூடும் என இச்சூத்திரம் உணர்த்திற்று எனக் கொள்ளலாமெனத் தோற்றுகின்றது.

பா - ம்.

நச். ம. பதி. "உளபண்பை ....

சொல்லும்வழியது..."

நச். தா. சை. பதி. உளபண்பை ...சொல்லும் வழியது போலும்"

முன்னருள்ள பாடம் பொருந்தும்.

**432.** இருதிசை புணரி னேயிடை வருமே.

பொ - ள். குற்றியலுகரவிறுதியாகிய திசைப்பெயர் மற்ற திசைப்பெயரோடு புணரும்போது இடையில் ஏகாரம் வரும்.

உ - ம். வடக்கேதெற்கு.

உகரம் அதிகரித்தது.

**433.** திரிபுவேறு கிளப்பி னொற்று மிறுதியும்
கெடுதல் வேண்டு மென்மனார் புலவர்
ஒற்றுமெய் திரிந்து னகார மாகும்
தெற்கொடு புணருங் காலை யான.

போ - ள். இருதிசைச்சொற்களும் இருதிசையைக் குறிக்காது அவற்றினின்றுந் திரிந்த கோணத்திசைகளைக் குறிப்பின் நிலைமொழியிறுதியும் தானேறிநின்ற மெய்யும் அதன் முன்னருள்ள ஒற்றுங் கெடும் என்று கூறுவர் புலவர். நிலைமொழி தெற்கு என்ற சொல்லாயிருப்பின் இறுதி மெய்யுடன் கெட ஒற்றுமெய் னகரமாகும்.



உ - ம். வடக்கு + கிழக்கு = வடகிழக்கு ;
தெற்கு + மேற்கு = தென்மேற்கு.

**மெய்யொடும்** என்பது அதிகரித்தது.

" திரிசு என்றதனுன் வடக்கு என்பதன்கண் இடைநின்ற ககரவொற்றுக் கெடுக்க " என்றனர் உரைகாரர்கள். முற்சூத்திரத்திலிருந்து "மெய்யொடும்" என்பதை அதிகரித்துக்கொள்ளின் இவ்வாறு கூறல் வேண்டாம்.

" ஒற்றுமெய் ... புணருங் காலையான " என்ற ஈற்றடிகளைத் தனிச்சூத்திரமாகக் கொள்ளின் நலம்.

வேறு என்ற சொல் வேண்டாமெனக் கருதி " வேறு என்றதனுல் திசைப்பெயரோடு பொருட்பெயர்க்கும் இவ்விதி கொள்க, வடகடல் வடவரை எனவரும் " என்றனர் உரைகாரர்கள். வேறு என்ற சொல் இல்லையாயின் அச்சொற்கள் கோணத்திசையைக் குறிக்கும் எனக் கொள்ள இயலாது. அவ்வாருயின் வடகடல் முதலியவற்றை எதனுற் கொள்ளல் வேண்டுமெனின், அதிகாரப்புறனடையானெனக. அவ்வாறே கீழ்கூரை முதலியவற்றை மெய் என்றதனுற் கொள்ளாது அதிகாரப்புறனடையாற் கொள்ளுதல் நலம்.

பா - ம் இளம். க. பதி. "

அப்பெருந்திசையோடு கோணத் திசைகள் வேறு...சொல்வர்"

இளம். சி. பதி. "அப்பெருந்திசைகளோடு கோணத்திசை களை வேறாக...சொல்லுவர் புலவர்"

நச். ம. பதி. "பொருட்பெயர்க்கும் . . . கீழ்கரை கீழ்கூரை என்பன கிழக்கு கரை கூரை யென்பவற்றோடு புணருமிடத்து... மீகரை மீகூரை யென்பன மேற்கு கரை கூரை யென்பவற்றோடு புணருமிடத்து...ஏறி முடிந்தன".

நச். தா. சை. பதி.

"பொருட்பெயர் வரினும்...கிழக்கு என் பது கரை கூரை என்பவற்றோடு புணருமிடத்துக் கீழ்கரை கீழ்
கூரை என...மேற்கு கரை கூரை மீகரை மீகூரை என....முடிந்தன".

பின்னருள்ள பாடஞ் சிறக்கும்.

**434.** ஒன்று முதலாக வெட்ட னிறுதி
எல்லா வெண்ணும் பத்தன் முன்வரின்
குற்றிய லுகர மெய்யொடுங் கெடுமே
முற்றவின் வரூஉ மிரண்டலங்
கடையே.

பொ - ள். பத்து என்பதன் பின்னர் ஒன்று முதல் எட்டு இறுதியாகவுள்ள எல்லாவெண்ணுப்பெயர்களும் வரின், து கெடும்; இரண்டல்லாத ஏனைய பெயர்கள் வருமிடத்து இடையில் இன் சாரியை வரும்.

உ - ம். பதினொன்று, பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து, பதினாறு, பதினேழ், பதினெட்டு.

உரைகாரர்கள் பதினேழு என உதாரணங் கூறினர். ஏழ் என்பது ழகரவீறுகப் புள்ளிமயங்கியலில் ஆசிரியர் கூறியிருக்கின்றமையான், பதினேழ் எனக் காட்டவேணும்.

" நிலைமொழி முற்கூறுதகனால் பிறமொழியும் அவ் இன்பேறு கொள்க. ஒன்பதின்பால், ஒன்பதின்கூறு என வரும். முற்ற என்றதனான் மேல் எடுத்தோத்தானும் இலேசானும் இன்பெற்ற வழி பதிற்றொன்று, பதிற்றிரண்டு, என்றாற்போல முடி புகள் வேறுபட வருவனவெல்லாங் கொள்க " என்றனர் இளம்பூரணர். அவரோடு உடன்பட்டனர் நச்சினார்க்கினியர். அவை பிற்காலத்து வழக்கெனக் கூறுதல் சாலும். பண்டையவழக்காயின் அவற்றை அதிகாரப்புறனடையாற் கொள்க.

பா - ம்.

இளம். க. பதி. " இரண்டாமெண்ணுப் பெயரல்லாத "

இளம். சி. பதி. " இரண்டாகிய எண்ணுப்பெயரல்லாத "

நச். ம. பதி. " உணர்த்தியிதுமுதலாக எண்ணுப்பெயர் "

நச். தா. சை. பதி. " புணருமாறு

உணர்த்தி இனி அவ்வீற்று எண்ணுப்பெயர் ''

340

**435.** பத்தனொற் றுக்கெட னகார மிரட்டல்
ஒத்த தென்ப விரண்டுவரு காலை.

**பொ - ள்.** பத்து என்பதன் பின்னர் இரண்டு வரும்போது (து கெட்டபின்னர்) தகரவொற்று கெட, அவ்விடத்து னகரம் **இரட்டும்** என்ப ஆசிரியர்.

**உ - ம்.** பத்து + இரண்டு = பத் + இரண்டு (எழுத். 434) = பன்னிரண்டு.

நச்சினார்க்கினியத்தில் " குற்றியலுகர மெய்யொடுங் கெடும்

என்ற விதி இதற்கும் மேலனவற்றிற்குங் கொள்க" என்ற சொற்றொடர் உளது. முற்சூத்திரத்தில் ஒன்று முதலாக வெட்டனிறுதி

குற்றியலுகரமெய்யொடுங் கெடும் எனக்

கூறப்பட்டமையான் இத்

தொடர் ஈண்டு மிகை யெனக் கொள்க.

**436.** ஆயிரம் வரினு மாயிய றிரியாது.

போ - ள். பத்து என்றதின் பின்னர் ஆயிரம் வரினும் அத்தன்மையினின்றுந் திரியாது.

உ - ம். பதினாயிரம்.

பத்து என்பது அதிகரித்தது.

**437.** நிறையு மளவும் வரூஉங் காலையும்
குறையா தாகு மின்னென் சாரியை.

போ - ள். பத்து என்பதன் பின்னர் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் வருமிடத்து இடையில் இன் என்ற சாரியை குறையாது வரும்.

உ - ம். பதின்கழஞ்சு..., பதின்கலம்...

பத்து என்பது அதிகரித்தது.

குறையாதாகும் என்றதனுல் பத்து என்பதன் முன்னர்ப் பொருட்பெயர்க்கு வரும் முடிபுங் கொள்க. பதின்றிங்கள், பதிற்று முழம், பதிற்றுவேலி, பதிற்றிதழ் என வரும்" என்றனர் இளம்பூரணர். இவை பண்டையவழக்காயின், இவற்றை அதிகாரப்புறனடையாற் கொள்க.

341

பா - ம்.

இளம். சி. பதிப்பில் "பதிற்றுமுளம்" என்றது அச்சுப் பிழையாகும்.

•

நச். ம. பதி. "பத்தின் முன்னர் பொருட்பெயரும்.. பதின் றிங்கள் எனவும் வரும். பதிற்றொன்று...பதிற்றுத்தொடி எனவு மொட்டுக."

"நச். தா. சை. பதி.

"பொருட்பெயரும்...பதின்றிங்கள் என

வும் பதிற்றுத்தொடி எனவும் வரும்".

**438.** ஒன்றுமுத லொன்பா னிறுதி முன்னர்
நின்ற பத்த னொற்றுக்கெட வாய்தம்
வந்திடை நிலையு மியற்கைத் தென்ப
கூறிய வியற்கைக் குற்றிய லுகரம்
ஆற னிறுதி யல்வழி யான.

**போ - ள்.** ஒன்று முதல் ஒன்பது இறுதியாகவுள்ள குற்றிய லுகரவிறுதிச்சொற்கள் நிலைமொழியாகவும் பத்து வருமொழியாகவு மிருக்க, பத்து என்றதில் தகரவொற்றுக் கெட, அவ்விடத்து ஆய்தம் வருதற்றன்மை யுடையது. நிலைமொழிகளுள் " ஆறு " என்றதைத் தவிர்த்து ஏனையவற்றுள் குற்றியலுகரம் முன்னர்க் கூறப்பட்ட தன்மைத்தாய் மெய்யொடுங் கெடும்.

இச்சூத்திரம் ஆங்கு வருஞ் செய்கையை முழுதுங் கூறாமை யான், பின்னர்ச் சூத்திரத்துடன் கூட்டிச்

செய்கை கொள்ளவேண்

டுதலின், ஆங்கு உதாரணங் கூறப்படும்.

பா - ம்.

இளம். க. பதி. "இடை நிலைபெறும்"

இளம். சி. பதி. "இடையில் நிலைபெறும்"

நச். ம. பதி. "எண்ணுப்பெயர்க்கு"

நச். தா. சை. பதி.

"பத்தென்னு மெண்ணுப்பெயர்க்கு".

342

**439.** முதலீ ரெண்ணி னொற்றுரகர மாகும்
உகரம் வருத லாவயி னான.

**பொ - ள்.** முதலிரண்டெண்ணாகிய ஒன்று, இரண்டு இவற்

றின் ஒற்றாகிய னகரமும் ணகரமும்

ரகரவொற்றாய்த் திரியும்;

அதன்பின்னர் உகரம் வரும்.

உ - ம். ஒன்று + பத்து = ஒன் + பஃது (எழுத். 437) = ஒரு பஃது.

இரண்டு நிலைமொழியா யிருக்க வருஞ் செய்கையுள் ஒன்றை அடுத்த சூத்திரங் கூறினமையான், அதனைப்பற்றி ஆங்குக் கூறப் படும்.

நச்சினார்க்கினியத்தில் "மேல் வருவனவற்றிற்குஞ் சூத்திரங் களாற் கூறுஞ் சிறப்புவிதி ஒழிந்தவற்றிற்கு இதுவே முடிபாகக் கொள்க" என்ற தொடர் உளது.

மேல்வருஞ் சூத்திரங்கள் ஒவ் வொரு எண்ணிற்கு முள்ள சிறப்புவிதியைக் கூறுகின்றமையானும் "ஒன்றுமுதல்..." (எழுத். 438) என்ற சூத்திரம் அவற்றின் பொதுவிதியைக் கூறுகின்றமையானும், இச்சூத்திரம் ஒன்று இரண்டு இவ்விரண்டனைப்பற்றி மாத்திரங் கூறுகின்றமையானும், இத்தொடர் இடைச்செருகலெனத் தோற்றுகின்றது.

பா - ம்.

நச். ம. பதி. "மேற்கூறியவற்றிற்கு ... றிற்கு..."

மேல்வருவன வற்

நச். தா. சை. பதி. "மேற்கூறியவற்றிற் சிலவற்றிற்கு மேல் வருவனவற்றிற்கும்...'. பின்னருள்ள பாடம் பொருந்தும்.

**440.** இடைநிலை ரகர மிரண்டெ னெண்ணிற்கு
நடைமருங் கின்றே பொருள்வயி னான.

போ - ள். இரண்டு என்ற எண்ணிற்குப் பின்கண் இடைநின்ற ரகரங் கெடும்.

பொருளிடத்

உ - ம். இரண்டு + பத்து = இரண் + பஃது

இரு + பஃது (எழுத். 439) = இருபஃது

(எழுத். 438) =



இளம். பதிப்புக்களில் "இரண்டெ

னெண்ணிற்கும்" என்ற பாடம் உளது.

உம்மையின்றி நச்சினார்க்கினியப்பதிப்புக்களில்

உளது. உம்மையில்பாடமே பொருந்தும்.

**441.** மூன்று மாறு நெடுமுதல் குறுகும்
மூன்ற னொற்றே பகார மாகும்.

போ - ள். மூன்று, ஆறு இவற்றின் நெடுமுதல் குறுகும்;

மூன்றின் னகரவொற்று பகரவொற்றாகும்.

உ - ம். மூன்று + பத்து = மூன் + பஃது (எழுத் 438) =

முப்பஃது ; ஆறு + பத்து = ஆறு + பஃது (எழுத். 438) = அறு

பஃது.

**442.** நான்க ஞெற்றே றகார மாகும்.

போ - ள். நான்கு என்றதின் னகரவொற்று றகரவொற்ருகும்.

உ - ம். நான்கு + பத்து = நான் + பஃது (எழுத். 438) = நாற்பஃது.

**443.** ஐந்த ஞெற்றே மகார மாகும்.

போ - ள். ஐந்து என்றதின் நகரவொற்று மகரவொற்ருகும்.

உ - ம். ஐந்து + பத்து = ஐந் + பஃது (எழுத்.438) = ஐம் பஃது. "ஆறன் நெடுமுதல் குறுகியவாறே நின்று அறுபஃது என வரும், ஏழு குற்றுகர ஈறன்றும்" என இளம்பூரணப்பதிப்புக்களி லும் "ஏழு குற்றியலுகரவீறன்மை உருபியலுட் காண்க" என நச்சினர்க்கினியப்பதிப்புக்களிலும் உள. இவ்விரண்டும் இடைச் செருக லாயிருக்கலாம்.

**444.** எட்ட னொற்றே ணகார மாகும்.

போ - ள். எட்டு என்றதின் டகாரவொற்று ணகரவொற் றாகும்.

உ - ம்.

எட்டு + பத்து = எட் + பஃது (எழுத். 438) = எண்

344

**445.** ஒன்பா னொகரமிசைத் தகர மொற்றும்
முந்தை யொற்றே ணகார மிரட்டும்
பத்தேன் கிளவி யாய்த பகரங்கெட
நிற்றல் வேண்டு மூகாரக் கிளவி
ஒற்றிய தகரம் றகார மாகும்.

போ - ள். ஒன்பது என்ற சொல்லின் ஒகரத்திற்கு முன் தகர வொற்றுத் தோன்றும்; அதன் பின்னரிடத்துள்ள னகரவொற்று இரண்டு ணகரவொற்றாக மாறும்; நிலைமொழி வருமொழி இரண்டினு முள்ள பத்தென் கிளவியின் பகரமும் ஆய்தமும் கெட, அவ்விடத்து ஊகாரம் தோன்றும், வருமொழியிறுதிக்குற்றியலுகரத்து முன்ன ருள்ள தகரவொற்று றகர வொற்றாகும்.

உ - ம்.

ஒன்பஃது + பத்து = ஒன்பஃ + பஃது (எழுத். 438)

= தொண்ணூறு.

"ஒன்று முதலாகப் பத்தூர்ந்து வரூஉம்..." (எழுத். 200) என்ற சூத்திரத்தாலும், "ஒன்பதிற் றேழுத்தே" (எழுத். 171) என்ற ஆசிரியர்வழக்காலும் இச்சூத்திரத்திற் கூறப்பட்ட நிலைமொழி ஒன்பஃது என அறிக.

ஆகலின் "ஒன்று குறைந்த பத்து" ஒன்பது ஆகும் என அவரது கொள்கை யெனத் தோற்றுகின்றது.

"பகர ஆய்தம் என்றத முறையன்றிய கூற்றினன் நிலைமொழிக்கண் பகரக்கெடுங் கொள்க" என இளம்பூரணரும், "பகரவாய்த மென்றத முறையன்றிக் கூற்றினன் நிலைமொழிக்கட் பகரமும் ஆய்தமுங் கெடுத்து" என நச்சினர்க்கினியருங் கூறினர்.

ஆசிரியர் குறைவுபடச் சூத்திரித்தனர் எனக் கொள்வதைக் காட்டிலும் "பத்தென் கிளவி" என்பது, ஒன்பஃது, பஃது இரண்டிலு மிருப்பதைக் குறிக்கின்றது எனக் கொள்ளலாம்.

பா - ம்.

நச். ம. பதி. "பத்தென் கிளவி" நச். தா. சை. பதி. "பஃதென் கிளவி"

## 345

446. அளந்தறி கிளவியு நிறையென் கிளவியும்

கிளந்த வியல தோன்றுங் காலே.

பொ - ள். ஒன்று முதல் ஒன்பான் வரை நிலைமொழியா யிருக்க அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வருமொழியாய் வருமிடத்து, அவை முற்கூறப்பட்ட தன்மைய.

உ - ம். ஒருகலம், இருகலம், நாற்கலம், கலம்...; நாற்சீர் (செய்யு. 32), ஒரு கழஞ்சு... ;

ஒன்றுமுதலொன்பானிறுதிமுன்னர் என்பது அதிகரித்தது.

தோன்றுங்காலை என்றதனான் அவ்வெண்களின் முன் எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்ற எண்ணுப்பெயரையெல்லாம் இவ்விதியும் பிறவிதியும் எய்துவித்து முடித்துக் கொள்க'' என்றனர் உரைகாரர்கள். அறுவகை (புறத். 26), அறுநான்கு (எழுத். 104) முதலிய ஆசிரியர்வழக்காற் கொளல் தகும்.

மூன்று, ஐந்து, இவ்விரண்டும் நிலைமொழியா யிருக்க வருஞ் செய்கை பின்னிரண்டு சூத்திரத்தாற் கூறப்படுதலின், அவற்றையொழித்து ஏனையவற்றைக் கொள்க.

**447.** மூன்ற ஞெற்றே வந்த தொக்கும்.

பொ - ள். மூன்று என்றதன் ஒற்று வருமொழிமுதலை ஒக்கும் அளவுப் பெயரும் நிறைப்பெயரும் வருமொழியாய் வரின்.

உ - ம். மூன்று + கலம் = மூன் + கலம் (438, 446) = முன் + கலம் (441, 446) = முக்கலம்.

அளந்தறிகிளவியு நிறையென்கிளவியும் என்பது அதிகரித்தது.

"மாட்டேற்றுனே நாற்கலம், சாடி, தூதை, பானை எனவும், கழஞ்சு, தொடி, பலம் எனவும் வரும்" என இளம்பூரணரும், "நான்கனொற்றே றகாரமாகும் என்ற முன்னை மாட்டேறு நிற்றலின் நாற்கலம்...எனவும் வரும்" என நச்சினார்க்கினியருங் கூறினர். இவை "அளந்தறி கிளவியும்..." என்ற சூத்திரத்தாற் கிடைக்கின்றமையான் இடைச்செருகலாகும்.

346

இச்சூத்திரம் (எழுத். 441) சூத்திரத்துள்ள மூன்றனொற்றே பகாரமாகும்" என்றதற்கு மாத்திரம் மாறுகுமே யன்றி, அச்சூத்திரத்துள்ள "நெடுமுதல் குறுகும்" என்றதற்கும் மாறுகா தென்க.

**448.** ஐந்த னொற்றே மெல்லெழுத் தாகும்.

பொ - ள். ஐந்து என்றதன் ஒற்று வருமொழிமுதலின் இன மெல்லெழுத்தாகும் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வருமொழியாய் வரின்.

உ - ம்.

ஐந்து + கலம் = ஐங் + கலம் (எழுத். 438, 446) = ஐங்கலம்.

அளந்தறிகிளவியுநிறையென்கிளவியும் என்பது அதிகரித்தது.

**449.** கசதப முதன்மொழி வரூஉங் காலை.

போ - ள். வருமொழிமுதல் கசதபக்களாயிருக்க, நிலைமொழி யாயுள்ள மூன்று ஐந்து இவற்றின் னகரநகரவொற்றுக்கள் முறையே வந்தெதாக்கும், மெல்லெழுத்தாகும்.

இச்சூத்திரமும் இதன் முன்னருள்ள இரண்டு சூத்திரங்களும் ஒன்றாயிருந்திருத்தல் வேண்டுமெனச் சிதம்பரம்பிள்ளை கூறுதல் பொருந்தும்.

" ஏழு குற்றுகரவீறன்மையின் மாட்டேற லாதாயிற்று"

என இளம்பூரணப் பதிப்புக்கள், நச்சினார்க்கினியம் தாமோ. சைவ பதிப்புக்கள் இவற்றிலும், "ஏழ் குற்றுகரவீறன்மையின் மாட் டேறேலாதாயிற்று" என நச். ம. பதிப்பிலும் உளது. இவை இடைச்செருகலாயிருத்தல் கூடும்.

450. நமவ வென்னு மூன்றொடு சிவணி
அகரம் வரினு மெட்டன்மு னியல்பே.

போ - ள். எட்டு என்பதன் முன்னர் முற்கூறப்பட்ட வல்

லெழுத்துகளோடு ங, ம, வ, அ, இவை வரின் "எட்டனுற்றே ணகார மாகும்." (எழுத். 444) என்ற சூத்திரத்திற் கூறப்பட்ட தன்மையைப்பெறும்.

உ - ம். எண்கலம்...; எண்ணாழி...; எண்ணகல்,

[illegible] வல்லெழுத்துக்கள் கொள்ளப்பட்டன.

347

"எட்டன் முனியல்பே" என்றவிடத்து முன் என்ற சொல்லை இருமுறைகொண்டு, எட்டன்முன், முன்னியல்பே என உரைத்தல்வேண்டும். * அவ்வாறு கொள்ளாது "இயல்பே" எனக் கொண்டு "இது வேண்டாது கூறி வேண்டியது முடிக்கின்றது

ஞ ந ம ய வ என்னுஞ் சூத்திரத்துட்

கூறியவற்றைக் கூறுதலின்"

என நச்சினர்க்கினியர் கூறினர்.

இச்சூத்திரத்திற் கூறப்பட்டது "அளந்தறி கிளவியும்...." (எழுத். 446) என்ற சூத்திரத்தாற் பெறப்படுதலின், இச்சூத்திரம் எற்றுக்கு எனின், அச்சூத்திரத்திலும் "க ச த ப முதன்மொழி வரூஉங் காலை" என்றதை ஆசிரியர் கொண்டு இச்சூத்திரத்தில்

நமவஅ இவை வருமொழி முதலா யிருக்கும்போது நேரும் மாறுதல்களைக் கூறினர் எனக் கொள்ளல் தகும்.

"ஆக்கின்" இவ்வேண்டா கூறலான் எண்ணகல் எனத் தொடர் மொழிக்கண் ஒற்றிரட்டுதல் கொள்ளப்பட்டது" என்ற இளம்பூரணர்கூற்றும் ஒவ்வாது. அவ்வாறாயின் ஒற்றிரட்டல் எதனாற் பெறப்படுமெனின் "குறியதன் முன்னர் தன்னுரு பிரட்டலும்" (எழுத். 161) என்ற சூத்திரத்தா னென்க.

"ஒன்றென முடித்தலான் வன்கணத்து நிறைப்பெயரும்"

என நச்சினார்க்கினியர் கூறினர். இது "அளந்தறி கிளவியு நிறை யென் கிளவியும்" (எழுத். 446) என்றதனாற் பெறப்படு மென்க. உம்மையான் "அவ்வுயிர்க் கணத்து ஒழிந்த உகரமும்" என உரைகாரர்கள் கூறினர். "அகரம்" எனக் கூறிய ஆசிரியர் உகரத்தைக் கூறாது விடுத்தமையானும், உகரம் அதிகரித்து வருதற்கு இடனின்மையானும், அதனை அதிகாரப்புறனடையாற் கொள்ளுதல் சாலும்.

451. ஐந்து மூன்று நமவருங் காலை
வந்த தோக்கு மொற்றிய னிலையே.

பொ - ள். ஐந்து, மூன்று இவற்றின் பின்னர் வருமொழிமுதலில் நம இவை வருங்காலத்து அவற்றின் நகரனகரங்கள் நமவாக மாறும்.

* இவ்வாறு கீழை என்ற சொல்லை எழுக்

415 அவக ருக்கிரக்



உ-ம். மூன்று + நாழி = மூன் + நாழி (எழுத். 438, 446) = முந்நாழி; மும்முதற்பொருட்கும் (செய்யு. 106), ஐந்நாழி ஐம்மண்டை...."

"மூன்றும் ஐந்தும் என்றுத முறையன்றிய கூற்றினுன் நாழுழி என்னும் முடிபின்கண் விகாரமாகிய னகரத்தின் முன்னர் வருமொழி நகரத்திரியும் அதுகாரணமாக நிலைமொழி னகரக்கேடுங் கொள்ளப்பட்டன" என இளம்பூரணர் கூறினர். நாழுழியோடு

நான்மண்டையுஞ் சேர்த்துக் கூறினர் நச்சினார்க்கினியர். நான்கு + நாழி என்னுமிடத்து "அளந்தறி கிளவியும்..." (எழுத். 446) என்ற சூத்திரத்தால் குகரக்கேடும் னகரவொற்று றகரவொற்றாய்த் திரிதலையுங் கொள்ளல்வேண்டும். ஆனால் றகரவொற்றின் பின்னர் க ச ப ற இவை நான்கே வருமென்று நூன்மரபிற் கூறப்பட்டமையான், ஈண்டு குகரக்கேட்டைமாத்திரங் கொள்ளல் வேண்டும். அப்போது நான் + நாழி என்றிருக்க, வருமொழி நாகாரம் "லனவென வரூஉம் புள்ளி முன்னர்" (எழுத். 150) என்ற சூத்திரத்தால் ஞகாரமாய்த் திரிய, "நெடியதன் முன்ன ரொற்றுமெய் கெடுதல்" (எழுத். 161) என்றதனால் நிலைமொழி னகரவீறு கெட, நாஞழி என்ற உருவம் பெறப்படும். இவ்வாறு கொள்ளுதல் நேரிதாயிருக்க

முறையன்றியக்கூற்றினன் அதனை உரைகாரர்கள் கொள்ளுதல்

வேண்டா. குகரக்கேட்டின் பின்னர், றகரத்தின் பின்னர் மகரம் வருதற்கின்மையான், நான்மண்டை என்ற உருவமும் பெறப்படும்.

**452.** மூன்ற னொற்றே வகரம் வருவழித்
தோன்றிய வகரத் துருவா கும்மே.

பொ - ள் வகரம் வருமொழிமுதலாய் வரும்வழி மூன்று என்றதின் னகரவொற்று பின்னர்த் தோன்றிய வகரத்தின் வடிவா கும்.

உ - ம். மூன்று + வட்டி = முவ்வட்டி. (எழுத். 438, 441).

" தோன்றிய என்றதனுன் முதல் நீண்டு வகர ஒற்றின்றி மூவட்டி என்னுமாம்" என்றனர் உரைகாரர்கள். இதனை " மூவ கைக்காலமும் " (புறத். 237) முதலிய ஆசிரியர்வழக்காற் கொள்

349

இளம்பூரணத்தில் "இன்னுமதனுனே முதல் நீளாது ஒற்றின்றி முவட்டி என்னுமாம்" என்ற தொடர் உளது. இது நச்சினுர்க்கினியத்திலில்லை. ஆகலின் ஈண்டு இடைச்செருக்கலோ வென ஐயமுண்டாகின்றது.

**453.** நான்க ஞெற்றே லகார மாகும்.

போ - ள். வகரம் வருவழி நான்கு என்றதன் னகரவொற்று லகரவொற்ருகும்.

உ - ம். நான்கு + வட்டி = நால்வட்டி

வகரம்வருவழி என்றது அதிகரித்தது.

**454.** ஐந்த னொற்றே முந்தையது கெடுமே.

பொ - ள் வகரம் வருவழி, அப்பின்னருள்ள வகரத்தின்கண் ஐந்து என்றதின் நகரவொற்று கெடும்.

உ - ம். ஐவட்டி.

"முந்தையது" என்றதற்கு "முன்னின்ற வடிவு" எனப் பொருள் கூறினர் உரைகாரர்கள்.

"முந்தை என்றதனால் நகரவொற்றுக் கெடாது அவ்வகரமாய்த் திரிந்து ஐவ்வட்டி என்றுமாம்" என உரைகாரர்கள் கூறினர். இது மூவ்வட்டியை நோக்கி ஒற்றுமைப்போலியான் பிற்காலத்தில் வந்தது எனக் கொள்ளுதல் சாலும்.

**455.** முதலீ ரெண்ணின்முன் னுயிர்வரு
தவலென மொழிப வுகரக் கிளவி

முதனிலை நீட லாவயி னான.

பொ-ள். முதலிரண்டெண்ணாகிய ஒன்று இரண்டு இரண்டன் பின்னர் உயிர் வருமிடத்து, உகரங்கெடுமென மொழிப. அவ்விடத்து முதலெழுத்து நீடல் வேண்டும்."

முதலீ ரெண்ணின்...." (எழுத். 439), "இடைநிலைரகரம்..." (எழுத். 440) என்ற சூத்திரங்களாற் கூறப்பட்ட செய்கை "அளந்தறி

350

கிளவியும்..." (எழுத். 446) என்ற சூத்திரத்தாற் கூறப்பட்டமையின், ஒன்று, இரண்டு என்ற நிலைமொழிகள் ஒரு, இரு என்றாக, அதன்பின்னருள்ள செய்கையைக் கூறிற்று இச்சூத்திரம்.

உ-ம். ஓரளவு (சொல். 286), ஓரகல், ஓருழக்கு, ஈரசை (செய். 12), ஈரிடம் (உவம. 29), ஈருழக்கு.

**456.** மூன்று நான்கு மைந்தன் கிளவியுந்
தோன்றிய வகரத் தியற்கை யாகும்.

பொ-ள். மூன்று, நான்கு, ஐந்து இவற்றின் பின் உயிர் வருமிடத்து, அவை வருமொழிமுதலில் யகரம் வருவழிப்பெற்ற தன்மையைப் பெறும். மூன்று + அகல் = முவ் + அகல் = முவ்வகல் (எழுத். 160), முவ்வுழக்கு; நான்கு + அகல் = நாலகல், நாலுழக்கு; ஐந்து + அகல் = ஐயகல், ஐயுழக்கு.

முன்உயிர் வருகாலை என்பது அதிகரித்தது.

"தோன்றிய என்றதனால் ஒற்றிரட்டுதல் கொள்க" எனக் கூறினர் நச்சினார்க்கினியர். வாலிழந்த நரியும் நரியே யாகலின் "முவ்" என்பதும் மூவே. அப்போது ஒற்றிரட்டுதலை "குறியதன் முன்னர்த் தன்னுரு பிரட்டல்" (எழுத். 160) என்றதனாற் கொள்ளல் தகும்.

"தோன்றிய என்றதனான் மேல் மூன்று என்பது முதல் நீண்ட இடத்து நிலைமொழி னகரவொற்றுக் கெடுத்துக் கொள்க" என்றனர் இளம்பூரணர். அவரோடு உடன்பட்டனர் நச்சினார்க்கினியர். இவ்வாறு கூறவேண்டுவதின்று, மூன்று என்பது முவ் என இச்சூத்திரத்தான் ஆகின்றமையான்.

**457.** மூன்றன் முதனிலை நீடலு முரித்தே
உழக்கென் கிளவி வழக்கத் தான.

பொ - ள். உழக்கு வருமொழியாய் வழக்கின்கண் வரு

மிடத்து மூன்று என்றதின் முதலிலுள்ள உயிர் நீட்டுமூரித்து.

உ - ம். மூன்று + உழக்கு = முவ் + உழக்கு (எழுத். 456) = மூவுழக்கு.

உம்மையால் அவ்வாறு வருதல் சிறுபான்மையாகும்.

351

உழக்கு என வெளிப்படையாய் ஆசிரியர் கூறியிருப்பினும்

"வழக்கத்தான என்றதனால் அகல் என்பதன்கண்ணும் இச்செய்கை கொள்க" எனக் கூறினர் உரைகாரர்கள்.

மூவசை (செய்யு. 12), மூவாறெழுத்தே (செய்யு. 40) என ஆசிரியரே வழங்கியிருத்தலான், பின்னர் உயிர் வருவழி அவ்வாறு சிறுபான்மை வருமெனக் கொள்ளல் தகும்.

பா - ம்.

நச். ம. பதி. "மூழாக்கு"

நச். தா. சை. பதி. "மூழக்கு மூழாக்கு"

**458.** ஆறென் கிளவி முதனீ டும்மே.

பொ-ள் ஆறு என்பதன் பின்னர் உயிர் வருகாலை முதல் நீளும்.

ஆறு என்றது "அளந்தறி கிளவியும்..." (எழுத். 446) என்ற சூத்திரத்தான் அறு என்றாயிருக்க, அவ்வகரம் நீளும் என்கின்றது இச்சூத்திரம்.

உ-ம். ஆறகல், ஆறுழக்கு,

ஆறும் (எழுத். 100) என்ற ஆசிரியர்வழக்கையுங் காண்க.

**459.** ஒன்பா னிறுதி யுருபுநிலை திரியா
தின்பெறல் வேண்டுஞ் சாரியை மொழியே.

போ-ள். ஒன்பது என்றதின் இறுதியிலுள்ள ன்பது என்றது தன் வடிவிற்கெடாது, இன் என்ற சாரியைமொழியை பெறுதல் வேண்டும்.

உ-ம்.

ஒன்பதின்கலம், ஒன்பதினகல், ஒன்பதினுழக்கு...

“உருபு என்றதனான் ஒன்பதிற்றகல் என்புழி இரட்டிய றகரமாகக் கொள்க” என இளம்பூரணரும், “சாரியை மொழி

352

யென்றதனான் இன்னோடு உகரமும் வல்லெழுத்துங் கொடுத்துச் செய்கை செய்து முடிக்க, ஒன்பதிற்றுக்கலம் சாடி என எல்லாவற்றோடும் ஒட்டுக.” என நச்சினார்க்கினியருங் கூறினார். இவற்றை “ஒன்பதிற்றெழுத்தே” (எழுத். 171) என்ற ஆசிரியர்வழக்காற் கொளல் தகும்.

**460. நூறுமுன் வரினுங் கூறிய வியல்பே.**

போ-ள். ஒன்று முதல் ஒன்பது இறுதியாகிய சொற்களின் பின்னர் நூறு வரினும் அவை கூறப்பட்ட தன்மையவாகும். கூறப்

பட்ட தன்மையாவது பத்து என்றது பின் வரும்போதுள்ள தன்மை.

இதற்குப்பின் மூன்று, நான்கு, ஐந்து, ஒன்பது இவற்றிற்குச் செய்கை தனியாகக் கூறப்படுகின்றமையான், அவற்றை யொழித்து ஏனையவற்றின் செய்கையை ஈண்டுக் கொள்க.

உ - ம். ஒருநூறு, இருநூறு, அறுநூற்றிருபத்தைந்து (செய்யு. 50), எண்ணூறு.

ஒன்றுமுதலொன்பானிறுதி என்பது அதிகரித்தது.

**461.** மூன்ற ஞெற்றே நகார மாகும்.

போ - ள்.

மூன்று என்பதன் னகரம் நகரமாகும்.

உ - ம். மூன்று + நூறு = முன் + நூறு (எழுத். 460) = முந் நூறு.

**462.** நான்கு மைந்து மொற்றுமெய் திரியா.

போ - ள். நான்கு ஐந்து இவற்றின்
இனின்றந் திரியா.
ஒற்று தன்னுருவத்

உ - ம். நான்கு + நூறு = நான் + நூறு
(எழுத். 460) = நான் + னூறு (எழுத்.
150) = நானூறு (எழுத். 160); ஐந்து +
நூறு = ஐந் + நூறு (எழுத். 460) = ஐந்நூறு.



"நான்னூறு" என்றவிடத்து
னகரவொற்றின் கேட்டினை
"நெடியதன் முன்னர்..."(எழுத். 161) என்ற சூத்திரத்தாற் கொள்ளாது "மெய் என்றதனுல் நானூறு என்புழி வருமொழி யொற்றாகிய நகரக்கேடு கொள்க" என இளம்பூரணரும்,

" மெய்யென் றதனுன்
னாறூ றென்புழி வருமொழி நகரத்துள்
ஊகாரம் பிரித்து -லனவெனவரூஉம்
என்பதனுன் னகரவொற்றுக்கி ஊகாரமேற்றி
நிலைமொழி னகரங் கெடுத்துக்கொள்க" என நச்சினர்க்கினியருங் கூறினர். அவ்வாறு கொள்ளவேண்டுதலின்று. "ஐஞ்ஞூறு" (செய்யு. 101) என்ற ஆசிரியர்வழக்குங் காண்க.

இன்னுமதனுனே

ஒற்றின்றி ஐநூறு என வரும் முடிபுங் கொள்க" என்ற தொடர் இளம்பூரணத்திலுள்ளது. இது நச்சினர்க்கினியத்திலில்லை; பிற் காலத்தவரால் எழுதியிருத்தல் கூடும்.

**463.** ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை யொற்றே ளகார மிரட்டும்
நூறென் கிளவி நகார மெய்கெட
ஊஆ வாகு மியற்கைத் தென்ப
ஆயிடை வருத லிகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகார மொற்றும்.

பொ - ள். ஒன்பது நிலைமொழியாகவும் நூறு

வருமொழியாயு
மிருக்குமிடத்து ஒன்பது என்றதன்
முதலெழுத்து முற்கூறப்

பட்ட தன்மையவாய், தன்முன் தகரவொற்றைப்
பெறும். அதன்
பின்னருள்ள "ன்ப" என்றது கெட அதனிடத்து
ஒற்றாகிய ளகரம்
இரட்டும். "நூறு" என்றதன் நகரங்கெட, ஊ, ஆ வாக ஆகுந்தன்
மையதென்ப. அவ்விடத்து ஆகாரத்திற்கும் இறுதியெழுத்திற்கும்
இடையில் 'இர' வருதல் வேண்டும்
இறுதிமெய்யாகிய று கெட்டு,
அவ்விடத்து மகரவொற்று வரும்.

உ - ம்.
ஒன்பது + நூறு = ஒன்ப + நூறு(460, 438, 434) =
தொள்ளாயிரம்.

ஆ, இ இவற்றினிடையில் யகரம்
உடம்படுமெய்யாய் வந்தது.

ஒன்பான், நூறுமுன் வரினும் என்பன அதிகரித்தன.
45

"முந்தை யொற்றே ளகாரமிரட்டும்" என்பதற்கு "முன் னின்ற ணகாரவொற்று இரண்டு ளகாரவொற்றும்" என உரைகாரர்கள் பொருள்கூறி "மெய் என்றதனுன் நிலைமொழிக்கண் நின்ற பகரங் கெடுக்க" என்றனர். அவ்வாறு கூருது ஒன்பானிறுதி (எழுத். 458) என்றவிடத்து இறுதி என்பதற்கு இறுதி யெழுத்துக்கள் எனப் பொருள் கொள்வது போன்று, ஈண்டு முந்தை என்றதற்கு முன் னருள்ள எழுத்துக்களினிடத்தில் என்றும் ஒற்றுளகாரம் என்பதற்கு ஒற்ருகிய ளகாரம் என்றும் பொருள் கொள்ளின் பகரக்கேட்டி

னைக்கூருதுபோயினர் ஆசிரியர் என்ற

குற்றம் அவர்மேல் நில்லாது.

ஒன்பஃது என்றதை நிலைமொழியாகக் கொள்ளின், ஆய்தத்தை யும் ஒற்று என்றதனுற் குறித்தனர் எனக் கூறல்வேண்டும்.

**464.** ஆயிரக் கிளவி வரூஉங் காலை

முதலீ ரெண்ணி னுகரங் கெடுமே.

பொ - ள். ஆயிரம் என்பது வருமொழியாயிருக்க, இரண்டு இவற்றின் உகரம் கெடு மெனக.

ஒன்று

ஈண்டு "ஒன்று", "இரண்டு" என்பன "ஒரு", "இரு" என ஆகுமென்று கூறிய பின்னரே ஆங்குள்ள உகாங் கெடும் எனக்

கூறுதல் பொருந்துமாகலான், "ஆயிரக் கிளவி

வருஉங் காலை—

முற்கூ றியற்கை பெறுத லரித்தே" எனத் தனிச்சூத்திரமாகவும், "முதலீ ரெண்ணி னுகரங் கெடுமே" என்பது ஒரு தனிச்சூத்திரமாகவுமிருந்திருத்தல் வேண்டும். "முற்கூ றியற்கை பெறுத லரித்தே" எனக் கூறியிராவிடின் "மூன்ற னொற்றே வகார மாகும்" (எழுத். 416) என்றது தொடங்கி "ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்...(எழுத். 469)" ஈறாக உள்ள சூத்திரங்களிற் கூறியவற்றால் மூவாயிரம், நாலாயிரம் ஐயாயிரம், அறாயிரம் என்பனவற்றிற்கு இலக்கணம் முழுமையுங் கூறப்படாததாகும்.

உ - ம். ஓராயிரம், இராயிரம்.

**465.** முதனிலை நீடினு மான மில்லை.

போ-ள். ஒரு, இரு இவற்றின் முதலெழுத்து நீடினுங் குற்ற மில்லை.

உ-ம். ஓராயிரம், ஈராயிரம்.

466. மூன்ற னொற்றே வகார மாகும்.

போ-ள். மூன்ற என்பதன் பின்னர் ஆயிரம் வரின், அதன் னகரவொற்று வகாரமாகும்.

உ-ம். மூவ்வாயிரம்.

ஆயிரக்கிளவி வரூஉங்காலை என்பது அதிகரித்தது.

"முதனிலை என்றதனன் முதல் நீண்டு வகரவொற்றுக் கெட்டு மூவாயிரம் என்றும் வரும்" என இளம்பூரணரும், "முன்னிற் சூத்தி ரத்து நிலை என்றதனன் இதனை முதனிலை நீட்டி வகரவொற்றுக் கெடுத்து மூவாயிரம் என முடிக்க" என நச்சினார்க்கினியருங் கூறினர். மூவளபு (எழுத். 5), மூவெழுத்து, (எழுத். 23) முதலிய

ஆசிரியர்வழக்கினை நோக்கி ஒற்றுமைப்போலியான் "மூவாயிரம்" என வந்திருத்தல் கூடும்.

**467.** நான்க னொற்றே லகார மாகும்.

போ - ள். நான்கு என்பதன் பின்னர் ஆயிரம் வரின்
அதன் னகரவொற்று லகரவொற்றாகும்.

உ - ம். நாலாயிரம்.

ஆயிரக்கிளவி வரூஉங்காலை என்பது அதிகரித்தது.

**468.** ஐந்த னொற்றே யகார மாகும்.

போ - ள். ஐந்து என்பதின் பின்னர் ஆயிரம் வரின் அதன்
நகரவொற்று யகரமாகும்.

உ - ம். ஐயாயிரம்.

ஆயிரக்கிளவி வருஉங்காலை என்பது அதிகரித்தது.

## 356

**469.** ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்
ஈறுமெய் யொழியக் கெடுதல் வேண்டும்.

பொ - ள். ஆறு என்பதன் பின்னர் ஆயிரம் வரின், அவ்வாறின் குற்றியலுகரம் தனக்குப் பற்றுக்கோடாகிய மெய்யைவிட்டுத்தான் கெடுதல் வேண்டும். ஆறு+ஆயிரம் என்றிருக்க, இச் சூத்திரத்தான் ஆற் + ஆயிரம் என்றாக, "ஆயிரக் கிளவி வருஉங் காலை — முற்கூறியற்கை பெருத லுரித்து என்ற பொதுவிதியாற் பெறப்பட்ட "மூன்று மாறு நெடுமுதல் குறுகும்" (எழுத் 441) என்றதனால் ஆகாரம் அகரமாக, அறுயிரம் என்றாயிற்று.

ஆயிரக்கிளவி வருஉங்காலை என்பது அதிகரித்தது.

நெடுமுதல்குறுக்கமே முதலில் வருமென நினைத்து உரைகா

ரர்கள் இச்சூத்திரத்துள்ள குற்றியலுகரம் முற்றியலுகரம் எனப் பொருள்படக் கூறப்பட்ட தென்றனர். அது பொருந்தாது. மூன்று + பத்து என்றிருக்க "ஒன்றுமுத லொன்பான் ..." (எழுத். 438) என்ற சூத்திரத்தான் று கெட, அதன் பின்னரே மூன்று மாறு நெடு முதல் குறுகும்" (எழுத். 441) என்றதனால் முன் + பத்து என ஆகுமெனக் கூறப்பட்டமையானும், அறுபஃது, அறுநூறு என்றவிடத்து இறுதியெழுத்து கெடாதது நோக்கி "ஆறனிறுதி யல்வழி யான" (எழுத். 438) எனக் கூறப்பட்டதாயினும், அறுயிரம் என்றவிடத்து இறுதிக்குற்றியலுகரங் கெடும் எனக் கூறல்வேண்டுமாதலானும், புணர்ச்சி கூறுமிடத்து நிறுத்த சொல்லின் ஈறுகெழுத்தைப்பற்றியும் குறித்துவருகிளவியின் முதலெழுத்தைப்பற்றியும் முன்னர்க் கூறவேண்டுவது இன்றியமையாததானும்,

ஈண்டு ஆசிரியர் குற்றியலுகரம் எனக் கூறியதே

நேரிதாகும்.

ஆகலின் "ஆறு என்பது அறு எனக் குற்றியலுகரம் முற்றியலுகரமாக ஓதப்பட்டு நின்றமையின் அவ்வுகரக்கேடு ஓதப்பட்டது,

ஈறு எனவும் மெய் எனவும் அவ்வுயிர்மெய்யைப்

பிரித்துச் செய்கை ஓதினமையான்

அவ்வுயிர்மெய்யினை ஒற்றுமைநயத்தாற் குற்றிய

லுகரம் என்று ஓதினுஞக் கொள்க" என்ற

இளம்பூரணர் கூறிய

தொடரும், "முன்னர் நெடுமுதல் குறுகும் என்றவழி அறுவென நின்ற முற்றுகரத்திற்கே ஈண்டுக் கேடு கூறினரென்பது பெற்றாம், என்னை, குற்றியலுகரமாயின் ஏறி முடிதலின், இது குற்றுகரந்



திரிந்து முற்றுகரமாய் நிற்றலின் ஈண்டு முடிபு கூறினர். முற்றிய லுகரம் ஈறு மெய்யொழியக் கெடுமெனவே குற்றுகரங் கெடாது ஏறி முடியுமென்பது அருத்தாபத்தியாற் பெறுதும்" என்ற நச்சினார்க்கினியர் கூறிய தொடரும் பொருந்தா வெனக. இச்சூத்திரப் பொருள் "புள்ளி யீற்றுமுன்...." (எழுத். 139) என்ற சூத்திரத் தாற் பெறப்படுதலின் இச்சூத்திரம் வேண்டாமெனின், அற்றன்று. அச்சூத்திரம் பொதுவாய் நிலைமொழி யீற்றுக்குற்றிய லுகரத்தைப் பற்றிக் கூறுதலானும் "ஒன்று முதல் .... ஆறனிறுதியில் வழியான" (எழுத். 438) என்பது நிலைமொழி ஆறு ஆயிருக்க அச்செய்கையை ஒருவாறு விலக்குதலானும், ஐயம் வரும்; அவ்வையத்தைப் போக்கிற்று இச்சூத்திரம் என்க. ஆறுயிரம் என்பது பிற்காலவழக் கென்க.

"மேல் மாட்டேற்றானே எண்ணாயிரம் என முடிந்தது" என இளம்பூரணத்தில் உள்ளது. மாட்டேறு கூறிய "ஆயிரக் கிளவி..." (எழுத். 463) என்ற சூத்திரத்தில் ஆய்தபகரங் கெட எனப் பொருள்கொண்ட ஓரடிவிடப்பட்டதென்றதை இளம்பூரணர் நோக்கிலர் என்பது வியப்பிற்கிடமாகின்றது.

**470.** ஒன்பா னிறுதி யுருபுநிலை திரியா
தின்பெறல் வேண்டுஞ் சாரியை மரபே.

போ - ள். ஒன்பது என்றதன் பின்னர் ஆயிரம் வரின் இறுதி யெழுத்துக்களின் வடிவந் திரியாது இன்னுகிய சாரியையைப் பெறும்.

உ - ம். ஒன்பதினுயிரம்.

ஆயிரக்கிளவி வரூஉங்காலை என்பது அதிகரித்தது.

"உருபு என்றும் நிலை என்றும் சாரியை மரபு என்றுங் கூறிய மிகுதியான் ஆயிரமல்லாத பிற எண்ணின்கண்ணும் பொருட்பெய ரிடத்தும் இன்னும் உகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும் முடிபுங் கொள்க" என்றனர் இளம்பூரணர். அவரோடு உடன் பட்டனர் நச்சினார்க்கினியர்.

**471.** நூறு யிரமுன் வரூஉங் காலை
நூற னியற்கை முதனிலைக் கிளவி.

போ - ள். ஒன்றுமுதல் ஒன்பான்வரையுள்ள எண்ணின் பின் னர் நூறுயிரம் வருமொழியாய் வருமிடத்து, முதலிற் கூறப்பட்ட

ஒன்று என்ற சொல் நூறு என்றது வருமொழியாய் வருமிடத்து பெறுந் தன்மையைக் கொள்ளும்; அஃதாவது ஒரு என மாறும்

உ-ம். ஒருநூறாயிரம்.

ஒன்றுமுதல் ஒன்பானிறுதி என்றது அதிகரித்தது.

"வழிநிலைக்கிளவியாகிய இரண்டு முதல் எண்கள் விகாரம் எய்தியும் எய்தாது இயல்பாயும் முடியும்" என்றனர் உரைகாரர்கள்.

"உரையிற்கோடல் என்பதனுன் தொள்ளாயிரம் என்ற முடிவினும் மாட்டேறு சென்றதேனும் அவ்வாறு முடியாதென்று கொள்க" என இளம்பூரணரும், "ஏற்புழிக்கோட லென்பதனல் தொள்ளாயிரமென்ற முடிவினேடு மாட்டேறு சென்றதேனும் அவ்வாறு முடியாதென்று கொள்க" என நச்சினார்க்கினியருங் கூறினர். இதற்குப் பொருள் "ஒன்பது + நூறு" என்றவிடத்து "நூறு" என்றது எச்செய்கை பெற்றதோ, அவ்வாறு "ஒன்பது + நூறுயிரம்" என்றவிடத்து நூறுயிரம் என்பது அச்செய்கை பெறுது என்பதேயாம்.

பா-ம்.

இளம். க. பதி.
இளம். சி. பதி.

" நூறெனியற்கை ... எய்தாதியல்பாயும்..."
" நூறனியற்கை ... எய்தாதுமியல்பாயும்..."

**472.** நூறென் கிளவி யொன்றுமுத
லொன்பாற்
கீறுசினை
யொழிய வினவொற்று மிகுமே.

பொ - ள். நூறு என்றதன் பின்னர் ஒன்றுமுதல் ஒன்பான் வரை வருமொழியாய் வருமிடத்து, நிலைமொழியீற்றின் சினையாகிய குற்றியலுகரம் நிற்க, அதன் பற்றுக்கோட்டின் இனவொற்று மிகும்.

உ - ம். நூறு + ஒன்று = நூற்றொன்று ... நூற்று மூன்று, நூற்று நான்கு...

வருமொழிமுதல் உயிராயிருக்கும்போது, குற்றியலுகரங் கெடுவதை "புள்ளியீற்று முன் ..." (எழுத். 139) என்றதனற் கொள்க.

"ஈறுசினை என்று ஓதிய மிகையானே நூறு என்பதனேடு பிற எண்ணும் பிறபொருட்பெயரும் இவ்விதியும் பிறவிதியும் முடியு மாறு கொள்க. நூற்றுக்கோடி..." எனக்

கூறினர் இளம்பூரணர். அவரோடு உடன்பட்டனர் நச்சினார்க்கினியர்.

இன்னுமிதனுனே இருநூற்றொன்று இரண்டுநூற்றொன்று

என நூறு அடையெடுத்தவழியுங் கொள்க.' என்றனர் நச்சினார்க்கினியர். இதனை "அடையொடு தோன்றினும் ..." (எழுத். 111) என்பதனாற் கொள்ளல் கூடும்.

**473.** அவையூர் பத்தினு மத்தொழிற் றாகும்.

போ - ள். ஒன்றுமுதல் ஒன்பதுவரையுள்ள சொற்களைத் தழுவி வந்த பத்து என்ற சொல் நூறு என்பதன் பின் வரினும் அந்நிலைமொழி முற்கூறப்பட்ட தொழிலைப் பெறும்.

உ - ம். நூற்றொருபஃது ...

நூறென்கிளவி என்பது அதிகரித்தது.

" ஆகும் என்றதனுன் நிலைமொழி யடையடுத்து வரும் முடிபுங் கொள்க" என்றனர் உரைகாரர்கள். முற்சூத்திரத்திற் கூறிய வாறு அவற்றைக் கொள்ளினு மமையும்.

**474.** அளவு நிறையு மாயிய றிரியா
குற்றிய லுகரமும் வல்லெழுத் தியற்கையும்
முற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.

போ - ள். நூறு என்பதன் பின்னர் அளவுப்பெயர் நிறைப் பெயர் இவை வரின் அவ்வியலிற் றிரியா. அதாவது இனவொற்று மிகும். குற்றியலுகரமும் வல்லொற்றுத்தொடரின் இயற்கையாகிய வல்லெழுத்து மிகுதியும் முற்கூறப்பட்டவாறும் எனக் கூறுவர் புலவர்.

உ-ம் நூற்றக்கலம்...; நூற்றுக்கழஞ்சு.

நூறென்கிளவி என்பது அதிகரித்தது.

360

பா-ம். நச். ம. பதி. "திரியா"

நச். தா. சை. பதி. "திரியாது"

475. ஒன்றுமுத லாகிய பத்தூர் கிளவி
ஒன்றுமுத லொன்பாற் கொற்றிடை மிகுமே
நின்ற வாய்தங் கெடுதல் வேண்டும்.

பொ-ள். ஒருபஃது, இருபஃது, முப்பஃது முதலிய சொற்கள் பின்னர் ஒன்றுமுதல் ஒன்பது வரை வரின், ஆண்டு ஆய்தம் கெடும்; ஒற்று இடை மிகும்.

உ-ம். ஒருபத்தொன்று...

இளம்பூரணத்தில் இச்சூத்திரத்தின்கண் "நின்ற என்றதனுன் மேல் ஒருபதிற்றுக்கலம் என்னும் முடிபிற்கு இன்பேறுங் கொள்க" என்ற தொடரும் அடுத்த இரண்டு சூத்திரங்களின்கண் "ஆவயின் என்றதனுன் ஒருபதிற்றுக்கலம் என்னும் முடிபிற்கு உகரமும் வல்லெழுத்துப்பேறுங் கொள்க", "திரியா என்றதனுன் ஒருபதிற்றுக்கலம் என்னும் முடிபிற்கு இன்னின் னகரம் இரட்டிய றகரமாகலும்" என்ற தொடர்களும் உள. ஒருபதிற்றுக்கலம் என்பதை அதிகாரப்புறனடையாற்கொள்ளின் இவ்வாறு கூறுதல் வேண்டா.

## 476. ஆயிரம் வரினே இன்னென் சாரியை
## ஆவயி ணுெற்றிடை மிகுத லில்லை.

பொ-ள். ஒருபஃது, இருபஃது முதலியவற்றின் பின்னர் ஆயிரம் வரின், இன்சாரியை வரும்; அப்போது இடையில் ஒற்று மிகாது, ஆய்தங் கெடும்.

ஒன்றுமுதலாகியபத்தூர்கிளவி, ஆய்தங் கெடுதல் வேண்டும் என்பன அதிகரித்தன.

பா-ம்.

இளம். க. பதி; நச். ம. தா. சை. பதி. "

இன்னென்சாரியை"

இளம். சி. பதி. "இன்னுஞ் சாரியை"

இளம். க. பதி. "ஆயின்", இளம். சி. பதி. "அவயின் என்பன "ஆவயின்" என்றிருத்தல்வேண்டும்.



**477.** அளவு நிறையு மாயிய றிரியா.

போ-ள். ஒருபஃது, இருபஃது

முதலியவற்றின் பின்னர்

அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வரின், அவை முற்கூறிய தன்மை யிற் றிரியா. அஃதாவது ஆய்தம் கெட்டு, ஒற்று மிகாது, இன் சாரியை வரும்.

உ-ம். ஒருபதின்கலம்...ஒருபதின்கழஞ்சு.

"திரியா என்றதனன் ஒருபதினழி என்னும் முடிபின்கண் வருமொழி நகரந் திரிந்தவழி நிலைமொழியின் னகரக்கேடுங் கொள்க" என்றனர்உரைகாரர்கள். இதனை "நெடியதன் முன்னர்"(எழுத். 161)

"குறுமையும்..."(எழுத் 50) என்ற சூத்திரங்களாற் கொள்ளல் தகும்.

நச். தா. சை. பதி. யில் அளவு நிறையு மதனோ ரன்ன, என்று பாடம் ஓதுவார் முன்னர்ச் சூத்திரத்து ஆவயின் என்றத னும், அதன் முன்னர்ச் சூத்திரத்து நின்ற என்றதனும் இவற்றை முடிப்பார் என்றுளது. இத்தொடர் நச். ம. பதி. யில் இல்லை. இஃது இளம்பூரணர்கொள்கை யென்பது அவரது உரை யான் விளங்கும்.

**478.** முதனிலை யெண்ணின்முன் வல்லெழுத்து வரினும்
ஞ ந ம தோன்றினும் ய வ வந்தியையினும்
முதனிலை யியற்கை யென்மனார் புலவர்.

பொ - ள். ஒன்று என்ற சொல்லின் பின்னர் வல்லெழுத்து, ஞ், ந், ம், ய், வ் இவை வரின் மூற்கூறிய இயற்கையைப் பெறும் என்று கூறுவர் புலவர்.

உ - ம். ஒருகல்... ; ஒருஞாண்... ;

"ஆவோ டல்லது யகரமுத லாது; (எழுத். 65) என்று முன்னர்க்கூறியிருத்தலானும், மேலைச் சூத்திரத்தில் அதனிலை யுயிர்க்கும் யாவருகாலையும் என்று கூறுவதனுலும், இச்சூத்திரத்தில் ஞ ந ம தோன்றினும் வ வந்தியையினும் என்றே ஆசிரியர் கூறியிருத்தல் கூடும்.

## 362

"முதனிலை யியற்கை" என்றதற்கு "அவ்வொன்றுமுதல் ஒன்பான்கள் முன் எய்திய முடிபுநிலை" எனப் பொருள் கூறினர். ஈண்டு இரண்டு, மூன்று இவற்றிற்கு ஆசிரியர் செய்கை கூறுவிடினும் "எனவே வழிநிலை எண்ணுகிய இரண்டு முதலாகிய எண்கள் அம்முதனிலை முடிபாகிய விகாரம் எய்தியும் எய்தாதும் இயல்பாயும் முடியும்" என அவ்விருவருங் கொண்டமையான் அவ்வாறு கூறினர்போலும். அது பொருத்தமின்று. பின்னர்ச் சூத்திரத்து "ஓர் யாழ்" என்ற உதாரணங் கூறியிருக்க, ஈண்டு "ஒரு யாழ்" என்பது பொருந்துமா?

**479.** அதனிலை யுயிர்க்கும் யாவரு காலையும்
முதனிலை யொகர மோவா கும்மே

ரகரத் துகரந் துவரக் கெடுமே.

போ-ள். ஒன்று, உயிர்க்கண்ணும் யாவின்கண்ணும் அந்நிலை யைப் பெற, ஓகாம் ஓவாகும், ரகரத்துகரம் முழுமையுங் கெடும்.

உ-ம். ஓரடை, ஓராடை,...ஓர் யாழ்.

ஈண்டு "உயிர்க்கும்" என்பது ஏழாம் வேற்றுமைப்பொருளில் வந்தது. அவ்வாறிருக்க "நான்காவதனை முதனிலையோடு கூட்டி அதன்கண் நின்ற உம்மையை உயிரோடும் யாவோடும் கூட்டுக " என நச்சினார்க்கினியர் கூறுவது பொருத்தமில்கூற்றாம்

" துவர என்றதனான் இரண்டு என்னும் எண்ணும் மூன்று என்னும் எண்ணும் செய்யுளகத்து ஈரசை எனவும் மூவசை எனவும் முதல் நீண்டு வேறுபட முடியுமாறு கொள்க" என்றனர் உரைகாரர்கள். இவற்றை "ஈரசை", (செய்யு. 12) "மூவசை" (செய்யு. 12) முதலிய ஆசிரியர்வழக்காற் கொள்ளலாம்.

பா - ம்.

நச். ம. பதி. "ஒன்றென்னு

மெண்ணிற்கு"

நச். தா. கை. பதி. "ஒன்றென்னு மெண்ணின் திரிபாகிய ஒரு என்னும் எண்ணிற்கு"

363

480. இரண்டுமுத லொன்பா னிறுதி முன்னர் வழங்கியன் மாவென்

கிளவி தோன்றின்

மகர வளபொடு நிகரலு முரித்தே.

* போ - ள். இரண்டு முதல் ஒன்பதுவரையுள்ள

சொற்களின்

பின்னர் வழக்கிலுள்ள மா என்ற சொல் வரின் மகரமுதலள வுப்பெயரோடு ஒருதன்மைத்தாதலு முரித்து.

உ - ம். இரண்டு மா, இருமா...

இச்சூத்திரம் எற்றுக்கு எனின்,
"அளந்றி கிளவியும்..." (எழுத். 446)
இஃது இல்லாவிடின்
என்ற சூத்திரத்தால்
இருமா என வருமேயன்றி இரண்டு மா என
வாராது.

"புள்ளி மயங்கியலுள் 'அள்வு நிறையும்' என்னுஞ் சூத்திரத்தான் நெடுமுதல் குறுகி உகரம் வந்து புணருமாறு கூறினர். அதனான் ஈண்டு ஏழுமா என முடிக்க, ஏழ்மாவென முடிதல் வழக்கின்று" என்ற தொடர் நச்சினார்க்கினியத்தில் உளது. அங்கு "எழுமா" என்றிருத்தல்வேண்டும்.

"வழங்கியன்மா என்றார் விலங்குமாவை நீக்குதற்கு" என்ற விடத்து "விலங்குமாவை" என்றதற்குப்
பிரதியாக "விலங்கு

மரம் முதலியவற்றை" என்றிருத்தல் வேண்டும். இது நச். ம. பதிப்பில் இல்லாமையான் ஒருகால் இடைச்செருகலா யிருத்தல் கூடும்.

இனி மூன்று சூத்திரம்
சிறப்புவிதிகளைக் கூறும்.

எல்லாவகைப்புணர்ச்சிகளிலுமுள்ள

481. லனவென வரூஉம் புள்ளி யிறுதிமுன்
உம்முங் கெழுவு மெப்பட்ப் பிறவும்
அன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச்
செய்யுட் டொடர்வயின் மெய்பெற

நிலையும்

வேற்றுமை குறித்த பொருள்வயி னான.

போ - ள். ல், ன் இவற்றை ஈற்றிற்கொண்ட மொழியின் பின்னர் செய்யுட்கண் தொடர் வரின் இடையில் உ[illegible]
றனவும் பிற சாரியைகளும் வேற்றுமைப்பொருட்
கொண் வரும்

364

உ - ம். வானவரி வில்லும்
திங்களும்; கல்கெழுகானவர் நல்குறு
மகளே. ; தமிழ்கெழுகூடல் (புறநா. 58).

" மொழியிடைத் தோன்றி என்ற மிகையால் பிற ஈற்றுள்ளும்

இச்சாரியை பெற்று முடிவன கொள்க;
துறைகெழுமாங்கீத,

வளங்கெழுதிருநகர் என வரும். அன்ன மாபின் என்றதனால்

சாரியை காரணமாக வல்லெழுத்துப் பெறுதலும், அதுகாரணமாக நிலைமொழியீறு திரிதலும், சாரியையது உகரக்கேடும் எகரநீட்சி·
யுங் கொள்க, பூக்கேழூரன், வளங்கேழ்திருநகர் என்று அவ்வாறு வந்தமை யறிக. மெய்பெற என்றதனான் இச்சாரியைப்பேற்றின் கண் ஈற்றுவல்லெழுத்து வீழ்க்க" என இளம்பூரணர்கூறினர் அவரோடு நச்சினார்க்கினியர் உடன்பட்டனர்.

" குற்றியலுகரவிடைச்சொல்லாகிய ஞான்று என்பது அவர்

வெண்டவெல்லா வுயிர்க்குமெஞ்ஞான்றுந்தவா
எனவும், இல்

வாழ்க்கை, வழியெஞ்சலெஞ்ஞான்றுமில் எனவும்
வரும், இதற்கு

என்றும் எனக் கொள்க. ஒழுகு நீரால் பார்க்குங்
குருகு முண்டு

தாமணந்த ஞான்றே என்பது தாமணந்தவன்றே
யெனக் கொள்க.

இதுகாலத்தின் கண் வரும்''. இத்தொடர் நச். ம. பதிப்பில் உளது

நச். தா. சை. பதிப்புக்களில் இல்லை.

**482.** உயிரும் புள்ளியு மிறுதி யாகிக்

குறிப்பினும் பண்பினு மிசையினுந் தோன்றி

நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்

உயர்திணை யஃறிணை யாயிரு மருங்கின்

ஐம்பா லறியும் பண்புதொகு மொழியும்

செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்
மெய்யொருங் கியலுந் தொழிற்றொகு மொழியும்
தம்மியல் கிளப்பிற் றம்முற் றம்வரூஉம்
எண்ணின் றொகுதி யுளப்படப் பிறவும்
அன்னவை யெல்லா மருவின் பாத்திய
புணரிய னிலையிடை யுணரத் தோன்றா.

பொ - ள். உயிர், புள்ளி இவற்றை

இறுதியாகக்கொண்ட உரிச் சொற்களும், உயர்திணை அஃறிணை இவற்றைச் சார்ந்த ஒம்பாலினையு



மறிக்கும் எழுத்துக்கள் தொக்க பண்புத்தொகைச்சொற்களும், காலத்தைக்காட்டும் வினைப்பகுதி தொகும் வினைத்தொகைச்சொற்களும், தந்தன்மையைக் குறிக்கத் தம்பின் முன் தாம் வரூஉம் எண்ணுப்பெயர்களாகிய தொகைச்சொற்களும் அவ்வாறுள்ளனவெல்லாம் உலகில் வழங்கிவரப்பட்டனவாய் புணரியலின்கண் விளங்கத் தோன்று. அஃதாவது அவற்றை வழக்கில் உள்ளவாறே கொள்ளல்வேண்டுமேயன்றி, அவை புணரும் விதிகள், ஈண்டு முற்றிலுங் கூறப்படவில்லை.

"குறிப்பினும் பண்பினும் இசையினுந் தோன்றி நெறிப்படவாராக் குறைச்சொற்கிளவி" என்றது உரிச்சொல்லைக் குறிக்கும் என்பது சொல்லதிகாரத்து உரியியல் முதற் சூத்திரத்தான் விளங்கும். குறைச்சொல் என்றதனால் பெயர், வினை இவற்றின் பகுதியே உரிச்சொல்லாம்.

“உயர்திணை...பண்புதொகு மொழியும்” என்பது பண்புத் தொகையைக் குறிக்கும். அங்கு நல்லரசன், நன்மனைவி, நன்மக்கள் கரும்பாம்பு, கரும்பாம்புகள் என்பன முறையே நல்லன் + அரசன், நல்லள் + மனைவி, நல்லர் + மக்கள், கரியது + பாம்பு, கரியன + பாம் புகள் என்பனவற்றின் தொகையாகும். ஆங்கு பாலையறிவிக்கும் ன், ள், ர், து, அ என்பன தொக்கன காண்க.

“செய்யுஞ் செய்த...தொழிறொகு மொழியும்” என்பது வினைத்தொகையைக் குறிக்கும். அங்கு வினைப்பகுதி தொக்கது காண்க. ஈண்டு வினையின் ஒரு பகுதி எனப் பொருள்படப் றொகுதி காலத் தியலும்” (சொல். 415) என் பூரணர் கூறியபொருள் பொருந்துமேயன்றி பொருள் பொருத்தமின்று.

உ - ம். விண்வினைத்தது, கார்கறுத், நன்மக்கள், கொல்யானை, ஓரொன்று.

“அன்னவை” என்றதனால் “உண்டான்” காலவெழுத்திற்கும் வினைவிகுதிக்கும் உள்ள பு

வற்றையும் "கொள்ளெனக்கொண்டான்" என்னுமிடத்து "கொள், என" இவற்றிற்கு வரும் புணர்ச்சி முதலியவற்றையுங் கொள்க.

பா - ம்.

இளம். க. பதி. "இவை கருமென"

இளம். சி. பதி. "இது கருமென"

பின்னருள்ள பாடஞ் சிறக்கும்.

நச். ம. பதி என்றாற்போல்வன வெறுமெனப் பண்புமாத்திரையே வெறுவிதாகிய விலையெனப் பண்புணர்த்து மீறு தொகுதலின் மருவின் பாத்தியவாய் நின்றொற்றடுத்தன. பாக்குங் கோட்டு நூறுங் கூடாததாய்ப் பின்னரீறுகுன்றலி னொற்றடுத்த.

நச். தா. சை. பதி. என்றாற்போல்வனவற்றுள் வெறுவிதாகிய இலையென்பது பாக்குங் கோட்டுநூறுங் கூடாததாய பண்புணர்த்தி ஈறுதொகுதலின் மருவின்பாத்தியவாய் நின்று ஒற்றடுத்தது ஈறுகுன்றலின் ஒற்றடுத்தது

முன்னருள்ள பாடத்துள் ஈற்றில் "ஒற்றடுத்தது" என இருத்தல் வேண்டும்.

நச்சினார்க்கினியத்தில் "இவ்வாசிரியர் புணர்க்கப்படாத இச்சொற்களையும் வடநூற்கண் முடித்த அனகன் அனபாயன் அகளங்கன் முதலிய வடசொற்களையும் பின்னுள்ளோர் முடித்தல் முதனூலோடு மாறுகொளக்கூறலாமென்று உணர்க" என்ற தொடர் உள்ளது. அது கவனிக்கத் தக்கது.

**483.** கிளந்த வல்ல செய்யுளுட் டிரிநவும்
வழங்கியன் மருங்கின் மருவொடு
திரிநவும்
விளம்பிய வியற்கையின் வேறுபடத்
தோன்றின்
வழங்கியன் மருங்கி னுணர்ந்தன
ரொழுக்கல்
நன்மதி நாட்டத் தென்மனார் புலவர்.

பொ - ள். முற்கூத்திரங்களுள்

கூறப்படாதனவாய்ச் செய்
யுளின்கண் திரிந்து வருவனவும், வழக்கின்கண்

மருவி வருவனவும்

கூறப்பட்ட விதிகளுக்கு மாறுபடத் தோன்றின் வழக்கினை உணர்ந்து நடத்தல் அறிவுடையார்கண்ணது என்று கூறுவர் புலவர்.

காவலந்தண்பொழில், நெய்தலஞ்சிறுபறை — ஈண்டு கண்ணும் அம்சாரியை வந்தது.
இருவழிக்

தெவ்+முனை = தெம்முனை; சோழனாடு — சோணாடு, மானாடு — மலாடு — ஈண்டு மருவிவந்தன.

மலைய

ஏழு, ஏழுகலம் போன்றன வேறுபடத் தோன்றின. வில் என்பது பொதியில் என வேறுபடத் தோன்றியது.

பொது

குற்றியலுகரப்புணரியல் முற்றும்.

கௌசிககுலதிலகரும் சப்ததந்த்ரஸ்வதந்த்ரரும் பாஷ்ய ரத்நாவளீ, சப்தகௌமுதீ, தாதுரத்நாவளீ என்ற நூல்கள் இயற்றியவருமான சொக்கநாதமகிகளின்வழித்தோன்றலும்

மங்களாம்பிகை ஸ்வாமிநாதசாஸ்திரிகள் இவர்தம்புதல்வனுமான வித்தியாரத்தினம் டாக்டர் சுப்பிரமணியசாஸ்திரியால் இயற்றப்பட்ட குறிப்புரை முற்றும்.



# சூத்திரமுதற்குறிப்பகராதி.

*

ஈண்டு எண் சூத்திரத்தைக் குறிக்கும்.

அ



# ஆ ஈ ஊ ஏ ஐ
# ஆ இ ஒ எனும்

ஆ ஈ ஐ அம்

ஆகார இறுதி

ஆடூஉ

ஆணும்

ஆண் மரக்கிளவி

ஆதனும்

ஆயிரக்கிளவி

ஆயிரம் வரினும்

ஆயிரம் வரினே

ஆயிரம் வருவழி

ஆய்த நிலையலும்

ஆரும்

ஆவயின்

ஆவுமாவும்

ஆவோடல்லது

ஆறனுருபின்

ஆறனுருபினும்

ஆறன் மருங்கில்

ஆறென் கிளவி

ஆனின்

ஆனொற்றகரமொடு

ஆன்முன்

## இ

இ ச எ வ ஐ

இகரயகரம்

இகர விறுதி

இக்கின்

இடம் வரை கிளவி

இடை நிலை ரகரம்

இடைப் படிற்

இடையெழுத்து

இடையொற்று

இதழி யைந்து

இயற் பெயர்

இரண்டு முதல்

இராவென்

இரு திசை

எகரவொகரம்

எனைமரம்

எஞ்சியவெல்லாம்

எட்டனுற்றே

எவ்வளிறுதி

என்னுப்பெயர்

எப்பெயர்

எருவும்

எல்லாமென்னும்

எல்லா மொழிக்கும்

எல்லாருமென்னும்

எல்லாவெழுத்தும்

எழுத்தெனப்படுப

எழுத்தோரன்ன

ஏ

ஏ ஓ எனுமுயிர்

ஏகாரவிறுதி

ஏயெனிறுதிக்கு

ஏழனுருபிற்கு

ஏழென்கிளவி

ஏனவைபுணரின்

ஏனவைவரினே

ஏனைப்புளிப்பெயர்

## ஐ

க ச த ப முதன்மொழி

கண்ணிமை கொடியென

க த ந ப ம வெனும்

க வ வோடியையின்

கா

காரமும்

கி

கிளந்த

கிளை...கிளை

கிளை...கொள

கீ

கீழென்

## கு

குமிழென்

குயிலென்

குறியதனிறுதி

குறியதன் முன்னர்

குறியதன் முன்னரும்

குறுமையும்

குறையென்

குற்றிய லிகரம்

குற்றியலுகரக்தின்னே

குற்றியலுகரத்திறுதி

குற்றியலுகர முறைப்பெயர்

குற்றியலுகரமும்

குற்றெழுத்திம்பரும்

குற்றெழுத்தைந்தும்

குன்றிசை மொழிவயின்

### கோ

கொடிமுன்

### ங

ங ஞ ண ந ம ன

### ச

சகரக்கிளவியும்

சகர ஞகாரம்

தா

நி



நீ

## மா

மொ

## ய

யகரம் வருவழி
யகர விறுதி
யாழ வென்னும்புள்ளி
யாழ வென்னுமூன்றும்
யவமுன் வரினே

## யா

யாதென்...அன்றெடு
யாதென்.. உருபியல்
யாமாக்கிளவியும்
யாவினா மொழியே
யாவென் வினாவின்

யாவென் வினவும்

ர

ரகார விறுதி

ல

லகார விறுதி

ளவென... இறுதி

ளவென... முன்னர்

வ

வஃகான்மெய்கெட

வகரக்கிளவி

வகாரம்

வண்டும்

வான்முறை

வல்லெழுத்தியற்கை

வல்லெழுத்து...அல்வழி

வல்லெழுத்துமிகினும்

வல்லெழுத்து முதலிய

வல்லெழுத்தென்ப

வல்லென்கிளவி

வல்லொற்று...மிகுமே

வல்லொற்று...வருவழி

வளியென

வன்றொடர்

## சூத்திரச் சொல்லகராதி.

---

* ஈண்டு எண் சூத்திரத்தைக் குறிக்கும்.

ஆ

எ

## ஐ

ஒ

## கூ



## கோ



## கோ

## சி

சே

## தா



## தி

தெ



தே



தொ

## தோ

ந

## நா

388

நீ

நு

மூ

மே

392

ர

ல



வ

ஈண்டு எண் பக்கத்தைக் குறிக்கும்

*The Hindu, Madras* ... Dr. Sastri has made a deep study of the various Tamil Grammars extant and his impartial and unbiassed investigation in the field has been attended with very good results ... His original contributions are many ... Dr. Subrahmanya Sastri has done very valuable service to Dravidian Philology in general and the History of the Tamil Language in particular ...

*The Madras Mail* ... The essential contribution of the author in this work is three-fold. Firstly he shows us in what respects Caldwell's theories have now been found to be erroneous and how far Research in this field has advanced since Caldwell's time. Secondly the author has essayed to examine impartially how far the grammatical theories of the Tamil Language have been influenced by the corresponding theories in Sanskrit Grammatical Literature. Lastly he has given us a reliable estimate of the work of Tolkappiyanar who is for practical purposes the father of grammatical theories in Tamil Language ...

*M. R. Ry. K. G. Sesha Aiyar, Trivandrum.* A work of great learning and research.

*Prof. R. L. Turner, London.* Very valuable work.

*Prof. Jules Bloch, Paris.* The subject is important not only in itself, but also because of the bearing it has on the internal chronology of Tamil Literature and on the other side on history of Sanskrit Grammar ...

*Prof. Leonard Bloomfield, Chicago.* It is a fascinating subject and you are to be congratulated not only upon the choice of it, but also upon the way you have dealt with it.

*Prof. Holger Pedersen, Copenhagen.* I am glad to possess this source of information about the very interesting Tamil Language.

2. TOLKAPPIYAM–VOL. I. ELUTTATIKARAM. with English Commentary } Re. 1.



*Dr. Sten Konow Norway* ... It is an extremely welcome and useful work which you have undertaken and so far as I can see you have done it very well and carefully ... Every scholar who takes an interest in Indian Scientific Literature will therefore feel deeply thankful to you.

*Dr. A. B. Keith, Edinburgh* ... I have read with special interest your introductory remarks and have no doubt that the work when completed will be greatly appreciated by all students of Dravidian Linguistics.

*Prof. R. L. Turner* ... Your work on Tolkappiyam is very interesting.

3. TOLKAPPIYAM VOL. II. PART i. COLLATIKARAM with an elaborate English Commentary. } Rs. 2.

*The Hindu, Madras.* Dr. P. S. Subrahmanya Sastri has secured for himself an assured place among critical scholars of Tamil Linguistics ... The book is a good and helpful annotated edition for English readers of the opening chapters of *Collatikaram*; and Dr. Sastri's learning and critical ability are patent in every page. To students of Linguistics who desire to study and appreciate the morphology and Syntax of Tamil it will prove of real value.